௳

திருச்சிற்றம்பலம்.

அறுபத்துமூன்று நாயன்மாரு ளொருவராகிய
திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய
பத்தாந்திருமுறையென்னும்

# திருமந்திரம்-௩௰௦௦.

இஃது

சொக்கபுரவாதீனத்தைச்சேர்ந்த
திருமயிலை- கார்த்திகேயசுவாமிகளாலும்,
சைதாபுரம்-சதாசிவப்பிரமம்
மாணாக்கர்களி லொருவராகிய
தேனாம்பேட்டை- சுப்பராயமுதலியாராலும்,
திருநெல்வேலி
சாலிவாடீஸ்வரஓதுவாமூர்த்திகளாலும்,
அனுப்புவிக்கப்பட்டபிரதிகளை
ம-ா-ா-ஸ்ரீ-கொன்றைமாநகரம்,
முருகப்பமுதலியாரவர்கள்-பௌத்திரரும்
அருணாசலமுதலியாரவர்கள்-புத்திரருமாகிய
சண்முகசுந்தரமுதலியாரால்
பரிசோதித்து-
கல்விக்களஞ்சிய அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

சுக்கில௵—ஆனிமீ.





திருச்சிற்றம்பலம்.

# திருமூலர்வரலாறு.



சிறப்புப்பொருந்திய திருக்கைலயங்கிரியில்நிர்மலி ஞுக்களாலும்தேவர்களாலும் இருடிகளாலும்தோத்தரித்துப்பாடவும் ஆநந்தக்கூத்தாடவும் தமதுமாதேவியுடன் தானன்றியில்லாத் தனிமுதலாகிக் கொலுவீற்றிருக்கும் பரமசிவத்தின் பிரதமமாணுக்கராகிய திருநந்திதேவரது திருவருள்பெற்ற சிவயோகிகளிலொருவர், அகத்திய முனிவரிடத்திலுற்ற பக்ஷியிஞல் சிலநாளவருடன் வசித்தற்பொருட்டு அவர்வீற்றிருக்கும் பொதியமாமலையை யடைதற்குக்கருதி திருக்கைலாயத்தை யகன்று வழிகொண்டு திருக்கேதாரம், பசுபதிநேபாளம், காசி, திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சிபுரம், திருவதிகை, சிதம்பரமுதலாகிய தலங்களைத்தரிசித்து வணங்கிச்செல்லுகையில் காவேரியாற்றங்கரைப்புறவில் சாத்தனூரிலிருக்கும் ஆவினங்களை மேய்க்கு மூலனென்பவனிறந்து கிடப்பதும் அப்பசுக்கூட்டங்கள் சுற்றிநின்று கதறுவதும் கண்ணீர்விட்டுக்கலங்கியழுவதும் மோப்பதுமாய் நிற்ப-அருளும்பொறையும் தவமுங்குணமுமுடைய விச்சிவ

யோக ரதனைக்கண்டு பரமசிவத்தின் திருவருளாலிவ் விடையனுயிர் ஒப்ற்றுலொழிய விம்மாக்களினது துயரம்நீங்க-எனக்கருதி-இறந்துகிடக்கும் கோபால கனுயிர்பெற்றெழத்தமது திருவுள்ளத்தடைத்துத் த மதுடலிற் சோரரஞ்செய்து அவ்வாமேக்கியின் சரீ ரத்துட்பிரவேசித்துத் திருமூலராயெழுந்தருளினர். (ஆ-ஆ - இறந்துகிடக்கும்லிரன் தெய்வத்செய[illegible] யிர்பெற்றெழுதலைப் பார்க்குமிடத்து யார்க்குச்சந் தோஷித்தை யடையாதிருக்கும். அஃதங்ஙனமா யின் சுரபிக்கூட்டங்களின் சந்தோஷித்தையெங்ஙனம் சொல்லற்பாற்று, இப்புண்ணியவசத்தையுண்மையா கவே நோக்குமிடத்திற் கபிலைக்கூட்டங்களின் தவமு யற்சியோ அல்றிஇத்தனுமேக்கியின் தேவிசெய்த மாங்கல்லியபலமேனுவதிகிலேம்) இவ்வாறெழுதலை அ ப்பசுக்கூட்டங்ளைதிர்ந்து நாத்தழும்ப நக்கிமோந்து மினைத்து மிகுந்தகளிட்பிறுலே எவ்விடத்தும் மே யத்தனிந்தன ஐஙடயோ-வுண்மையாகவே இச்சிவ போகியரிவ்வாறுசெய்யாராயின் பசுக்கூட்டங்கள்கல் லுக்கரைய மனதுருகப்பட்டுந்துயரத்தாலடையுங் கெதியாதாமோ தெரிகிலேம்) சூரியனத்தமனமா கவே பசுக்கள் தத்தங்கன்றுகளை நினைந்துதாமே யை யநடந்துசெல்ல வப்பசுக்களின்பின் மூலருஞ்சென்று சாத்தனூரையடைந்தவகள் வழக்கப்படிவிடுகோ

றும் புகும்படிநின்றார். மூலன்மனைவி நாயகரின்றை
க்கு மிகத்தாழ்த்தாளொன்று சிவயோகியர்நின்ற விடத்
தையடைந்திருக்கின மடுத்ததுபோலும் என்றவரு
டைய சரீரத்தைப்பரிசிக்க வதற்கவருடன் படாராயி
னார் இதனையறிந்தநாயகி நடுங்கி மயங்கி நன்செய்தீ
ரென் செய்தீரென்றுசோர்வுற மூலனொல்லேனுனக்கி
யாதொரு சம்பந்தமுமில்லையெனமறுத்து ஒருபொ
துமடத்திற் புகுந்து சிவயோகத்திருந்தனர், இல்லா
ளிவ்விரவின்முழுதினும் கண்படாளாயினாள். மறுநா
ள் காலையில் அவ்வூரிலிருக்கும் விவேகிகள்பலரிடத்தி
னும் தனது நாயகரடைந்த செய்தியைத் தெரிவிக்க
அவர்களிவ்யோகியரிருக்கு மடத்தையடைந்திவர்நிற்
கு நிலையையறிந்து இவைபயித்தியமுமன்று வேறு
சார்புமன்று இவர்கருத்து சிவயோகத்தினிடத்தேயா
ம் இனியுங்கள் சுற்றவியல்போடிவர் கூடாரென்றார்க
ள்-அவளதுகேட்டுத் துயரமெய்தி மயங்க அவர்களவ
ளைக்கொண்டகன்றார்கள். யோகத்திலிருந்த மூலரெ
ழுந்து முதனாளிப்பசுக்கள் வந்தவழியேசென்றுதாம்
வேஷமித்த சரீரத்தைக்காணாது மெய்ஞ்ஞானத்தையு
டைய சிந்தையினாலாராய்ந்து சிவபெருமானாதிகால
த்திற்றமது பஞ்சவத்திரத்தினின்றும் தோற்றுவித்த
சைவாகமமிருபத்தெட்டினுள் பேசப்பட்டமெய்ப்
பொருளைத் தமிழ்நூலாற்றமிழ்நாட்டிலுள்ள யாவர்

களுக்கு முபயோகமாதற் பொருட்டுத் தமதுதேகத்தை மறைத்தருளினரொனத் தெளிந்து திருவருளைத் துதித்துத் திருவாவடுதுறையையடைந்து அங்குள்ள சிவபெருமானையும் சிவகாமியம்மையையும் தெரிசித்துவணங்கி அதற்குப்புறக் கடைப்பக்கத்தி லிருக்கு மோரரசமரத்தையடைந்து சிவயோகத்திருந்தனர். இவ்வாறு மூவாயிரவருடமளவு மங்ஙனமிருந்து வருடத்திற் கொவ்வொரு திருப்பாட்டாக (௩௦௦௦)ம் திருப்பாடல்களால் சரிதைகிரியையோகம் ஞானமென்னும் நாஸ்குபாதங்களையு மருளிச்செய்து பின்பு பரமசிவத்தின் திருவருளால் திருக்கைலாயத்தை யடைந்தருளினார்.

இவ்வாறுகிய இத்திருமந்திரம்பின்னர் நம்பியாண்டார் நம்பியென்பவரால் (பத்தாந்திருமுறை) யெனவகுக்கப்பட்டிருப்பதினாலும் இந்நூல் சைவாகமத்தின் சாரமானதினாலும்யாவரும்வாசித்தலுடன்மற்றைய வருட்பாக்களைப்போல் பூசித்தலுமொக்கும்.

சரித்திரவரலாறு
முற்றிற்று.





# அட்டவணை.

---



௨

திருச்சிற்றம்பலம்.

# அதிகாரவகராதி.



உ

திருச்சிற்றம்பலம்.

## திருமூலநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# திருமந்திரம்-௩௲.



### விநாயகர்காப்பு.

ஐந்துகரத்தனை யானைமுகத்தனை
யிந்தினிளம்பிறை போலு மெயிற்றனை
நந்திமகன்றனை ஞானக்கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

### சிறப்புப்பாயிரம்.

போற்றிசைத்தின்னுயிர்மன்னும்புனிதனை
நாற்றிசைக்குநல்லமாதுக்குநாதனை
மேற்றிசைக்குட்டென்றிசைக்கொருவேந்தனுங்
கூற்றுதைத்தானையான்கூறுகின்றேனே. (௧)

ஒன்றவன்றானேயிரண்டவனின்னரு
ணின்றனன்மூன்றினுணான்குணர்ந்தைந்து
வென்றனனாறுவிரிந்தனனேழும்பர்ச்
சென்றவன்றானிருந்தானுணர்ந்தெட்டே. (௨)

ஒக்கநின்றானையுலப்பிலிதேவர்க
ணக்குநின்றேத்திடுநாதனைநாடொறும்

பக்கநின்றாரறியாதபரமனைப்
புக்குநின்றுன்னியான்போற்றிசெய்வேனே. (௩)

அகலிடத்தார்மெய்யையண்டத்துவித்தைப்
புகலிடத்தெம்மெய்யைப்போதவிட்டானைப்
பகலிடத்தும்மிரவும்பணிந்தேத்தி
யிகலிடத்தேயிருணீங்கிநின்றேனே. (௪)

சிவனொடொக்குந்தெய்வந்தேடினுமில்லை
யவனொடொப்பாரிங்கியாவருமில்லை
புவனங்கடந்தன்றுபொன்னொளிமின்னுந்
தவளச்சடைமுடித்தாமரையானே. (௫)

அவனையொழியவமரருமில்லை
யவனன்றிச்செய்யுமருந்தவமில்லை
யவனன்றிமூவராலாவதொன்றில்லை
யவனன்றியூர்புகுமாறறியேனே. (௬)

முன்னையொப்பாயுள்ளமூவர்க்குமூத்தவன்
றன்னையொப்பாயொன்றுமில்லாத்தலைமகன்
றன்னையப்பாவெனிலப்பனுமாயுளன்
பொன்னையொப்பாகின்றபோதகத்தானே. (௭)

தீயினும்வெய்யன்புனலினுந்தண்ணிய
னாயினுமீசனருளறிவாரில்லை
சேயினுநல்லனணியனல்லன்பர்க்குத்
தாயினுநல்லதாழ்சடையோனே. (௮)

பொன்னாற்புரிந்திட்டபொற்சடையென்னப்
பின்னாற்பிறங்கவிருந்தவன்பேர்நந்தி

யென்றாற்றொழப்படுமெம்மிறைமற்றவன்
றன்னாற்றொழப்படுவாரில்லைதானே. (௯)

தானேயிருநிலந்தாங்கிவிண்ணாய்நிற்குந்
தானேசுடுமங்கிஞாயிறுந்திங்களுந்
தானேமழைபொழிதையலுமாய்நிற்குந்
தானேதடவரைதண்கடலாகுமே. (௰)

அயலும்புடையுமெம்மாதியைநோக்கி
லியலும்பெருந்தெய்வமியாதுமொன்றில்லை
முயலுமுயலில்முடிவுமற்றாங்கே
பெயலுமழைமுகிற்பேர்நந்திதானே. (௰௧)

கண்ணுதலானொருகாதலினிற்கவு
மெண்ணிலிதேவரிறந்தாரெனப்பலர்
மண்ணுறுவார்களும்வானுறுவார்களு
மண்ணலிவனென்றறியகிலார்களே. (௰௨)

மண்ணளந்தான்மலரோன்முதற்றேவர்க
ளெண்ணளந்தின்னநினைக்கிலாரீசனை
விண்ணளந்தான்றன்னைமேலளந்தாரில்லைக்
கண்ணளந்தெங்குங்கடந்துநின்றானே. (௰௩)

கடந்துநின்றான்கமலமலராதி
கடந்துநின்றான்கடல்வண்ணனெம்மாயன்
கடந்துநின்றாரவர்க்கப்புறமீசன்
கடந்துநின்றெங்குங்கண்டுநின்றானே. (௰௪)

ஆதியுமாயரனாயுடலுள்நின்ற
வேதியுமாய்விரிந்தார்ந்திருந்தானருட்

சோதியுமாய்ச்சுருங்காததோர்தன்மையு
நீதியுமாய்நித்தமாகிநின்றானே. (௰௫)

கோதுகுலாவியகொன்றைக்குழற்சடை
மாதுகுலாவியவாணுதற்பாகனை
யாதுகுலாவியமரருந்தேவருங்
கோதுகுலாவிக்குணம்பயில்வாரே. (௰௬)

காயமிரண்டுங்கலந்துகொதிக்கினு
மாயந்கத்தூரியதுமிகுமவ்வழி
தேசங்கலந்தொருதேவனென்றெண்ணினு
மீசனுறவுக்கெதிரில்லைதானே. (௰௭)

அதிபதிசெய்தவளகைவேந்தனை
நிதிபதிசெய்தநிறைதவநோக்கி
யதுபதியாதரித்தாக்கமதாக்கி
யிதுபதிகொள்ளென்றவெம்பெருமானே. (௰௮)

இதுபதியேலங்கமழ்பொழிலேழு
முதுபதிசெய்தவன்மூதறிவாளன்
விதுபதிசெய்தவன்மெய்த்தவனோக்கி
யதுபதியாகவமருகின்றானே. (௰௯)

முடிவுபிறப்பையுமுன்னேபடைத்த
வடிகளுறையுமரனெறிநாடி
லிடியுமுழக்குமுமீசருருவங்
கடிமலர்க்குன்றமலையதுதானே. (௨௰)

வானப்பெருங்கொண்டன்மாலயன்வானவ
ரூனப்பிறவியொழிக்குமொருவனைக்

கானக்களிறுகதறப்பிளந்தவெங்
கோனைப்புகழுமின்கூடலுமாமே. (உ௧)

மனத்திலெழுகின்றமாயநன்னாட
னினைத்ததறிவனெனில்தாநினைக்கில
னெனக்கிறையன்பிலனென்பரிறைவன்
பிழைக்கநின்றார்பக்கம்பேணிநின்றானே. (உ௨)

வல்லவன்வன்னிக்கிறையிடைவாரண
நில்லெனநிற்பித்தநீதியுளீசனை
யில்லெனவேண்டாமிறையவர்தம்முத
லல்லும்பகலுமருளுகின்றானே. (உ௩)

போற்றிசைத்தும்புகழ்ந்தும்புனிதனடி
தேற்றுமினென்றுஞ்சிவனடிக்கேசெல்வ
மாற்றியதென்றுமயலுற்றுச்சிந்தையை
மாற்றிநின்றார்வழிமன்னிநின்றானே. (உ௪)

பிறப்பிலிபிஞ்ஞகன்பேரருளாள
னிறப்பிலியாவர்க்குமின்பமருளுந்
துறப்பிலிதன்னைத்தொழுமின்றொழுதால்
மறப்பிலிமாயாவிருத்தமுமாமே. (உ௫)

துடர்ந்துநின்றானைத்தொழுமின்றொழுதாற்
படர்ந்துநின்றான்பரிபாரகமுற்றுங்
கடந்துநின்றான்கமலம்மலர்மேலே
யுடந்திருந்தான்டிப்புண்ணியமாமே. (உ௬)

சத்தியெனத்தக்கதாம்னைவாண்முகத்
தந்தமிலீசனருணமக்கேயென்று

நந்தியை நாளும் வணங்கப்படுமவர்
புந்தியி னுள்ளே புகுந்து நின்றானே. (உஎ)

இணங்கி நின்றானெங்கு மாகி நின்றானும்
பிணங்கி நின்றான் பின் முன்னாகி நின்றானு
முணங்கி நின்றானமராபதி நாதன்
வணங்கி நின்றார்க்கே வழித்துணையாமே. (உஅ)

காணநில்லா யடியேற்குறவாருள்ள
நாணநில்லேனுன்னை நான்றழுவிக்கொள்ளக்
கோணநில்லாத குணத்தடியார்மனத்
தாணியனாகியமர்ந்து நின்றானே. (உகூ)

வானின்றழைக்கு மழைபோலிறைவனுந்
தானின்றழைக்குங் கொல்லென்றுதயங்குவா
ரானின்றழைக்குமது போலென்னந்தியை
நானின்றழைப்பது ஞாலங்கரியே. (௩௰)

மண்ணகத்தானொக்கும் வானகத்தானொக்கும்
விண்ணகத்தானொக்கும் வேதத்தினொக்கும்
பண்ணகத்தின்னிசை பாடலுற்றானுக்கே
கண்ணகத்தே நின்றுகாதலித்தேனே. (௩௧)

தேவர்பிரானம்பிரான் றிசைபத்தையு
மேவுபிரான் விரிநீருலகேழையுந்
தாவுபிரான் றன்மை தானறிவாரில்லை
பாவுபிரானருட்பாடலுமாமே. (௩௨)

பதிபலவாவது பண்டிவ்வுலகம்
விதிபலசெய்தொன்றும் மெய்ம்மையுணரார்

துதிபலதோத்திரஞ்சொல்லவல்லாரு
மதியிலர்நெஞ்சினுள்வாடுகின்றாரே. (௩௩)

சாந்துகமழுங்கவரியின்கந்தம்போல்
வேந்தனமரர்க்கருளியமெய்ந்நெறி
யார்ந்தசுடரன்னவாயிரநாமமும்
போந்துமிருந்தும்புகழவென்றானே. (௩௪)

ஆற்றுகிலாவழிநீருமிறைவனைப்
போற்றுமின்போற்றிப்புகழ்மின்புகழ்ந்திடில்
மேற்றிசைக்குங்கிழக்குத்திசையெட்டுக்கு
மாற்றுமவனப்படிமாடமுமாமே. (௩௫)

அப்பனைநந்தியையாராவமுதினை
யொப்பிலிவள்ளலையூழிமுதல்வனை
யெப்பரிசாயினுமேத்துமினேத்தினா
லப்பரிசீசனருள்பெறலாமே. (௩௬)

நானுநின்றேத்துவனாடொறுநந்தியைத்
தானுநின்றான்றழற்போலொக்குமேனியன்
வானினின்றார்மதிபோலுடலுள்ளுறுவந்
தூனினின்றாங்கேயுயிர்க்கின்றவாறே. (௩௭)

பிதற்றொழியேன்பெரியானரியானைப்
பிதற்றொழியேன்பிறவாவுருவானைப்
பிதற்றொழியேனெங்கள்பேர்நந்திதன்னைப்
பிதற்றொழியேன்பெருமைத்தவன்றானே. (௩௮)

வாழ்த்தவல்லார்மனத்துள்ளுறுசோதியைத்
தீத்தனையங்கேதிளைக்கின்றதேவனை

யேத்தியுமெம்பெருமானென்றிறைஞ்சியு
மாத்தஞ்செய்தீசனருட்பெறலாமே. (௩௬)

குறைந்தடைந்தீசன்குரைகழனாடு
நிறைந்தடைசெம்பொனினேரொளியொக்கு
மறந்திடஞ்செய்யாதுவாழ்த்தவல்லார்க்குப்
புறஞ்சடஞ்செய்யான்புகுந்துநின்றானே. (௩௭)

சினஞ்செய்தநஞ்சுண்டதேவர்பிரானைப்
புனஞ்செய்தநெஞ்சிடைபோற்றவல்லார்க்குக்
கனஞ்செய்தவாளுதற்பாகனுமங்கே
யினஞ்செய்தமான்போலிணங்கிநின்றானே. (௩௮)

போயரன்றன்னைப்புகழ்வார்பெறுவது
நாயகனான்முடிசெய்ததுவேநல்கு
மாயகஞ்சூழ்ந்துவரவல்லராகினும்
வேயனதோளிக்குவேந்தொன்றுந்தானே. (௩௯)

ஆரனடிசொல்லியரற்றியமுது
பானடிநாடியேபாவிப்பநானு
முரனடிசெய்தங்கொதுங்கவல்லார்க்கு
நீரனடிசெய்துநிறைந்துநின்றானே. (௪௦)

போற்றியென்பாரமரர்புனிதனடி
போற்றியென்பாரசுரர்புனிதனடி
போற்றியென்பார்மனிதர்புனிதனடி
போற்றியென்னன்புள்விளங்கவைத்தேனே. (௪௧)

விதிவழியல்லதிவ்வேலையுலகம்
விதிவழியின்பம்விருத்தமுமில்லை

துதிவழிநிற்றலுஞ்சோதிப்பிரானும்
பதிவழிகாட்டும்பகலவனாமே. (சரு)

அந்திவண்ணாவரனேசிவனேயென்று
சிந்தைசெய்வண்ணந்திருந்தடியார்தொழ
முந்திவண்ணாமுதல்வாபரனேயென்று
வந்திவ்வண்ணனென்மனம்புகுந்தானே. (சசு)

மனையிலிருந்தவர்மாதவரொப்பர்
நினைவுளிருந்தவர்நேசத்துணிற்பர்
பனையுளிருந்தபருந்ததுபோல
நினையாதவர்க்கில்லைநின்னின்பந்தானே. (சஎ)

அடியார்பரவுமமரர்பிரானை
முடியால்வணங்கிமுதல்வனைமுன்னிப்
படியாருளும்பரம்பரனெந்தை
விடியாவிளக்கென்றுமேவிநின்றேனே. (சஅ)

பறைபசுபாசத்துநாதனையுள்ளி
வறைபசுபாசத்தொருங்கவல்லார்க்குத்
திறைபசுபாசச்செழுங்கடனீந்திக்
கறைபசுபாசங்கடந்தெய்தலாமே. (சகூ)

கூடுவனெஞ்சிடைவைப்பன்பிரானென்று
பாடுவன்பன்மலர்தூவித்தொழுதுநின்
றாடுவனாடியமரர்பிரானென்று
நாடுவனானின்றறிவதுதானே. (ருய)

## வேதச்சிறப்பு.

வேதத்தைவிட்டவறமில்லைவேதத்தி
னோதத்தகுமறமெல்லாமுளதர்க்க
வாதத்தைவிட்டுமதிஞர்வளமுற்ற
வேதத்தையோதியேவீடுபெற்றார்களே. (௧)

வேதமுரைத்தானும்வேதியனாகிலன்
வேதமுரைத்தானும்வேதாவிளங்கிட
வேதமுரைத்தானும்வேதியர்வேள்விக்காய்
வேதமுரைத்தானுமெய்ப்பொருள்காட்டவே. (௨)

இருக்குருவாமெழில்வேதத்தினுள்ளே
யுருக்குணர்வாயுணர்வேதத்துளோங்கி
வெருக்குருவாகியவேதியர்சொல்லுங்
கருக்குருவாய்நின்றகண்ணனுமாமே. (௩)

திருநெறியாவதுசித்தசித்தன்றிப்
பெருநெறியாயபிரானைநினைந்து
குருநெறியாஞ்சிவமாநெறிகூடு
மொருநெறியொன்றாகவேதாந்தமோதுமே. (௪)

ஆறங்கமாய்வருமாமறையோதியைக்
கூறங்கமாகக்குணம்பயில்வாரில்லை
வேறங்கமாகவிளைவுசெய்தப்புறம்
பேறங்கமாகப்பெருக்குகின்றாரே. (௫)

பாட்டுமொலியும்பறக்குங்கணிகையா
ராட்டமருதவவனியில்மாட்டாத

வேட்டுவிருப்பார்விரதமில்லாதவ
ரீட்டுமிடஞ்சென்றிகலலுற்றாரே. (௱) ஆ. ௱.

ஆகமச்சிறப்பு.

அஞ்சனமேனியரிவையோர்பாகத்த
னஞ்சொடிருபத்துமூன்றுளவாகம
மஞ்சலிகூப்பியறுபத்தறுவரு
மஞ்சாமுகத்திலரும்பொருள்கேட்டதே. (௧)

அண்ணலருளாலருளுஞ்சிவாகம
மெண்ணிலிருபத்தெண்கோடிநூறாயிரம்
விண்ணவரீசன்விழுப்பமுரைத்தன
ரெண்ணிநின்றப்பொருளேத்துவனானே. (௨)

பண்டிதராவார்பதினெட்டுப்பாடையுங்
கண்டவர்கூறுங்கருத்தறிவாரென்க
பண்டிதர்தங்கள்பதினெட்டுப்பாடையு
மண்டமுதலரனறஞ்சொன்னவாறே. (௩)

அண்ணலருளாலருளுந்திவ்யாகமம்
விண்ணிலமரர்தமக்கும்விளங்கரி
தெண்ணிலெழுபதுகோடிநூறாயிர
மெண்ணிலுநீர்மேலெழுத்ததுவாகுமே. (௪)

பரனாய்ப்பராபரங்காட்டியுலகிற்
றரனாய்சிவதன்மந்தானேசொல்காலத்
தரனாயமரர்களர்ச்சிக்குநந்தி
யுரனாகியாகமமோங்குகின்றானே. (௫)

சிவமாம்பரத்தினிற்சத்திசதாசிவ
முவமாமகேசருருத்திரதேவர்
தவமால்பிரமீசர்தம்மிற்றும்பெற்ற
நவவாகமமெங்கணந்திபெற்றனே. (௬)

பெற்றநல்லாகமங்காரணங்காமிய
முற்றநல்வீரமுயர்வாதுளஞ்சிந்திய
மற்றவ்வியாமளமாகுங்காலோத்திரந்
துற்றநற்சுப்பிரஞ்சொல்லுமகுடமே. (௭)

அண்ணலருளாலருளுஞ்சிவாகம
மெண்ணிலிகோடிதொகுத்திடுமாயினு
மண்ணலறைந்தவறிவறியாவிடி
னெண்ணிலிகோடியுநீர்மேலெழுத்தே. (௮)

மாரியுங்கோடையும்வார்பனிதூங்கநின்
றேரியுநின்றங்கிளக்கின்றகாலத்து
வாரியமுந்தமிழும்முடனேசொலிக்
காரிகையார்க்குங்கருணைசெய்தானே. (௯)

அவிழ்க்கின்றவாறுமதுகட்டுமாறுஞ்
சிமிட்டலைப்பட்டுயிர்போகின்றவாறுந்
தமிழ்ச்சொல்வடசொல்லெனுமிவ்விரண்டு
முணர்த்துமவனையுணரலுமாமே. (௰) ௲௨ ௬௬.

## குருபாரம் பரியம்.

நந்தியருள்பெற்றநாதரைநாடிடி
னந்திகளுல்வர்சிவயோகமாமுனி

மன்றதொழுதபதஞ்சலிவியாக்ரம
ரென்றிவரென்னோடெண்மருமாமே. (௧)

நந்தியருளாலேநாதனாம்பேர்பெற்றோம்
நந்தியருளாலேமூலனைநாடினோம்
நந்தியருளாவதென்செயுநாட்டினில்
நந்திவழிகாட்டநானிருந்தேனே. (௨)

மந்திரம்பெற்றவழிமுறைமாலாங்க
னிந்திரன்சோமன்பிரமனுருத்திரன்
கந்துருக்காலாங்கிகஞ்சமலையனோ
டிந்தவெழுவருமென்வழியாமே. (௩)

நால்வருநாலுதிசைக்கொன்றுநாதர்க
ளால்வருநானாவிதப்பொருள்கைக்கொண்டு
நால்வருநான்பெற்றதெல்லாம்பெறுகென
நால்வருந்தேவராய்நாதரானார்களே. (௪)

மொழிந்ததுமூவர்க்குநால்வர்க்குமீச
னொழிந்தபெருமையிறப்பும்பிறப்புஞ்
செழுஞ்சுடர்மூன்றொளியாகியதேவன்
கழிந்தபெருமையைக்காட்டகிலானே. (௫)

எழுந்துநீர்பெய்யினுமெட்டுத்திசையுஞ்
செழுந்தணியமங்கள்செய்மினென்றண்ணல்
கொழுந்தண்பவளக்குளிர்சடையோடே
யழுந்தியநால்வர்க்கருளிபுரிந்தானே. (௬) ஆ ௭௨.



## திருமூலர்வரலாறு.

நந்தியிணையடிநான்றலைமேற்கொண்டு
புந்தியினுள்ளேபுகப்பெய்துபோற்றிசெய்
தந்திமதிபுனையரனடிநாடொறுஞ்
சிந்தைசெய்தாகமஞ்செப்பலுற்றேனே. (௧)

செப்புஞ்சிவாகமமென்னுமப்பேர்பெற்று
மப்படிநல்குமருணந்திதாள்பெற்று
தப்பிலாமன்றிற்றனிக்கூத்துக்கண்டபி
னொப்பிலெழுபதுகோடியுகமிருந்தேனே. (௨)

இருந்தவக்காரணங்கேளிந்திரனே
பொருந்தியசெல்வப்புவனாதிபதியை
யருந்தவச்செல்வியைச்சேவித்தடியேன்
பரிந்துடன்வந்தனன்பத்தியினாலே. (௩)

சதாசிவந்தத்துவமுத்தமிழ்வேத
மிதாசனியாதிருந்தேனின்றகால
மிதாசனியாதிருந்தேன்மனநீங்கி
யுதாசனியாதுடனேயுணர்ந்தோமால். (௪)

மாலாங்கனேயிங்கியான்வந்தகாரண
நீலாங்கமேனிநேரிழையாளொடு
மூலாங்கமாகமொழிந்ததிருக்கூத்தின்
சீலாங்கவேதத்தைச்செப்பவந்தேனே. (௫)

நேரிழையாவாணிரதிசயானந்தப்
பேருடையாளென்பிறப்பறுத்தாண்டவள்

சீருடையாள்சிவனாவடுதண்டுறை
சீருடையாள்பதஞ்சேர்ந்திருந்தேனே. (௬)

சேர்ந்திருந்தேன்சிவமங்கைதன்பங்கனைச்
சேர்ந்திருந்தேன்சிவனாவடுதண்டுறை
சேர்ந்திருந்தேன்சிவபோதியினீழலிற்
சேர்ந்திருந்தேன்சிவனாமங்களோதியே. (௭)

இருந்தேனிக்காயத்தேயெண்ணிலிகோடி
யிருந்தேனிராப்பகலற்றவிடத்தே
யிருந்தேனிமையவரேத்தும்பதத்தே
யிருந்தேனென்னந்தியிணையடிக்கீழே. (௮)

பின்னைநின்றென்னேபிறவிபெறுவது
முன்னைநன்றாகமுயல்தவஞ்செய்கிலி
மென்னைநன்றாகவிறைவன்படைத்தனன்
றன்னைநன்றாகத்தமிழ்ச்செய்யுமாறே (௯)

ஞானத்தலைவிதன்னந்திநகர்புக்கு
றூனமிலொன்பதுகோடியுகந்தனுள்
ஞானப்பாலாட்டிநாதனையர்ச்சித்து
யானுமிருந்தேனற்பொதிகையின்கீழே. (௰)

செல்கின்றவாறறிசிவமுனிசித்தசன்
வெல்கின்றஞானத்துமிக்கோர்முனிவராய்ப்
பல்கின்றதேவரசுரர்நரர்தம்பா
லொல்கின்றவான்வழியூடுவந்தேனே. (௰௧)

சித்தத்தினுள்ளேசிறக்கின்றநூல்களி
லுத்தமமாகவேயோதியவேதத்தி

ஒருத்தவுடலையுமுண்ணின்றவுற்பத்தி
யத்தனெனக்கிங்கருளாலளித்ததே. (௰௨)

நான்பெற்றவின்பம்பெறுகவிவ்வையகம்
வான்பற்றிநின்றமறைப்பொருள்சொல்லவு
மூன்பற்றிநின்றவுணர்வுறுமந்திரந்
தான்பற்றப்பற்றத்தலைப்படுந்தானே. (௰௩)

பிறப்பிலிநாதனைப்பேர்நந்திதன்னைச்
சிறப்பொடுவானவர்சென்றுகைகூப்பி
மறப்பிலர்நெஞ்சினுண்மந்திரமாலை
யுறைப்பொடுகூடிநின்றோதலுமாமே. (௰௪)

அங்கிமிகாமைவைத்தானுடல்வைத்தன
னெங்குமிகாமைவைத்தானுலகேழையுந்
தங்கிமிகாமைவைத்தான்றமிழ்சாத்திரம்
பொங்கிமிகாமைவைத்தான்பொருடானுமே. (௰௫)

அடிமுடிகாண்பாரயன்மாலிருவர்
படிகண்டிலர்மீண்டும்பார்மிசைக்கூடி
யடிகண்டிலனென்றச்சுதன்சொல்ல
முடிகண்டனென்றயன்பொய்மொழிந்தானே. (௰௬)

பெற்றமுமானுமழுவும்பிரிவற்ற
தற்பரன்கற்பனையாகுஞ்சராசரத்
தற்றமுநல்கியடியேன்சிரத்தினி
னற்பதமும்மளித்தானெங்கணந்தியே. (௰௭)

ஞேயத்தைஞானத்தைஞாதுருவத்தினை
மாயத்தைமாமாயைதன்னில்வரும்பரை

யாயத்தையச்சிவன்றன்னையகோசர
வியத்தைமுற்றும்விளங்கியிட்டேனே. (௰௮)

விளக்கிப்பரமாகுமெய்ஞ்ஞானச்சோதி
யளப்பில்பெருமையனந்தநந்தி
துளக்கறுமானந்தக்கூத்தன்சொற்போந்து
வளப்பிற்கயிலைவழியில்வந்தேனே. (௰௯)

நந்தியருளாலேமூலனைநாடிப்பின்
னந்தியருளாலேசதாசிவனாயினே
னந்தியருளாலேமெய்ஞ்ஞானத்துநண்ணினே
னந்தியருளாலேநானிருந்தேனே. (௨௰)

இருக்கிலிருக்குமெண்ணிலிகோடி
யருக்கின்றமூலத்துளங்கேயிருக்கு
மருக்கனுஞ்சோமனுமாரழல்வீச
வுருக்கியரோமமொளிவிட்டிருந்தானே. (௨௰௪)

பிதற்றுகின்றேனென்றும்பேர்நந்திதன்னை
யியற்றுவினைஞ்சத்திரவும்பகலு
முயற்றுவதேறுங்கொளிவண்ணனெம்மானை
யியற்றிகழ்ஞ்சோதியிறைவனுமாமே. (௨௨) ஆ. ௬௪

---

அவையடக்கம்.

ஆரறிவாரெங்களண்ணல்பெருமையை
யாரறிவாரிந்தவகலமுநீளமும்
பேரறியாதபெருஞ்சுடரொன்றதின்
வேரறியாமைவிளம்புகின்றேனே. (௧)

பாடவல்லார்நெறிபாடவறிகிலே
னாடவல்லார்நெறியாடவறிகிலே
னாடவல்லார்நெறிஞானமறிகிலேன்
றேடவல்லார்நெறிதேடுகில்லேனே. (௨)

மன்னியவாய்மொழியாலுமதித்தவ
னின்னிசையுள்ளேயெழுகின்றவீசனைப்
பின்னையுலகம்படைத்தபிரமனு
முன்னியவனையுணரலுமாமே. (௩)

தத்துவஞானமுரைத்துத்தாழ்வரை
முத்திக்கிருந்தமுனிவருந்தேவரு
மொத்துடன்வேறுயிருந்துதுதிசெயும்
பத்திமையானிப்பயனறியாரோ. (௪) ஆ ௨௮.



திருமந்திரத்தொகைச்சிறப்பு.

மூலனுரைசெய்தமூவாயிரந்தமிழ்
ஞாலமறியவேநந்தியருளது
காலையெழுந்துகருத்தறிந்தோதிடின்
ஞாலத்தலைவனைநண்ணுவரன்றே. (௧)

வைத்தபரிசேவகைவகைநன்னூலின்
முத்திமுடிவிதுமூவாயிரத்திலே
புத்திசெய்பூர்வத்துமூவாயிரம்பொது
வைத்தசிறப்புதருமிவைதானே. (௨) ஆ ௩.



## குருமடவரலாறு.

வந்தமடமேழுமன் னுஞ்சன்மார்க்கத்தின்
முந்தியுதிக்கின்றமூலன்மடவரை
தந்திரமொன்பது சார்வுமூவாயிரஞ்
சுந்தரவாகமச்சொன்மொழிந்தானே. (௧)

கலந்தருள்காலாங்கர்தம்பாற்கோரர்
நலந்தருமன்னியதேவர்நாதாந்தர்
புலங்கொள்பரமானந்தர்போகதேவர்
நிலந்திகழ்மூலர்நிராமயத்தோரே. (௨) ஆ-ர.

---

## திரிமூர்த்திகளின்சேட்டகனிட்டமுறைமை.

அளவிலிளமையுமந்தமுமீறு
மளவியல்காலமுநாளுமுணரிற்
றளர்விலன்சங்கரன்றன்னடியார்சொல்
லளவில்பெருமையரியயற்காமே. (௧)

ஆதிப்பிரானுமணிமணிவண்ணனு
மாதிக்கமலத்தலர்மிசையாயனுஞ்
சோதிக்கில்மூன்றுந் தொடர்ச்சியிலொன்றெனார்
பேதித்துலகம்பிணங்குகின்றார்களே. (௨)

ஈசனிருக்குமிருவினைக்கப்புறம்
பீசமுலகிற்பெருந்தெய்வமான து
வீசனதுவிது வென்பார்நினைப்பிலார்
தூசுபிடித்தவர் தூரநித்தார்களே. (௩)

சிவமுதல்மூவரோடைவர்சிறந்த
வவைமுதலாறிரண்டொன்றொடொன்ருகு
மவைமுதல்விந்துவுநாதமுமோங்கச்
சவைமுதற்சங்கரன்றன்பெயர்தானே. (௪)

பயனறிந்தவ்வழியெண்ணுமளவி
லயனொடுமாலமக்கவ்வியமில்லை
நயனங்கள்மூன்றுடைநந்திதமராம்
வயன்பெறுவீரவ்வானவராலே. (௫)

ஓலக்கஞ்சூழ்ந்தவலப்பிலிதேவர்கள்
பாலொத்தமேனிபணிந்தடியேன்றொழ
மாலுக்குமாதிப்பிரமற்குமொப்புநீ
ஞாலத்துநம்மடிநல்கிடென்றானே. (௬)

வானவரென்றுமனிதரிவரென்றுந்
தேனமர்கொன்றைச்சிவனருளல்லது
தானமர்ந்தோருந்தனித்தெய்வமற்றில்லை
யூனமர்ந்தோரையுணர்வதுதானே. (௭)

சோதித்தபேரொளிமூவைந்தெனநின்
வா[illegible]க்[illegible]ாவதற[illegible]ாதார்க்
ணீ[illegible]க்கணி[illegible]னொடுமாயனென்று
பே[illegible]த்தவனைப்பிதற்றுகின்றோ. (௮)

பரத்திலேயொன்றாயுள்ளாய்ப்புறமாகி
வரத்தினுண்மாயவனாயயனாகித்
தரத்தினுட்டான்பலதன்மையனாகிக்
கரத்தினுணின்றுகழிவுசெய்தானே. (௯)

தானொருகூறுசதாசிவனெம்மிறை
வானொருகூறுமருவியுமங்குளன்
கோனொருகூறுட லுண்ணின்றுயிர்க்கின்ற
தானொருகூறுசலமயனாமே. (ய)

ஆக அதிகாரம்-கூ-இ-பாடல்-ராயஉ.

சிறப்புப்பாயிரம்- முற்றும்.

* * *

முதற்றந்திரம், உபதேசம்.

விண்ணின்றிழிந்துவினைக்கீடாய்மெய்கொண்டு
தண்ணின்றதாளைத்தலைக்காவல்முன்வைத்து
வுண்ணின்றுருக்கியொரொப்பிலாவானந்தக்
கண்ணின்றுகாட்டிக்களிம்பறுத்தானே. (க)

களிம்பறுத்தானெங்கள்கண்ணுதல்நந்தி
களிம்பறுத்தானருட்கண்விழிப்பித்துக்
களிம்பணுகாதகதிரொளிகாட்டிப்
பளிங்கிற்பவளம்பதித்தான்பதியே. (உ)

பதிபசுபாசமெனப்பகர்மூன்றிற்
பதியினைப்போற்பசுபாசமநாதி
பதியினைச்சென்றணுகாப்பசுபாசம்
பதியணுகிற்பசுபாசநிலாவே. (ங)

வேயினெழுங்கனல்போலேயிம்மேனியுங்
கோயிலிருந்துகுடிகொண்டகோனந்தி

நாயினுமும்மலமாற்றித்தயாவென்னுந்
தோயமதாயெழுஞ்சூரியனாமே. (௪)

சூரியகாந்தமுஞ்சூழ்பஞ்சும்போலவே
சூரியகாந்தஞ்சூழ்பஞ்சைச்சுடமாட்டாச்
சூரியன்சந்நிதியிற்சுடுமாறுபோ
லாரியன்றோற்றமுனற்றமலங்களே. (௫)

மலங்களைந்தாமெனமாற்றியருளித்
தலங்களைந்தானற்சதாசிவமான
புலங்களைந்தானப்பொதுவினுணந்தியே
நலங்களைந்தானுண்ணயந்தானறிந்தே. (௬)

அறிவைம்புலனுடனேநான்றதாகி
நெறியறியாதுற்றநீராழம்போல
வறிவறிவுள்ளேயழிந்ததுபோல
குறியறிவிப்பான்குருபரனாமே. (௭)

ஆமேவுபாலைப்பிறிக்கின்றவன்னம்போற்
றாமேதனிமன்றிற்றன்னந்தனிநித்தந்
தீமேவுபல்கரணங்களுளுற்றன
தாமேபிறப்பெரிசேர்ந்தவித்தாமே. (௮)

வித்தைக்கெடுத்துவியாக்கிரத்தேமிகச்
சுத்தத்துரியம்பிறந்துதுடக்கற்று
வொத்துப்புலனுயிரொன்றாயுடம்பொடு
செத்திட்டிருப்பர்சிவயோகியர்களே. (௯)

சிவயோகமாவதுசித்தசித்தன்று
நவயோகத்துட்புக்குத்தன்னொளிதாயு

தவயோகஞ்சாராதவன்பதிபோக
நவயோகநந்திதனக்களித்தானே. (௰)

அளித்தானுலகெங்குந்தாஞனவுண்மை
யளித்தானமரரறியாவுலக
மளித்தான்றிருமன்றுளாடுந்திருத்தா
ளளித்தான்பேரின்பத்தருள் வெளிதானே. (௰௧)

வெளியின்வெளிபோய்விரவியவாறு
மளியினளிபோயடங்கியவாறு
மொளியிலொளிபோயொடுங்கியவாறுந்
தெளியுமவரேசிவசித்தர்தாமே. (௰௨)

சித்தர்சிவலோகமிங்கேதெரிசித்தோர்
சத்தமுஞ்சத்தமனமுந்தமிழ்கொண்டோர்
நித்தர்நிமலர்நிராமயர்நீள்பர
முத்தர்தமுத்திமுதல்முப்பத்தாறே. (௰௩)

முப்பதுமாறும்படிமுத்தியேணியா
யொப்பிலாவானந்தத்துள்ளொளிபுக்குச்
செப்பவரியசிவங்கண்டுதான்றெளிந்
தப்பரிசாகவமர்ந்திருந்தாரே. (௰௪)

இருந்தார்சிவமாகியெங்குந்தாமாகி
யிருந்தார்சிவன்செயலியாவையுநோக்கி
யிருந்தார்முக்காலத்தியல்பைக்குறித்தங்
கிருந்தாரிழவுவந்தெய்தியசோம்பே. (௰௫)

சோம்பரிருப்பதுசுத்தவெளியிலே
சோம்பர்கிடப்பதுசுத்தவொளியிலே

சோம்பருணர்வுசுருதிமுடிந்திடஞ்
சோம்பர்கண்டாரச்சுருதிக்கட்டூக்கமே. (௰௬)

தாங்கிக்கண்டார்சிவலோகமுந்தம்முள்ளே
தாங்கிக்கண்டார்சிவயோகமுந்தம்முள்ளே
தாங்கிக்கண்டார்சிவயோகமுந்தம்முள்ளே
தாங்கிக்கண்டார்நிலைசொல்வதெவ்வாறே. (௰௭)

எவ்வாறுகாண்பானறிவுதனக்கெல்லை
யவ்வாறருட்செய்வானாதியான்றானு
மொவ்வாதமன்றுளுமைகாணவாடுஞ்
செவ்வானிற்செய்யசெழுஞ்சுடர்மாணிக்கம். (௰௮)

மாணிக்கத்துள்ளேமரகதச்சோதியாய்
மாணிக்கத்துள்ளேமரகதமாடமா
யாணிப்பொன்மன்றினிலாடுந்திருக்கூத்தைப்
பேணித்தொழுதென்னபேறுபெற்றாரே. (௰௯)

பெற்றாருலகிற்பிரியாப்பெருநெறி
பெற்றாருலகிற்பிறவாப்பெரும்பயன்
பெற்றாரம்மன்றிற்பிரியாப்பெரும்பேறு
பெற்றாருலகுடன்பேசாப்பெருமையே. (௨௰)

பெருமைசிறுமையறிந்தெம்பிரான்போ
லருமையெளிமையறிந்தறிவாரா
ரொருமையுள்ளாமைபோலுள்ளைந்தடக்கி
யிருமையுங்கெட்டிருந்தார்புரையற்றே. (௨௧)

புரையற்றபாலினுணெய்கலந்தாற்போற்
றிரையற்றசிந்தையுள்ளாரியனெஞ்செப்பு

மூலாயதற் றுணர்வோருடம்பிங்கொழிந்தாற்
கலையற்றசோதிகலந்தசத்தாமே. (உஉ)

சத்தமுதலைந் துந்தன்வழித்தான்சாரிற்
சித்துக்குச்சித்தன்றிச்சேர்விடம்வேறுண்டோ
சுத்தவெளியிற்சுடரிற்சுடர்சேரு
மத்தமிதுகுறித்தாண்டுகொளப்பிலே. (உங)

அப்பினிற்கூர்மையாதித்தன்வெம்மையா
லுப்பெனப்பேர்பெற்றுருச்செய்ததவ்வுரு
வப்பினிற்கூடியதொன்றாகுமாறுபோற்
செப்பினிற்சிவன்சிவத்துளடங்குமே. (உச)

அடங்குபேரண்டத்தணுவண்டஞ்சென்றங்
கிடங்கொண்டதில்லையிதுவன்றிவேறுண்டோ
கடந்தொறுநின்றவுயிர்கரிகாணிற்
றிடம்பெறநின்றான்றிருவடிதானே. (உரு)

திருவடியேசிவமாவதுதேரிற்
றிருவடியேசிவலோகஞ்சிந்திக்கிற்
றிருவடியேசெல்கதியதுசெப்பிற்
றிருவடியேதஞ்சமுட்டெளிவார்க்கே. (உசா)

தெளிவுகுருவின்றிருமேனிகாண்டல்
தெளிவுகுருவின்றிருநாமஞ்செப்பல்
தெளிவுகுருவின்றிருவார்த்தைகேட்டல்
தெளிவுகுருவுருசிந்தித்தறுமே. (உஎ)

தானேபுலனைந்துந்தன்வசமாயிடுந்
தானேபுலனைந்துந்தன்வசம்போயிடுந்

தானேபுலனைந்துந்தன்னில்மடைமாறும்
தானேதனித்தெம்பிரான்றனைச்சந்தித்தே. (உ௬)

சந்திப்பதுநந்திதன்றிருத்தாளிணை
சந்திப்பதுநந்திசெய்யதிருமேனி
வந்திப்பதுநந்திநாமமெவ்வாய்மையாற்
புந்திக்குணிற்பதுநந்திபொற்போதமே. (உ௯)

போதந்தருமெங்கள்புண்ணியநந்தியைப்
போதநதனில்வைத்துப்புண்ணியராயுளார்
நாதனடத்தானயனங்களிகூர
வேதந்துதித்திடப்போயடைந்தார்விண்ணே (௩௰)

ஆ ௩சஉ.

யாக்கைநிலையாமை.

மண்ணொன்றுகண்டீர்இருவினைப்பாத்திரந்
திண்ணென்றிருந்ததுதீயினைச்சேர்ந்தது
விண்ணின்றுநீர்விழின்மீண்டுமண்ணாம்போ
லெண்ணின்றமாந்தரிறக்கின்றவாறே. (க)

பண்டம்பொய்க்கூரைபழகிவிழுதலா
லுண்டவப்பெண்டிருமக்களும்பின்செலார்
கொண்டவிரதமுஞானமுமல்லது
மண்டியவருடன்வழிநடவாதே. (உ)

ஊரெலாங்கூடியொலிக்கவழுதிடப்
பேரினைநீக்கிப்பிணமென்றுபேரிட்டுச்

சூரையங்காட்டிடைகொண்டுபோய்சுட்டிட்டு
நீரினில்மூழ்கிநினைப்பொழிந்தார்களே, (ரு)

காலுமிரண்டுமுகட்டலகொன்றுள
பாலுள்பருங்கழிமுப்பத்திரண்டுள
மேலுளகூரைபிரியும்பிரிந்தபின்
போலுயிர்மீளப்புகவறியாதே. (௪)

சீக்கைவிளைந்ததுசெய்வினைமூட்டிற்ற
வாக்கைபிரிந்ததலகுபழுத்தது
மூக்கினிற்கைவைத்துமூட்டிட்டுக்கொண்டுபோய்க்
காக்கைக்குக்கைபலிகாட்டியவாறே. (ரு)

அடப்பண்ணிவைத்தாரடிசிலையுண்டார்
மடக்கொடியாரொடுமந்தனங்கொண்டா
ரிடப்பக்கமேயிறைநேர்ந்ததேயென்றார்
கிடக்கப்படுத்தார்கிடந்தொழிந்தாரே. (௬)

மன்றத்தேநம்பிக்குமாடமெடுத்தது
மன்றத்தேநம்பிசிவிகைபெற்றேறினன்
மன்றத்தேநம்பிமுக்கோடிவழங்கினன்
சென்றத்தாவென்றுதிரிந்திலன்றானே. (எ)

வாசந்திபேசிமணம்புணர்ந்தப்பதி
நேசந்தெவிட்டிநினைப்பொழிவார்பின்னை
யாசந்திமேல்வைத்தமையவழுதிட்டுப்
பாசந்திசுட்டுப்பலியட்டினார்களே. (அ.

கைவிட்டுநாடிக்கருத்தழிந்தச்சற
நெய்யட்டிச்சோறுண்மைவரும்போயினர்

மையிட்டகண்ணாளுமாடுமிருக்கவே
மெய்விட்டுப்போகவிடைகொள்ளுமாறே. (௯)

பந்தற்பிரிந்தது பண்டாரங்கட்டற்ற
வொன்பதுவாசலுமொக்கவடைந்தன
துன்புறுகாலந்துரிசுவருமென்றே
லன்புடையார்களழுதகன்றார்களே. (௰)

நாட்டுக்குநாயகனம்மூர்த்தலைமகன்
காட்டுச்சிவிகையொன்றேறிக்கடைமுறை
நாட்டார்கள்பின்செல்லமுன்னேபறைகொட்ட
நாட்டுக்குநம்பிநடக்கின்றவாறே. (௰௧)

முப்பதுமுப்பதுமுப்பத்தறுவருஞ்
செப்பமதிலுடைக்கோயிலுள்வாழ்பவர்
செப்பமதிலுடைக்கோவிற்சிதைந்தபின்
னொக்கவனைவருமோட்டெடுத்தாரே. (௰௨)

மதுவூர்குழலியுமாடுமனையு
மிதுவூரொழியவிமானமதேறிப்
பொதுவூர்புறஞ்சுடுகாடதுநோக்கி
யதுவூர்வாங்கியேவைத்தகன்றார்களே. (௰௩)

வைச்சகல்வுற்றதுகண்டுமனிதர்க
ளச்சகலாதெனநாடுமரும்பொருள்
பிச்சதுவாய்ப்பின்றொடர்வுறுமற்றவ
ரெச்சகலாநின்றிளைக்கின்றவாறே. (௰௪)

ஆர்த்தெழுசுற்றமும்பெண்டிருமக்களு
மூர்த்துறைகாலேயொழிவாரொழிந்தபின்

வேர்த்தலைபோக்கிவிறகிட்டெரிமூட்டி
நீர்த்தலைமூழ்குவர்நீதியிலோரே.    (௰௫)

வளத்திடைமுற்றத்தோர்மாநிலமுற்றுங்
குளத்தின்மண்கொண்டுகுயவன்வனைந்தால்
குடமுடைந்தாலவையோடென்றுவைப்ப
ருடலிறந்தாலிறைப்போதும்வையாரே.    (௰௬)

ஐந்துதலைப்பரியாறுசடையுள
சுந்தவைமுப்பதுசார்வுபதினெட்டுப்
பந்தலுமொன்பதுபந்திப்பினைந்து
வெந்துகிடந்ததுமேலறியாமே.    (௰௭)

அத்திப்பழமுமறைக்கீரைநல்வித்துங்
கொத்தியுலைப்பெய்துகூழிட்டுவைத்தன
ரத்திப்பழத்தையறைக்கீரைவித்துண்ணக்
கத்தியெடுத்தவர்காடுபுக்காரே,    (௰௮)

மேலுமுகட்டில்லைகீழும்வடிம்பில்லை
காலுமிரண்டுமுகட்டலகொன்றுண்டு
வோலையான்மேய்ந்தவரூடுவரிதமை
வேலையாம்மேய்ந்ததோர்வெள்ளித்தளிகையே;    (௰௯)

கூடங்கிடந்ததுகோலங்களிங்கில்லை
யாடமிலையமுமற்றதறுதலும்
பாடுகின்றார்சிலர்பண்ணிலெழுதிட்டுத்
தேடியேதீயினிற்றீயவைத்தார்களே,    (உ௰)

முட்டைபிறந்ததுமு[illegible]நாவினி
விட்டதுதானிலையேதேனுமேழைகாள்

பட்டதுபார்மணம்பன்னிரண்டாண்டினிற்
கெட்டதெழுபதிற்கேட்டறியீரோ, (௨௧)

இடிஞ்சிலிருக்கவிளக்கெரிகொண்டான்
முடிஞ்சதறியார்முழங்குவர்மூடர்
விடிஞ்சிருளாவதறியாவுலகம்
படிஞ்சுகிடந்துபதைக்கின்றவாறே. (௨௨)

மடல்விரிகொன்றையன்மாயன்படைத்த
வுடலுமுயிருமுருவந்தொழாம
லிடர்படர்ந்தேழாநரகிற்கிடப்பர்
குடர்படவெந்தமர்கூப்பிடுமாறே. (௨௩)

குடையுங்குதிரையுங்கொற்றவாளுங்கொண்
டிடையுமக்காலமிருந்துநடுவே
யுடையுமனிதனுற்போகுமப்போது
வடையுமிடம்வலமாருயிராமே. (௨௪)

காக்கைகவரிலென்கண்டார்பழிக்கிலென்
பாற்றுளிபெய்யிலென்பல்லோர்பழிக்கிலென்
றோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டுங்
கூத்தன்புறப்பட்டுப்போனவிக்கூட்டையே. (௨௫)

ஆ ௱௯௰ள.

---

## செல்வநிலையாமை.

அருளுமரசருமானையுந்தேரும்
பொருளும்பிறர்கொள்ளப்போவதன்முன்னந்

தெருளுமுயிரொடுஞ்செல்வனைச்சேரில்
மருளும்பினையவன்மாதவமன்றே. (௧)

இயக்குறுதிங்களிருட்பிழம்பொக்குந்
துயக்குறுஞ்செல்வத்தைச்சொல்லவும்வேண்டா
மயக்கறநாடுமின்வானவர்கோனைப்
பெயற்கொண்டல்பாலப்பெருஞ்செல்வமாமே. (௨)

தன்னதுசாயைதனக்குதவாதுகண்
டென்னதுமாடென்றிருப்பார்களேழைக
ளுடலினுயிர்போமுடலொக்கப்பிறந்தது
கண்ணதுகாணொளிகண்டுகொளீரே. (௩)

ஈட்டியதேன்பூமணங்கண்டிரதமுங்
கூட்டிக்கொணர்ந்தொருகொம்பிடைவைத்திடு
மோட்டித்துரந்திட்டதுவலியார்கொளக்
காட்டிக்கொடுத்தவைகைவிட்டவாறே. (௪)

தேற்றத்தெளிமின்றெளிந்தீர்கலங்கன்மி
னூற்றுப்பெருக்கிங்கலக்கிமலக்காதே
மாற்றிக்களைவீர்மறித்துங்கள்செலவத்தைக்
கூற்றன்வருங்கால்குறிக்கவுமாமே. (௫)

மகிழ்கின்றசெல்வமுமாடுமுடனே
கவிழ்கின்றநீர்மிசைச்செல்லுங்கமலம்போ
லவிழ்கின்றவாக்கைக்கோர்வீடுபேறாகச்
சிமிழொன்றுவைத்தமைதேர்ந்தறியாரே (௬)

வாழ்வுமனைவியுமக்களுடன்பிறந்
தூழுமளவேதனக்கென்பவொண்பொருள்

மேவுமதனைவிரிவுசெய்வார்கட்குக்
கூறுந்தனையொன்றுகூறலுமாமே. (௭)

வேட்கைமிகுத்ததுமெய்கொள்வாரிங்கிலை
பூட்டுந்தறியொன்றுபோம்வழியொன்பது
நாட்டியதாய்தமர்வந்துவணங்கிப்பின்
காட்டிக்கொடுத்தவர்கைவிட்டவாறே. (௮)

உடம்பொடுயிரிடைவிட்டோடும்போது
வடும்பரிசொன்றில்லையண்ணலையெண்ணும்
விடும்பரிசாய்நின்றமெய்நமன்றூதர்
கடும்பரிசத்தையுங்குழகிலாரோ. (௯) ஆக ௱௭௯.

---

இளமைநிலையாமை.

கிழக்கெழுந்தோடியஞாயிறுமேற்கே
விழக்கண்டுந்தேறார்விழியிலாமாந்தர்
குழக்கன்றுமூத்தெருதாய்ச்சிலநாளில்
விழக்கண்டுந்தேறார்வியனுலகோரே. (௧)

ஆண்டுபலவுங்கழிந்தனவப்பனைப்
பூண்டுகொண்டாரும்புகுந்தறிவாரில்லை
நீண்டனகாலங்களீண்டுகொடுக்கினுந்
தூண்டுவிளக்கின்சுடரறியார்களே. (௨)

தேய்ந்தற்றொழிந்தவிளமைகடைமுறை
யாய்ந்தற்றபின்னையரியகருமங்கள்
பாய்ந்தற்றகங்கைப்படர்சடைநந்தியை
யோர்ந்துற்றுக்கொள்ளுமுயிருள்ளபோதே. (௩)

விரும்புவர் முன்னெ னென்னை மெல்லியன்மாதர்
கரும்புதகர்த்துக்கடைக்கொண்டநீர்போ
லரும்பொத்தமென் முலையாயிழையார்க்குக்
கரும்பொத்துக்காஞ்சிரங்காயுமொத்தேனே. (ச)

பாலனிளையன்விருத்தனென நின்ற
காலங்கழிவனகண்டுமறிகிலார்
ஞாலங்கடந்தண்ட மூடறுத்தானடி
மேலுங்கிடந்துவிரும்புவனுனே. (ரு)

காலையெழுந்தவர்நித்தலுநித்தலு
மாலைபடுவதும்வாணாட்கழிவதுஞ்
சாலுமவ்வீசன்சலவியனாகிலு
மேலநினைப்பவர்க்கின்பஞ்செய்தானே. (சா)

பருவூசியைந்துமோர்பையினுள்வாழும்
பருவூசியைந்தும்பறக்கும்விருகம்
பருவூசியைந்தும்பனித்தலைப்பட்டாற்
பருவூசிப்பையும்பறக்கின்றவாறே (எ)

கண்ணனுங்காய்கதிரோனுமுலகினை
யுண்ணின்றளக்கின்றதொன்றுமறிகிலார்
விண்ணுறுவாரையும்வினையுறுவாரையு
மெண்ணுறுமுப்பதிலீர்ந்தொழிந்தாரே (அ)

ஒன்றியவீரொண்கலையுமுடன்றன
நின்றதுகண்டுநினைக்கிலர்நீதர்கள்
கன்றியகாலன்கருக்குழிவைத்தபின்
சென்றதில்வீழ்வர்திகைப்பொழியாரே. (கூ)

எய்திய நாளிலிளமைகழியாமை
யெய்திய நாளிலிசையிருலேத்துமி
னெய்திய நாளிலெறிவதறியாம
லெய்திய நாளிலிரந்துகண்டேனே. (ய) ஆக ௱அயகூ.

## உயிர்நிலையாமை.

தழைக்கின்றசெந்தளிர்த்தண்மலர்க்கொம்பி
லிழைக்கின்றதெல்லாமிறக்கின்றகண்டும்
பிழைப்பின்றியெம்பெருமானடியேத்தா
ரழைக்கின்றபோதறியாரவர்தாமே. (க)

ஐவர்க்கொருசெய்விளைந்துகிடந்தது
வைவருமச்செய்யைக்காத்துவருவர்க
ளைவர்க்குநாயகனோலைவருதலா
லைவருமச்செய்யைக்காவல்விட்டாரே. (உ)

மத்தளியொன்றுளதாளமிரண்டுள
வத்துள்ளேவாழுமரசருமஞ்சுள
வத்துள்ளேவாழுமரசன்புறப்பட்டான்
மத்தளிமண்ணாய்மயங்கியவாறே. (ங)

வேங்கட நாதனைவேதாந்தக்கூத்தனை
வேங்கடத்துள்ளேவிளையாடுநந்தியை
வேங்கடமென்றேவிரகறியாதவர்
தாங்கவல்லாருயிர்தானறியாரே. (ச)

சென்றுணர்வான்றிசைபத்துந்திவாகா
னன்றுணர்வாலளக்கின்றதறிகிலர்

நின்றுணராரிந்நிலத்தின்மனிதர்கள்
பொன்றுணர்வாரிற்புணர்க்கின்றமாயமே. (௫)

மாறுதிருத்திவரம்பிட்டபட்டிகை
பேறுமதனைப்பெரிதுணர்ந்தாரில்லை
கூறுங்கருமயிர்வெண்மயிராவது
மீறும்பிறப்புமொராண்டெனுநீரோ. (௬)

துடுப்பிடுபானைக்குமொன்றேயரிசி
யடுப்பிடுமூன்றிற்குமஞ்சேரிகொள்ளி
யடுத்தெரியாமற்கொடுமின்னரிசி
விடுத்தனநாட்களுமேற்சென்றனவே. (௭)

இன்புறுவண்டங்கினமலர்மேற்போ
யுண்பதுவாசமதுபோலுயிர்நிலை
யின்புறநாடிநினைக்கிலுமூன்றெளி
கண்புறநின்றகருத்துணில்லானே. (௮)

ஆம்விதிநாடியறஞ்செய்மினந்நிலம்
போம்விதிநாடிப்புனிதனைப்போற்றுமின்
னாம்விதிவேண்டுமதென்சொலின்மானிட
ராம்விதிபெற்றவருமைவல்லார்க்கே. (௯)

அவ்வியம்பேசியறங்கெடநில்லன்மின்
வெவ்வியனாகிப்பிறர்பொருள்வவ்வன்மின்
செவ்வியராகிச்சிறந்துண்ணும்போதொரு
தவ்விக்கொடுண்மின்றலைப்பட்டபோதே( )

## கொல்லாமை.

பற்றுயநற்குருபூசைக்கும்பன்மலர்
மற்றோ ரணுக்களைக்கொல்லாமையொண்மலர்
நற்றார்நடுக்கற்றதீபமுஞ்சித்தமு
முற்றுருமாவியமர்ந்திடமுச்சியே. (௧)

கொல்லிடு குத்தென்றுகூறியமாக்களை
வல்லிடிக்காரர்வலிக்கயிற்றாற்கட்டிச்
செல்லிடுநில்லென்றுதீவாய்நரகிடை
நில்லிடுவென்றுநிறுத்துவர்தாமே. (௨) ஆ. ௩௩௮.

---

## புலால்மறுத்தல்.

பொல்லாப்புலாலைநுகரும்புலையரை
யெல்லாருங்காணவியமன்றன்றூதுவர்
செல்லாகப்பற்றியதீவாய்நரகத்தின்
மல்லாக்கத்தள்ளிமறித்துவைப்பாரே. (௧)

கொலையேகளவுகட்காமம்பொய்கூறல்
மலைவானபாதகமாமவைநீக்கித்
தலையாஞ்சிவனடிசார்ந்தின்பஞ்சார்ந்தோர்க்
கிலையாமிவைஞானநந்தத்திருத்தலே. (௨) ஆ. ௨௩.

---

## பிறர்மனைநயவாமை.

ஆத்தமனையாளகத்திலிருக்கவே
காத்தமனையாளைக்காமுறுங்காளையர்
காய்ச்சபலாவின்கனியுண்ணமாட்டாம
லீச்சம்பழத்துக்கிடருற்றவாறே. (௧)

தரித்துவளர்த்ததோர்தேமாங்கனியை
யருத்தமென்றெண்ணியறையிற்புதைத்துப்
பொருத்தமிலாதபுளிமாங்கொம்பேறிக்
கருத்தறியாதவர்காலற்றவாறே. (௨)

பொருள்கொண்டகண்டனும்போதகையானு
மிருள்கொண்டமின்வெளிகொண்டுநின்றேரு
மருள்கொண்டமாதர்மயமுறுவார்கள்
மருள்கொண்டசிந்தையைமாற்றகில்லாரே. (௩)

ஆ உ௱௩.

---

மகளிரிழிவு.

இலைநல்லவாயினுமெட்டிபழுத்தாற்
குலைநலவாங்கனிகொண்டுணலாகா
முலைநலங்கொண்டுமுறுவல்செய்வார்மேல்
விலகுறுநெஞ்சினைவெய்துகொள்ளீரே. (௧)

மனைபுகுவார்கண்மனைவியைநாடிற்
சுனைபுகுநீர்போற்சுழித்துடன்வாங்குங்
கனவதுபோலக்கசிந்தெழுமன்பை
நனவதுபோலவுநாடவொண்ணாதே. (௨)

இயலுறும்வாழ்க்கையிளம்பிடிமாதர்
புயலுறும்புல்லிற்புணர்ந்தவரோயினு
மயலுறும்வானவர்சாரவிருமென்பா
ரயலுறப்பேசியகன்றொழிந்தாரே. (௩)

வையகத்தேமடவாரொடுங்கூடியென்
மெய்யகத்தோருழவைத்தவிதியது
கையகத்தேசரும்பாலையின்சாறுகொண்
மெய்யகத்தேபொரும்பாம்பதுவாமே. (௪)

கோழையொழுக்கங்குளமூடுபாசியி
லாழநடுவோரளப்புறுவார்களைத்
தாழத்துடக்கித்தடுக்ககில்லாவிடிற்
பூழைநுழைந்தவர்போகின்றவாறே. (௫) ஆ. உ௱௮.

---

நல்குரவு.

புடைவைகிழிந்தது போயிற்றுவாழ்க்கை
யடையப்பட்டார்களுமன்பிலரானார்
கொடையில்லைகோளில்லைகொண்டாட்டமில்லை
நடையில்லைநாட்டிலியங்குகின்றார்கட்கே. (௧)

பொய்க்குழிதூர்ப்பான்புலரிபுலருதென்
றக்குழிதூர்க்குமருப்பண்டந்தேடுவி
ரெக்குழிதூர்த்துமிறைவனையேத்துமி
னக்குழிதூருமழுக்கற்றபோதே. (௨)

அற்குழிதூரக்ககனமுந்தேடுவ
ரக்குழிதூர்க்கையாவர்க்குமரியது
வக்குழிதூர்க்குமறிவையறிந்தபி
னக்குழிதூருமழுக்கற்றவோ. (௩)

தொடர்ந்தெழுஞ்சுற்றம்வினையினுந்தீயக்
கடந்தநோராவிகழிவதன்முன்னே

புடைந்தொருகாலத் துணர்விளக்கேற்றித்
துடர்ந்துநின்றவ்வழி துர்க்கலுமாமே. (௪)

அறுத்தனவாறினுமானினமேவி
யறுத்தனைவருமெண்ணிலிதுன்ப
மொறுத்தன்வல்வினையொன்றல்லவாழ்வை
வெறுத்தனனீசனைவேண்டிநின்றேனே. () ஆ உ௱௰௫.



அக்கினிகாரியம்.

வசையில்விழுப்பொருள்வானுநிலனுந்
திசையுந்திசைபெறுதேவர்குழாமும்
விசையம்பெருகியவேதமுதலா
மசைவிலாவந்தணராகுதிவேட்கிலே. (க)

ஆகுதிவேட்குமருமறையந்தணர்
போகதிநாடிப்புறங்குடித்துண்ணுவர்
தாம்விதிவேண்டித்தலைப்படுமெய்நெறி
தாமறிவாரேதலைப்படுவாரோ. (உ)

அணைதுணையந்தணரங்கியுளங்கி
அணைதுணைவைத்ததிருட்பொருளான
விணைதுணையாமத்தயங்கும்பொழுது
துணைவிணையாயதோர்தூய்நெறியாமே. (௩)

போதிரண்டோதிப்புரிந்தருள்செய்திட்டு
மாதிரண்டாகிமகிழ்ந்துடனேநிற்குந்
தாதிரண்டாகியதண்ணம்பறவைகள்
வேதிரண்டாகிவெறிக்கின்றவாறே. (௪)

நெய்தின்றெரியநெடுஞ்சுடரோசென்று
மைதின்றெரியும்வகையறிவார்கட்குஞ்
மைதின்றவிழ்தருமத்தின்மாமென்றுஞ்
செய்தின்றசெல்வமதியதுவாமே. (௫)

பாழியகலுமெரியுந்திரிபோலுட்
டுழியகலுமுறுவினைநோய்பல
வாழிசெய்தங்கியுதிக்கவலைவிழும்
வீழிசெய்தங்கிவினைசுடுமாமே. (௬)

பெருஞ்செல்வங்கேடென்றுமுன்னேபடைத்த
வருஞ்செல்வந்தந்ததலைவனைநாடும்
வருஞ்செல்வத்தின்பம்வரவிருந்தெண்ணி
பருஞ்செல்வத்தாகுதிவேட்கநின்றோ. (௭)

ஒண்சுடரானையுலப்பிலிநாதனை
யொண்சுடராகியென்னுள்ளத்திருக்கின்ற
கண்சுடரோனுலகேழுங்கடந்தவத்
தண்சுடரோமத்தலைவனுமாமே. (௮)

ஓமத்துளங்கியினுள்ளுளனெம்மிறை
யீமத்துளங்கியிரதங்கொள்வானுளன்
வேமத்துளங்கிவிளைவுவினைக்கடற்
கோமத்துளங்கிகுளாசுடருனே. (௯)

அங்கிநிறுத்துமருத்தவராரணத்
தங்கியிருக்கும்வகையருள்செய்தவ
னெங்குநிறுத்தியிளைப்பட்பெரும்பதி
பொங்கிநிறுத்தம்புகழதுமாமே. (௰)

## அந்தணரொழுக்கம்.

அந்தணராவோ ராறுதொழிற்பூண்டுளோர்
செந்தழலோம்பிமுப்போதுநியமஞ்செய்
தந்தநற்கருமத்துநின்றுங்கிட்டுச்
சந்தியுமோதிச்சடங்கறுப்போர்களே. (௧)

வேதாந்தங்கேட்கவிருப்பொடுமுப்பதப்
போதாந்தமானபிரணவத்துள்புக்கு
நாதாந்தவேதாந்தபோதாந்தநாதனை
யீதாமெனாதுகண்டின்புறுவோர்களே. (௨)

காயத்திரியேகருதுசாவித்திரி
யாய்தற்குவப்பர்மந்திரமாங்குன்னி
நேயத்தேயோறிநினைவுற்றுநேயத்தாய்
மாயத்துட்டோயாமறையோர்கடாமே. (௩)

பெருநெறியானபிரணவமோர்ந்து
குருநெறியாலுரைகூடினல்வேதத்
திருநெறியானநிருகையிருத்திச்
சொருபமதானோர்துகளில்பார்ப்பாரே. (௪)

சத்தியமுந்தவந்தானவனாதலு
மெய்த்தருமிந்தியமீட்டியேவாட்டலு
மொத்தவுயிருடனுண்டாயுணர்வுற்றுப்
பெத்தமறுத்தலுமாகும்பிரமமே. (௫)

வேதாந்தங்கேட்கவிரும்பியவேதியர்
வேதாந்தங்கேட்டுந்தம்வேட்கையொழிந்திலர்

வேதாந்தமாவது வேட்கையொழிந்திடம்
வேதாந்தங்கேட்டவர் வேட்கைவிட்டாரே. (௫)

நூலுஞ்சிகையு நுவலிற்பிரமமோ
நூலதுகார்ப்பாச நுண்சிகைகேசமாம்
நூலதுவேதாந்த நுண்சிகைஞானமாம்
நூலுடையந்தணர் காணு நுவலிலே. (௭)

சத்தியமின்றித் தனிஞானந்தானின்றி
யொத்தவிடயம்விட் டோருமுணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பரனுண்மையின்றியூண்
பித்தேறுமூடர் பிராமணர்தாமன்றே. (அ)

திருநெறியாகிய சித்தசித்தின்றிக்
குருநெறியாலே குருபதஞ்சேர்ந்து
கருமமிடமாதிகை விட்டுக்காணுந்
துரியச்சமாதியாந் தூய்மறையோர்க்கே (௯)

மறையோரவரே மறையவராகில்
மறையோர்தம் வேதாந்தவாய்மையிற்றூய்மை
குறையோர்தல்மற்றுள்ள கோலாகலமென்
றறிவோர்மறைதெரிந் தந்தணராமே. (௰)

அந்தணர்மைபூண்ட வருமறையந்தத்துச்
சிந்தைசெய்யந்தணர் சேருஞ்செழும்புவி
நந்தநவில்லை நரபதிநன்றாகு
மந்தியுஞ்சந்தியுமாகுதிபண்ணுமே. (௰௧)

வேதாந்தஞானம் விளங்கிவிதியிலோர்
நாதாந்தம்பாதநணுகியபோகத்துப்.

போதாந்தமாம்பரன்பாற்புகப்புக்கதால்
நாதாந்தமுத்தியுஞ்சித்தியுநண்ணுமே (௰௨)

ஒன்றுமிரண்டுமொடுங்கியகாலத்து
நன்றுமிருந்துநலம்பலபேசினும்
வென்றுவிளங்கும்விகிர்தனைநாடுவர்
சென்றுவணங்குந்திருவுடையோரே. (௰௩)

தானேவிடும்பற்றிரண்டுந்தரித்திட
தானேவிடைப்படுமேதொன்றைநாடாது
பூமேவுநான்முகன்புண்ணியபோகனு
யோமேவுமோமாகுதியவியுண்ணவே.() ஆக உ௱௩௰

---

## இராசதோடம்.

கல்லாவரசனுங்காலனுநேரொக்கும்
கல்லாவரசனிற்காலன்மிகநல்லன்
கல்லாவரசனறமோராங்கொல்லென்பான்
நல்லாரைக்காலனணுகிநில்லானே. (௧)

நாடோறுமன்னவனாட்டிற்றவநெறி
நாடோறுநாடியவன்னெறிநாடானேல்
நாடோறுநாடுகேடுமுடனண்ணுமால்
நாடோறுஞ்செல்வநரபதிகுன்றுமே. (௨)

வேடநெறிநில்லார்வேடம்பூண்டென்பயன்
வேடநெறிநிற்போர்வேடமேமெய்வேடம்
வேடநெறிநில்லார்தம்மைமிறல்வேந்தன்
வேடநெறிசெய்தால்வீடதுவாகுமே. (௩)

மூடங்கெடாதோர்சிகைநூன்முதற்கொள்ளில்
வாடும்புவியும்பெருவாழ்வுமன்னனும்
பீடொன்றிலனாகுமாதலாற்பேர்த்துணர்ந்
தாடப்பாரநூற்சிகையறுத்தானன்றே. (௪)

ஞானமிலாதார்சடைசிகைநூனண்ணி
ஞானிகள்போலநடிக்கின்றவர்தம்மை
ஞானிகளாலேநரபதிசோதித்து
ஞானமுண்டாக்குதனலமாகுநாட்டிற்கே. (௫)

ஆவையும்பாவையுமற்றறவோரையுந்
தேவர்கள்போற்றுந்திருவேடத்தாரையுங்
காவலன்காப்பவன்காவாதொழிவனேல்
மேலுமறுமைக்குமீளாநரகமே. (௬)

திறந்தருமுத்தியுஞ்செல்வமும்வேண்டின்
மறந்துமறநெறியேயாற்றல்வேண்டுஞ்
சிறந்தநீர்ஞாலஞ்செய்தொழில்யாவையு
மறைத்திடில்வேந்தனுக்காறிலொன்றாமே. (௭)

வேந்தனுலகைமிகநன்றுகாப்பது
வாய்ந்தமனிதர்களவ்வழியாநிற்பர்.
பேர்த்திவ்வுலகைப்பிறர்கொள்ளத்தாங்கொள்ளப்
பாய்ந்தபுலியன்னபாவகத்தானே. (௮)

கால்கொண்டுகட்டிக்கனல்கொண்டுமேலேற்றிப்
பால்கண்டுசோமன்மகம்பற்றியுண்ணாதோர்
மால்கொண்டுதேறலையுண்ணுமருளரை
மேல்கொண்டுதண்டஞ்செய்வேந்தன்கடனே. (௯)

நத்தஞ்சமயத்தகுதிநில்லாதாரை
யத்தன்சிவன்சொன்னவாகமநூனெறி
யெத்தண்டமுஞ்செயுமம்மையிலிம்மைக்கே
மெய்த்தண்டஞ்செய்வதவ்வேந்தன்கடனே. (௰)

ஆ உசஎ.



வான்சிறப்பு.

அமுதூறுமாமழைநீரதனாலே
யமுதூறும்பன்மரம்பார்மிசைதோற்றுங்
கமுகூறுதேங்குகரும்பொடுவாழை
யமுதூறுங்காஞ்சிரையாங்கதுவாகுமே. (௧)

வரையிடைநின்றிழிவானீரருவி
யுரையில்லையுள்ளத்தகத்துநின்றூறு
நுரையில்லைமாசில்லைநுண்ணிதுதெண்ணீர்க்
கரையில்லையெந்தைக்கழுமணியாறே.(௨) ஆ உசகூ.



தானச்சிறப்பு.

ஆர்க்குமிடுமினவரிவரென்னன்மின்
பாத்திருந்துண்மின்பழம்பொருள்போற்றன்மின்
வேட்கையுடையீர்விரைந்தொல்லையுண்ணன்மின்
காக்கைகரைந்துண்ணுங்காலமறிமினே.(௧) ஆ உசஅ



இரந்தார்க்கீதல்.

தாமறிவாரண்ணல்பணிவாரவர்
தாமறிவாரந்தாங்கிநின்றாரவர்

தாமறிவார்சிலதத்துவராவர்க
டாமறிவார்க்குத்தமர்பரனுமே. (௯)

யாவர்க்குமாமிறைவற்கொருபச்சிலை
யாவர்க்குமாம்பசுவுக்கொருவாயுறை
யாவர்க்குமாமுண்ணும்போதொருகைப்பிடி
யாவர்க்குமாம்பிறர்க்கின்னுரைதானே. (௨)

அற்றுநின்றாருண்ணுமூணேயறமென்னுங்
கற்றனபோதங்கமழ்பவர்மானிட
ருற்றுநின்றாங்கொருகூவற்குளத்தினிற்
பற்றிவந்துண்ணும்பயனறியாரே. (௩)

அழுக்கினையோட்டியறிவைநிறையீர்
தழுக்கியநாளிற்றருமஞ்செய்யீர்
விழித்திருந்தென்செய்வீர்வெம்மைபரந்து
விழிக்கவன்றென்செய்வீரோழைநெஞ்சீரோ. (௪)

தன்னையறியாததானல்லாரொன்றிங்
கின்மையறியாதிளையரென்றோராது
வன்மையில்வந்திடுங்கூற்றம்வருமுன்னந்
தன்மையுநல்லதவஞ்செயுநீரே. (௫)

இறந்தான்வழிமுதற்குற்றமுமில்லை
பிறந்தான்வழிமுதலின்பமுமில்லை
மறந்தான்வழிமுதல்வந்திலனீச
னறந்தானறியுமளவறிவாரே. (௬)

தான்றவஞ்செய்வதாஞ்செய்தவத்தவ்வழி
மான்றெய்வமாகமதிக்குமனிதர்க

ளூன்றெய்வமாகவுயிர்க்கின்றபல்லுயிர்
நான்றெய்வமென்றுநமன்வருவானே. (எ)

திளைக்கும்வினைக்கட்டேர்வுறுதோணி
யிளைப்பின்றிநீக்குமிருவழியுண்டு
கிளைக்குந்தனக்குமக்கேடில்புகழோன்
விளைக்குந்தவமறமேற்றுணையாமே. (அ)

பற்றதுவாய்நின்றபற்றினைப்பார்மிசை
யற்றமுறையானறநெறிக்கல்லது
புற்றுங்களாலொன்றுவிந்ததுவேதுணை
மற்றண்ணல்வைத்தவழிகொள்ளுமாறே.() ஆ உருஎ.

---

அறஞ்செயான்றிறம்.

எட்டிபழுத்தவிருங்கனிவீழ்ந்தன
வொட்டியநல்லறஞ்செய்யாதவர்செல்வம்
வட்டிகொண்டாட்டியேமண்ணின்முகந்திடும்
பட்டப்பதகர்பயனறியாரே. (க)

ஒழிந்தனகாலங்களூழியும்போயின
கழிந்தனகற்பனைநாளுங்குறுகிப்
பிழிந்ததும்போலத்தப்பேரிடராக்கை
யழிந்ததுகண்டுமறமறியாரே. (உ)

அறமறியாரண்ணல்பாதநினையுந்
திறமறியார்சிவலோகநகர்க்குப்
புறமறியார்பலர்பொய்மொழிகேட்டு
மறமறிவார்பகைமன்னிநின்றாரே. (ங)

இருமலுஞ்சோகையுமீளையும்வெப்புந்
தருமஞ்செய்யாதவர்தம்பாலதாகு
முருமிடிநாகமுரோணிகழலைத்
தருமஞ்செய்வார்பக்கற்றாழகிலாவே. (௪)

பரவப்படுவார்பரமனையேத்தா
ரிரவலர்க்கீதலையாயினுமீயார்
கரகத்தேநீராட்டிக்காவைவளர்க்கார்.
நரகத்தினிற்றிரோநன்னெஞ்சினீரோ (௫)

வழிநடப்பாரின்றிவானொருலகங்
கழிநடப்பார்நடந்தார்கரும்பாரு
மழிநடக்கும்வினைமாசறவோட்டிட்
டொழிநடப்பார்வினையோங்கிநின்றாரே. (௬)

கனிந்தவரீசன்கழலடிகாண்பர்
துணிந்தவரீசன்றுறக்கமதாள்வர்
மலிந்தவர்மாளுந்துணையுமொன்றின்றி
மெலிந்தசினத்தினுள்வீழ்ந்தொழிந்தாரே, (௭)

இன்பமிடரென்றிரண்டுறவைத்தது
முன்பவர்செய்கையினாலேமுடிந்தது
இன்பமதுகண்டுமீகிலாப்பேதைக
ளன்பிலார்சிந்தையறமறியாரே, (௮)

தேவதுமாவதுஞ்சேடில்புகழோ
னேவல்லசெய்தின்பநாட்டவுமொட்டார்
னீவதுமீவதுமென்னுமினின்பம்
படுவதுசெய்யிற்பசுவதுவாமே (௯)

செல்வங்கருதிசிலர்பலர்வாழ்வெனும்
புல்லறிவாளரைப்போற்றிப்புலராதே
யில்லங்கருதியிறைவனையேத்துமின்
வில்லிறவெய்தவிற்குறியாமே. (ம) ஆ. உ௱௬௯.

---

அன்புடைமை.

அன்புஞ்சிவமுமிரண்டென்பரறிவிலா
ரன்பேசிவமாவதாருமறிகிலா
ரன்பேசிவமாவதாருமறிந்தபி
னன்பேசிவமாயமர்ந்திருந்தாரே, (க)

பொன்னைக்கடந்திலங்கும்புலித்தோலினன்
மின்னிக்கிடந்துமிளிருமிளம்பிறை
துன்னிக்கிடந்தசுடுபொடியாடிக்குப்
பின்னிக்கிடந்ததென்பேரன்புதானே, (உ)

என்பேவிறகாயிறைச்சியறுத்திட்டுப்
பொன்போற்கனலிற்பொரியவறுப்பினு
மன்போடுருகியகங்குழைவார்க்கன்றி
யென்பொன்மணியினையெய்தவொண்ணாதே (௩)

ஆர்வமுடையவர்காண்பரரன்றன்னை
யீரமுடையவர்காண்பரிணையடி
பாரமுடையவர்காண்பார்பவந்தன்னைக்
கோரநெருக்கொடுகோங்குபுக்காரே, (௪)
என்னன்புருக்கியிறைவனையேத்துமின்
முன்னன்புருக்கிமுதல்வனைநாடுமின்

பின்னன்புருக்கிப்பெருந்தகைநந்தியுந்
தன்னன்பெனக்கேதலைநின்றவாறே. (௫)

தானொருகாலஞ்சயம்புவென்றேத்தினும்
வானொருகாலம்வழித்துணையாய்நிற்குந்
தேனொருபாற்றிகழ்கொன்றையணிசிவன்
றானொருவண்ணமெனவ்பினின்றானே. (௬)

முன்படைத்தின்பம்படைத்தமுதலிடை
யன்படைத்தெம்பெருமானையறிகிலார்
வன்படைத்திந்தவகலிடம்வாழ்வினி
லன்படைத்தான்றனகலிடந்தானே. (௭)

கருத்துறுசெம்பொன்செய்காயத்திற்சோதி
யிருத்தியும்வைத்துமிறைவவென்றேத்தியு
மருத்தியுளீசனையாரருள்வேண்டில்
விருத்திகொடுத்திடுவிண்ணவர்கோனே. (௮)

நித்தலுந்துஞ்சும்பிறப்பையுஞ்செய்தவன்
வைத்தபரிசறிந்தேயுமனிதர்க
ளிச்சையுளேவைப்பரெந்தைபிரானென்று
நச்சியேயண்ணலைநாடகிலாரோ. (௯)

அன்பினுள்ளான்புறத்தானுடலாயுளான்
முன்பினுள்ளான்முனிவர்க்கும்பிரானவ
னன்பினுள்ளாகியமருமரும்பொரு
ளன்பினுள்ளார்க்கேயணைதுணையாமே. () ௵ உ௱௪௯.

## அன்புசெய்வாரையறிவன்சிவன்.

இகழ்ந்ததும்பெற்றதும்மீசனறியு
முகந்தருள்செய்திடுமுத்தமநாதன்
கொழுந்தன்புசெய்தருள்கூரவல்லார்க்கு
மகிழ்ந்தன்புசெய்யுமருளதுவாமே. (க)

இன்பப்பிறவிக்கியல்வதுசெய்தவன்
றுன்பப்பிறவிந்தொழில்பலவென்னினும்
வன்பிற்கலவிசெய்தாதிப்பிரான்வைத்த
முன்பப்பிறவிமுடிவதுதானே. (உ)

அன்புறுசிந்தையின்மேலெழுமவ்வொளி
யின்புறுகண்ணியொடேறவிசைந்தன
துன்புறுகண்ணியைந்தாடுந்துடக்கற்று
நண்புறுசிந்தையைநாடுமினீரோ. (ங)

புணர்ச்சியுளாயிழைமேலன்புபோல
வுணர்ச்சியுளாங்கேயொடுங்கவல்லார்க்குக்
குணர்ச்சியில்லாதுகுலாவியுலாவி
யணைத்தலுமின்பமதுவிதுவாமே. (ச)

உற்றுநின்றொடுமத்தகுசோதியைச்
சித்தர்களென்றுந்தெரிந்தறிவாரில்லை
பத்திமையாலேபணிந்தடியார்தொழ
முத்திகொடுத்தவர்முன்புநின்றானே. (ரு)

கண்டேன்கமழ்தருகொன்றையினானடி
கண்டேன்கரியுரியான்றன்கழலிணை

கண்டேன்கமலமலருறைவானடி
கண்டேன்கழலதெனன்பிறுள்ளானே. (சு)

நம்பனை நானுவிதப்பொருளாகுமென்
றம்பரில்வானவரோ துந்தலைவனை
யின்பனையின்பத்திடைநின்றிரதிக்கு
மன்பனையாருமறியகிலாரே. (எ)

முன்புபிறப்புமிறப்புமறியாதா
ரன்பிலிறைவனையாமறியோமென்ப
ரின்பப்பிறப்புமிறப்புமிலாநந்தி
யன்பிலவனையறியகிலாரே (அ)

ஈசனறியுமிராப்பகலுந்தன்னைப்
பாசத்துள்வைத்துப்பரிவுசெய்வார்களைத்
தேசுற்றறிந்துசெயலற்றிருந்திடி
லீசன்வந்தெம்மிடையீட்டிநின்றானே. (கூ)

விட்டுப்பிடிப்பதென்மேதகுசோதியைத்
தொட்டுத்தொடர்வன்றலையாப்பெருமையை
யெட்டுமென்றாருயிராய்நின்றவீசனை
மட்டுக்கலப்பதுமஞ்சனமாமே. (ய) ஆ உ௱அகூ.

கல்வி.

குறிப்பறிந்தேனுடலுயிரதுகூடிச்
செறிப்பறிந்தேன்மிகுதேவர்பிரானை
மறிப்பறியாதவந்துள்ளம்புகுந்தான்
கறிப்பறியாமிகுகல்விகற்றேனே, (க)

கற்றறிவாளர்கருதியகாலத்து
கற்றறிவாளர்கருத்திலோர்கண்ணுண்டு
கற்றறிவாளர்கருதியுரைசெய்யுங்
கற்றறிகாட்டக்கய லுளவாக்குமே. (உ)

நிற்கின்றபோதேநிலையுடையான்கழற்
கற்கின்றசெய்மின்கழிந்தறும்பாவங்கள்
சொற்குன்றலின்றித்தொழுமின்றொழுதபின்
மற்றொருன்றிலாதமணிவிளக்காமே. (௩)

கல்வியுடையார்கழிந்தோடிப்போகின்றார்
பல்லியுடையார்பாம்பரிந்துண்கின்று
சொல்லியுங்காலையுமேத்துமிறைவனை
வல்லியுள்வாதித்தகாயமுமாமே. (௪)

துணையதுவாய்வருந்தூயநற்சோதி
துணையதுவாய்வருந்தூயநற்சொல்லாந்
துணையதுவாய்வருந்தூய்மலர்க்கந்தந்
துணையதுவாய்வருந்தூயநற்கல்வியே. (ரு)

நூலொன்றுபற்றிநுனியேறமாட்டாதார்
பாலொன்றுபற்றினாற்பண்பின்பயன்கெடுங்
கோலொன்றுபற்றினாற்கூடாப்பறவைகண்
மாலொன்றுபற்றிமயங்குகின்றாமோ (௬)

ஆய்ந்துகொள்வார்க்கரனங்கேவெளிப்படுந்
தோய்ந்தநெருப்பதுதூய்மணிசிந்திடு
மேய்ந்தவிளமதியெட்டவல்லார்கட்கு
வாய்ந்தமனமல்குநூலேணியாமே. (எ)

வழித்துணையாய்மருந்தாயிருந்தார்முன்
கழித்துணையாங்கற்றிலாதவர்சிந்தை
பொழித்துணையாம்பராமூலகேழும்
வழித்துணையாம்பெருந்தன்மைவல்லானே. (அ)

பற்றதுபற்றிற்பரமனைப்பற்றுமின்
முற்றதுவெல்லாமுதல்வனருள்பெறில்
கிற்றவிரகிற்கிளரொளிவானவர்
கற்றவர்பேரின்பமுற்றுநின்றாரே. (கூ)

கடலிடையான்மலையானைந்துபூதத்
துடலிடையான்பலவூழிதொறூழி
யடல்விடையேறுமமரர்களுத
னிடமுடையார்நெஞ்சத்திலிருந்தானே. (ய)

திரு உாககூ.

## கேள்விகேட்டமைதல்.

அறங்கேட்டுமந்தணராய்மொழிகேட்டு
மறங்கேட்டும்வானவர்மந்திரங்கேட்டும்
பறங்கேட்டும்பொன்புனைமேனியெம்மீசன்
திறங்கேட்டும்பெற்றசிவகதிதானே. (க)

தேவர்பிரான்றனைத்திவ்வியமூர்த்தியை
யாவதொருவரறிவாரறிந்தபின்
னோதுமின்கேண்மினுணர்மினுணர்ந்தபி
னோதியுணர்ந்தவரோங்கிநின்றாரே. (உ)

மயன்பணிகேட்பதுமாதந்திகேட்பி
னயன்பணிகேட்பதரன்பணியாலே
சிவன்பணிகேட்பவர்தேவருமாவர்
பயன்பணிகேட்பதுபற்றதுவாமே. (௩)

பெருமானிவனென்றுபேசியிருக்குந்
திருமானிடர்பின்னைத்தேவருமாவ
ரருமாதவர்க்குமகிழ்ந்தருள்செய்யு
மருமாதவத்தெங்களாதிப்பிரானே. (௪)

ஈசனருளுமிறப்பும்பிறப்பையும்
பேசியிருந்துபிதற்றிமகிழ்வெய்தி
நேசமுமாகுநிகழொளியாய்நின்று
வாசமலர்க்கந்தமன்னிநின்றானே. (௫)

விழுப்பங்கெழுமியுமெய்நின்றஞானத்
தொழுக்கமுஞ்சிந்தையுணர்கின்றபோது
வழுக்கிவிடாவிடில்வானவர்கோனு
மிழுக்கின்றியெண்ணிலிகாலமதாமே. (௬)

சிறியார்மணற்சோற்றிற்றேக்கிடுமாபோற்
செறிவாலனுபோகஞ்சித்திக்குமெய்ந்நிற்
குறியாததொன்றைக்குறியாதார்தம்மை
யறியாதிருந்தாரவரவரன்றே. (௭)

உறுதுணையாவதுயிருமுடம்பு
முறுதுணையாவதுலகுறுகேள்வி
செறிதுணையாவதுசிவனடிச்சிந்தை
பெறுதுணைகேட்கிற்பிறப்பில்லைதானே. (௮)

புகழநின்றார்க்கும்புராணனெம்மீச
னிகழநின்றார்க்குமிடும்பைக்கிடமா
மகிழநின்றாதியையோதியுணராக்
கழியநின்றார்க்கொருகற்பசுவாமே. (௯)

வைத்துணர்ந்தான்மனத்தோடும்வாய்பேசி
யொத்துணர்ந்தானுருவொன்றொடொன்றொவ்வா
தச்சுழன்றாணிகலங்கினுமாதியை
நச்சுணர்ந்தார்க்கேநணுகலுமாமே. (௰) திரு. ௩௩௪.

---

கல்லாமை.

கல்லாதவருங்கருத்தறிகாட்சியை
வல்லாரெனிலருட்கண்ணான்மதித்துளோர்
கல்லாதாருண்மைபற்றுநிற்பர்கற்றோருங்
கல்லாதார்பேரின்பங்காணுகிலாரே. (க)

வல்லார்களென்றும்வழியொன்றிவாழ்கின்று
நல்லாதவர்களறிவுபலவென்பா
ரொல்லாவிடத்துமுளனெனுங்கடம்மிறை
கல்லாதவர்கள்கலப்பறியாரே. (உ)

தில்லாதில்லைநிலையாகநெஞ்சத்து
நில்லாக்குரம்பைநிலையென்றுணர்விர்கா
ளெல்லாவுயிர்க்குமிறைவனேயாயினுங்
கல்லாதார்நெஞ்சத்துக்காணவொண்ணாதே. (௩)

இல்லேன்வினைத்துயராக்குமயலானேன்
கல்லேனரனெறியறியாத்தகைமையின்

வல்லேன்வழங்கும்பொருளேமனத்தினுட்
கல்லேன்கழியநின்றாடவல்லேனே. (௪)

நில்லாதுசீவனிலையன்றெனவெண்ணி
வல்லாரறத்துந்தவத்துளுமாயினர்
கல்லாமனிதர்கயவருலகினிற்
பொல்லாவினைத்துயர்போகஞ்செய்வாரே. (௫)

விண்ணினினுள்ளேவிளைந்தவிளங்கனி
கண்ணினினுள்ளேகலந்தங்கிருந்தது
மண்ணினினுள்ளேமதித்துமதித்துநின்
றெண்ணியெழுதியிளைத்துவிட்டாரே. (௬)

கணக்கறிந்தார்க்கன்றிக்காணவொண்ணாது
கணக்கறிந்தார்க்கன்றிக்கைகூடாக்காட்சி
கணக்கறிந்துண்மையைக்கண்டண்டநிற்குங்
கணக்கறிந்தார்கல்விகற்றறிந்தாரே. (௭)

கல்லாதமூடரைக்காணவுமாகாது
கல்லாதமூடர்சொற்கேட்கக்கடனன்று
கல்லாதமூடர்க்குக்கல்லாதார்நல்லாராம்
கல்லாதமூடர்கருத்தறியாரே. (௮)

கற்றுஞ்சிவஞானமில்லாக்கலதிகள்
சுற்றமும்வீடார்துரிசறார்மூடர்கள்
மற்றும்பலதிசைகாணார்மதியிலோர்
கற்றன்பினிற்போர்கணக்கறிந்தார்க்கே. (௯)

ஆதிப்பிரானமரர்க்கும்பரஞ்சுடர்
சோதியடியார்த்தொடரும்பெருந்தெய்வ

மோதியுணரவல்லோமென்பருண்ணின்ற
சோதிநடத்துந்துடர்வறியாரோ. (௰) ஆ ௬௱௰௬.

---

நடுவுநிலைமை.

நடுவுநின்றார்க்கன்றிஞானமுமில்லை
நடுவுநின்றார்க்குநரகமுமில்லை
நடுவுநின்றார்நல்லதேவருமாவர்
நடுவுநின்றார்வழிநானுநின்றேனே. (௧)

நடுவுநின்றானல்லகார்முகில்வண்ண
னடுவுநின்றானல்லநான்மறையோதி
நடுவுநின்றார்சிலர்ஞானிகளாவோர்
நடுவுநின்றார்நல்லநம்பனுமாமே. (௨)

நடுவுநின்றார்சிலர்ஞானிகளாவர்
நடுவுநின்றார்சிலர்தேவருமாவர்
நடுவுநின்றார்சிலர்நம்பனுமாவர்
நடுவுநின்றாரொடுநானுநின்றேனே. (௩)

தோன்றியவெல்லாந்துடைப்பனவன்றிவ
ரேன்றுநின்றுமொன்றுமீசனிணையடி
மூன்றுநின்றார்முதல்வன்றிருநாமத்தை
நான்றுநின்றார்நடுவாகிநின்றாரே. (௪) ஆ ௬௱௨௰.

---

கள்ளுண்ணாமை.

கழுநீர்ப்பசுப்பெறிற்கயந்தொறுந்தேராக்
கழுநீர்விடாய்த்துத்தங்காயஞ்சுருங்கு

முழுநீர்க்கள்ளுண்போர்முறைமையகன்றோர்
செழுநீர்ச்சிவன்றன்சிவானந்தத்தேறலே. (௧)

சித்தமுருக்கிச்சிவமாஞ்சமாதியி
லொத்துச்சிவானந்தமோவாதத்தேறலைச்
சுத்தமதுவுண்ணச்சிவானந்தம்விட்டிடா
நித்தலிருத்தல்கிடத்தல்கீழ்க்காலே. (௨)

காமமுங்கள்ளுங்கலதிகட்கேயாகு
மாமலமுஞ்சமயத்துள்மயலுறும்
போமதியாகும்புனிதனிணையடி
யோமயவானந்தத்தேறலுணர்வுண்டே. (௩)

வாமத்தோர்தாமுமதுவுண்டுமாள்பவர்
காமத்தோர்காமக்கள்ளுண்டேகலங்குவ
ரோமத்தோருள்ளொளிக்குள்ளேயுணர்வர்கண்
ணாமத்தோரன்றேநணுகுவர்தாமே. (௪)

உள்ளுண்மையோராருணரார்பசுபாசம்
வள்ளன்மைநாதனருளினின்வாழ்வுறார்
தெள்ளுண்மைஞானச்சிவயோகஞ்சேர்வுறார்
கள்ளுண்ணுமாந்தர்கருத்தறியாரே. (௫)

மயக்குஞ்சமயமலமன்னுமூடர்
மயக்குமதுவுண்ணுமாமூடர்தேரார்
மயக்குறுமாயையின்மாமாயைவீடு
மயக்கிற்றெளியின்மயக்குறுமன்றே. (௬)

மயங்குந்தியங்குங்கள்வாய்மையழிக்கு
மியங்குமடவார்தம்மின்பமேயெய்தி

முயங்குநயங்கொண்டஞானத் துமுந்தா
ரியங்குமிடையருவானந்தமெய்துமே. (எ)

இராப்பகலற்றவிடத்தேயிருந்து
பராக்கறவானந்தத்தேறல்பருகா
ரிராப்பகலற்றவிறையடியின்பத்
திராப்பகன்மாயையிரண்டிடத்தேனே. (அ)

சத்தியைவேண்டிச்சமயத்தோர்களுண்பர்
சத்தியழிந்ததுதம்மைமறத்தலால்
சத்திச்சிவஞானந்தன்னிற்றலைப்பட்டுச்
சத்தியஞானவானந்தத்திற்சார்தலே. (கூ)

சத்தனருடரிற்சத்தியருளுண்டாஞ்
சத்தியருடரிற்சத்தனருளுண்டாஞ்
சத்திசிவமாயிரண்டுந்தன்னுள்வைக்கச்
சத்தியுமெண்சித்தித்தன்மையுமாமே, (ய)

தத்துவநீக்கிமருணீக்கித்தானாகி
பொய்த்தவநீக்கிமெய்ப்போகத்துட்போக்கியே
மெய்த்தசகமுண்டுவிட்டுப்பரானந்தச்
சித்திதாக்குஞ்சிவானந்தத்தேறலே. (யக)

யோகிகள்கால்கட்டியொண்மதியானந்த
போதவமுதைப்பொசித்தவரொண்சித்தி
மோகியர்கள்ளுண்டுமூடராய்மோகமுற்
றாமதத்தாலறிவழிந்தாரே. (யஉ)

உன்னிரமுதமுறுமுறலைத்திறந்
தெண்ணிருவணிலையடித்தாமரை

தண்ணீர்சமாதியினூடினிரானலங்
கண்ணாரொடேசென்றுகால்வழிகாணுமே. (௰௬)

ஆக அதிகாரம்-௨௪-இ- பாடல்-௨௨௪.
முதற்றந்திரமுற்றும்.
ஆக பாயிமுட்படவதிகாரம்
௬௬-இ-திருமந்திரம்-௬௬௪.

---

## இரண்டாந்தந்திரம்.

### அகத்தியம்.

நடுவுநில்லாதிவ்வுலகஞ்சரிந்து
கெடுக்கின்றதெம்பெருமானென்னவீச
னடுவுளவங்கியகத்தியநீபோய்
முடுகியவையத்துமுன்னிரென்றானே. (௧)

அங்கியுதயம்வளர்க்குமகத்திய
னங்கியுதயஞ்செய்மேல்பாலவனொடு
மங்கியுதயஞ்செய்வடபாற்றவமுனி
யெங்கும்வளங்கொள்ளிலங்கொளிதானே. (௨)

### பதிவலியில்வீரட்டமெட்டு.

கருத்துறைஅந்தகன்றன்போலசுரன்
வரத்தினுலகத்துயிர்களையெல்லாம்
வருத்தஞ்செய்தானென்றுவானவர்வேண்டக்
குருத்துயர்சூலங்கைக்கொண்டுகொன்றானே. (௩)

கொலையிற்பிழைத்தபிரசாபதியைத்
தலையைத்தடிந்திட்டுத்தானங்கியிட்டு
நிலையுலகுக்கிவன்வேணுமென்றெண்ணித்
தலையைப்பரிந்திட்டுச்சந்திசெய்தானே. (௨)

எங்கும்பரந்துமிருநிலந்தாங்கியுந்
தங்கும்படித்தவன்றாளுணர்தேவர்கள்
பொங்குசினத்துளயன்றலைமுன்னற
வங்கச்சுதனையுதிரங்கொண்டானே, (௩)
எங்குங்கலந்துமென்னுள்ளத்தெழுகின்ற
வங்கமுதல்வனருமறையோகிபாற்
பொங்குஞ்சலந்தரன்போர்செல்லநீர்மையி
னங்குவிரற்குறித்தாழிசெய்தானே. (௪)

அப்பணிசெஞ்சடையாதிபுராதனன்
முப்புரஞ்செற்றனனென்பர்கண்மூடர்கண்
முப்புரமாவதுமும்மலகாரிய.
மப்புரமெய்தமையாரறிவாரோ. (௫)

முத்திக்கொருவிமுழங்கெரிவேள்வியு
ளத்தியுரியரனுவதறிகிலர்
சத்திக்கருநியதாம்பலதேவரு
மத்தியினுள்ளெழுந்தன்றுகொலையே. (௬)

மூலத்துவாரத்தமூனுமொருவனை
மேலைத்துவாரத்தின்மேனுறநோக்கிமுற்
காலுற்றுக்காலனைக்காய்ந்தங்கியோகமாய்
ஞாலக்கடவூர்நலமாயிருந்ததே. (௭)

இருந்தமனத்தையிசையவிருத்திப்
பொருந்தியலிங்கவெளியதுபோக்கித்
திருந்தியகாமன்செயலழியத்தங்
கருந்தவயோகக்கொறுக்கையமர்ந்தே. (அ) ஆடம்.

## இலிங்கப்புராணம்.

அடிசேர்வனென்னவெம்மாதியைநோக்கி
முடிசேர்மலைமகனார்மகளாகித்
திடமாதவஞ்செய்துதேவரறியப்
படியாரவர்ச்சித்துப்பத்திசெய்தாளே. (க)

திரிகின்றமுப்புரஞ்சென்றபிரானை
யரியனென்றெண்ணியயர்வுறவேண்டாம்
புரிவுடையாளர்க்குப்பொய்யலனீசன்
பரிவொடுநின்றுபரிசறிவானே. (உ)

ஆழிவலங்கொண்டயன்மாலிருவரு
மாழிவலஞ்செய்யவொண்சுடராதியு
மாழிகொடுத்தனனச்சுதற்கவ்வழி
வாழிப்பிரமற்கும்வாள்கொடுத்தானே. (௩)

தாங்கியவிருபதுதோளுந்தடவரை
யோங்கவெடுத்தவனொப்பில்பெருவலி
யாங்குநெரித்தமராவென்றழைத்தபின்
னீங்காவருள்செய்தானின்மலன்றானே. (௪)

உறுவதறிதண்டியொண்மணற்கூட்டி
யறுவகையானேற்றுமாட்டத்தன்றாதை

செறுவகைசெய்துசிதைப்பமுனிந்து
மறுமழுவால்வெட்டிமாலைபெற்றானே. (௫)

ஓடிவந்தெல்லாமொருங்கியதேவர்கள்
வாடிமுகமும்வருத்தத்துத்தாஞ்சென்று
நாடியிறைவர்நமவென்றுகும்பிட
வேடிக்புகழோனேழுகவென்றானே, (௬) அட யசு.

---

தக்கன்வேள்வி.

தந்தைபிரான்வெகுண்டான்றக்கன்வேள்வியை
வெந்தழலூடேபுறப்பட்டவிண்ணவர்
முந்தியபூசைமுடியார்முறைகெட்டுச்
சிந்தினரண்ணல்சினஞ்செய்தபோதே. (௧)

சந்திசெய்கண்டெழுகின்றரிதானு
மெந்தையிவனல்லபாமேயுலகினிற்
பந்தஞ்செய்பாசத்தவிழ்ந்துதவஞ்செய்ப
வந்தமிலானருள்புரிந்தானே. (௨)

அப்பரிசேபயனுபதிவேள்வியு
ளப்பரிசங்கிபதிசயமாகிலு
மப்பரிசேயதுநீர்மையையுள்கலந்
தப்பரிசேசிவனாலிக்கின்றானே. (௩)

அப்பரிசேயயன்மால்முதற்றேவர்க
ளப்பரிசேயவராகியகாரண
மப்பரிசங்கியுநானுமுள்ளிட்ட
வப்பரிசாகியலந்திருந்தானே. (௪)

அலந்திருந் தானென்றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுறநோக்கிச்
சிவந்தபரமிது சென்றுகதுவ
வுவந்தபெருவழி யோடிவந்தானே. (ரு)

அரிபிரமன்றக்கனருக்கனுடனே
வருமதிவாலவன்னி நல்லிந்திரன்
சிரமுகநாசி சிறந்தகைதோள்தா
னரனருளின்றி யழிந்தநல்லோரே. (சு)

செவிமந்திரஞ் சொல்லுஞ் செய்தவத்தேவர்
விதிமந்திரத்தினம் பக்களை கோலிச்
செவிமந்திரஞ் செய்துதாமுறநோக்குங்
குவிமந்திரங் கொல் கொடியதுவாமே. (எ)

நல்லார் நவகுணமொன்பதுமின் புறப்
பல்லாரமரர் பரிந்தருள் செய்கென
வில்லால்வரையை விளங்கொளிகொற்றவன்
பொல்லாவசுரர்கள் பொன்றும்படிக்கே. (அ)

தெளிந்தார் கலங்கினு நீகலங்காதே
யளிந்தாங்கடைவதெம்மாதிப்பிரானை
விளிந்தானத்தக்கனவ் வேள்வியைவீயச்
சுளிந்தாங்கருள் செயத்தூய்மொழியாளே.() ஆ உ௫.

---

பிரளயம்.

கருவரைமூடிக் கலந்தெழும் வெள்ளத்
திருவருங் கோவென்றிகலவிறைவ

ஒருவனுந்நூறவோங்கொளியாகி
யிருவனாயாய்நின்றருள்புரிந்தானே. (௧)

அலைகடலூடறுத்தண்டத்துவானோர்
தலைவனெனும்பெயர்தான்றலைமேற்கொண்
டுலகாரழற்கண்டுள்விழாதோடி
யலைவாயில்விழாமலஞ்சலென்றானே. (௨)

தண்கடல்விட்டதமரருந்தேவரு
மெண்கடல்சூழெம்பிரானென்றிறைஞ்சுவர்
விண்கடல்செய்தவர்மேலெழுந்தப்புறங்
கண்கடல்செய்புங்கருத்தறியாரோ. (௩)

சமைக்கவல்லானைச்சயம்புவென்றேத்தி
யமைக்கவல்லாரிவ்வுலகத்துளாரோ
திகைத்ததெண்ணீரிற்கடலொலியோசை
மிகைக்கொளவங்கிமிகாமைவைத்தானே. (௪)

பண்பழிசெய்வழிபாடுசென்றப்புறங்
கண்பழியாதகமலத்திருக்கின்ற
நண்பழியாளனைநாடிச்சென்றச்சிரம்
விண்பழியாதவிருத்திக்கொண்டானே. (௫) ஆ ௯௰.

---

## சக்கரப்பேறு.

மால்போதகனென்னும்வண்மைக்கிங்காங்கார
கால்போதங்கையினோடந்தரச்சக்கர
மேல்போகவெள்ளிமலையமராபதிப்
பார்போகமேழும்படைத்துடையானே. (௧)

சக்கரம்பெற்றுநற்றாமோதரன்றானுஞ்
சக்கரந்தன்னைத்தரிக்கவொண்ணாமையால்
மிக்கரன்றன்னைவிருப்புடனர்ச்சிக்கத்
தக்கநற்சத்தியைத்தான்கூறுசெய்ததே. (௨)

கூறதுவாகக்குறித்துநற்சக்கரங்
கூறதுசெய்துகொடுத்தனன்மாலுக்குக்
கூறதுசெய்துகொடுத்தனன்சத்திக்குக்
கூறதுசெய்துதரித்தனன்கோலமே. (௩)

தக்கன்றன்வேள்விதகர்த்தநல்வீரர்பாற்
றக்கன்றன்வேள்வியிற்றாமோதரன்றானுஞ்
சக்கரந்தன்னைச்சசிமுடிமேல்விட
வக்கியுமிழ்ந்ததுவாயுக்கரத்திலே. (௪) ஆ௩௪

---

எலும்புங்கபாலமும்.

எலும்புங்கபாலமுமேந்தியெழுந்த
வலம்பன்மணிமுடிவானவராதி
யெலும்புங்கபாலமுமேந்திலனாகி
லெலும்புங்கபாலமுமிற்றுமண்ணாமே. (௧) ஆ ௩௫.

---

அடிமுடிதேடல்.

பிரமனுமாலும்பிரானேநானென்னப்
பிரமன்மாறங்கடம்பேதமையாலே
பரமனனலாய்ப்பரந்துமுன்னிற்க
வரனடிதேடியரற்றுகின்றாரே. (௧)

ஆமேழுலகுறநின்றவெம்மண்ணலுந்
தாமேழுலகிற்றழற்பிழம்பாய்நிற்கும்
வாமேழுலகுறுமாமணிகண்டனை
நானேயறிந்தேனவனருண்மையினாலே. (௨)

ஊனுயிராயுணர்வங்கியாய்முன்னஞ்
சேணுவானோங்குந்திருவுருவேயண்டத்
தாணுவுஞாயிறுந்தண்மதியுங்கடந்
தானுமுழுதண்டமுமாகிநின்றானே. (௩)

நின்றனிலமுழுதண்டத்துணிளிய
னென்றேயவன்வடிவஞ்சினராய்ந்தது
சென்றாரிருவர்திருமுடிமேற்செல
நன்றாங்கழலடிநாடவொண்ணாதே. (௪)

சேவடியேத்துஞ்செறிவுடைவானவர்
மூவடிதாவென்றானுமுனிவரும்
பாவடிபாலேபதஞ்செய்பிரமனுந்
தாவடியிட்டுத்தலைப்பெய்தும்வாறே. (௫)

தானக்கமலத்திருந்தசதுமுகன்
றானக்கருங்கடலூழித்தலைவனு
மூனத்தினுள்ளேயுயிர்போலுணர்கின்ற
தானப்பெரும்பொருட்டன்மையதாமே. (௬)

ஆலிங்கனஞ்செய்தெழுந்தபரஞ்சுடர்
மேலிங்ஙன்வைத்ததோர்மெய்ந்நெறிமுன்கண்
டாலிங்கனஞ்செய்துலகம்வலம்வருங்
கோலிங்கமைஞ்சருள்கூடலுமாமே. (௭)

ளாள்கொடுத்தானைவழிபட்டதேவர்க
ளாள்கொடுத்தெம்போலரனையறிகில
ராள்கொடுத்தின்பங்கொடுத்துக்கோளாகத்
தாள்கொடுத்தானடிசாரகிலாரே. (அ)

ஊழிவலஞ்செய்தங்கோருமொருவற்கு
வாழிச்சதுமுகன்வந்துவெளிப்படும்
வீழித்தலைநீர்விதித்திதுதாவென
வூழிக்கதிரோனொளியைவென்றானே. (௯) ஆ-௨௨.

சர்வசிருஷ்டி.

ஆதியொடந்தமிலாதபராபரம்
போதமதாகப்புணரும்பராபரை
சோதியதனிற்பரந்தோன்றத்தோன்றுமாந்
தீதில்பரையதன்பாற்றிகழ்நாதமே. (க)

நாதத்தில்விந்துவுநாதவிந்துக்களில்
தீதற்றகம்வந்தசிவன்சத்தியென்னவே
பேதித்துஞானங்கிரியைபிறத்தலால்
வாதித்தவிச்சையில்வந்தெழும்விந்துவே. (உ)

இல்லதுசத்தியிடந்தனிலுண்டாகிக்
கல்லொளிபோலக்கலந்துள்ளிருந்திடும்
வல்லதுவாகவழிசெய்தவப்பொருள்
சொல்லதுசொல்லிடிற்றூராதிதூரமே. (௩)

தூரத்திற்சோதிதொடர்ந்தொருசத்தியா
யார்வந்துநாதமணைந்தொருவிந்துவாய்ப்

பாரச்சதாசிவம்பார்முதலந்தக்கு
மார்வத்தச்சத்தியோராவத்துமானுமே. (௪)

மாலின்கண்வாளுகிவாரிவளர்தனிற்
காலின்கணிருங்கலர்துகடினமாய்த்
தேனின்கணைந்தஞ்செறிந்தைத்துபூதமாய்ப்
பூவின்கணின்றபொருந்தம்புவனமே. (௫)

பவனம்படைப்பானொருவனொருத்தி
பவனம்படைப்பார்க்குப்புத்திரனாவர்
புவனம்படைப்பானும்பூமிசையானும்
புவனம்படைப்பானப்புண்ணியன்றனே. (௬)

புண்ணியனந்திபொருந்தமுலகெங்கு
மண்ணியல்பாகிவளர்த்திடுஞ்சத்தியுந்
தண்ணியல்பாகித்தரணிமுழுதமாய்
கண்ணியல்பாகிக்கலந்தெழும்பூவிலே. (௭)

நீரகத்தின்பம்பிறக்குநெருப்பிடை
காயத்திற்சோதிபிறக்குமக்காற்றிடை
யோர்வுடைநல்லுயிர்ப்பாதமொலிசத்தி
நீரிடைமண்ணினிலைபிறப்பாமே. (௮)

உண்மைசெழுமுமிழ்ந்தானுடனாகி
பண்டத்தமரர்தலைவனுமாதியுங்
கண்டச்சதுமுகக்காரணன்றன்னொடும்
பண்டிவ்வுலகம்படைக்கும்பொருளே. (௯)

ஓங்குபெருங்கடலுள்ளுறுவானொடும்
பாங்கார்கயிலைப்பராபரனுமும்

வீங்குகமலமலர்மிசைமேலய
னாங்குயிர்வைக்குமதுவுணர்ந்தானே. (௰)

காரணனன்பிற்கலந்தெங்குநின்றவன்
நாரணனின்றநடுவுடலாய்நிற்கும்
பாரணனன்பிற்பதஞ்செய்யுநான்முக
னாரணமாயுலகாயமர்ந்தானே. (௰க)

பயனெளிதாம்பருமாமணிசெய்ய
நயனெளிதாகியநம்பனொன்றுண்டு
வயனொளியாயிருந்தங்கேபடைக்கும்
பயனெளிதாம்வயணந்தெளிந்தேனே. (௰உ)

போக்கும்வரவும்புனிதனருள்புரிந்
தாக்கமுஞ்சிந்தையதாகின்றகாலத்து
மேக்குமிகநின்றவெட்டுத்திசையொடுந்
தாக்குங்கலக்குந்தயாபரன்றானே. (௰ங)

நின்றுயிராக்குநிமலனென்றொருயி
சொன்றுயிராக்குமளவையுடலுற
முன்றுயிராக்குமுடற்குந்துணையதா
நன்றுயிர்ப்பானேநடுவுநின்றானே. (௰ச)

ஆகின்றதன்மையிலக்கணிகொன்றையன்
மேகின்றசெம்பொனின்மேலணிமேனியன்
போகின்றசீவன்புகுந்திடலாயுள
னாகின்றதன்மைசெய்யாண்டகையானே. (௰ரு)

ஒருவனொருத்திவிளையாடலுற்று
ரிருவர்விளையாட்டுமெல்லாம்விளக்கும்

பருவக்களேறும்பயன்பலவான
திருவோனதிற்செல்கைச்சுற்றுமாமே. (௰௬)

புகுந்தறிவாம்புலனுபதியன்னல்
புகுந்தறிவாய்புரிசக்கரத்தன்னல்
புகுந்தறிவான்மலர்மேவுறைபுத்தேள்
புகுந்தறியும்முழுக்காகின்றதே. (௰௭)

ஆணவச்சத்தியுமாமதிலவரும்
காரியகாரணவீசர்கடைமுறை
பேணியவைந்தொழிலால்விந்துவிற்பிறந்
தாணவநீங்காதவரெனலாகுமே. (௰௮)

உற்றமுப்பாலொன்றுமாயாளுதயமா
மற்றையமுன்றுமாமாயோதயம்விந்து
பெற்றவனுதம்பனாயிற்பிறத்தலாற்
றற்பரசிவன்றேல்விளையாட்டிதே. (௰௯)

ஆகாயமாதிசதாசிவராதியென்
போகாதசத்தியுட்போந்தடங்கோந்தனர்
மாகாயவீசனரன்மால்பிரமன்
மீகாயம்புரியுங்காணவறிந்தவே. (௨௰)

அலியார்முக்கோணவழிந்தவத்தன்னி
லலியார்திரிபுனாயாமுடனே
டலியார்சதாசிவமாகியுமவா
வலியார்கருமங்கணைத்துசெய்வாரே. (௨௧)

வா[illegible]கொங்கசமுறைன்மணிமங்கலி
[illegible]காரியமாசக்கலத்தவள்

வாரணிபாரணியானவம்மோகினி
பூரணிபோதாதிபோதமுமாமே. (உஉ)

நின்றதுதானாய்நிறைந்தமகேசுரன்
சென்றங்கியங்கியரன்திருமாலவன்
மன்றதுசெய்யுமலர்மிசைமேலய
னென்றிவராகவிசைந்திருந்தானே. (உ௩)

ஒருவனுமேயுலகேழும்படைத்தா
னொருவனுமேயுலகேழுமளந்தா
னொருவனுமேயுலகேழுங்கடந்தா
னொருவனுமேயுடலோடுயிர்தானே. (உச)

செந்தாமரைவண்ணன்றீவண்ணனெம்மிறை
மஞ்சார்முகில்வண்ணன்மாயஞ்செய்பாசத்துக்
கொத்தார்குழலியர்கூடியகூட்டத்து
மைந்தார்பிறவியமைத்துநின்றானே. (உ௫)

தேடுந்திசையெட்டுஞ்சிவனுடனுயிர்
கூடும்பிறவிக்குணஞ்செய்தமாநந்தி
யூடுமவர்தமதுள்ளத்தினுண்ணின்று
நாடும்வழக்கமுநானறிந்தேனே (உ௬)

ஓராயமேயுலகேழும்படைத்தது
வோராயமேயுலகேழுநடப்பது
வோராயமேயுலகேழுமிறப்பது
வோராயமேயுடலோடுயிர்தானே. (உஎ)

நாதனொருவனுநல்லவிருவருங்
கோதகுலத்தொடுகூட்டிக்குழைத்தன

சேதமிணியன்றிசையுமிருவருக்
காதியிவனேயருளுகின்றானே. (உ௫)

அப்பரிசெண்பத்துநான்குநூறாயிர
மெய்ப்பரிசெய்திவிரித்துயிராய்நிற்கு
மப்பரிசேழ்ந்தன்றுபுகலுமனிதர்க
ளெப்பரிசேயிருண்மூடநின்றாரோ. (உ௬)

ஆதித்தன்சந்திரனங்கியெனப்பலர்
போதித்தவாறொலிபொங்கெரிநீர்புவி
வாதித்தசத்தாதிவாக்குமனாதிக
ளோதுற்றமாயையின்விந்துவினுற்றதே (௩௰) ஆக ௭௪

---

## திதி.

புகுந்துநின்றான்வெளியாயிருளாகிப்
புகுந்துநின்றான்புகழ்வாயிகழ்வாகிப்
புகுந்துநின்றானுடலாயுயிராகிப்
புகுந்துநின்றான்புந்திமன்னிநின்றானே. (௧)

தானேதிசையொடுதேவருமாய்நிற்குந்
தானேயுடலுயிர்தத்துவமாய்நிற்குந்
தானேகடன்மலையாதியுமாய்நிற்குந்
தானேயுலகிற்றலைவனுமாமே. (௨)

உடலாயுயிராயுலகமதாகிக்
கடலாய்க்கார்முகினீர்பொழிவானு
யிடையாயுலப்பிலியெங்குந்தானாகி
யடையார்பெருவழியண்ணனின்றானே. (௩)

தேடுந்திசையெட்டுஞ்சிவனுடலுயிர்
கூடுமரபிற்குணஞ்செய்துமாநந்தி
பூடுமவர்தமதுள்ளத்துளேநின்று
நாடும்வழக்கமுநானறிந்தேனே. (௪)

தானொருகாலந்தனிச்சுடராய்நிற்குந்
தானொருகால்சண்டமாருதமாய்நிற்குந்
தானொருகாலந்தண்மழையாய்நிற்குந்
தானொருகாலந்தண்மாயனுமாமே. (௫)

அன்புமறிவுமடக்கமுமாய்நிற்கு
மின்பமுமின்பக்கலவியுமாய்நிற்கு
முன்புறுகாலமுமூழியுமாய்நிற்கு
மன்புறவைத்தின்மர்ந்துநின்றானே. (௬)

உற்றவனைவானவனேயுலகினைப்
பெற்றவனைவானவனேபிறவியைச்
சுற்றியசாலுங்குடமுஞ்சிறிதாதை
மற்றுமவனேவனையவல்லானே. (எ)

உள்ளுயிர்ப்பாயுடலாகிநின்றார்நந்தி
வெள்ளுயிராகும்வெளியானிலங்கொளி
யுள்ளுயிர்க்கும்புணர்வேயுடலுட்பரந்
தள்ளுயிராவண்ணந்தாங்கிநின்றானே. (அ)

தாங்கருந்தன்மையுந்தானவைபல்லுயிர்
வாங்கியகாலத்துமற்றோர்பிறிதில்லை
யோங்கியெழுமைக்கும்யோகாந்தமவ்வழி
தாங்கிநின்றானுமத்தாரணிதானே. (௯)

அணுகினுஞ்சேயவனங்கியிற்கூடி
நணுகினுஞானக்கொழுந்தொன்றுநல்கும்
பணியினும்பார்மிசைப்பல்லுயிராகித்
தணியினுமன்னுடலண்ணல்செய்வானே() ஆ அ௰௪.

---

## சங்காரம்.

அங்கிசெய்தீசனகலிடஞ்சுட்டது
வங்கிசெய்தீசனலைகடற்சுட்டது
வங்கிசெய்தீசனசுரரைச்சுட்டது
வங்கியவ்வீசற்குக்கையம்புதானே (௧)

இலயங்கண்மூன்றினுமொன்றுகற்பாந்த
நிலையன்றிழிந்தமைநின்றுணர்ந்தேனு
னுலைதந்தமெல்லரிபோலுமுலக
மலைதந்தமானிலந்தான்வெந்ததுவே. (௨)

பதஞ்செய்யும்பாரும்பனிவரையெட்டு
மூதஞ்செய்யுமேழ்கடலோதமுதலாங்
குதஞ்செய்யுமங்கிகொளுவியாகாசம்
விதஞ்செய்யுநெஞ்சின்வியப்பில்லைதானே. (௩)

கொண்டல்வரைநிற்றிழிந்தகுலக்கொடி
பண்டத்தனேறியிருந்தெண்டிசையாகி
டொய்ற்றிற்பதஞ்செய்தவோமென்றவப்புறக்
குண்டத்திண்மேலங்கிகோலிக்கொண்டானே. (௪)

நித்தசங்காரமுறக்கத்துநீண்மூடம்
வைத்தசங்காரமுஞ்சாக்கிராதீதமாஞ்

சுத்தசங்காரந்தொழிலற்றகேவல
முய்த்தசங்காரம்பரனருளுண்மையே. (௫)

நித்தசங்காரமிரண்டுடனீவுதல்
வைத்தசங்காரமுமாயாள் சங்காரமாஞ்
சுத்தசங்காரமனாதீதந்தோய்வித்த
லுய்த்தசங்காரஞ்சிவன்றருளுண்மையே. (௬)

நித்தசங்காரங்கருவிடர்நீக்கிறு
லொத்தசங்காரமுடனுயிர்நீவுதல்
வைத்தசங்காரங்கேவலமான்மாவுக்
குய்த்தசங்காரஞ்சிவமாகுமுண்மையே. (௭)

நித்தசங்காரமுநீடிளைப்பாற்றுதல்
வைத்தசங்காரமுமன்னுமனாதியிற்
சுத்தசங்காரமுந்தோயாப்பரனருள்
வைத்தசங்காரமுநாலாமதிக்கிலே. (௮)

பாழேமுதலாவெழும்பயிரவ்விடம்
பாழேயடங்கினும்பண்டைப்பாழாகாவாம்
வாழாச்சங்காரத்தின்மாலயன்செய்தியாம்
பாழாம்பயிராயடங்குமப்பாழிலே, (௯)

தீயவைத்தார்மின்கள்சேரும்வினைதனை
மாயம்வைத்தான்வைத்தவன்பதியொன்றுண்டு
காயம்வைத்தான்கலந்தெங்குநினைப்பதோ
ராயம்வைத்தாயுணர்வாரவைத்தானே, () ஆக ௰௪,

## திரோபாவம்,

உள்ளத்தொருவனையுள்ளுறுசோதியை
யுள்ளம்விட்டோரடிநீங்காவொருவனை
யுள்ளமுந்தானுமுடனேயிருக்கினு
முள்ளமவனையுருவறியாதே. (க)

இன்பப்பிறவிபடைத்தவிறைவனுந்
துன்பஞ்செய்பாசத்துயருளடைந்தன
னென்புற்கொளுவியிசைந்துறுதோற்றகை
முன்பிற்கொளுவிமுடிகுவதாக்குமே. (உ)

இறையவன்மாதவனின்பம்படைத்த
மறையவன்மூவருமவந்துடன்கூடி
யிறையவன்செய்தவிரும்பொறியாக்கை
மறையவன்வைத்தபரிசறியாரே. (௩)

காண்கின்றகண்ணொளிகாதற்செய்யீசனை
யாண்பெண்ணலியுருவாய்நின்றவாதியைப்
பூண்படுநாவுடைநெஞ்சமுணர்ந்திட்டுச்
சேண்படுபொய்கைசசெயலணையாரே. (௪)

தெருளுமுலகிற்குந்தேவர்க்குமின்ப
மருளும்வகைசெய்யுமாதிப்பிரானுஞ்
சுருளுஞ்சுடருறுதூவெஞ்சுடரு
மிருளுமறநின்றிருட்டறையாமே. (௫)

அமைக்கின்றருட்கருமங்கங்களோசை
புமைக்கின்றவாசையுமொன்றொடொன்றுய்வார்

பரக்குமுருவமும்பாரகந்தானாய்க்
கரக்கின்றவைசெய்தகாண்டவகையானே. (சு)

ஒளித்துவைத்தென்னுள்ளுறவுணர்ந்தீசனை
வெளிப்பட்டுநின்றருள்செய்திடுமீண்டே
களிப்பொடுங்காதன்மையென்னும்பெருமை
வெளிப்பட்டிறைஞ்சினும்வேட்சியுமாமே. (எ)

நின்றதுதானாய்நிறைந்தமகேசுரன்
சென்றங்கியங்குமயன்றிருமாலவ
னன்றதுசெய்யுமலர்மிசைமேலய
னென்றிவராகியிசைந்திருந்தானே. (அ)

ஒருங்கியபாசத்துளுத்தமசித்த
ணிருங்களைமேலிருந்தின்புறநாடி
வருங்களையோராவகையினிற்கங்கை
யருங்களைபேணுதழுக்கதுவாமே. (கூ)

மண்ணொன்றுதான்பலநற்கலமாயிடு
முண்ணின்றயோனிகளெல்லாமொருவனே
கண்ணொன்றுதான்பலகாணுந்தனைக்காணு
வண்ணனுமவ்வண்ணமாகிநின்றானே. (ய) ஆ ௱௪.

---

அநுக்கிரகம்.

எட்டுத்திசையுமடிக்கின்றகாற்றவன்,
வட்டத்திரையனல்மாநிலமாகாச
மொட்டியுயிர்நிலையென்னுமிக்காயப்பை
கட்டியவிழ்க்கின்றகண்ணுதல்காணுமே. (க)

உச்சியிலோங்கியொளிதிகழ்நாதத்தை
நச்சியேயின்பங்கொள்வார்க்குநமனில்லை
விச்சும்விரிசுடர்மூன்றுமுலகுக்குக்
கைச்சுமவனேசமைக்கவல்லானே. (௩)

குசவன்திருக்கையிலேற்றியமண்ணைக்
குசவன்மனத்துற்றதெல்லாம்வனைவன்
குசவனைப்போலெங்கள்கோனந்திவேண்டி
லசைவிலுலகமதுவிதுவாமே. (௪)

விடையுடையான்விகிர்தன்மிகுபூதப்
படையுடையான்பரிசேயுலகாக்குங்
கொடையுடையான்குணமேகுணமாகுஞ்
சடையுடையான்சிந்தைசார்ந்துநின்றானே. (௫)

உகந்துநின்றேபடைத்தானுலகேழு
முகந்துநின்றேபடைத்தான்பல்லூழி
யுகந்துநின்றேபடைத்தானைந்துபூத
முகந்துநின்றேயுயிரூன்படைத்தானே. (௬)

படைத்துடையான்பண்டுலகங்களேழும்
படைத்துடையான்பலதேவரைமுன்னே
படைத்துடையான்பலசீவரைமுன்னே
படைத்துடையான்பரமாகிநின்றானே. (௭)

ஆதிபடைத்தனனைம்பெரும்பூதங்க
ளாதிபடைத்தனனாயபல்லூழிக
ளாதிபடைத்தனனெண்ணிலிதேவரை
யாதிபடைத்தவைதாங்கிநின்றானே. (௮)

அகன்றானகலிடமேழுமொன்றாகி
யிவன்றானெனநின்றெளியனுமல்லன்
சிவன்றான்பலபலசீவனுமாகி
நவின்றானுலகுறுநம்பனுமாமே. (அ)

உண்ணின்றசோதியுறநின்றவோருடல்
விண்ணின்றமரர்விரும்பும்விழுப்பொருண்
மண்ணின்றவானோர்புகழ்திருமேனியன்
கண்ணின்றமாமணிமாபோதகமே. (௯)

ஆருமறியாதவ்வண்டத்திருவுருப்
பார்முதலாகப்பயிலுங்கடத்திலே
நீரினிற்பால்போலநிற்கின்றநேர்மையைச்
சோராமற்காணுஞ்சுகமறிந்தேனே. (௰) ஆ. ௱௰௪,

---

கெற்பக்கிரிகை.

ஆக்குகின்றான்முன்பிரிந்தவிருபத்தஞ்
சாக்குகின்றானவனாதியெம்மாருயி
ராக்குகின்றான்கெற்பக்கோளகையுள்ளிருந்
தாக்குகின்றானவனாவதறிந்தே. (க)

அழிகின்றமூலத்தின்மேலங்கியப்புச்
செறிகின்றஞானத்துச்செந்தாள்கொளுவிப்
பொறைநின்றவினுயிர்ப்போத்துறைநாடப்
பறிகின்றபத்தெனும்பாரஞ்செய்தானே. (உ)

இன்புறகாலத்திருவர்முன்பூறிய
துன்புறுபாசத்துயர்மனைவாழுனன்,

பண்புறுகாலமும்பார்மிசைவாழ்க்கையு
மன்புறுகாலத்தமைத்தொழிந்தானே. (௩)

கருவையொழிந்தவர்கண்டநாலாமேழ்
பருடனுடலில்பொருந்துமற்றோரார்
திருவின்கருக்குழிதேடிப்புகுந்த
தருவமிரண்டாகவோடிவிழுந்ததே. (௪)

விழுந்ததுலிங்கம்விரிந்ததுயோனி
யொழிந்தமுதலைந்துமீரைந்தொடேறிப்
பொழிந்துபுனல்பூதம்போற்றுங்கரண
மொழிந்தநுதலுச்சியுள்ளேயொளித்தே. (௫)

பூவின்மணத்தைப்பொருந்தியவாயுந்
தாவியுலகிற்றரிப்பித்தவாறுபோன்
மேவியசீவனில்மெல்லநீள்வாயுவுங்
கூவியவிழுங்குறிக்கொண்டபோதே. (௬)

போகின்றவெட்டும்புகுகின்றபத்தெட்டு
மூழ்கின்றமுத்தனுமொன்பதுவாய்தலு
நாகமுமெட்டெனலும்புரவியும்
பாகன்விடாவிடிற்பன்றியுமாமே. (௭)

ஏறவெதிர்க்கிலிறையவன்றானாகு
மாறவெதிர்க்கிலரியவன்றானாகு
நேரொக்கவக்கினிகர்போதந்தானும்
பேரொத்தமைந்தனும்பேரரசாளுமே. (௮)

ஏயங்கலந்தவிருவர்தஞ்சாயத்துப்
பாயுங்கருவுமுருவாமெனப்பல

காயங்கலந்ததுகாணப்பதிந்தபின்
மாயங்கலந்தமனோலயமானதே. (௯)

கெற்பத்துக்கேவலமாயாள்கிளைகூட்ட
நிற்குந்துரியம்பேதித்துநினைவெழ
வற்புறுகாமியமெட்டாதல்மாயேயஞ்
சொற்புறுதாய்மறைவாக்கினுஞ்சொல்லே. (௰)

என்பால்மிடைந்துநரம்புவரிக்கட்டிச்
செம்பாலிறைச்சித்திருர்தமனைசெய்து
வின்பாலுயிர்நிலைசெய்தவிறையோங்கு
நன்பாலொருவனைநாடுகின்றேனே. (௰௧)

பதஞ்செய்யும்பால்வண்ணன்மேனிப்பகலோ
னிதஞ்செய்யுமொத்துடலெங்கும்புகுந்து
குதஞ்செய்யுமங்கியின்கோபந்தணிப்பான்
விதஞ்செய்யுமாறேவிதித்தொழிந்தானே. (௰௨)

ஒழிபலசெய்யும்வினையுற்றநாளே
வழிபலநீராட்டிவைத்தழுவாங்கிப்
பழிபலசெய்கின்றபாசக்கருவைச்
சுழிபலவாங்கிச்சுடாமல்வைத்தானே. (௰௩)

சுக்கிலநாடியிற்றோன்றியவெள்ளியு
மக்கிரமத்தேதோன்றுமவ்வியோனியும்
புக்கிடுமெண்விரற்புறப்பட்டுநால்விர
லக்கரமெட்டுமெண்சாணதுவாமே. (௰௪)

போகத்துளாங்கேபுகுந்தபுனிதனுங்
கோசத்துளாகங்கொணர்ந்தகொடைத்தொழி

வேகத்துளங்கேயிர்ண்டெட்டுமூன்றைந்து
மோகத்துளாங்கொருமுட்டைசெய்தானே. (௰௫)

பிண்டத்திலுள்ளூறும்பேதப்புலனைந்தும்
பிண்டத்தினூடேபிறந்துமரித்தது
வண்டத்தினுள்ளூறுசிவனுமவ்வகை
பண்டத்துநாதத்தமர்ந்திருந்தானே. (௰௬)

இலைப்பொறியேற்றியெனதுடலீசன்
றுலைப்பொறியிற்கருவைந்துடனூட்டி
திலைப்பொறிமுப்பதுநீர்மைகொளுவி
யுலைப்பொறியொன்பதிலொன்றுசெய்தானே. (௰௭)

இன்புற்றிருந்தவரியலித்துவைத்தமண்
டுன்பக்கலசமணைவானொருவனே
யொன்பதுநீர்ச்சால்கலசம்பதினெட்டு
வெந்ததுகூளைவிளைந்ததுதானே. (௰௮)

அறிபீருடம்பினிலாகியவாறும்
பிறிபீரதனிற்பெருகுங்குணங்கள்
செறிபீரவற்றினுட்சித்திகளெட்ட
தறிவீனாத்தினுள்ளானதுபிண்டமே. (௰௯)

உடல்வைத்தவாறுமுயிர்வைத்தவாறு
மடைவைத்தவொன்பதுவாய்தலும்வைத்துத்
திடம்வைத்ததாமரைச்சென்னியுளங்கி
கடைவைத்தவீசனைக்கைகலந்தேனே. (௨௰)

கேட்டுநின்றேனெங்குங்கேடில்பெருஞ்சுடர்
மூட்டுகின்றான்முதல்யோனிமயமவன்

கூட்டுகின்றான் குழம்பின் கருவையுரு
நீட்டிநின்றுகத்து நேர்பட்டவாறே. (உக)

பூவுடன்மொட்டுப்பொருந்தவலர்ந்தபின்
காவுடைத்தீபங்கலந்துற்றுநந்து
நீரிடைநின்றகுமிழிநிழற்றாய்
யாருடலெங்கும்பரந்தெட்டும்பற்றுமே. (உஉ)

எட்டினுளைந்தாகுமிந்திரியங்களுங்
கட்டியமூன்றுகரணமுமாய்விடு
மொட்டியபாசவுணர்வென்னுங்காயப்பை
கட்டியவிழ்த்திடுக்கண்ணுதல்காணுமே. (உங)

கண்ணுதனுமங்கலந்துடம்பாயிடப்
பண்ணுதல்செய்துபசுபாசநீக்கிட
வெண்ணியவேதமிசைத்தபரப்பினை
மண்முதலாகவகுத்துவைத்தானே. (உச)

அருளல்லதில்லையரனறிவின்றி
யருளில்லையாதலினாலோருயிர்க்குத்
தருகின்றபோதிருகைத்தாயர்தம்பால்
வருகின்றநண்புவகுத்திடுந்தானே. (உரு)

வகுத்தபிறவியின்மாதுநல்லாளுந்
தொகுத்திருள்நீக்கியசோதியவனும்
பகுத்துணர்வாகியபல்வகையெங்கும்
வகுத்துள்ளுநின்றதோர்மாண்பதுவாமே. (உசா)

மாண்பதுவாகவளர்கின்றவன்னியைக்
காண்பதுவானபெண்ணணிமியனுங்கற்பனை

பூண்பதுமாதாபிதாவழிபோலவே
யாம்பதிசெய்தானச்சோதிதன்னாண்மையே, (௨௭)

ஆண்மிகிலாணாகும்பெண்மிகிற்பெண்ணாகும்
பூணிரண்டொத்துப்பொருந்திலலியாகுந்
தாண்மிகுமாகிற்றரணிமுழுதாளும்
பாண்வசமிக்கிடில்பாய்ந்ததுமில்லையே. (௨அ)

பாய்ந்தபின்னஞ்சோடிலாயுளுநூறுகும்
பாய்ந்தபின்னாலோடிற்பாரினிலெண்பதாம்
பாய்ந்திடும்வாய்வுபகுத்தறிந்தவ்வகை
பாய்ந்திடம்யோகிக்குப்பாய்ச்சலுமாமே. (௨௯)

பாய்கின்றவாய்வுகுறையிற்குறளாகும்
பாய்கின்றவாயுவிளைக்கின்முடமாகும்
பாய்கின்றவாய்வுநடுப்படிற்கூனாகும்
பாய்கின்றவாய்வுமாதர்க்கில்லைபார்க்கிலே. (௩௰)

மாதாவுதரமலமிகின்மந்தனாம்
மாதாவுதரஞ்சலமிகின்மூகையா
மாதாவுதரமிரண்டொக்கில்கண்ணில்லை
மாதாவுதரத்தில்வந்தகுழவிக்கே. (௩௧)

குழவியுமாணாம்வலத்ததுவாகில்
குழவியும்பெண்ணாமிடத்ததுவாகில்
குழவியிரண்டாமபானனெதிர்க்கில்
குழவியலியாகுங்கொண்டகாலொக்கிலே. (௩௨)

கொண்டநல்வாயுவிருவர்க்குமொத்தெழில்
கொண்டகுழவியுங்கோமளமாயிடுங்

கொண்டநல்வாயுவிருவர்க்குங்குழறிடில்
கொண்டதுமில்லையாங்கோல்வளையார்க்கே. (௫௩)

கோல்வளையுந்தியிற்கொண்டகுழவியுந்
தாய்வளையுள்ளேதயங்கியசோதியாம்
பால்வளர்ந்துள்ளேபகலவன்பொன்னுருப்
போல்வளர்ந்துள்ளேபொருந்துருவாமே. (௫௪)

உருவம்வளர்ந்திடுமொண்டிங்கள்பத்திற்
பருவமதாகவேபாரினில்வந்து
மருவிவளர்ந்திடுமாயையினாலே
யுருவமதாவதிங்காரறிவாரே. (௫௫)

இட்டாரறிந்திலரேற்றவர்கண்டிலர்
தட்டானறிந்துமொருவர்க்குரைத்திலன்
பட்டாங்குசொல்லும்பரமனுமங்குளன்
கெட்டேனெம்மாயையின்கீழ்மையெவ்வாறே. (௫௬)

இன்புறுநாடியிருவருஞ்சந்தித்துத்
துன்புறுபாசத்திற்றோன்றிவளர்ந்தபின்
முன்புறநாடிநிலத்தின்முன்றோற்றிய
தொன்புறநாடிநின்றோதலுமாமே. (௫௭)

குயிற்குஞ்சுமுட்டையைக்காக்கைதன்கூட்டிட்டா
லயிர்ப்பின்றிக்காக்கைவளர்க்கின்றதுபோ
லியக்கில்லைபோக்கில்லையெனன்பதில்லை
மயக்கத்தாலாக்கைவளர்க்கின்றவாறே. (௫௮)

முதற்கிழங்காயமுளையாய்முளைப்பி
னதற்புதலாய்ப்பலமாய்நின்றளித்து

மதற்கதுவாமிச்சமாவதுபோல
வதற்கதுவாட்டிற்குமாதிப்பிரானே. (ருகூ)

ஏனோர்பெருமையனாகினுமெம்மிறை
யூனேசிறுமையுளுட்கலந்தாங்குளன்
வானோரறியுமளவல்லமாதேவன்
றானேயறியுந்தவத்தினினுள்ளே. (சுய)

பரத்திற்பதிந்துபதிந்தநற்காய
முருத்தரித்திவ்வுடலோங்கிடவேண்டித்
திராக்கடலுப்புத்திரண்டதுபோலத்
திரித்தும்பிறக்குந்திருவருளாலே. (சுக) ஆ௱ருசு

---

## மூவகையாருயிர்வர்க்கம்.

சத்திசிவன்விளையாட்டாலுயிராக்கி
யொத்தவிருமாயாகூட்டத்திடைபூட்டிச்
சத்தமதானந்தரியம்பிறிவித்துச்
சித்தம்புகுந்துசிவமயமாக்குமே. (க)

விஞ்ஞானர்நால்வருமெய்ப்பிரளயாகலத்
தஞ்ஞானர்மூவருந்தாங்குசகலத்தின்
அஞ்ஞானர்மூவருமாகும்பதின்மராம்
விஞ்ஞானராதிகள்வேற்றுமைதானே. (உ)

விஞ்ஞானர்கேவலத்தாராதுவிட்டவ
ரஞ்ஞானமட்டவித்தேசருஞ்சார்ந்துளோ
ரெஞ்ஞானமெய்த்தீகொடுமந்திரநாயகர்
மெய்ஞ்ஞானரானவம்விட்டுநின்றோரே. (ங)

இரண்டாவதில்முத்தியெய்துவரத்தனை
யிரண்டாவதுள்ளேயிருமலபெத்தர்
திரண்டாகுநூற்றெட்டுருத்திரரொன்பர்
முரண்சேர்சகலத்தர்மும்மலத்தாரே. (௪)

பெத்தத்தர்சித்தொடுபேண்முத்திச்சித்தது
வெத்திட்டிரண்டிடையூடுற்றார்சித்துமாய்
மத்தத்துமும்மலம்வாட்டுகைமாட்டாதார்
சத்தத்தமிழ்ந்துசகலத்துளாரே. (௫)

சிவமாதியைவகைத்தண்மலஞ்சேர்ந்தோ
ரவமாகாச்சித்தர்முத்தாந்தத்துவாழ்வார்
பவமானதீர்வோர்பசுபாசமற்றோர்
நவமானதத்துவநாடிக்கொண்டாரே. (௬)

விஞ்ஞானராணவங்கேவலமேவ்வ
ரஞ்ஞானர்மாயையிற்றங்குமிருமல
ரஞ்ஞானரச்சகலத்தர்சகலராம்
விஞ்ஞானராதிகளொன்பானுயிர்களே. (௭)

விஞ்ஞானகன்மத்தர்மெய்யகங்கூடிய
வஞ்ஞானகன்மத்தினூற்கவர்யோனிபுக்
கெஞ்ஞானமெய்தீண்டியேயிடையிட்டுப்போய்
மெய்ஞ்ஞானராகிச்சிவமேவலுன்மையே. (௮)

ஆணவந்துற்றவவித்தாநனவற்றோர்
காணியவிந்துவாநாதசகலாதி
யாணவமாதியடைந்தோரவரன்றே
கேணுயர்சத்திசிவதத்துவமாமே (௯) ௲ரசக்.

## பாத்திரம்.

திலமத்தனையேசிவஞானிக்கீந்தால்
பலமுத்திசித்திபரபோகமுந்தரும்
நிலமத்தனைபொன்னைநின்மூடர்க்கீந்தால்
பலமுமற்றேபரபோகமுங்குன்றுமே. (க)

கண்டிருந்தாருயிருண்டிடுங்காலனைக்
கொண்டிருந்தாருயிர்க்கொள்ளுங்குணத்தினை
நன்றுணர்ந்தார்க்கருள்செய்திடுநாதனை
சென்றுணர்ந்தார்சிலர்தேவருமாமே. (உ)

கைவிட்டிலென்கருவாகியகாலத்து
மெய்விட்டிலென்விகிர்தன்னடிதேடுவன்
பொய்விட்டுநானேபுரிசடையானடி
நெய்விட்டிலாதவிடிஞ்சலுமாமே. (௩)

ஆவனவாவவழிவவ்ழிவன
போவனபோவபுகுவபுகுவன
காவலன்பேர்நந்திகாட்டித்துக்கண்டவ
னேவனசெய்யுமிளங்கிளையோனே. (௪) ஆ௱௬௰அ.

---

## அபாத்திரம்.

கோலவறட்டைக்குனிந்துகுளகிட்டுப்
பாலைக்கறந்துபருகுவதேயொக்குஞ்
சீலமுநோன்புமிலாதவர்க்கீந்தது
காலங்கழிந்தபயிரதுவாமே. (க)

ஈவதுயோகமியமநியமங்கள்
சார்வதறிந்தன்புதங்குமவர்க்கன்றி
யாவலறிந்தன்புதங்காதவர்களுக்
கீவபெரும்பிழையென்றுகொள்ளீரோ. (௨)

ஆமாறறியாசதிபஞ்சபாதகர்
தோமாறுமீசற்குந் தூயகுரவற்குங்
காமாதிவிட்டோர்க்குந்தரல்தந்துகப்பிப்போன்
போமாநரகிற்புகான்போதங்கற்கவே. (௩)

மண்மலையத்தனைமாதனமீயினு
மண்ணலிவனென்றஞ்சலியத்தனு
மெண்ணியிறைஞ்சாதார்க்கீந்தவிருவரு
நண்ணுவரேழாநரகக்குழியிலே. (௪) ஆ ௱௭௰௨

---

## திர்த்தம்.

உள்ளத்தினுள்ளேயுளபலதீர்த்தங்கள்
மெள்ளக்குடைந்துநின்றாடார்வினைகெடப்
பள்ளமுமேடும்பரந்துதிரிவரோற்
கள்ளமனமுடைக்கல்வியிலோரே. (௧)

தெளியறிவாளர்க்குத்தண்ணிதாயத்தோன்றுங்
குளியறிவாளர்க்குக்கூடவுமொண்ணான்
வளியறிவாளர்க்குவாய்க்கிலும்வாய்க்குந்
தெளிவறிவாளர்தஞ்சிந்தையுள்ளானே. (௨)

உள்ளத்தினுள்ளேயுணருமொருவனைக்
கள்ளத்தினருங்கலந்தறிவாரில்லை

வெள்ளத்தைநாடிவிடுமவர்தீவினைப்
பள்ளத்திலிட்டதோர்பத்தநுள்ளாமே. (௫)

அறிவாரமார்களாதிப்பிரானைச்
செறிவானுறைபதஞ்சென்றுவலங்கொண்
மறிவார்வளைக்கைவருபுனற்கங்கைப்
பொறியார்புனன்மூழ்கப்புண்ணியராமே. (௬)

கடலிற்கெடுத்துக்குளத்தினிற்காண்ட
லுடலுறத்தேடுவார்தம்மையொப்பாரிலர்
திடமுற்றநந்திதிருவருளாற்சென்
றுடலிற்புகுந்தமையொன்றறியாரே. (௭)

கலந்ததுநீரதுடம்பிற்கறுக்கும்
கலந்ததுநீரதுடம்பிற்சிவக்கும்
கலந்ததுநீரதுடம்பில்வெளுக்கும்
கலந்ததுநீர்நிலங்காற்றதுவாமே. (௮) ஆ. ௱௪௰௮.

---

## திருக்கோயிலிழிவு.

தாபரலிங்கம்பறித்தொன்றிற்றாபித்தா
லாவதன்முன்னேயரசுநிலைகெடுஞ்
சாவதன்முன்னேபெருநோயடுத்திடுங்
காவலன்பேர்நந்திகட்டுரைத்தானே (௧)

கட்டுவித்தார்மதிற்கல்லொன்றுவாங்கிடில்
வெட்டுவிக்கும்மபிடேகத்தரசனை
முட்டுவிக்கும்முனிவேதியராயினும்
வெட்டிவித்தேவிடும்விண்ணவனாணையே. (௨)

ஆற்றருநோய்மிக்கவனிமழையின்றிப்
போற்றருமன்னரும்போர்வலிகுன்றுவர்
கூற்றுதைத்தான்றிருக்கோயில்களானவை
சாற்றியபூசைகள்தப்பிடிற்றானே. (௫)

முன்னவனார்கோயில்பூசைகண்முட்டிடின்
மன்னர்க்குத்தீங்குளவாரிவளங்குன்றுங்
கன்னங்களவுமிகுத்திடுங்காசினி
யென்னருநந்தியெடுத்துரைத்தானே. (௬)

பேர்கொண்டபார்ப்பான்பிரான்றனையர்ச்சித்தாற்
போர்கொண்டவேந்தர்க்குப்பொல்லாவியாதியாம்
பார்கொண்டநாட்டுக்குப்பஞ்சமுமாமென்றே
சீர்கொண்டநந்திதெரித்துரைத்தானே ( ) ௫௱௰௭.

---

## அதோமுகதெரிசனம்.

எம்பெருமானிறைவாமுறையோவென்று
வம்பவிழ்வானோரசுரன்வலிசொல்ல
வம்பவளமேனியறுமுகன்போயவர்
தம்பகைகொல்லென்றதற்பரன்றானே. (௧)

அண்டமொடெண்டிசைதாங்குமதோமுகங்
கண்டங்கறுத்தகருத்தறிவாரில்லை
யுண்டதுநஞ்சென்றுரைப்பருணர்விலோர்
வெண்டலைமாலைவிரிசடையோற்கே. (௨)

செய்தானறிவன்செழுங்கடல்வட்டத்துப்
பொய்யேயுரைத்துப்புகலுமனிதர்காள்

மெய்யேயுணாக்கில்விண்ணோர்தொழச்செய்வன்
மைதாழ்ந்திலங்குமிடறுடையோனே. (௩)

நந்தியெழுந்துநடுவுறவோங்கிய
செந்தீகலந்துட்சிவனெனநிற்கு
முந்திக்கலந்தங்குலகம்வலம்வரு
மந்தியிறைவனதோமுகமாமே. (௪)

அதோமுகங்கீழண்டமானபுராண
னதோமுகர்தன்னொடுமெங்குமுயலுஞ்
சதோமுகத்தொண்மலர்க்கண்ணிப்பிரானு
மதோமுகனூழித்தலைவனுமாமே. (௫)

அதோமுகமாமலராயதுகேளு
மதோமுகத்தாலொருநூறுய்விரிந்து
வதோமுகமாகியவந்தமில்சத்தி
வதோமுகமாகியமர்ந்திருந்தாளே, (௬) ஆ ௱அ௬

---

சிவநிந்தை.

தெளிவுறுஞானத்துச்சிந்தையினுள்ளே
யளிவுறுவாரமராபதிநாடி
யெளியனென்றீசனை நீசரிகழில்
கிளியொன்றுபூனையாற்கேடதுவாகுமே. (௧)

முளிந்தவர்வானவர்தானவரெல்லாம்
விளிந்தவர்மெய்நின்றஞானமுணரா
ரளிந்தமுதூறியவாதிப்பிரானைத்
தளிர்ந்தவர்க்கல்லதுதாங்கவொண்ணாதே. (௨)

அப்பகையாலேயசுரருந்தேவரு
நற்பகைசெய்துநடுவேமுடிந்தனர்
எப்பகையாகிலுமெய்தாரிறைவனைப்
பொய்ப்பகைசெய்யினுமொன்றுபத்தாமே. (௫)

போகமுமாதர்புலவியதுநினைந்
தாகமுமுள்கலந்தங்குளராதலில்
வேதியராயும்விகிர்தனுமென்கின்ற
நீதியுளீசனினைப்பொழிவாரே. (௬) ஆ ௩௩௩.

---

குருநிந்தை.

பெற்றிருந்தாரையும்பேணார்கயவர்க
ளுற்றிருந்தாரையுளைவனசொல்லுவர்
கற்றிருந்தார்வழியுற்றிருந்தாரவர்
பெற்றிருந்தாரன்றியார்பெறும்பேறே. (௧)

ஓரெழுத்தொருபொருளுணரக்கூறிய
சீரெழுத்தாளரைச்சிதையச்செப்பினோ
ரூரிடைச்சுணங்கனாய்ப்பிறந்தங்கோருகம்
பாரிடைக்கிருமியாய்ப்படிவர்மண்ணிலே, (௨)

பத்தினிபத்தர்கள்தத்துவஞானிகள்
சித்தங்கலங்கச்சிதைவுகள்செய்தவ
ரத்தமும்மாவியுமாண்டொன்றின்மாய்ந்திடுஞ்
சத்தியமீதுசதாநந்திதாளே. (௩)

மந்திரமோரெழுத்துரைத்தமாதவர்
சிந்தையினொந்திடத்தீமைகள்செய்தவர்

நந்தியசுணைங்களுப்பிறந்துநூறுரு
வந்திடும்புலையராய்மாய்வர்மண்ணிலே. (கூ)

ஈசனடியாரிதயங்கலங்கிடத்
தேசமுநாடுஞ்சிறப்புமழிந்திடும்
வாசவன்பீடமுமாமன்னர்பீடமு
நாசமதாகுமேநம்நந்தியாணையே. (ரு)

சன்மார்க்கச்சற்குருசந்நிதிபொய்வரி
லுன்மார்க்கமுங்குன்றுஞானமுந்தங்காது
தொன்மார்க்கமாயதுறையுமறந்திட்டுப்
பன்மார்க்கமுங்கெட்டுப்பஞ்சமுமாமே. (சூ)

கைப்பட்டமாமணிதானிடைகைவிட்டு
வெப்பப்பட்டகல்லைச்சுமப்போன்விதிபோன்றுங்
கைப்பட்டநெய்பாறயிர்நிற்கத்தானறக்
கைப்பிட்டுண்பான் போன்றுங் கன்மிஞானிக்கொப்
[பே. ஈ. உள.

மயேசுரநிந்தை.

ஆண்டானடியவரார்க்கும்விரோதிக
ளாண்டானடியவராயமேற்றுண்பவ
ராண்டானடியாரைவேண்டாதுபேசினர்
தாந்தாம்விழுவதுதாழ்வாநரகமே. (க)

ஞானியைநிந்திப்பவனுநலனென்றே
ஞானியைவந்திப்பவனுமெய்நல்வினை

யானகொடுவினைதீர்வாரவன்வயம்
போனபொழுதேபுகுஞ்சிவபோகமே, () ஆ உாஉ,

பொறையுடைமை,

பற்றிநின்றார்நெஞ்சிற்பல்விதானென்றுண்டு
முற்றிக்கிடந்ததுமூக்கையுநாவையுந்
தெற்றிக்கிடந்துசிதைக்கின்றசிந்தையுள்
வற்றுதொழிவதுமாகமையாமே, (க)

ஒலக்கஞ்சூழ்ந்தவுலப்பிலிதேவர்கள்
பாலொத்தமேனியன்பாதம்பணிந்துய்யு
மாலுக்குமாதிபிரமற்குமன்னவன்
ஞாலத்திவர்மிகநல்லனொன்றனே, (உ)

ஞானம்விளைந்தவர்நம்மிடமன்னவர்
சேனைவளைந்துதிசைதொறுங்கைதொழு
மூனைவிளைந்திடுமும்பர்தம்மாதியை
யேனைவிளைந்தருளெட்டலுமாமே, (ங)

வல்வகையாலுமனையிலுமன்றிலும்
பல்வகையாலும்பயிற்றிப்பதஞ்செயுங்
கொல்லையினின்றுகுதிகொள்ளுங்கூத்தனுக்
கெல்லையிலாதவிலயமுண்டாமே, (ச) ஆ உாரு,

பெரியோரைத்துணைக்கோடல்.

ஓடவல்லார்தமரோடுநடாவுவன்
பாடவல்லாரொலிபார்மிசைவாழ்குவன்
தேடவல்லார்க்கருள்தேவர்பிரானொடுங்
கூடவல்லாரடிகூடுவன்யானே, (க)

நாயிடர்பட்டுத்தளிர்போற்றயங்கினு
மாமனத்தங்கன்புவைத்ததிலையாகு
நீயிடர்பட்டிருந்தென்செய்வாய்நெஞ்சமே
போயிடத்தென்னொடும்போதுகண்டாயே (உ)

அறிவாரமரர்தலைவனைநாடிச்
செறிவார்பெறுவர்சிவதத்துவத்தை
நெறிதான்மிகமிகநின்றருள்செய்யும்
பெரியாருடன்கூடல்பேரின்பமாமே, (௩)

நார்சடையான்றன்றமராயுலகினிற்
போர்புகழாவெந்தைபொன்னடிசேருவர்
வாயடையாவுள்ளந்தேர்வார்க்கருள்செய்யுங்
கோவடைந்தத்நெறிகூடலுமாமே. (௪)

உடையானடியாரடியாருடன்போய்ப்
படையாரழன்மேனிப்பதிசென்றுபுக்கேன்
கடையாரநின்றவர்கண்டறிவிப்ப
வுடையான்வருகெனவோலமென்றானே. (௫)

அருமைவல்லான்கலைஞாலத்துட்டோன்றும்
பெருமைவல்லோன்பிறவிச்சுழிநீந்து
முரிமைவல்லானுணர்ந்தூழியிருக்குந்
திருமைவல்லாரொடுஞ்சேர்ந்தன்னியானே. (௬)

ஆ அதிகாரம்-உ௬-இ திருமந்திரம்-உ௱௰உ
இரண்டாந்தந்திர முற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுள்பட-அதிகாரம்-௩அ-இ
கூடிய.திருமந்திரம்-௫௱௪௰அ.

## அட்டாங்கயோகம்.

உரைத்தனவற்கரியொன்றுமுடிய
நிரைத்தவிராசிநிரைமுறையெண்ணி
பிரைச்சதமெட்டும்பேசியநந்தி
நிரைத்தவியமநியமஞ்செய்தானே. (க)

செய்தவியமநியமஞ்சமாதிசென்
றுய்யப்பராசத்தியுத்தரபூருவ
மெய்நகவசநியாசங்கண்முத்திரை
யெய்தவுரைசெய்வனிந்திலதானே (உ)

அந்நெறியிந்நெறியென்னாதட்டாங்கத்
தன்னெறிசென்றுசமாதியிலேநின்மின்
நன்னெறிசெல்வார்க்குஞானத்திலேகலாம்
புன்னெறியாகத்திற்போக்கில்லையாகுமே. (ங)

இயமநியமமேயெண்ணிலாவாதன
நயமுறுபிராணயாமநண்பிரத்தியாகாரஞ்
சயமிகுதாரணைதியானஞ்சமாதி
யயமுறுமட்டாங்கமாவதுமாமே; (ச) அ. ச:

---

## இயமம்.

எழுந்துநீர்பெய்யினுமெட்டுத்திசையுஞ்
செழுந்தணியமங்கள்செய்மினென்றண்ணற்
கொழுந்தண்பவளக்குளிர்சடையோடே
யழுந்தியநால்வர்க்கருள்புரிந்தானே. (ரு)

கொல்லான்பொய்கூறான்களவிலானெண்குண
னல்லானடக்கமுடையானடுச்செய்ய
வல்லான்பகுந்துண்பான்மாசிலான்கட்காம
மில்லானியமத்திடையினின்றானே. (உ) அ. எ.

## நியமம்.

ஆதியைவேதத்தினப்பொருளானைச்
சோதியையங்கேசுடுகின்றவங்கியைப்
பாதியுண்மன்னும்பராசத்தியோடே
நீதியுணர்ந்தநியமத்தனாமே. (க)

தூய்மையருளூண்சுருக்கம்பொறைசெம்மை
வாய்மைநிலைமைவளர்த்தலேமற்றிவை
காமங்களவுகொலையெனக்காண்பவை
நேமியீரைந்துநியமத்தனாமே. (உ)

தபஞ்செபஞ்சந்தோடமாத்திகந்தானஞ்
சிவன்றன்விரதமேசித்தாந்தக்கேள்வி
மகஞ்சிவபூசையொண்மதிசொல்லீரைந்து
நிவம்பலசெய்யினியமத்தனாமே, (ங) அ. க.

## ஆதனம்.

பங்கயமாதிபரந்தபல்லாதன
மங்குளவாமிருநாலுமவற்றினுள்
சொங்கில்லையாகச்சுவத்திகமெனமிகத்
துங்கவிருப்பத்தலைவனுமாமே. (க)

ஓரிணைப்பதமூருவின்மேலேறிட்
டாரவலித்ததன்மேல்வைத்தழகுறச்
சீர்திகழ்கைகளதனைத்தன்மேல்வைக்கப்
பார்திகழ்பத்மாசனமெனலாகுமே. (௨)

துரிசில்வலக்காலைத்தோன்றவேமேல்வைத்து
வரியமுழந்தாளிலங்கைகளை நீட்டி
யுருகியிடுமுடற்செவ்வேயிருத்திப்
பரிசுபெறுமதுபத்திராசனமே, (௩)

ஒக்கவடியிணையூருவிலேறிட்டு
முக்கியுடலைமுழங்கைகளிலெற்றித்
தொக்கவறிந்துதுளங்காதிருந்திடிற்
குக்கிடவாசனங்கொள்ளலுமாகுமே. (௪)

பாதமுழந்தாளிற்பாணிகளை நீட்டி
யாதரவோடும்வாயங்காந்தழகுறக்
கோதினயனங்கொடிமூக்கிலேயுறச்
சீர்திகழ்சிங்காதனமெனச்செப்புமே, (௫)

பத்திரங்கோமுகம்பங்கயங்கேசரி
சோத்திரம்வீரஞ்சுகாதனமோரேழு
முத்தம்மாமுதுவாசனமெட்டெட்டுப்
பத்தொடுநூறுபலவாசனமே, (௬) அ. ௰௫.

---

## பிராணாயாமம்.

ஐவர்க்குநாயகனவ்வூர்த்தலைமக
னுய்யக்கொண்டேறுங்குதிரைமற்றொன்றுண்டு

மெய்யர்க்குப்பற்றுக்கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத்துள்ளிவிழுத்திடுந்தானே. (௧)

ஆரியனல்லன்குதிரையிரண்டுள
வீசிப்பிடிக்கும்விரகறிவாரில்லை
கூரியநாதன்குருவினருள்பெற்றால்
வாரிப்பிடிக்கவசப்படுந்தானே. (௨)

புள்ளினுமிக்கபுரவியைமேற்கண்டாற்
கள்ளுண்ணவேண்டாந்தானேகளிதருந்
துள்ளிநடப்பிக்குஞ்சோம்புதவிர்ப்பிக்கு
முள்ளதுசொன்னோமுணர்வுடையோருக்கே. (௩)

பிராணன்மனத்தொடும்பேராதடங்கிப்
பிராணனிருக்கிற்பிறப்பிறப்பில்லை
பிராணன்மடைமாறிபேச்சறிவித்துப்
பிராணனடைபேறுபெற்றுண்டீரோ, (௪)

ஏறுதல்பூரகமீரெட்டுவாமத்தா
லாறுதல்கும்பகமறுபத்துநாலதி
லூறுதல்முப்பத்திரண்டதிரேசக
மாறுதலொன்றின்கண்வஞ்சகமாமே. (௫)

வளியினைவாங்கிவயத்திலடக்கில்
பளிங்கொத்துக்காயப்பழுக்கினும்பிஞ்சாந்
தெளியக்குருவின்திருவருள்பெற்றால்
வளியினும்வேட்டுவளியனுமாமே. (௬)

எங்கேயிருக்கினும்பூரியிடத்திலே
யங்கேயதுசெய்யவாக்கைக்கழிவில்லை

யங்கேபிடித்ததுவிட்டளவுஞ்செல்லச்
சங்கேகுறிக்கத்தலைவனுமாமே. (௭)

ஏற்றியிறக்கியிருகாலும்பூரிக்குங்
காற்றைப்பிடிக்குங்கணக்கறிவாரில்லை
காற்றைப்பிடிக்குங்கணக்கறிவாளர்க்குக்
கூற்றையுதைக்குங்குறியதுவாமே. (௮)

மேல்கீழ்நடுப்பக்கமிக்குறப்பூரித்துப்
பாலாமிரேசகத்தாலுட்பதிவித்து
மாலாகியுந்தியுட்கும்பித்துவாங்கவே
பாலாலமுண்டானருட்பெறலாமே. (௯)

வாமத்திலீரெட்டுமாத்திரைபூரித்தே
யேமுற்றமுப்பத்திரண்டுமிரேசித்துக்
காமுற்றபிங்கலைக்கண்ணுகவிவ்விரண்
டோமத்தாலெட்டெட்டுகும்பிக்கவுண்மையே. (௰)

இட்டதவ்வீடிளகாதிரேசித்துப்
புட்டிபடத்தசநாடியும்பூரித்துக்
கொட்டியபிராணனபானனுங்கும்பித்து
நட்டமிருக்கநமனில்லைதானே. (௰௧)

புறப்பட்டுப்புக்குத்திரிகின்றவாயுவை
நெறிப்படவுள்ளே நின்மலமாக்கி
லுறுப்புச்சிவக்குமுரோமங்கறுக்கும்
புறப்பட்டுப்போகான்புரிசடையோனே. (௰௨)

கூடமெடுத்துக்குடிபுக்கமங்கைய
ரோடுவர்மீளுவர்பன்னிரண்டங்குல்

நீடுவரொய்ய விரற்கண்டிப்பர் நால்விரற்
கூடிக்கொளிற்கோலவஞ்செழுத்தாமே. (௰௩)

பன்னிரண்டானைக்குப்பகலிரவுள்ளது
பன்னிரண்டானையைப்பாகனறிகிலன்
பன்னிரண்டானையைப்பாகனறிந்தபின்
பன்னிரண்டானைக்குப்பகலிரவில்லையே. () ஆ உகூ.

---

## பிரத்தியாகாரம்.

கண்டுகண்டுள்ளேகருத்துறவோங்கிடிற்
கொண்டுகொண்டுள்ளேகுணம்பலகாணலாம்
பண்டுகந்தெங்கும்பழமறைதேடியை
யின்றுகண்டிங்கேயிருக்கலுமாமே. (௧)

நாபிக்குக்கீழேபன்னிரண்டங்குலந்
நாபிக்குமந்திரந்தன்னையறிகிலர்
நாபிக்குமந்திரந்தன்னையறிந்தபின்
கூவிக்கொண்டீசல்குடிபுகுந்தானே. (௨)

மூலத்திருவிரல்மேலுக்குமுன்னின்ற
பாலித்தயோனிக்கிருவிரற்கீழ்நின்ற
கோலித்தகுண்டலியுள்ளேசெழுஞ்சுடர்
ஞாலத்துநாபிக்குநால்விரற்கீழே. (௩)

நாசிக்கதோமுகம்பன்னிரண்டங்குல
நீசித்தம்வைத்துநினையவும்வல்லையேல்
மாசித்திமாயோகம்வந்துதலைப்பெய்துத்
தேகத்துக்கெல்லுஞ்சிதைவில்லையாகுமே. (௪)

சோதியிரேகைச்சுடரொளிதோன்றிடிற்
கோதில்பரானந்தமென்றேகுறிக்கொண்மின்
னேர்திகழ்கண்டத்தேநிலவொளியெய்தி
லோதுவதுன்னுட லுன்மத்தமாமே. (௫)

மூலத்துவாரத்தைமுக்காரமிட்டிரு
மேலைத்துவாரத்தின்மேன்மனம்வைத்திரு
வேலொத்தகண்ணைவெளியில்விழித்திரு
காலத்தைவெல்லுங்கருத்ததுதானே. (௬)

எருவிடும்வாசலிருவிரன்மேலே
கருவிடும்வாசலிருவிரற்கீழே
யுருவிடுசோதியையுள்கவல்லார்க்குக்
கருவிடுஞ்சோதிகலந்துநின்றானே. (௭)

ஒருக்காலுபாதியையொண்சோதிதன்னைப்
பிரித்துணரவந்தவுபாதிப்பிரிவைக்
கரைத்துணர்வுன்னல்களைதலுண்ணோக்கல்
பிரத்தியாகாரப்பெருமையதாமே. (௮)

புறப்பட்டவாயுப்புகவிடாவண்ணந்
திறப்பட்டநிச்சயஞ்சேர்ந்துடனின்று
றுறப்பட்டுநின்றதுவுள்ளமுமங்கே
புறப்பட்டுப்போகான்பெருந்தகையானே. (௯)

குறிப்பினினுள்ளேகுவலயந்தோன்றும்
வெறுப்பிருணீங்கிவிகிர்தனைநாடுஞ்
சிறப்புறுசிந்தையைச்சிக்கென்றணரில்
அறிப்புறுகாட்சியமரருமாமே. (௰) ஆட ௩௯.

## தாரணை.

கோணுமனத்தைக்குறிக்கொண்டுகீழ்க்கட்டி
வீணாத்தண்டூடேவெளியுறத்தானோக்கிக்
காணாக்கண்கேளாச்செவியென்றிருப்பார்க்கு
வாணாளடைக்கும்வழியதுவாமே. (௧)

மலையார்சிரத்திடைவானீரருவி
நிலையாரப்பாயுநெடுநாடியூடேபோய்ச்
சிலையார்பொதுவிற்றிருநடமாடுந்
தொலையாதவானந்தச்சோதிகண்டேனே. (௨)

மேலைநிலத்தினாள்வேதகப்பெண்பிள்ளை
மூலநிலத்திலெழுகின்றமூர்த்தியை
மேலெழுப்பியிவனுடன்சந்திக்கப்
பாலனுமாவான்பார்நந்தியாணையே. (௩)

கடைவாசலைக்கட்டிக்காலையெழுப்பி
யிடைவாசனோக்கியினிதிருத்தி
மடைவாயிற்கொக்குபோல்வந்தித்திருப்பா
ருடையாமலூழியிருக்கலுமாமே. (௪)

கலந்தவுயிருடன்காலமறியில்
கலந்தவுயிரதுகாலினெருக்கங்
கலந்தவுயிரதுகாலதுகட்டிக்
கலந்தவுயிருடன்காலமுநிற்குமே. (௫)

வாய்திறவாதார்மனத்திலோர்மாடுண்டு
வாய்திறப்பாரேவளியிட்டுப்பாய்ச்சுவர்

வாய்திறவாதார்மதியிட்டுமூட்டுவர்
கோய்திறவாவிடிற்கோழையுமாமே. (௬)

வாழலுமாம்பலகாலுமனத்திடை
போழ்கின்றவாயுபுறம்படாப்பாச்சுறி
லேழுசாலோகமிரண்டுபெருவாய்தல்
பாழிபெரியதோர்பள்ளியறையிலே. (௭)

திரம்பியவினைந்திலைந்திவைபோறு
லிரங்கிவிழித்திருந்தெய்செய்வைப்பதாய்
வரம்பினுட்கோலிவழிசெய்குவார்க்குக்
குரங்கினைக்கோட்டைப்பொதியலுமாமே. (௮)

முன்னம்வந்தனவெல்லாமுடித்தனர்
பின்னைவந்தவர்க்கென்னபிரமாண
மூன்றுறுகோடியுருசதிபேசிடி
லென்னமாயமிடிகளாநிற்குமே. (௯)

அரித்தவுடலையைம்பூதத்தில்வைத்துப்
பொருத்தவைம்பூதஞ்சித்தாதியிற்போந்து
தெரித்தமனாதிசத்தாதியிற்செல்லத்
தரித்ததுதாரணைதற்பரத்தோடே. (௰) ஆ சசு.

---

## தியானம்.

வருமாதியீரெட்டுள்வந்ததியானம்
பொருவாதப்புந்திபுலன்போகமேவ
லுருவாயசத்திபரத்தியானமூன்றுங்
குருவாய்சிவத்தியானம்யோகத்திறகூறே. (௧)

கண்ணாக்குமூக்குச்செவிஞானக்கூட்டத்துட்
பண்ணாக்கிநின்றபழம்பொருளொன்றுண்டு
வண்ணாக்கினுள்ளேயகண்டவொளிகாட்டிப்
புண்ணாக்கிநம்மைப்பிழைப்பித்தவாறே. (௨)

ஒண்ணாநயனத்திலுற்றவொளிதன்னைக்
கண்ணாரப்பார்த்துக்கலந்தங்கிருந்திடில்
விண்ணாறுவந்துவெளிகண்டிடவோடிப்
பண்ணாமனின்றதுபார்க்கலுமாமே. (௩)

ஒருபொழுதுன்னாருடலோடுயிரை
யொருபொழுதுன்னாருபிருட்சிவனை
யொருபொழுதுன்னார்சிவனாறைசிந்தையை
பொருபொழுதுன்னார்சந்திரப்பூவையே. (௪)

மனத்துவிளக்கினைமான்படவேற்றிச்
சினத்துவிளக்கினைச்செல்லநெருக்கி
யனைத்துவிளக்குந்திரியொக்கத்தூண்ட
மனத்துவிளக்கதுமாயாவிளக்கே. (௫)

எண்ணாயிரத்தாண்டுயோகமிருக்கினுங்
கண்ணாரமுதனைக்கண்டறிவாரில்லை
யுண்ணாடியுள்ளேயொளிபெறநோக்கிற்
கண்ணாடிபோலேகலந்திருந்தானே. (௬)

நாட்டமிரண்டுநடுமூக்கில்வைத்திடில்
வாட்டமுமில்லைமனைக்குமழிவில்லை
யோட்டமுமில்லையுணர்வில்லைதானில்லை
தேட்டமுமில்லைசிவனவனாமே. (௭)

நயனமிரண்டுநாசிமேல்வைத்திட்
டுயர்விழாவாயுவையுள்ளேயடக்கித்
துயரறுநாடியேதூங்கவல்லார்க்குப்
பயனிதுகாயம்பயமில்லைதானே. (அ)

மணிக்கடல்யானைவளர்குழன்மேக
மணிவண்டுதும்பிவளைபேரிகையாழ்
தணிந்தெழுநாதங்கடாமிவைபத்தும்
பணிந்தவர்க்கல்லதுபார்க்கவொண்ணாதே. (௯)

கடலொடுமேகக்களிறொடுமோசை
யடவொடுமவ்வினையண்டாண்டத்துச்
சுடர்மன்னுவேணுசுரிசங்கினோசை
திடமறியோகிக்கல்லாற்றெரியாதே. (௰)

ஈசனியல்புமிமையவரீட்டமும்
பாசமிரங்கப்பரந்துயிராய்நிற்கு
மோசையதன்மணம்போலவிடுவதோ
ரோசையுமீசனுணரவல்லாருக்கே. (௰௧)

நாதமுடியிலேநல்லாளிருப்பது
நாதமுடிவிலேநல்யோகமிருப்பது
நாதமுடிவிலேநாட்டமிருப்பது
நாதமுடிவிலேநஞ்சுண்டகண்டனே. (௰௨)

உதிக்கின்றவாறினுமுள்ளங்கியைத்துந்
துதிக்கின்றதேசுடைத்தூங்கிருணீங்கி
யதிக்கின்றவைவருணாதமொடுங்கக்
கதிக்கொன்றையீசன்கழற்சேரலாமே. (௰௩)

பள்ளியறையிற்பகலேயிருளில்லை
கொள்ளியறையிற்கொளுந்தாமற்காக்கலா
மொள்ளிதறியிலோரோசனைநீளிது
வெள்ளியறையில்விடிவில்லைதானே. (௰௫)

கொண்டவிரதங்குறையாமற்றுன்றித்
தண்டுடனோடித்தலைப்பட்டயோகிக்கு
மண்டலமூன்றினுமொக்கவளர்ந்தபின்
பிண்டமுமூழிபிறியாதிருக்குமே, (௰௬)

அவ்வவர்மண்டலமாம்பரிசொன்றண்டு
வவ்வவர்மண்டலத்தவ்வவர்தேவரா
மவ்வவர்மண்டலமவ்வவர்க்கேவரி
லவ்வவர்மண்டலமாயமற்றோர்க்கே. (௰௬)

இளைக்கின்றநெஞ்சத்திருட்டறையுள்ளே
முளைக்கின்றமண்டலமூன்றினுமொன்றித்
துளைப்பெரும்பாசத்துருவிடுமாகி
லிளைப்பின்றிமார்கழிபெற்றமதாமே. (௰௭)

முக்குணமூடறவாயுவைமூலத்தே
சிக்கெனமூடித்திரித்துட்பிடித்திட்டுத்
தக்கவலமிடநாழிகைசாதிக்க
வைக்குமுயிர்நிலைவானவர்கோனே. (௰௮)

நடலித்தநாபிக்குநால்விரன்மேலே
மடலித்தவாணிக்கிருவிரலுள்ளே
கடலித்திருந்துகருதவல்லார்கள்
சடலத்தலைவனைத்தாமறிந்தாரே. (௰௯)

அறிவாயசத்தென்னுமாறுறகன்று
செறிவானமாயைசிதைத்தருளாலே
பிறியாதபேரருளாயிடும்பெற்றி
நெறியானவன்பர்நிலையறிந்தாரோ (உ௰) ௫ சுகூ.



## சமாதி.

சமாதியமாதியிற்றான்சொல்லக்கேட்கிற்
சமாதியமாதியிற்றானெட்டுஞ்சித்தி
சமாதியமாதியிற்றங்கினோர்க்கன்றோ
சமாதியமாதித்தலைப்படுந்தானே, (க)

விந்துவுநாதமுமேருவிலோங்கிடிற்
சந்தியிலானசமாதியிற்கூடிடு
மந்தமிலாதவறிவினரும்பொருள்
சுந்தரச்சோதியுந்தோன்றிடுந்தானே. (உ)

மன்மனமெங்குண்டுவாயுவுமங்குண்டு
மன்மனமெங்கில்லைவாயுவுமங்கில்லை
மன்மனத்துள்ளேமகிழ்ந்திருப்பார்க்கு
மன்மனத்துள்ளேமனோலயமாமே (௩)

விண்டலர்கூபமுப்விஞ்சத்தடவியுங்
கண்டுணர்வாகக்கருதியிருப்பார்கள்
சென்றுவெளியிற்செழுங்கிரியத்திடை
கொண்டுகுதிரைக்குசைச்செறுத்தானே, (௪)

மூலநாடிமுக்கட்டலருச்சியு
ளாலுவாசனவுவுளிருப்பிர்கள்

மேலைவாசல்வெளியுறக்கண்டபின்
காலன்வார்த்தைகளுவிலுமில்லையே. (௫)

மண்டலமைந்துவரைகளுமீராறு
கொண்டிடநிற்குங்குடிகளுமாறெண்மர்
கண்டிடநிற்குங்கருத்தநடுவாக
வுண்டுநிலாவிடுமோடும்பதத்தையே. (௬)

பூட்டொத்துமெய்யிற்பொறிப்பட்டவாயுவைத்
தேட்டற்றவந்நிலஞ்சேரும்படிவைத்து
நாட்டத்தைமீட்டுநயனத்திருப்பார்க்குத்
தோட்டத்துமாம்பழந்தூங்கலுமாமே. (௭)

உருவறியும்பரிசொன்றுண்டுவானோர்
கருவரைப்பற்றிக்கடைந்தமுதுண்டார்
அருவரையேறியமுதுண்ணமாட்டார்
திருவரையாமனந்தீர்ந்தற்றவாறே, (௮)

நம்பனையாதியைநான்மறையோதியைச்
செம்பொனினுள்ளேதிகழ்கின்றசோதியை
யன்பினையாக்கியருத்தியொடுக்கிப்போய்க்
கொம்பேதிக்கும்பிட்டுக்கூட்டமிட்டாரே, (௯)

மூலத்துமேலதுமுச்சதிரத்தது
காலத்திசையிற்கலக்கின்றசந்தினில்
மேலைப்பிறையினுள்நெற்றிநேர்நின்ற
கோலத்தின்கோலங்கள்வெவ்வேறுகொண்டதே. (௰)

கற்பனையற்றுக்கனல்வழியேசென்று
சிற்பனையெல்லாஞ்சிருட்டித்தபேரொளிப்

பொற்பினை நாடிப்புணர்மதியோடுற்று
தற்பரமாகத்தகுந்தண்சமாதியே, (௰௧)

தலைப்பட்டிருந்திடத்தத்துவங்கூடும்
வலைப்பட்டிருந்திடுமாதுநல்லாளுங்
குலைப்பட்டிருந்திடுங்கோபமகலுந்
துலைப்பட்டிருந்திடுந்தூங்கவல்லார்க்கே. (௰௨)

சோதித்தனிச்சுடராய்நின்றதேவனு
மாதியுமுன்னணின்றசிவனுமாகுமா
லாதிப்பிரமன்பெருங்கடல்வண்ணனு
மாதியடிபணிந்தன்புறுவாரோ, (௰௩)

சமாதிசெய்வார்க்குத்தகும்பலயோகஞ்
சமாதிகள்வேண்டாமிறையுடனேகிற்
சமாதிதானில்லைத்தானவனாகிற்
சமாதியிலெட்டெட்டுச்சித்தியுமெய்துமே, ( ) அ௮௫

---

## அட்டாங்கயோகப்பேறு

### இயமம்

போதுகந்தேறும்புரிசடையானடி
யாதுகந்தாரமராபதிக்கேசெல்வ
ரேதுகந்தானிவனென்றருள்செய்திடு
மாதுகந்தாடுமால்விடையோனே. (௧)

### நியமம்.

பற்றிப்பதத்தன்புவைத்துப்பரன்புகழ்
கற்றிருந்தாங்கேசுருதமவர்கட்கு

முற்றெழுந்தாங்கேமுனிவரொதிர்வரத்
தெற்றுஞ்சிவபதஞ்சேர்தலுமாமே. (௨)

ஆதனம்.

வருந்தித்தவஞ்செய்துவானவர்கோவாய்த்
திருந்தமராபதிச்செல்வனிவனெனத்
தருந்தண்முழவங்குழலுமியம்ப
விருந்தின்பமெய்துவரீசனருளே. (௩)

பிராணுயாமம்.

செம்பொற்சிவகதிசென்றெய்துங்காலத்துக்
கும்பத்தமரர்குழாம்வந்தெதிர்கொள்ள
வெம்பொற்றலைவனிவனுமெனச்சொல்ல
வின்பக்கலவியிருக்கலுமாமே. (௪)

பிரத்தியாகாரம்.

சேருறுகாலந்திசைநின்றதேவர்க
ளாரிவனென்னவரனுமவனென்ன
வேருறுதேவர்களெல்லாமெதிர்கொள்ளக்
காருறுகண்டனைமெய்கண்டவாறே. (௫)

தாரணை.

நல்வழிநாடிநமன்வழிமாற்றிடுஞ்
சொல்வழியாளர்சுருங்காப்பெருங்கொடை
யில்வழியாளரிமையவரொண்டிசைப்
பல்வழியெய்தினும்பார்வழியாகுமே. (௬)

தியானம்.

தூங்கவல்லார்க்குந்துணையேழ்புவனமும்
வாங்கவல்லார்க்கும்வலிசெய்துநின்றிட்டுத்

தேங்கவல்லார்க்குந்திளைக்குமமுதமுந்
தாங்கவல்லார்கட்குந்தன்னிடமாமே. (எ)

சமாதி.

காரியமானவுபாதியைத்தான்கடந்
தாரியகாரணமேழுந்தன்பாலுற
வாரியகாரணமாயத்தவத்திடைத்
தாரியல்தற்பரஞ்சேர்தல்சமாதியே. (அ) ஆ. ௬௬.

அட்டமாசித்தி.

பரகாயப்பிரவேசம்.

பணிந்தெண்டிசையும்பரமனைநாடித்
துணிந்தெண்டிசையுந்தொழுதெம்பிரானை
யணிந்தெண்டிசையுமட்டமாசித்தித்
தணிந்தெண்டிசைச்சென்றுதாபித்தவாறே. (க)

பரிசறிவானவர்பண்பனடியெனத்
துரிசறநாடியேதூவெளிகண்டே
னரியதெனக்கில்லையட்டமாசித்தி
பெரிதருட்செய்துபிறப்பறுத்தானே. (உ)

குரவனருளிற்குறிவழிமூலப்
பரையின்மணமிகுசங்கட்டம்பார்த்துத்
தெரிதருசாம்பவிகேசரிசேரப்
பெரியசிவகதிபேறெட்டாஞ்சித்தியே. (௩)

காயாதிபூதங்கலைகாலமாயையி
லாயாதகலவறிவொன்றனாதியே
யோயாப்பதியதனுண்மையைக்கூடினால்
வீயாப்பரகாயமேவலுமாமே. (௪)

இருபதினாயிரத்தெண்ணூறுபேத
மருவியகன்மமாமந்தயோகந்
தருமிவைகாயவுழைப்பாகுந்தானே
யருமிருநான்காயடங்குமாசித்திக்கே. (௫)

மதிதனிலீராறாய்மன்னுங்கலையி
னுதயமதுநாலொழியம்வாமொட்டுப்
பதியுமீராறுண்டுபெற்றறப்பார்க்கிற்
றிதமானவீராறுசித்திகளாமே. (௬)

நாடும்பிணியால்நஞ்சன்ஞ்சூழ்ந்தக்கால்
நீடுங்கலைக்கல்விநின்மைபதைகூர்ஞானம்
பீடொன்றினால்வாயாச்சித்திபேதத்தி
னீடுந்தூரங்கேட்டல்நீண்முடிவீராறே. (௭)

ஏழானதிற்சண்டவாயுவின்வேகியாந்
தாழாநடைபலயோசனைசார்ந்திடுஞ்
சூழானவோரொட்டிற்றேன்றுநரைதிரை
தாழானவொன்பதிற்றன்பரகாயமே. (௮)

ஈரைந்திற்பூரித்தியானவுருத்திர
னேரொன்றுபன்னொன்றிலீராறுமெண்சித்தி
சிரொன்றுமேமேலேழ்கீழேழ்புவிச்சென்று
வோரொன்றுவியாபியாய்நிற்றலீராறே. (௯)

தானேயணுவுஞ்சகத்துந்தன்றோன்மையு
மாருக்ககனமும்பரகாயத்தேகமுந்
தானாவதும்பரகாயஞ்சேர்தன்மையு
மானதவுண்மையுவ்வியாப்தியுமாமெட்டே. (௰)

தாங்கியதன்மையுந்தானனுப்பல்லுயிர்
வாங்கியகாலத்துமற்றோர்குறையில்லை
யாங்கேயெழுந்தோம்வற்றுளெழுந்துமிக்
கோங்கியவாமுத்திமுந்தியவாறே. (௰௧)

முந்தியமுந்நூற்றறுபதுகாலமும்
வந்ததுநாழிகைவான்முதலாயிடச்
சிந்தைசெய்மண்முதற்றேர்ந்தறிவார்வல
முந்தியுணின்றுவுதித்தெழுமாறே. (௰௨)

சித்தந்திரிந்துசிவமயமாகியே
முத்தந்தெரிந்துற்றமோனர்சிவமுத்தர்
சுத்தம்பெறலாகவைந்திற்றுடக்கற்றோர்
சித்தம்பரத்திற்றிருநடத்தோரே. (௰௩)

ஒத்தவிவ்வொன்பதுவாயுவுமொத்தன
வொத்தவிவ்வொன்பதின்மிக்கதனஞ்செய
னொத்தவிவ்வொன்பதிலொக்கவிருந்திட
வொத்தவுடலுமுயிருமிருந்ததே. (௰௪)

இருக்குந்தனஞ்செயனொன்பதுகாலி
னிருக்குமிருநூ[illegible]றிருபத்துமூன்று
யிருக்குமுடலிற்றிருந்திலவாகி
லிருக்குமுடலதுவீங்கிவெடித்ததே (௰௫)

வீங்குங்கழலைசிரங்கொடுகுட்டமும்
வீங்குவியாதிகள்சோகைபலவதாய்
வீங்கியவாதமுங்கூனுமுடமதாம்
வீங்குவியாதிகள்கண்ணின்மருவியே. (௰௬)

கண்ணில்வியாதியுரோகந்தனஞ்செயன்
கண்ணிலிவ்வாணிகள்காசமவனல்லன்
கண்ணினிற்கூர்மன்கலந்திலனாதலாற்
கண்ணினிற்சோதிகலந்ததுமில்லையே, (௰எ)

நாடியினோசைநயனமிருதயந்
தூடியளவுஞ்சுடர்விடுசோதியைத்
தேவருளீசன்றிருமால்பிரமனு
மேவறநின்றங்குணர்ந்திருந்தார்களே. (௰அ)

ஒன்பதுவாசலுடையதோர்பிண்டத்து
ளொன்பதுநாடியுடையதோரோரிட
மொன்பதுநாடியொடுங்கவல்லார்கட்கு
வொன்பதுவாசலுலைநலவாமே, (௰௯)

ஓங்கியவங்கிக்கீழொண்சுழினைச்செல்ல
வாங்கியிரவிமதிவழியோடிடத்
தாங்கியுலகங்களேழுந்தரித்திட
வாங்கதுசொன்னோமறிவுடையோர்க்கே, (௨௰)

தலைப்பட்டவாறண்ணறையலைநாடி
வலைப்பட்டபாசத்துவன்பிணைமான்போ
றலைப்பட்டநாடியைத்தூவழிசெய்தால்
விலக்குண்ணவைத்ததோர்வித்ததுவாமே, (௨௧)

ஓடிச்சென்றங்கேயொருபொருள்கண்டவர்
நாடியினுள்ளாகநாதமெழுப்புவர்
தேடிச்சென்றங்கேதேனையுகந்துண்டு
பாடியுணின்றபகைவனைக்கட்டுமே, (௨௨)

கட்டிட்ட தாமரை ஞாளத்தி லொன்பது
மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர்
தட்டிட்டு நின்று தளங்கனி யூடுபோய்
பொட்டிட்டு நின்றது பூரண மானதே, (௨௩)

பூரண சத்தி யெழுமூன் றறையாக
வேரணி கன்னிக ளெழுநூற் றஞ்சாயினர்
நாரணன் முகனாதி யவைந் துக்குங்
காரண னாகிக் கலந்து விரிந்ததே (௨௪)

விரிந்து குவிந்து விளைந்த விம்மங்கை
கரந்துளெழுந் துகரந் தங்கிருக்கிற்
பரந்து குவிந்தது பார் முதற் பூத
மிரைந்தெழு வாயு விடத்தி லொடுங்கே. (௨௫)

இடையொடு பிங்கலை யென்னு மிரண்டு
மடைபடு வாயுவு மாறியே நிற்குந்
தடையவை யாறெழுந் தண்சுட ருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னி லொடுங்கே. (௨௬)

ஒடுங்கி யொருங்கி யுணர்ந்தங் கிருக்கின்
மடங்கி மடங்கிடும் வாயு வதனுண்
மடங்கி மடங்கிடு மன்னுயி ருள்ளே
நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே, (௨௭)

நாடியி னுள்ளே நாதத் தொலியுடன்
றேடி யுடன்சென்றத் திருவினைக் கைக்கொண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டிட்டு
மாடி லொருகை மணிவிளக் கானதே. (௨௮)

அணிமாதிசித்திகளானவைகூறி
லணுவிலணுவின்பெருமையினேர்மை
யிறுகாதவேகார்பரகாயமேவ.
லுறுவத்தினையெங்குந்தானாதலென்றெட்டே. (௨௯)

எட்டாகியசித்தியோரெட்டியோகத்தாற்
கிட்டாப்பிராணன்செய்தாற்கிடைத்திடு
மொட்டாநடுநாடிமூலத்தனற்பானு
விட்டான்மதியுண்ணவும்வருமேலதே, (௩௰)

சித்திகளெட்டன்றிச்சேரெட்டியோகத்தாற்
புத்திகளானவையெல்லாம்புலப்படுஞ்
சித்திகளெண்சித்தித்தானந்திரிபுரைச்
சத்திபருடரத்தானுளவாகுமே (௩௧)

அணிமா.

எட்டிவைதன்னொடெழிற்பரங்கைகூடப்
பட்டவர்சித்தர்பரலோகஞ்சேர்தலா
லிட்டமதுள்ளேயிருக்கல்பரகாட்சி
மெட்டுவரப்புமிடர்தானின்றெட்டுமே, (௩௨)

மந்தரமேறுமதிபானுவைமாற்றக்
கந்தாய்க்குழியிற்கசடறவல்லார்க்குத்
தந்தின்றிநற்காமியலோகஞ்சார்வார்க்கு
மந்தவுலகமணிமாதியாமே. (௩௩)

முடிந்திட்டுவைத்துமுயங்கிலோராண்டி
லணிந்தவணிமாகைதானாமிவனாந்

தணிந்தவப்பஞ்சினுந்தானொய்யதாகி
மெலிந்தங்கிருந்திடும்வெல்லவொண்ணாதே. (௫௪)

லகுமா.

ஆகின்றவத்தனிநாயகிதன்னுடன்
போகின்றதத்துவமெங்கும்புகலதாய்ச்
சாய்கின்றகாலங்கடன்வழிநின்றிடின்
மாய்கின்றவையாண்டின்மாலகுவாகுமே. (௫௫)

மாலகுவாகியமாயனைக்கண்டபின்
றானொளியாகித்தழைத்தங்கிருந்திடும்
பாலொளியாகிப்படர்ந்தெங்குநின்றது
மேலொளியாகியமெய்ப்பொருள்காணுமே. (௫௬)

மகிமா.

மெய்ப்பொருட்சொல்லியமெல்லியலாளுடன்
றற்பொருளாகியதத்துவங்கூடிடக்
கைப்பொருளாகக்கலந்திடுமோராண்டின்
மைப்பொருளாகுமகிமாவதாகுமே (௫௭)

ஆகின்றகாலொளியாவதுகண்டபின்
போகின்றகாலங்கள்போவதுமில்லையா
மேனின்றகாலம்வெளியுறநின்றபின்
தானின்றகாலங்கடன்வழியாகுமே. (௫௮)

தன்வழியாகத்தழைத்திடுஞானமுந்
தன்வழிமீதாகத்தழைத்திடும்வையகந்
தன்வழியாகத்தழைத்தபொருளெல்லாந்
தன்வழித்தன்னருளாகிநின்றானே (௫௯)

### பிராத்தி.

நின்றனதத்துவநாயகிதன்னுடன்
கண்டனபூதப்படையானவையெலாங்
கொண்டவையோராண்டில்கூடவிருந்திடில்
விண்டதுவேநல்லபிராத்தியதாகுமே. (௪௰)

### கரிமா.

ஆகின்றமின்னொளியாவதுகண்டபின்
பாகின்றபூவிற்பரப்பவைகாணலா
மேகின்றகாலம்வெளியுறநின்றது
போகின்றகாலங்கள்போவதுமில்லையே. (௪௧)

போவதொன்றில்லைவருவதுதானில்லை
சாவதொன்றில்லைதழைப்பதுதானில்லை
தாமதமில்லைதமரகத்தின்னொளி
யாவதுமில்லையறிந்துகொள்வார்க்கே. (௪௨)

அறிந்தபராசத்தியுள்ளேயமரிற்
பறிந்ததுபூதப்படையவையெல்லாங்
குறிந்தவையோராண்டுகூடவிருக்கில்
விரிந்ததுபரகாயமேவலுமாமே (௪௩)

### பிராகாமியம்.

ஆனவிளக்கொளியாவதறிகிலர்
மூலவிளக்கொளிமுன்னேயுடையவர்
கானவிளக்கொளிகண்டுகொள்வார்கட்கு
மேலைவிளக்கொளிவீடெளிதாநின்றே. (௪௪)

ஈசத்துவம்.

நின்றசதாசிவநாயகிதன்னுடன்
கண்டனபூதப்படையவையெல்லாங்
கொண்டவையோராண்டுகூடியிருந்திடிற்
பண்டையவ்வீசனதத்துவமாகுமே (௬௫)

ஆகின்றசந்திரன்றண்ணளியாயவ
னாகின்றசந்திரன்றட்பமுமாயிடு
மாகின்றசந்திரன்றன்கலைகூடிடி
லாகின்றசந்திரன்றானவனாகுமே. (௬௬)

தானேபடைத்திடவல்லவனாயிடுந்
தானேயளித்திடவல்லவனாயிடுந்
தானேசங்காரத்தலைவனுமாயிடுந்
தானேயிவனெனுந்தன்மையனாகுமே. (௬௭)

தன்மையதாகத்தழைத்தகலையினுள்
பன்மையதாகப்பரந்தவைம்பூதத்தை
வன்மையதாகமறித்திடிலோராண்டின்
மென்மையதாகியமெய்ப்பொருள்காணுமே, (௬௮)

வசித்துவம்.

மெய்ப்பொருளாகவிளைந்ததுவேதெனி
னற்பொருளாகியநல்லவசித்துவங்
கைப்பொருளாகக்கலந்தவுயிர்க்கெல்லாந்
தற்பொருளாகியதன்மையனாகுமே. (௬௯)

தன்மையதாகத்தழைத்தபகலவன்
மென்மையதாகியமெய்ப்பொருள்கண்டிடின்

பொன்மையதாகப்புல்களும்போயிட
நன்மையதாகியநற்கொடிகாணுமே. (௫௰)

நற்கொடியாகியநாயகிதன்னுடை
யக்கொடியாகமறிந்திடிலோராண்டு
பொற்கொடியாகியபுவனங்கள்போய்வருங்
கற்கொடியாகியகாமுகனாமே. (௫௧)

காமருதத்துவமானதுவந்தபின்
பூமருகெந்தம்புவனமதாயிடு
மாமருவுன்னிடமெய்திடுமானனாய்
நாமருவும்மொளிநாயகமானதே. (௫௨)

நாயகமாகியநலமொளிகண்டபின்
றாயகமாகத்தழைத்தங்கிருந்திடும்
போயகமானபுவனங்கள்கண்டபின்
பேயகமாகியபேரொளிகாணுமே. (௫௩)

பேரொளியாகியபெரியவவ்வேட்டையும்
பாரொளியாகப்பதைப்பறக்கண்டவன்
றாரொளியாகத்தரணிமுழுதுமா
மோரொளியாகியகாலொளிகாணுமே. (௫௪)

காலோடுயிருங்கலக்கும்வகைசொல்லி
லாலதுவக்கோடிநாயகிதன்னுடன்
காலதுவைஞ்ஞாற்றொருபத்துமூன்றையுங்
காலதுவெண்ணண்டிக்கொண்டவிவ்வாறே. (௫௫)

ஆறதுவாகுமமிர்தத்தலையினு
மாறதுவாயிரமுந்நூற்றொடஞ்சுள

வாறதுவாயிரமாறுமருவழி
யாறதுவாகவளர்ப்பதிரண்டே, (௫௬)

இரண்டினின்மேலேசதாசிவநாயகி
யிரண்டது கால்கொண்டெழுவகைசொல்லி
லிரண்டதுவாயிரமைம்பதின்தாடொன்றாய்த்
திரண்டதுகாலமெடுத்ததுமஞ்சே, (௫௭)

அஞ்சுடனஞ்சுமுகமுளநாயகி
யஞ்சுடனஞ்சதுவாயுதமாவது
வஞ்சதுவின்றியிரண்டதுவாயிர
மஞ்சதுகாலமெடுத்துளுமொன்றே. (௫௮)

ஒன்றதுவாகியதத்துவநாயகி
யொன்றதுகால்கொண்டூர்வகைசொல்லிடி
லொன்றதுவென்றிகொளாயிரமாயிர
மொன்றதுகாலமெடுத்துளுமுன்னே. (௫௯)

முன்னெழுமக்கலைநாயகிதன்னுடன்
முன்னுறுவாயுமுடிவகைசொல்லிடின்
மூன்னுறுமைம்பதொடொன்றுடனஞ்சுமாய்
மூன்னுறுவாயுமுடிவகையாமே, (௬௰)

ஆய்வருமத்தனிநாயகிதன்னுட
னாய்வருவாயுவளப்பதுசொல்லிடி
லாய்வருமைஞ்ஞூற்றுமுப்பதொடொன்பது
வாய்வருவாயுவளப்புள்ளிருந்ததே. (௬௧)

இருந்தியாகியவெந்தையிடத்து
விருந்திவாயுவியங்குநெறியி

விருநூற்றுமுப்பத்துமூன்றுடனஞ்சா
யிருந்திவாயுவியங்குமெழுத்தே. (௯௨)

எழுகின்றசோதியுண்ணாயகிதன்பா
லெழுகின்றவாயுவிடமதுசொல்லி
லெழுநூற்றிருபத்தொன்பானதுநாலா
யெழுந்துடனங்கியிருந்ததிவ்வாறே, (௯௩)

ஆறதுகால்கொண்டிரதம்விளைத்திடு
மேழதுகால்கொண்டிரட்டியிறக்கிட
வெட்டதுகால்கொண்டிடவகையேற்றபி
ெனான்பதுமாறில்மொத்ததுவாயுவே, (௯௪)

சந்திரன்சூரியன்றற்பரன்றானுவிற்
சந்திரன்றானுந்தலைப்படுந்தன்மையைச்
சந்தியிலேகண்டுதானுஞ்சகமுகத்
தந்திச்சமாதியுடையொளியோகியே (௯௫)

அணங்கற்றமாதலருஞ்சனநீவல்
வணங்குற்றகல்விமாஞானமிகுத்தல்
சிணுங்குற்றவாயர்சித்திதாங்கேட்டல்
நுணங்கற்றிரோதல்காவ்வேகத்துநுர்தலே, (௯௬)

மரணஞ்சிறைவிடல்வன்பரகாய
மிரணஞ்சேர்பூமியிறந்தோர்க்களித்த
லரணன்றிருவுருவாதன்மூவேழாங்
கரணுறுகேள்விக்கணக்கறிந்தோனே. (௯௭)

ஓதமொலிக்குமுலகைவலம்வந்து
பாதங்களோவநடந்தும்பயனில்லை

காதலிலண்ணலைக்காணவினியவர்
நாதனிருந்தநகரறிவோரோ. (௬௮)

மூலமுதல்வேதாமாலரன்முன்னிற்கக்
கோலியவைம்முகன்கூறப்பரவிந்து
சாலப்பரநாதம்விந்துத்தனிநாதம்
பாலித்தசத்திபரைபரன்பாதமே, (௬௯)

ஆதாரயோகத்ததிதேவொடுஞ்சென்று
மீதானதற்பரைமேவும்பரனொடு
மேதாதியீரெண்கலைசெல்லமீதொளி
யோதாவசிந்தமீதானந்தயோகமே, (௭௰)

மதியமுஞாயிறும்வந்துடன்கூடித்
துதிசெய்பவரவர்தொல்வானவர்கள்
விதியதுசெய்கின்றமெய்யடியார்க்குப்
பதியதுகாட்டும்பரமனின்றானே (௭௧)

கட்டவல்லார்கள்கரந்தெங்குந்தானவர்
மட்டவிழ்தாமரையுள்ளேமணஞ்செய்து
பொட்டெழுக்குத்திப்பொறியெழத்தண்டிட்டு
நட்டிடுவார்க்குநமனில்லைதானே, (௭௨) ஆ ௩௯௯.

---

கலைநிலை.

காதல்வழிசெய்தகண்ணுதலண்ணலைக்
காதல்வழிசெய்துகண்ணுறநோக்கிடிற்
காதல்வழிசெய்துகங்கைவழிதருங்
காதல்வழிசெய்துகாக்கலுமாமே. (௧)

காக்கலுமாகுங்கரணங்களைந்தையுங்
காக்கலுமாகுங்கலைபதினாறையுங்
காக்கலுமாகுங்கலந்தநல்வாயுவுங்
காக்கலுமாகுங்கருத்துறநில்லே, (௨)

நிலைபெறநின்றதுநேர்தருவாயு
சிலைபெறநின்றதுதீபமுமொத்துக்
கலைவழிநின்றகலப்பையறியில்
மலைவறிவாகும்வழியிதுவாமே. (௩)

புடையொன்றிநின்றிடும்பூதப்பிரானை
மடையொன்றிநின்றிடவாய்த்தவழியிற்
சடையொன்றிநின்றவச்சங்கரநாதன்
விடையொன்றிலேறியேவீற்றிருந்தானே. (௪)

இருக்கின்றகாலங்களேதுமறியார்
பெருக்கின்றகாலப்பெருமையைநோக்கி
பொருக்கின்றவாயுவெளிப்பெறநிற்கத்
தருக்கொன்றிநின்றிடுஞ்சாதகனுமே. (௫)

சாதகமானவத்தன்மையைநோக்கியே
மாதவமானவழிபாடுசெய்திடும்
போதகமாகப்புகலுறப்பாச்சிறல்
வேதகமாகவிளைந்துகிடக்குமே. (௬)

கிடந்ததுதானேகிளர்பயன்மூன்று
நடந்ததுதானேயுண்ணாடியைநோக்கிப்
படர்ந்ததுதானேபங்கயமாகத்
தொடர்ந்ததுதானேயச்சோதியுணின்றே. (௭)

தானேயெழுந்தவத்தத்துவநாயகி
பூனேவழிசெய்தெம்முள்ளேயிருந்திடும்
வானேருலகின்றவம்மைமதித்திடத்
தேனேபருகிச்சிவாலயமாகுமே. (அ)

திகழும்படியேசெறிதருவாயு
வழிரம்படியையறிகிலராரு
மழியும்படியையறிந்தபினந்தி
திகழ்கின்றவாயுவைச்சேர்தலுமாமே. (௯)

சோதனைதன்னிற்றுரிசறக்காணலா
நாதனுநாயகிதன்னிற்பிரியுநாள்
சாதகமாகுங்குருவழிப்பட்டு
மாதனமாகமதித்துக்கொள்ளீரோ. (௰)

ஈராறுகாற்கொண்டெழுந்தபுரவியைப்
பேராமற்கட்டிப்பெரிதுணவல்லிரே
லீராயிரமுநிலமாயிரத்தாண்டும்
போாதுகாயம்பிரானந்தியாணையே. (௰௧)

ஓசையிலேழுமொளியின்கணைந்து
தாசியின்மூன்றுநாவிலிரண்டுந்
தேசியுந்தேனுந்தன்னிற்பிரியுநாண்
மாசறுசோதிவகுத்துவைத்தானே. (௰௨) ஆ ௱௭௫.

---

சரீரசித்தியுபாயம்.

உடம்பாரழியிலுயிராரழிவர்
திடம்படமெய்ஞ்ஞானஞ்சேரவுமாட்டார்

ருடம்பைவளர்க்குமுபாயமறிந்தே
யுடம்பைவளர்த்தேனுயிர்வளர்த்தேனே. (௧)

உடம்பினைமுன்னமிழுக்கென்றிருந்தே
னுடம்பினுக்குள்ளேயுறுபொருள்கண்டே
னுடம்புளேயுத்தமன்கோயிற்கொண்டானென்
றுடம்பினையானிருந்தோம்புகின்றேனே. (௨)

சுழித்துக்கொடுக்கவேசுத்திக்கழியுங்
கழற்றிமலத்தைக்கமலத்தைப்பூரித்
தழற்றிக்கொடுக்குமுபாயமறிவார்க்
கழற்றித்தவிர்ந்துடலஞ்சனமாமே. (௩)

அஞ்சனம்போன்றுடலையறுமந்தியில்
வஞ்சகவாதமறுமத்தியானத்திற்
செஞ்சிறுகாலையிற்செய்திடிற்பித்தறு
நஞ்சறச்சொன்னோம்நரைதிரைநாசமே. (௪)

மூன்றுமடக்குடைப்பாம்பிரண்டெட்டுள
வேன்றவியந்திரம்பன்னிரண்டங்குல
நான்றவிழ்முட்டையிரண்டையுங்கட்டியிட்
டூன்றியிருக்கவுடலழியாதே. (௫)

ஆறுமறுபதுமாறும்வலம்வர
வாறுமறுபதுமாறுமிடம்வர
வாறுமறுபதுமாறுமெதிரிட
வாறுமறுபதுமாறும்புகுவரே. (௬)

சத்தியார்கோயிலிடம்வலஞ்சாதித்தால்
முத்தியானத்திலேவாக்கியங்கேட்கலாந்

சித்தித்தகூத்துஞ்சிவனும்வெளிப்படுஞ்
சத்தியஞ்சொன்னேனுஞ்சதாநந்தியாணையே. (எ)

திறத்திறம்விந்துதிகழுமகார
முறப்பறவேநினைந்தோதுஞ்சகார
மறிப்பதுமந்திரமன்னியநாத
மறப்பறயோகிக்கறநெறியாமே. (அ)

உந்திச்சுழியினுடனேர்பிராணனைச்
சிந்தித்தெழுப்பிச்சிவமந்திரத்தினன்
முந்திமுகட்டினிறுத்தியபானனைச்
சிந்தித்தெழுப்பச்சிவனவனாமே. (௯)

மாறுமலக்குதந்தன்மேலிருவிரற்
கூறுவிலிங்கத்தின்கீழேகுறிக்கொண்மி
னூறுவுடற்பிணையல்லனுமங்குளன்
கூறுவுபதேசங்கொண்டதுகாணுமே. (௰)

நீலநிறனுடைநேரிழையாளொடுஞ்
சாலவும்புல்லிச்சதமென்றிருப்பார்க்கு
ஞாலமறியநரைதிரைமாறிடும்
பாலனுமாவர்பராநந்தியாணையே. (௰௧)

அண்டஞ்சுருங்கிலதற்கோரழிவில்லை
பிண்டஞ்சுருங்கிற்பிராணனிலைபெறு
முண்டிசுருங்கினுபாயம்பலவுள
கண்டங்கறுத்தகபாலியுமாமே. (௰௨)

பிண்டத்துளுற்றபிழக்கடைவாசலை
யண்டத்துளுற்றுவடுத்தடுத்தேகிடில்

வண்டுச்சிக்குமலர்க்குழன்மாதரார்
கண்டிச்சிக்குநற்காயமுமாமே. (௰௩)

சுழலும்பெருங்கூற்றுத்தொல்லைமுன்சீறி
யழலுமிரதத்துளங்கியுளீசன்
கழல்கொடிருவடிக்கான்குறிலாங்கே,
நிழலுளுந்தெற்றுளுநித்தலுமாமே. (௰௪)

நான்கண்டவன்னியுநாலுகலையேழுந்
தான்கண்டவாயுவுஞ்சரீர்முழுதொடு
மூன்கண்டுகொண்டவுணர்வுமருந்தாக
மான்கன்றுநின்றுவளர்கின்றவாறே. (௰௫)

ஆருஞ்சனவேதசத்தியையன்புற
நீகொள்ளினெல்லின்வளர்கின்றநேர்மையைப்
பாகுபடுத்திப்பல்கோடிகளத்தினு
ளாழ்கொண்டமந்திரந்தன்னுலொடுங்கே,() ஆ௱௬௪

## காலசக்கரம்.

மதிவட்டமாகவரையஞ்சுநாடி
யிதுவிட்டிங்கிராறமர்ந்தவதனுற்
பதிவட்டத்துண்ணின்றுபாலிக்குமாறு;
மதுவிட்டுப்போமாறுமாயலுற்றேனே. (௧)

உற்றறிவைந்துமுணர்ந்தறிவாரேழுங்
கற்றறிவெட்டுங்கலந்தறிவான்பதும்
பற்றியபத்துப்பலவகைநாழிகை
யற்றதறியாதழிகின்றவாறே. (௨)

அழிகின்றவாண்டவையைஞ்சுமூன்று
மொழிகின்றமுப்பதுமூன்றெண்பதாகுங்
கழிகின்றகாலறுபத்திரண்டென்ப
தெழுகின்றவீரைம்பதெண்ணற்றிருந்தே. (௩)

திருந்துதினமத்தினத்தினத்தோடுநின்
றிருந்தறிநாளொன்றிரண்டெட்டுமூன்று
பொருந்தியநாளொடுபுக்கறிந்தோங்கி
வருந்துதலின்றிமனைபுகலாமே, (௪)

மனைபுகுவீரும்மனத்திடைநாடி
லெனவிருபத்தஞ்சுமீராறதனாற்
றனையறிந்தோரட்டுத்தற்குறியாறு
வினையறியாதுவிளங்கியநாலே. (௫)

நாலுங்கடந்ததுநால்வருநாலஞ்சு
பாலங்கடந்ததுபத்திப்பதினஞ்சு
கோலங்கடந்தகுணத்தாண்டுமூவிரண்
டாலங்கடந்ததொன்றாரறிவாரோ. (௬)

ஆறுமிருபதுமையஞ்சுமூன்றுக்குந்
தேறுமிரண்டுமிருபத்தொடாறிவை
கூறுமதியொன்றினுக்கிருபத்தேழு
வேறுபதியங்களுள்விதித்தானே. (௭)

விதித்தவிருபத்தெட்டொடுமூன்றறையாகத்
தொகுத்தறிமுப்பத்துமூன்றுதொகுமின்
பகுத்தறிபத்தெட்டுப்பாராதிகளு
ளுதித்தறிமூன்றிரண்டொன்றின்முறையே. (௮)

முறைமுறையாய்ந்துமுயன்றிலவாகி
பிறையிறையார்க்குமிருக்கவரிது
மறையதுகாரணமற்றொன்றுமில்லை
பறையறையாதுபணிந்துமுடியே. (௯)

முடிந்ததறியார் முயல்கின்றமூர்க்க,
ரிடிஞ்சிலிருக்கவிளக்கெரிகொண்டு
கடிந்தனல்மூளக்கதுவவல்லார்க்கு
நடந்திடும்பாரினினண்ணலுமாமே. (௰)

நண்ணுஞ்சிறுவிரனாணமூன்றுக்கும்
பின்னியமார்பிடைப்பேராமலொத்திடுஞ்
சென்னியின்மூன்றுக்குஞ்சேரவேநின்றிடு,
முன்னியவைந்திடுமோவியந்தானே. (௰௧)

ஓவியமானவுணர்வையறிமின்கள்
பாவிகளித்தின்பயனறிவாரில்லை
தீவினையாமுடன்மண்டலமூன்றுக்கும்
பூவிலிருந்திடும்புண்ணியத்தண்டே. (௰௨)

தண்டுடனோடித்தலைப்பெய்தயோகிக்கு
மண்டலமூன்றுமகிழ்ந்துடனொத்திடுங்
கண்டவர்கண்டனர்காணார்வினைப்பயன்
பிண்டம்பிரியப்பிணங்குகின்றாரே. (௰௩)

பிணங்கியழிந்திடும்பேறதுகேணீ
யணங்குடனாதித்தனாறுவிரியின்
வணங்குடனேவந்தவாழ்வுகலந்து
இணங்களுக்காகச்சுழல்கின்றவாறே. (௰௪)

சுழல்கின்றவாநின்றுணைமலர்காணான்
தழலிடைப்புக்கிடுந்தன்னுளிலாமந்,
கழல்கண்டுபோம்வழிகாணவல்லார்க்குக்
குழல்வழிநின்றிடுங்கூத்தனுமாமே. (௰௫)

கூத்தன்குறியிற்குணம்பலகண்டவர்
சாத்திரந்தன்னைத்தலைப்பெய்துநிற்பர்கள்
பார்த்திருந்துள்ளேயனுபோகநோக்கிடிற்
சாத்தனுமாகியலர்ந்திருமொன்றே. (௰௬)

ஒன்றில்வளர்ச்சியுலப்பிலகேளினி
நன்றென்றுமூன்றுக்குநாளதுசென்றிடுஞ்
சென்றிடுமுப்பதுஞ்சேரவிருந்திடிற்
குன்றிடைப்பொன்றிகழ்கூத்தனுமாமே. (௰௭)

கூத்தவனொன்றிடுங்கூர்மையறிந்தங்
கேத்துவர்பத்தினிலெண்டிசைதோன்றிடப்
பார்த்துமகிழ்ந்துபதுமனைநோக்கிடிற்
சாத்திடுநூறுதலைப்பெய்தலாமே. (௰௮)

சாத்திடுநூறுதலைப்பெய்துநிற்பவர்
காத்துடலாயிரங்கட்டுறக்காண்பர்கள்
சேர்த்துடலாயிரஞ்சேரவிருந்தவர்
மூத்துடன்கூடியுகமதுவாமே. (௰௯)

யுகங்கோடிகண்டுமாசிவறநின்று
வகங்கோடிகண்டுளயலறக்காண்பர்கள்
சிவங்கோடிவிட்டுச்செறியவிருந்தங்
குகங்கோடிகண்டங்குயருறவாமே. (௨௰)

உயருறுவாருலகத்தோடுங்கூடிப்
பயனுறுவார்பலர்தாமறியாமற்
செயலுறுவார்சிலர்சிந்தையிலாமற்
கயலுறுகண்ணியைக்காணகிலாரே. (௨௧)

காணகிலாதார்கழிந்தோடிப்போவர்க
ணாணகிலாதார்நயம்பேசிவிடுவர்கள்
காணகிலாதார்கழிந்தபொருளெல்லாங்
காணகிலாமற்கழிகின்றவாறே. (௨௨)

கழிகின்றவப்பொருள்காணகிலாதார்
கழிகின்றவப்பொருள்காணலுமாகுங்
கழிகின்றவுள்ளேகருத்துறநோக்கிற்
கழியாதவப்பொருள்காணலுமாமே. (௨௩)

கண்ணன்பிறப்பிலிகாணந்தியாயுள்ளே
யெண்ணுந்திசையுடனேகாந்தனாயிடுந்
திண்ணென்றிருக்குஞ்சிவகதியாநிற்கு
நண்ணும்பதமிதுநாடவல்லார்கட்கே. (௨௪)

நாடவல்லார்க்குநமனில்லைகேடில்லை
நாடவல்லார்கணரபதியாய்நிற்பர்
தேடவல்லார்கடெரிந்தபொருளிது
கூடவல்லார்கட்குக்கூறலுமாமே. (௨௫)

கூறும்பொருளிதகாரவுகாரங்க
ளேறும்பொருளிதுசிந்தையுணின்றிடக்
கூறும்காரக்குழல்வழியோடிட்
மாறுமமர்ந்திடுமண்ணலுமாமே. (௨௬)

அண்ணலிருப்பிடமாருமறிகில
ரண்ணலிருப்பிடமாய்ந்துகொள்வார்களுக்
கண்ணலழிவின்றியுள்ளேயமர்ந்திடு
மண்ணலைக்காணிலவனிவனாகுமே (௨௭)

அவனிவனாகும்பரிசறிவாரில்லை
யவனிவனாகும்பரிசதுகேணீ
யவனிவனோசையொளியினுளொன்றிடு
மவனிவள்வட்டமதாகிநின்றானே. (௨அ)

வட்டங்களேழுமலர்ந்திடுமும்மூளே
சிட்டனிருப்பிடஞ்சேரவறிகிலீ
ரொட்டியிருந்துள்ளுபாயமுணர்ந்திடக்
கட்டியிருப்பிடங்காணலுமாகுமே. (௨௯)

காணலுமாகும்பிரமனரியென்று
காணலுமாகுங்கறைக்கண்டனீசனைக்
காணலுமாகுஞ்சதாசிவசத்தியுங்
காணலுமாகுங்கலந்துடன்வைத்ததே. () ஆ. ௨௱௨௧.

---

## ஆயுள்பரிட்சை.

வைத்தகைசென்னியினேரிதாய்த்தோன்றிடி
லுத்தமமிக்கிடிலோரறுதிங்களா
மத்தமிகுத்திட்டிரட்டியதாயிடி
னித்தலுயிர்க்கொருதிங்களிலோசையே. (௧)

ஓசையுமீசனுமொக்குமுணர்வின்கண்
ணோசையிறந்தவரீசனையுள்குவ

ோசையிறந்தவர்நெஞ்சினுளீசனு
மோசையுணர்ந்தவுணர்விதுவாமே, (ஃ)

ஆமேயழிகின்றவாயுவைநோக்கிடி
லாமேலுறைகின்றதன்மையளித்திடும்
பூமேலுறைகின்றபோதகம்வந்திடுத்
நாமேயுலகிற்றலைவனுமாமே. (௯)

தலைவனிடம்வலஞ்சாதிப்பாரில்லை
தலைவனிடம்வலமாயிடிற்லறையற்
றலைவனிடம்வலந்தன்வழியஞ்சிற்
றலைவனிடம்வலந்தன்வழிநூற்ற, (௰)

ஏறியவாறினிலெண்பதுசென்றிடுந்
தேறியவேழிற்சிறக்கும்வகையெண்ணி
லாறொருபத்தாயமர்ந்தவிரண்டையுந்
தேறியேநின்றுதெளியிவ்வகையே, (௧௧)

இவ்வகையெட்டுமிடம்பெறவோடிடி
லவ்வகையொன்பதேயென்னவறியலாஞ்
செவ்வகையொன்பதுஞ்சேரவேநின்றிடின்
மூவ்வகையாமதுமுப்பத்துமூன்றே (௧௨)

மும்மூன்றுமொன்றுமுடிவுறநின்றிடி
லெண்மூன்றிறுவிடவகையாய்நிற்கு
மைம்மூன்றுமோடியகலவேநின்றிடிற்
பன்மூன்றொடீராறுபார்க்கலுமாமே. (௧௩)

பார்க்கலுமாகும்பகலிருப்பதுமாகி
லாக்கலுமாகுமவ்வாறிரண்டுள்ளிட்டும்

போக்கலுமாகும்புகலறவொன்றெனிற்
றேக்கலுமாகுந்திருந்தியபத்தே. (அ)

ஏயிருநாளுமியல்புறவோடிடிற்
பாயிருநாளும்பகையறநின்றிடுந்
தேய்வுறமூன்றுந்திகழவேவதின்றிடி
லாயுருவாமென்றளக்கலுமாமே. (கூ)

அளக்கும்வகைநாலுமவ்வழியோடிடில்
விளக்குமொருநாலுமெய்ப்படநிற்குந்
துளக்கும்வகையைந்துந்தாய்நெறியோடிற்
களக்கமறமூன்றிற்காணலுமாமே. (ய)

காணலுமாகுங்கருதியபத்தோடிற்
காணலுமாகுங்கலந்தவிரண்டையுங்
காணலுமாகுங்கலப்பறமூவைந்தேற்
காணலுமாகுங்கருத்துறவொன்றே. (யக)

கருதுமிருபதிற்காணவாறாகுங்
கருதியவையைந்திற்காண்பதுமூன்றாங்
கருதுமிருபதுடனாறுகாணிற்
கருதுமிரண்டெனக்காட்டலுமாமே. (யஉ)

காட்டலுமாகுங்கலந்திருபத்தேழிற்
காட்டலுமாகுங்கலந்தெழுமொன்றெனிற்
காட்டலுமாகுங்கலந்திருபத்தெட்டிற்
காட்டலுமாகுங்கலந்தவீரைந்தே. (யங)

ஈரைந்துமைந்துமிருமூன்றுமெட்டுக்கும்
பாரஞ்சிறின்றபகைபத்துநாளாகும்

வாரஞ்செய்கின்றவகையாறஞ்சாமாகி
லோரஞ்சொடொன்றொன்றெனவொன்றுநாளே. ()

ஒன்றியநாள்களொருமுப்பத்தொன்றாகிற்
கன்றியநாளுங்கருத்துறமூன்றாஞ்
சென்றுயிர்நாலெட்டுஞ்சேரவேநின்றிடின்
மன்றியல்பாகுமனையிலிரண்டே (௰௫)

மனையினிலொன்றாகுமாதமுமூன்றுஞ்
சுனையினிலொன்றுந்தொனித்தனநந்தி
வினையறவோங்கிவெளிசெய்துநின்றாற்
றனையுறநின்றதலைவனுமாமே. (௰௬)

ஆருமறியாரளக்கின்றவன்னியை
யாருமறியாரளக்கின்றவாயுவை
யாருமறியாரழிகின்றவப்பொரு
ளாருமறியாவறிவறிந்தேனே. (௰௭)

அறிவதுவாயுவொடைந்தறிவாய
தறிவாயதுதானுலகுயிரத்தின்
பிறிவுசெய்யர்வகைபேணியுண்ணாடிற்
செறிவதுநின்றுதிகழுமதுவே, (௰௮)

அதுவருளும்மருளானதுலகம்
பொதுவருளும்புகழாளர்க்குநாளு
மதுவருளும்மலர்மங்கையர்செல்வி
யிதுவருள்செய்யுமிறையவனாமே. (௰௯)

பிறப்பதுசூழ்ந்தபெருந்தகைநந்தி
குறிப்பதுகூடியகோலக்குரம்பை,

பழப்பதியாவதுபற்றறும்பாச
மழப்படிசெய்வார்க்ககலும்மதியே,(உ௰) ஆ உ௱சக.

வாரசரம்.

வெள்ளிவெண்டிங்கள்விளங்கும்புதனிட
மொள்ளியமந்தனிரவிசெவ்வாய்வலம்
வள்ளியபொன்னேவளரும்பிறையிடந்
தெள்ளியதேய்பிறைதான்வலமாமே. (க)

வெள்ளிவெண்டிங்கள்விளங்கும்புதன் மூன்றுந்
தள்ளியிடத்தேதயங்குமேயாமாகி
ளொள்ளியகாயத்துக்கூனமிலையென்று
வள்ளனமக்குமகிழ்ந்துரைத்தானே. (உ)

செவ்வாய்வியாழஞ்சனிஞாயிறேயென்னு
மிவ்வாரறிகின்றயோகியிறைவனே
யொவ்வாதவாயுவலத்துப்புரியவிட்
டவ்வாறறிவார்க்கவ்வானந்தமாமே. (௩)

மாறிவருமிருபான்மதிவெய்யவ
னேறியிழியுமிடைபிங்கலையிடை
யூறுமுயிர்நடுவேயுயிருக்கிரந்
தேறியறிமின்றெரிந்துதெளிந்தே. (௪)

உதித்துவலத்திடம்போகின்றபோது
வதிர்த்தஞ்சியோடுதலாமகன்றுரு
முயிர்த்ததுவேமிகவோடுமாகி
லுதித்தவிராசியுணர்ந்துகொளுற்றே, (௫)

நடுவுநில்லாமலிடம்வலமோடி
படுகின்றவாயுவையந்தணன்கூடி
யிடுகின்றவாறுசென்றின்பணிசேர
முடிகின்றதீபத்தின்முன்னுண்டென்றானே (௬)

ஆயும்பொருளுமணிமலர்மேலது
வாயுவிதமும்பதினாறுளவலி
போயம்மனத்தைப்பொருகின்றவாதார
மாயுவுநாளுமுகூர்த்தமுமாமே. (எ) ஆ உ௱சஅ

---

## வாரசூலம்.

வாரத்திற்சூலம்வரும்வழிகூறுங்கா
லேரொத்ததிங்கள்சனிகிழக்கேயாகும்
பாரொத்தசேய்புதனுத்தரம்பானுநா
ளேரொத்தவெள்ளிகுடக்காகநிற்குமே. (௧)

தெக்கணமாகும்வியாழத்துச்சேர்திசை
யக்கணிசூலமுமாமிடப்பின்னாகிற்
றுக்கமுமில்லைவலமுன்னேதோன்றிடின்
மிக்கதுமேல்வினைமேன்மேல்விளையுமே() ஆ உ௱ருய

---

## கேசரியோகம்.

கட்டக்கழன்றுகீழ்தான்றுவிழாம
லட்டிற்கட்டியபைபயனைகோலி
விட்டத்தைப்பூட்டிமேற்பையைத்தாட்கோத்துத்
தட்டமிருக்கநமனில்லைதானே, (௧)

வன்னாடுனொலிக்குஞ்சதுரப்பலகைமேற்
கன்னாறுமோழைபடாமற்கரைகட்டி
விண்ணாறுபாச்சிக்குளத்தைநிரப்பினு
ல்ண்ணாந்துபார்க்கவமுக்கற்றவாறே, (௨)

இடக்கைவலக்கையிரண்டையுமாற்றித்
துதிக்கையாலுண்பார்க்குச்சோரவும்வேண்டா
முறக்கத்தைநீக்கியுணரவல்லார்கட்
கிறக்கவுவேண்டாமிருக்கலுமாமே, (௩)
ஆய்ந்துரைசெய்யிலமுதநின்றூறிடும்
வாய்ந்துரைசெய்யும்வருகின்றகாலத்து
நீந்துரைசெய்யுநிலாமண்டலமதாய்ப்
பாய்ந்துரைசெய்தது பாலிக்குமாறே. (௪)

நாவினுனியினடுவேசிவிறிடிற்
சிவனுமங்கேசிவனுமுறைவிட
மூவருமுப்பத்துமூவருந்தோன்றுவர்
சாவதுமில்லைசதகோடியூனே. (௫)
ஊனூறல்பாயுமுயர்வரையுச்சிமேல்
வானூறல்பாயும்வகையறிவாரில்லை
வானூறல்பாயும்வகையறிவாளர்க்குத்
தேனூறலுண்டுதெளிதலுமாமே, (௬)

மேலையண்ணவில்விரைந்திருகாலிடிற்
காலனுமில்லைகதவுந்திறந்திடு
ஞாலமறியநரைதிரைமாறிடும்
பாலனுமாவான்பாநந்தியாணையே (௭)

நந்திமுதலாகநாமேலேயேறிட்டுச்
சந்தித்திருக்கிற்றாணிமுழுதாளும்
பந்தித்திருக்கும்பகலோன்வெளியாகச்
சிந்தித்திருப்பவர்தீவினையாளரோ, (அ)

தீவினையாடத்திகைத்தங்கிருந்தவர்
நாவினைநாடினமனுக்கிடமில்லை
பாவினைநாடிப்பயனறக்கண்டவர்
தேவினையாடியதீங்கரும்பாமே (௯)

தீங்கரும்பாகவேசெய்தொழிலுள்ளவ
ராங்கரும்பாகவடையதாவேறிட்டுக்
கோங்கரும்பாகியகோணைநிமிர்த்திட
வூன்கரும்பாகியேயூனீர்வருமே. (௰)

ஊனீர்வழிபாகவுண்ணாவையேறிட்டுத்
தேனீர்பருகச்சிவாயநமவென்று
கானீர்வரும்வழிகங்கைதருவிக்கும்
வானீர்வரும்வழிவாய்ந்தறிவீரே (௰௧)

வாய்ந்தறிந்துள்ளேவழிபாடுசெய்தவர்
காய்ந்தறிவாகக்கருணைபொழிந்திடும்
பாய்ந்தறிந்துள்ளேபடிகதவொன்றிட்டுக்
கூய்ந்தறிந்துள்ளுறைகோயிலுமாமே, (௰௨)

கோயிலினுள்ளேகுடிசெய்துவாழ்பவர்
தாயினுநல்லார்தரணிமுழுதுக்குங்
காயினுநல்லவர்காய்ந்தவர்தம்முளுந்
தீயினுந்தீயதீவினையாளர்க்கே, (௰௩)

திவினையாளர்தஞ்சென்னியினுள்ளவன்
பூவினையாளர்தம்பொற்பதியானவன்
பாவினையாளர்தம்பாவகத்துள்ளவன்
மாவினையாளர்தம்மதியினுள்ளானே.                    (௰௪)

மதியின்னை மூங்கதிர்போலப்பதினுறய்ப்
பதிமன்னநூறுநூற்றிருபத்துநாலாய்க்
கதிமனையுள்ளேகணைகள்பரப்பி
யெதிர்மலையாமலிருந்தனன்முனே.                    (௰௫)

இருந்தனள்சத்தியுமக்கலைசூழ
விருந்தனள்கன்னியுமந்நடுவாக
விருந்தனள்மானேமுகநிலவார
விருந்தனடானுமமுதம்பொழிந்தே.                    (௰௬)

பொழிந்தவிருவெள்ளிபொன்மண்ணடையில்
வழிந்துள்ளிருந்ததுவான்முதலங்குக்
கழிந்ததுபோகாமற்காக்கவல்லார்க்குக்
கொழுந்ததுவாகுங்குணமதுதானே.                    (௰௭)

குணமதுவாகியகோமளவல்லி
மணமதுவாகமகிழ்ந்தங்கிருக்கிற்
றனமதுவாகியதத்துவஞான
மினமதுவாகவிருந்தனன்முனே.                    (௰௮)

இருந்தபிராணனுமுள்ளேயெழுமாம்
பரிந்தவித்தண்டிடனண்டம்பரிய
விரிந்தவப்பூவுடன்மேலெழவைக்கின்
மலர்ந்ததுமண்டலம்வாழுமாமே.                    (௰௯)

மண்டலத்துள்ளேமனவொட்டியாணத்தைக்
கண்டகத்தங்கேகருதியேழ்க்கட்டிற்
பண்டகத்துள்ளேபகலேயொளியாகக்
குண்டலக்காதனுங்கூத்தொழிந்தானே. (௨௰)

ஒழிகின்றவாயுவுமுள்ளேயமருங்
கழிகின்றவாயுவுங்காக்கலுமாகும்
வழிகின்றகாலத்துவட்டக்கழலைப்
பழிகின்றகாலத்துப்பையகற்றீரே. (௨௧)

பையினினுள்ளேபடிக்கதவொன்றிடின்
மெய்யினினுள்ளேவிளங்குமொளியதாங்
கையினுள்வாயுகதித்தங்கெழுந்திடின்
மையணிகோயில்மணிவிளக்காமே. (௨௨)

விளங்கிடும்வாயுவைமேலெழவுன்னி
நலங்கிடுங்கண்டத்துநாபியினுள்ளே
வணங்கிடுமண்டலம்வாய்த்திடக்கும்பிச்
சுணங்கிடநின்றவைசொல்லலுமாமே. (௨௩)

சொல்லலுமாயிடுமாகத்துவாயுவுஞ்
சொல்லலுமாகுமண்ணீர்க்கடினமுஞ்
சொல்லலுமாகுமிவையஞ்சுங்கூடிடிற்
சொல்லலுமாந்தூரதெரிசனந்தானே. (௨௪)

தூரதெரிசனஞ்சொல்லுவன்காணலாங்
காராருங்கண்ணிகடைஞானமுட்பெய்தி
யோராருந்திபத்தெழிற்சிந்தைவைத்திடிற்
பாராருலகம்பகன்முன்னதாமே. (௨௫)

முன்னெழுநாபிக்குமுன்னால்விரற்கீழே
பன்னெழுவேதம்பகலொளியுண்டென்னுந்
தன்னெழுநாதத்துநற்றீபம்வைத்திடத்
தன்னெழுகோயிற்றலைவனுமாமே. (௨௬) ஆ. ௨௭௬.

---

பரியங்கயோகம்.

பூசுவனவெல்லாம்பூசிப்புலர்த்திய
வாசநறுங்குழன்மாலையுஞ்சாத்திய
காயக்குழலிகலவியொடுங்கலந்
தூசித்துளையுறத்தூங்காதுபோகமே. (௧)

போகத்தையுன்னவேபோகாதுவாயுவு
மோகத்தைவெள்ளியுமீளும்வியாழத்தில்
கூதொத்தமென்முலையாளுநற்கூதனுந்
தாதிற்குழைந்துதலைகண்டவாறே. (௨)

கண்டனுங்கண்டியுங்காதல்செய்யோகத்து
மண்டலங்கொண்டிருபாலும்வெளிநிற்கும்
வண்டியைமேற்கொண்டுவானீருருட்டிடத்
தண்டொருகாலுந்தளராதுவங்கமே. (௩)

அங்கப்புணர்ச்சியுமாகின்றதத்துவ
மங்கத்தில்விந்துவருகின்றபோகத்துப்
பங்கப்படாமற்பரிகரித்துத்தம்மைத்
தங்கிக்கொடுக்கத்தலைவனுமாமே. (௪)

தலைவனுமாயிடுந்தன்வழிஞானந்
தலைவனுமாயிடுந்தன்வழிபோகந்

தலைவனுமாயிடுந்தன்வழியுள்ளே
தலைவனுமாயிடுந்தன்வழியஞ்சே. (ரு)

அஞ்சுகடிகையிலாறுங்கடிகைமேற்
றஞ்சுவதொன்றத்துணைவிதுணைவன்பா
னெஞ்சுநிறைந்தநுவாய்கொளாதென்றது
பஞ்சகடிகைபரியங்கியோகமே. (சு)

பரியங்கியோகத்துப்பஞ்சகடிகை
யரியவிவ்வியோகமடைந்தவர்க்கல்லது
சரிவளைமுன்கைச்சிசந்தனக்கொங்கை
யுருகத்தழுவவொருவர்க்கொண்ணாதே, (எ)

ஒண்ணாதயோகத்தையுற்றவராமொன்னில்
விண்ணார்ந்தகங்கைவிரிசடைவைத்தவன்
பண்ணாமுதினைப்பஞ்சகடிகையி
லெண்ணுமெனவெண்ணியிருந்தானிருந்ததே. (அ)

எய்ந்தபிராயமிருபதுமுப்பதும்
வாய்ந்தகுழலிக்குமன்னர்க்குமானந்த
மாய்ந்தகுழலியோடடந்துமலர்ந்திடச்
சோர்ந்தனசித்தமுஞ்சோர்வில்லைவெள்ளிக்கே. (கூ)

வெள்ளியுருக்கிப்பொன்வழியோடாமுன்
கள்ளத்தட்டானார்கரியிட்டுமூடினார்
கொள்ளிபறியகுழல்வழியேசென்று
வள்ளியனுவிலடக்கிவைத்தானே. (ய)

வைத்தவிருவருந்தம்மின்மகிழ்ந்துடன்
சித்தங்கலங்காதுசெய்கின்றவானந்தம்

பத்துவகைக்கும்பதினெண்கணத்துக்கும்
வித்தகனாய்நிற்கும்வெங்கதிரோனே. (௰௧)

வெங்கதிருக்குஞ்சனிக்குமிடைநின்ற
நங்கையைப்புல்கியநம்பிக்கோரானந்தந்
தங்களிற்பொன்னிடைவெள்ளிதாழாமுனந்
திங்களிற்செவ்வாய்ப்புதைத்திருந்தானே. (௰௨)

திருத்தப்புதனைத்திருத்தல்செய்வார்க்குக்
கருத்தழகாமேலகலந்தங்கிருக்கில்
வருத்தமுமில்லையாமங்கைபங்கற்குந்
துருத்தியுள்வெள்ளியுஞ்சோராதெழுமே. (௰௩)

எழுகின்றதீயின்முன்னேகொண்டுசென்றிட்டால்
மெழுகுருகும்பரிசெய்திடுமெய்யை
யுழுகின்றதில்லையொளியையறிந்தபின்
விழுகின்றதில்லைவெளியறிவார்க்கே. (௰௪)

வெளியையறிந்துவெளியினடுவே
யொளியையறியிலுளிமுறியாமே
தெளியவறிந்துசெழுநந்தியாலே
வெளியையறிந்தனன்மேலறியேனே. (௰௫)

மேலாந்தலத்தில்விரிந்தவராமொனின்
மாலாந்திசைமுகன்மாநந்தியாயவர்
நாலாநிலத்தினைவானவப்பொருள்
மேலாயுரைத்தனர்மின்னிடையாளுக்கே. (௰௬)

மின்னிடையாளுமின்னாளனுங்கூட்டத்துப்
பொன்னிடைவட்டத்தினுள்ளேபுகப்பெய்து

தன்ஞெடுதன்னைத்தலப்பெய்தவல்லிரோன்
மண்ணிடைப்பல்லூழிவாழலுமாங்கே. (௰எ)

வாங்கலிறுதலைவாங்கலில்வாங்கிய
வீங்கவலிக்கும்விரகறிவாரில்லை
வீங்கவலிக்கும்விரகறிவாளரு
மோங்கியதன்னையுதம்பண்ணிஞரே. (௰அ)

உதமறிந்தங்கேயொருசுழிப்பட்டாற்
கதமறிந்தங்கேகபாலங்கறுக்கு
மிதமறிந்தென்றுமிருப்பாளொருத்தி
பதமறிந்தும்முளேபார்கடிந்தாளே. (௰௬)
பாரில்லைநீரில்லைபங்கயமொன்றுண்டு
தாரில்லைவேரில்லைதாமரைபூத்தது
ஊரில்லைகாணுமொளியதுவொன்றுண்டு
கீழில்லைமேலில்லைகேள்வியிற்பூவே. (உ௰) ஆ உ௬௬.

அமுரிதாரணை.
உடலிற்கிடந்தவுறுதிக்குடிநீர்க்
கடலிற்சிறுகிணற்றேற்றமிட்டாலொக்கு
முடலிலொருவழியொன்றுக்கிறைக்கி
னடலைப்படாதுயிர்நாடலுமாமே, (௧)

தெளிதருமிந்தச்சிவநீர்பருகி
லொளிதருமோராண்டிலூனமொன்றில்லை
வளியுறமெட்டின்மனமுமொடுங்குங்
களிதருங்காயங்கனகமதாமே. (உ)

நூறுமிளகு நுகருஞ்சிவத்தினீர்
மாறுமிதற்குமருந்தில்லைமாந்தர்க
டேறிலிதனைத்தெளியுச்சிகப்பிடின்
மாறுமிதற்குமறுமயிராமே. (௩)

கரையருகேநின்றகான லுவரி
வரைவரையென்பர்மதியிலாமாந்தர்
நுரைதிரைநீக்கி நுகரவல்லார்க்கு
நரைதிரைமாறுநமனுமங்கில்லையே. (௪)

அளகநன் னுதலாயோரதிசயங்
களவுகாயங்கலந்தவிந்நீரிலே
மிளகுநெல்லியுமஞ்சளும்வேம்பிடி
லிளகுமேனியிருளுங்கபாலமே. (௫)

வீரமருந்தென்றுவிண்ணோர்மருந்தென்று
நாரிமருந்தென்றுநந்தியருள்செய்தா
ராதிமருந்தென்றறிவாரகலிடஞ்
சோதிமருந்திதுசொல்லவொண்ணாதே. (௬) ௮௱௩௨

சந்திரயோகம்.

எய்துமதிக்கலைசூக்கத்திலேறியே
யெய்துவதாலிருவகைப்பக்கத்து
ளெய்துங்கலைபோலவேறியிறங்குமாற்
றுய்யதுசூக்கத்துக்காலத்தகாயமே. (௧)

ஆகின்றசந்திரன்சூரியனங்கியு
ளாகின்றவீரெட்டொடாறிரண்டெட்டுக

ளேகின்றவக்கலையெல்லாமிடைவழி
யாகின்றயோகியறிந்தவறிவே. (௨)

ஆறுறதாங்கலையாதித்தசந்திர
ஆறுறநலங்கினர்ஞாலங்கவர்கொளப்
பெருங்கலைமுற்றும்பெருங்காலீரொட்டு
மாறுங்கதிர்கொள்ளுமற்றங்கிகூடவே. (௩)

பத்துமிரண்டும்பகலோனுயர்கலை
பத்தினொடாறுமுயர்கலையான்மதி
யொத்தநல்லங்கியதெட்டெட்டுயர்கலை
பத்திறனின்றமையாய்ந்தகொள்வீரே. (௪)

எட்டெட்டனலின்கலையாகுமீராறுட்
கட்டப்படுங்கதிரோனுக்குஞ்சூழ்கலை
கட்டப்படுமீரெட்டாகுமதிக்கலை
யொட்டப்படாவிவையொன்றொடொன்றுவே. (௫)

கட்டெட்டுமீராறுமீரொட்டுந்தீக்கதிர்
சுட்டிட்டசோமனிற்றோன்றுங்கலையெனச்
சட்டப்படுந்தாரகைகதிர்நாலுள
கட்டிட்டதொண்ணூற்றொடாறுங்கலாதியே. (௬)

எல்லாக்கலையுமிடையிங்கலைநடுச்
சொல்லாநடுநாடியூடேதொடர்மூலஞ்
செல்லாவெழுப்பிச்சிரத்துடன்சேர்தலா
னல்லோர்திருவடிநண்ணிநிற்போரே. (௭)

அங்கியிற்சின்னக்கதிரிரண்டாட்டத்துத்
தங்கியதாரகையாகுஞ்சசிபானு

வங்கியத்தாரகையாவும்பரையொளி
தங்குநவசக்ரமாகுந்தரணிக்கே. (அ)

தரணிசலங்கனற்சாற்றத்தவான
மரணியயானுவருந்திங்களங்கி
முரணியதாரகைமுன்னியவொன்பான்
பிரணவமாகும்பெருநெறிதானே. (கூ)

தாரகையின்னுஞ்சசிதேயும்பக்கத்துத்
தாரகையின்னுச்சசிவளர்பக்கத்துத்
தாரகைபூவிற்ககலத்தியோனிகள்
தாரகைத்தாரகைதானுஞ்சொருபமே. (ய)

முற்பதினஞ்சின்முளைத்துப்பெருத்திடும்
பிற்பதினஞ்சிற்பெருத்துச்சிறுத்திடு
மப்பதினஞ்சுமறியவல்லார்கட்குச்
செப்பரியான்கழல்சேர்தலுமாமே. (யக)

அங்கியெழுப்பியருங்கதிரூடத்துத்
தங்குஞ்சசியாற்றுமமைந்தைந்தாகிப்
பொங்கியதாரகையாம்புலன்போக்கறத்
திங்கள்கதிரங்கிசேர்கின்றயோகமே. (யஉ)

ஒன்றியவீரெண்கலையுமுடனுற
நின்றதுகண்டுநினைக்கிலர்நீதர்கள்
கன்றியகாலன்கருத்துழிவைத்தபின்
சென்றதில்வீழ்வர்திகைப்பொழியாரே. (யங)

அங்கிமதிகூடவாகுங்கதிரொளி
யங்கிகதிர்கூடவாகுமதியொளி

பங்கிசிவத்தினிற்கூடவத்தாரகைத்
தங்கிய றுவேசகலமுமாமே. (௰௪)

ஈராறுபெண்கலையெண்ணிரண்டாண்கலை
பேராமற்புக்குப்பிடித்துக்கொடுவந்து
நேராசத்தோன்றுநெருப்புறவேபெய்யி
லாராதவானந்தமானந்தமானதே. (௰௫)

காணும்பருதியில்காலையிட த்திட்டு
மாணுமதியதன்காலைவலத்திட்டுப்
பேணியிவ்வாறுபிழையாமற்செய்விரோ
லாணிகலங்காதவ்வாயிரத்தாண்டே. (௰௬)

பாலிக்குநெஞ்சம்பறையோசையொன்பதி
லாலிக்குமங்கையமரர்பராபரன்
மேலைக்குமுன்னேவிளக்கொளியாய்நிற்குங்
காலைக்குச்சங்குகதிரவன்றானே. (௰௭)

கதிரவன்சந்திரன்காலமளக்கும்
பொதிரவனுள்ளேபொழிமழைநிற்கு
மதிரவனண்டப்புறஞ்சென்றடர்ப்ப
வெதிரவனிசனிடமதுதானே. (௰௮)

உத்திக்கமலத்துதித்தெழுஞ்சோதியை
யத்திக்குமந்திரமாருமறிகில
ரத்திக்குமந்திரமாருமறிந்தபின்
றத்தைக்குமுன்னேமகன்பிறந்தானே. (௰௯)

ஊதியமேதுமறியாருரைப்பினு
மோதியுமேதுமறியாதவுமர்க

ளாதியுமந்தமும்மந்திக்கவல்லிரேல்
வேதியனங்கேவெளிப்படுந்தானே. (௨௰)

பாம்புமதியைத்தினனுறும்பாம்பினைத்
தீங்குகதிரையுஞ்சோதித்தனனுறும்
பாம்புமதியும்பகைதீர்த்துடன்கொளீஇ
நீங்கல்கொடானைநெடுந்தகையானே. (௨௧)

அயின்றதுவீழ்வளவுந்துயிலின்றிப்
பயின்றசசிவீழ்பொழுதிற்றுயின்று
நயந்தருபூரணையுள்ளநடத்தி
வியந்தருபூரணைமேவுஞ்சசியே. (௨௨)

சசியுதிக்குமளவுந்துயிலின்றிச்
சசியுதித்தபேதனதானருந்திச்
சசிசரிக்கின்றளவுந்துயிலாமற்
சசிசரிப்பின்கட்டன்கண்டுயில்கொண்டதே. (௨௩)

ஊழிதரியாதிருக்கின்றயோகிக
ளூழிகையாகநமனையளப்பர்க
ளூழிமுதலாயுயர்வாருலகினிற்
றூழவல்லாரிச்சசிவன்னராமே. (௨௪)

த[illegible]ரமதிபானுச்சிச்சரிபூமியேசென்று
ம[illegible]ரமதிகாலங்கண்மூன்றும்வழிகண்டு
வெண்மதிதோன்றியநாளில்விளைந்தபின்
றண்மதிவீழ்வளவிற்கணமின்றே. (௨௫)

வளர்கின்றவாதித்தன்றன்கலையாறுந்
தளர்கின்றசந்திரன்றன்கலையாறு

யலர்ந்தெழுபன்னிரண்டங்குலமோடி
யலர்ந்துவிழுந்தமையாரறிவாரே. (உ௬)

ஆமுயிர்த்தேய்மதிநாளேயெனல்விந்து
போம்வழியெங்கனும்போகாதுயோகிக்குங்
காமுறவின்மையிற்கட்டுண்ணுமூலத்தி
லோமதியத்துள்விட்டோரையுணர்வாலே. (உ௭)

வேறுறச்செங்கதிர்மெய்க்கலையாறெட்டுங்
கூறுறநான்குந்தொடர்ந்துறவேதிற்கு
மீறின்அனற்கலையீரெட்டொடேமதித்
தாறுங்கலையுளகலுவாவாமே. (உ௮)

உணர்விந்துச்சோணியுறவினன்வீசும்
புணர்விந்துவீசுங்கதிரிற்குறையி
லுணர்வுமுடம்புமுவையொக்கநிற்கி
லுணர்வுமுடம்புமொருக்கால்விடாவே. (உ௯)

விடாதமனபவனத்தொடுமேவி
நடாவுசிவசங்கநாதங்கொளுவிக்
கடாவிடர்வைம்புலன்கட்டுண்ணும்வீடு
படாதனவின்பம்பருகாரமுதமே. (௩0)

அமுதப்புலன்வருமாற்றங்கரைமேற்
குமிழிக்கத்தற்சுடரைத்தையுங்கூட்டிச்
சமையத்தண்டோட்டித்தரிக்கவல்லார்க்கு
நமனில்லைநற்கலைநாளில்லைதானே. (௩௧)

உன்னவிரமுதமுறமுறைலத்திறந்
தெண்ணிரிணையடித்தாமரைக்கேசெலத்

தெண்ணீர்ச்சமாதியமர்ந்துதீராநலக்
கண்ணாற்றொடேசென்றுகால்வழிமாறுமே. (௬௨)

மாறுமதியுமாதித்தனுமாறின்றித்
தாறுபடாமல்தண்டோட்டதலைப்படி
யூறுபடாதுடல்வேண்டுமுபாயமும்
பாறுபடாவின்பம்பார்மிசைப்பொங்குமே. (௬௩)

ஆ. அதிகாரம்-உகஇ-திருமந்திரம்-௬௩௫.

மூன்றாந்தந்திரம் - முற்றும்.
ஆ. சிறப்புப்பாயிரமுள்பட-அதிகாரம்
எகூ-இ-கூடிய-திருமந்திரம்-அஅ௬.



நாலாந்தந்திரம்.

அசபை.

போற்றுகின்றேன்புகழ்ந்தும்புகல்ஞானத்தைத்
தேற்றுகின்றேன்சிந்தைநாயகன்சேவடி
சாற்றுகின்றேனறைமயோசிவயோகத்தை
யேற்றுகின்றேனெம்பிரானோரெழுத்தே. (௧)

ஓரெழுத்தாலேயுலகெங்குந்தானாகி
யீரெழுத்தாலேயிசைந்தங்கிருவராய்
மூவெழுத்தாலேமுளைக்கின்றசோதியை
மாவெழுத்தாலேமயக்கமேயுற்றதே. (௨)

தேவருறைகின்றசிற்றம்பலமென்றுந்
தேவருறைகின்றசிதம்பரமென்றுந்
தேவருறைகின்றதிருவம்பலமென்றுந்
தேவருறைகின்றதென்பொதுவாமே. (௩)

ஆமேபொன்னம்பலமற்புதமானந்த
மாமேதிருக்கூத்தனவரததாண்டவ
மாமேபிரளயமாகுமத்தாண்டவ
மாமேசங்காரத்தருந்தாண்டவங்களே. (௪)

தாண்டவமானதனியெழுத்தோரெழுத்
தாண்டவமானதனுக்கிரகத்தொழிற்
றாண்டவங்கூத்துத்தனிநின்றதற்பரந்
தாண்டவங்கூத்துத்தமனியந்தானே. (௫)

தானேபரஞ்சுடர்தத்துவமாய்நிற்குந்
தானேயகாரவுகாரமதாய்நிற்குந்
தானேபரஞ்சுடர்தத்துவக்கூத்துக்குந்
தானேதனக்குத்தராதலந்தானே. (௬)

தராதலமூலக்குத்தற்பரமாபரன்
தராதலம்வெப்புநமவாசியவாந்
தராதலஞ்சொல்லிற்றானவாசியவாகுந்
தராதலம்யோகந்தயாவாசியாமே. (௭)

ஆமேசிவங்களகாரவுகாரங்க
ளாமேபரங்களறியாவிடமென்ப
வாமேதிருக்கூத்தடங்கியசிற்பர
மாமேசிவகதியானந்தமாமே. (அ)

ஆனந்தமூன்றுமறிவிரண்டொன்றுகு
மானந்தஞ்சிவாயவறிவார்பலரில்லை
யானந்தமோமடுமறியவல்லார்கட்கு
வானந்தக்கூத்தாயகப்படுந்தானே. (௯)

படுவதிரண்டும்பலகலைவல்லார்
படுவதோங்காரபஞ்சாக்கரங்கள்
படுவதுசங்காரத்தாண்டவப்பத்தி
படுவதுகோணம்பரந்திடும்வாறே. (௰)

வாறேசதாசிவமாறிலாவாகமம்
வாறேசிவகதிவண்டுறைபுலனையும்
வாறேதிருக்கூத்துவாகமவசனங்கள்
வாறேபொதுவாகுமன்றினமலமே. (௰௧)

அமலம்பதிபசுபாசங்களாகம
மமலந்திரோதாயியாகுமானந்தமா
மமலஞ்சொல்லாணவமாய்கைகாமிய
மமலந்திருக்கூத்தங்காடுமிடந்தானே. (௰௨)

தானேதனக்குத்தலைவனுமாய்நிற்குந்
தானேதனக்குத்தன்மலையாய்நிற்குந்
தானேதனக்குத்தன்மயமாய்நிற்குந்
தானேதனக்குத்தலைவனுமாமே. (௰௩)

தலைவனுமாய்நின்றதற்பரக்கூத்தனைத்
தலைவனுமாய்நின்றசற்பாத்திரத்தைத்
தலைவனுமாய்நின்றதாதவிழ்ஞானத்
தலைவனுமாய்நின்றதாளிணைதானே. (௰௪)

இணையார்திருவடியெட்டெழுத்தாகு
மிணையார்கழலிணையீரைஞ்சதாகு
மிணையார்கழலிணையைம்பத்தொன்றாகு
மிணையார்கழலிணையேழாயிரமே. (௰௫)

ஏழாயிரமாயிருபதாய்முப்பதா
யேழாயிரத்துமெழுகோடிதானுமி
யேழாயிரத்துயிரெண்ணிலாமந்திர
மேழாயிரண்டாயிருக்கின்றவாறே. (௰௬)

இருக்கின்றமந்திரமேழாயிரமா
மிருக்கின்றமந்திரமித்திறமில்லை
யிருக்கின்றமந்திரஞ்சிவன்றிருமேனி
யிருக்கின்றமந்திரமிவ்வண்ணந்தானே. (௰௭)

தானேதனக்குத்தகுநட்டந்தானுந்
தானேயகாரவுகாரமதாய்நிற்குந்
தானேநீங்காரத்தத்துவக்கூத்துக்குத்
தானேயுலகிற்றனிநடந்தானே. (௰௮)

நடமிரண்டொன்றேநளினமதாகு
நடமிரண்டொன்றேநமன்செய்யுங்கூத்து
நடமிரண்டொன்றேநகைசெயாமந்திர
நடஞ்சிவலிங்கநலஞ்செம்புபொன்னே. (௰௯)

செம்புபொன்னாகுஞ்சிவாயநமவென்னிற்
செம்புபொன்னாகத்திரண்டதுசிற்பரஞ்
செம்புபொன்னாகுஞ்ஸ்ரீயுங்கிரீயுமென
செம்புபொன்னானதிருவம்பலமே. (௨௰)

திருவம்பலமாகச்சீர்ச்சக்கரத்தைத்
திருவம்பலமாகவீராறுகீறித்
திருவம்பலமாகவிருபத்தைஞ்சாக்கித்
திருவம்பலமாகச்செபிக்கின்றவாறே. (௨௧)

வாறேசிவாயநமசிவாயநம
வாறேசெபிக்கில்வரும்பேர்பிறப்பில்லை
வாறேயருளால்வளர்கூத்துக்காணலாம்
வாறேசெபிக்கில்வருஞ்செம்புபொன்னே. (௨௨)

பொன்னனமந்திரம்புகலவுமொண்ணாது
பொன்னனமந்திரம்பொறிகிஞ்சுகத்தாகும்
பொன்னனமந்திரம்புகையுண்டுபூரிக்கிற்
பொன்னாகும்வல்லார்க்குடம்புபொற்பாதமே. (௨௩)

பொற்பாதங்காணலாம்புத்திரருண்டாகும்
பொற்பாதத்தாணையேசெம்புபொன்னாயிடும்
பொற்பாதங்காணத்திருமேனியாயிடும்
பொற்பாதநன்னடஞ்சிந்தனைசொல்லுமே. (௨௪)

சொல்லுமொருகூட்டிற்புக்குச்சுகிக்கலா
நல்லமடவார்நயந்துடனேவருஞ்
சொல்லிலும்பாசச்சுடர்ப்பாம்புநீங்கிடுஞ்
சொல்லுந்திருக்கூத்தின்சூக்குமந்தானே. (௨௫)

சூக்குமமெண்ணாயிரஞ்செபித்தாலுமேற்
சூக்குமமானவழியிடைக்காணலாஞ்
சூக்குமமானவினையைக்கெடுக்கலாஞ்
சூக்குமமானசிவனதானந்தமே. (௨௬)

ஆனந்தமென்றென்றறைந்திடமானந்த
மானந்தம்-ஆ-இ-ஊ-எ-ஒமென்றறைந்திட
மானந்தமஞ்சுமாயிடுமானந்த
மானந்தம்அம்-ஹ்ரீம்-அம்-க்ஷம்-ஆம்-ஆகுமே. ()

மேனியிரண்டும்விளங்காமல்மேற்கொள்ள
மேனியிரண்டுமிக்கார்விகாரியா
மேனியிரண்டும்-ஊம்-ஆம்-இ-எ-ஒ-என்னு
மேனியிரண்டும்-இ-ஒ-ஊ-ஆ-எ-கூத்துமே. (உ௮)

கூத்தேசிவாயநமமசிவாயிடுங்
கூத்தே-இ-ஊ-ஆ-எ-ஓம்-சிவாயநமவாயிடுங்
கூத்தே-இ-ஊ-ஆ-எ-ஓம்-சிவாயநமவாயிடுங்
கூத்தேஇஊஆஎஓம்நமசிவாயகோளொன்றும்வாறே

ஒன்றிரண்டாடவோரொன்றுமுடனாட
வொன்றினின்மூன்றாடவோரேழுமொத்தாட
வொன்றினாலாடவோரொன்பதுமுடனாட
மன்றினிலாடினான்மாணிக்கக்கூத்தே. (௩௰)

---

திருவம்பலச்சக்கரம்.

இருந்தவிவ்வட்டங்களிராறிரேகை
யிருந்தவிரேகைமேலீராறிருத்தி
யிருந்தமனைகளுமீராறுபத்தொன்
றிருந்தமனையொன்றிலெய்துவன்றானே. (க)

நாலென்றிவாழிடந்தன்னெழுத்தேயாகுந்
நாலென்றமர்நான்குந்தன்பேரெழுத்தாகுந்

தாஞென்றுகோணந்தன்னைந்தெழுத்தாகுந்
தாஞென்றிலேயொன்றுமவ்வானென்றுமே. (௨)

அரகரவென்னவரியதொன்றில்லை
யரகரவென்னவறிகிலர்மாந்த
ரரகரவென்னவமருமாவ
ரரகரவென்னவறும்பிறப்பன்றே. (௩)

எட்டுநிலையுளவெங்கோனிருப்பிட
மெட்டினிலொன்றுமிருமூன்றுமீரேழு
மொட்டியவல்விந்துவுநாதமுமோங்கிடப்
பட்டதுமந்திரம்பான்மொழியாலே, (௪)

மட்டவிழ்தாமரைமாதுநல்லாளுட
ஞெட்டியிருந்தவுபாயமறிகிலர்
விட்டவெழுத்தைவிடாதவெழுத்துடன்
கட்டவல்லாருயிர்காட்டவல்லாரே. (௫)

ஆலயமாகவமர்ந்தபஞ்சாக்கர
மாலயமாகவமர்ந்தவித்தூலம்பே
ராலயமாகவருகின்றசூக்கும
மாலயமாகவமர்ந்திருந்தானே. (௬)

இருந்தவிவ்வட்டமிருமூன்றிரேகை
யிருந்தவதனுளிரேகையைந்தாக
விருந்தவறைகளிருபத்தைஞ்சாக
விருந்தவறையொன்றிலெய்துமகாரமே. (௭)

மகாரநடுவேவளைத்திடுஞ்சத்தியை
யொகாரம்வளைத்திட்டும்பிளந்தேற்றி

யகாரந்தலையாயிருகண்சிகாரமாய்
நகாரவகாரநற்காலதுநாடுமே. (அ)

நாடும்பிரணவநடுவிருபக்கமு
மாடுமவர்வாயமர்ந்தங்குநின்றது
நாடுநடுவுண்முகநமசிவாய
வாடுஞ்சிவாயநமபுறவட்டத்தாயதே. (௯)

ஆயுஞ்சிவயநமமசிவயந
வாயநமசிவயயநமசிவ
வாயுமேவயநமசியெனுமந்திர
மாயஞ்சிகாரத்தொட்டந்தந்தடைவிலே. (௰)

அடைவினிலைம்பதுமைமைந்தறையி
னடையுமறையொன்றுக்கோரெழுத்தாக்கி
யடையுமகாரத்திலந்தமாக்ஷவ்வு
மடைவினெழுத்தைம்பத்தொன்றுமமர்ந்ததே. (௧௧)

அமர்ந்தவரகரவாம்புறவட்ட
மமர்ந்தவரிகரியாமதனுள்வட்ட
மமர்ந்தவசலையாமதனுள்வட்ட
மமர்ந்த்விரேகையுமாகின்றசூலமே. (௧௨)

சூலத்தலையினிற்றோற்றிடுஞ்சத்தியுஞ்
சூலத்தலையினிற்சூழுமோங்காரத்தாள்
சூலத்திடைவெளிதோற்றிமேஞ்செழுத்
தாலப்பதிக்குமடைவதுவாமே. (௧௩)

அதுவாம்அகாரஇகாரஉகாரம்
அதுவாம்எகாரம்ஒகாரமதஞ்சந்

மதுவாகுஞ்சக்கரவட்டமேல்வட்டம்
பொதுவாயிடைவெளிபொங்குநம்பேரே. (௰௪)

பேர்பெற்றதுமூலமந்திரம்பின்னது
சோர்வுற்றசக்கரவட்டத்துட்சந்தியி
னேர்பெற்றிருந்திடநின்றதுசக்கரப்
பேர்பெற்றிருந்தவியல்பிதுவாமே. (௰௫)

இயலுமிம்மந்திரமெய்தம்வழியின்
செயலுமறியத்தெளிவிக்குநாதன்
புயலும்புனலும்பொருந்தங்கிமண்விண்
முயலுமெழுத்துக்குமுன்னுவிருந்ததே. (௰௬)

ஆறெட்டெழுத்தின்மேலாறும்பதினலு
மேறெட்டதின்மேலேவிந்துவுநாதமுஞ்
சீறிட்டுநின்றுசிவாயநமவென்னக்
கூறிட்டுமும்மலங்கூட்டிட்டுப்போமே. (௰௭)

அண்ணலிருப்பதவளக்கரத்துளே
பெண்ணினல்லாளும்பிரானக்கரத்துளே
யெண்ணியிருவரிசைத்தங்கிருந்திடம்
புண்ணியவாளர்பொருளறிவார்களே. (௰௮)

அவ்விட்டுவைத்தங்கரவிட்டுமேல்வைத்து
விவ்விட்டுபார்க்கிலிலிங்கமதாய்நிற்கு
மவ்விட்டுமேலேவளியுறக்கண்டபின்
னொவ்விட்டுநின்றசுடர்க்கொழுந்தாமே. (௰௯)

அவ்வுண்டுசவ்வுண்டனைத்துமங்குள்ளது
கவ்வுண்டுநிற்குங்கருத்தறிவாரில்லை

கவ்வுண்டுநிற்குங்கருத்தறிவாளர்க்குச்
சவ்வுண்டசத்திசதாசிவன்றானே. (௨௰)

அஞ்செழுத்தாலேயமர்ந்தனனந்தியு
மஞ்செழுத்தாலேயமர்ந்தபஞ்சாக்கர
மஞ்செழுத்தாகியவக்கரசக்கர
மஞ்செழுத்துள்ளேயமர்ந்திருந்தானே. (௨௧)

கூத்தனைக்காணுங்குறிபலபேசிடிற்
கூத்தனெழுத்தின்முதலெழுத்தோதினார்
கூத்தனொடொன்றியகொள்கையராய்நிற்பர்
கூத்தனைக்காணுங்குறியதுவாமே. (௨௨)

அத்திசைக்குண்ணின்றனலையெழுப்பியே
யத்திசைக்குண்ணின்றதவ்வெழுத்தோதினா
லத்திசைக்குண்ணின்றவந்தமறையனை
யத்திசைக்குள்ளுறவாக்கினன்றானே. (௨௩)

தானேயளித்திடுந்தையலைநோக்கினாற்
றானேயளித்திட்டுமேலுறவைத்திடுந்
தானேயளித்தமகாரத்தையோதிடத்
தானேயளித்ததோர்கல்லொளியாகுமே. (௨௪)

கல்லொளியேயெனநின்றவடதிசை
கல்லொளியேயெனநின்றனனிந்திரன்
கல்லொளியேயெனநின்றசிகாரத்தைக்
கல்லொளியேயெனக்காட்டினான்றானே. (௨௫)

தானேயெழுகுணந்தண்சுடராய்நிற்குந்
தானேயெழுகுணவேதமுமாய்நிற்குந்

தானேயெழுகுணம்வரவதுவோதிடிந்
ருனேயெழுந்தமறையவனுமே. (உசு)

மறையவனாகமதித்தபிறவி
மறையவனாகமதித்திடக்காண்பர்
மறையவனஞ்செழுத்துள்ளனிற்கப்பெற்ற
மறையவனஞ்செழுத்தாமதுவாகுமே. (உஎ)

ஆகின்றபாதமுமந்நவாய்நின்றிடு
மாகின்றநாபியுளங்கேசகாரமா
மாகின்றசியிருதோள்வவ்வாய்க்கண்டபின்
னாகின்றவச்சுடர்யவ்வியல்பாமே. (உஅ)

அவ்வியல்பாயவிருமூன்றெழுத்தையுஞ்
செவ்வியல்பாகச்சிறந்தனனந்தியு
மொவ்வியல்பாகவொளியுறவோங்கிடத்
பவ்வியல்பாகப்பரத்துநின்றுனே. (உகூ)

பரந்ததுமந்திரம்பல்லுயிர்க்கெல்லாம்
வரந்தருமந்திரம்வாய்த்திடவாங்கித்
துரந்திடுமந்திரஞ்சூழ்பகைபோக
வுரந்தருமந்திரமோமென்றெழுப்பே. (௩௰)

ஓமென்றெழுப்பித்தன்னுத்தமநந்தியை
நாமென்றெழுப்பநடுவெழுதிபத்தை
யாமென்றெழுப்பியவ்வாறறிவார்கண்
மாமன்றுகண்டுமகிழ்ந்திருந்தாரே. (௩௧)

ஆகின்றசக்கரத்துள்ளேயெழுத்தைத்தம்
பாகொன்றிநின்றபதங்களில்வத்திக்கு

மாகொல்நலவம்பத்தொருவெழுத்தாங்ஙனிக்கப்
பாகொல்கிநிற்கும்பராபரலின்றனே. (௩௨)

பரமாயவஞ்செழுத்தன்னடுவாக
பரமாயநவசிமபார்க்கில்மவயநசி
பரமாயசியநமவாம்பரத்தோதிற்
பரமாயவாசிமயநமாய்நின்றே. (௩௩)

நின்றவெழுத்துக்கண்ணேர்தருபூதமு
நின்றவெழுத்துக்கண்ணேர்தருவன்னமு
நின்றவெழுத்துக்கண்ணேர்தருநின்றிடி
னின்றவெழுத்துள்ளருநின்றனன்றனே. (௩௪)

நின்றனசக்கரநீளும்புவியெலா
மன்றதுவாய்நின்றமாயநன்னாடனைக்
கண்டதுவாகக்கரந்தனனந்தியுங்
குன்றிடநின்றிடுகொள்கையனுமே. (௩௫)

கொண்டவிச்சக்கரத்துள்ளேகுணம்பல
கொண்டவிச்சக்கரத்துள்ளேகுறியைந்துங்
கொண்டவிச்சக்கரங்கூத்தனெழுத்தைந்துங்
கொண்டவிச்சக்கரத்துண்ணின்றகூத்தே. (௩௬)

வெளியிலிரேகையிரேகையிலத்தலை
சுளியிலுகாரமாஞ்சுற்றியவன்னி
நெளிதருகால்கொம்புநேர்விந்துநாதந்
தெளியும்பிரகாரஞ்சிவமந்திரமே. (௩௭)

அகாரவுகாரசிகாரநடுவாய்
வகாரமோடாறும்வளியுடன்கூடிச்

சிகாரமுடனேசிவஞ்சிந்தைசெய்ய
யொகாரமுதல்வனுவந்துநின்றானே. (௫௮)

அற்றவிடத்தேயகாரமதாவது
வுற்றவிடத்தேயுறுபொருள்கண்டிடச்
செற்றமறுத்தசெழுஞ்சுடர்மெய்ப்பொருள்
குற்றமறுத்தபொன்போலுங்குளிகையே. (௫௯)

அவ்வென்றபோதினிலுவ்வெழுத்தாலித்தா
லுவ்வென்றமுத்தியுருகிக்கலந்திடு
மவ்வென்றென்னுள்ளேவழிபட்டநந்தியை
யெவ்வணஞ்சொல்லுகேனெந்தையியற்கையே (௬௰)

நீரிலெழுத்திவ்வுலகாரறிவது
வானிலெழுத்தொன்றுகண்டறிவாரில்லை
யாரிவ்வெழுத்தையறிவாரறிவர்க
ளூனிலெழுத்தையுணர்கிலர்தாமே. (௬௧)

காலைநடுவுறக்காயத்திலக்கர
மாலைநடுவுறவைம்பதுமாவன
மேலுநடுவுறவேதம்விளம்பிய
மூலநடுவுறமுத்திதந்தானே. (௬௨)

நாவியின்கீழதுநல்லவெழுத்தொன்று
பாவிகளத்தின்பயனறிவாரில்லை
யோவியராலுமறியவொண்ணாதது
தேவியுந்தானுந்திகழ்ந்திருந்தானே. (௬௩)

அவ்வொடுசவ்வென்றரனுற்றமந்திர
மவ்வொடுசவ்வென்றதாருமறிகில

ரவ்வொடுசவ்வென்றதாருமறிந்தபின்
னவ்வொடுசவ்வுமனாதியுமாமே. (௪௪)

மந்திரமொன்றுமலராலுதிப்பது
வுந்தியினுள்ளேயுதயம்பண்ணாநிற்குஞ்
சந்திசெய்யாநிற்பர்தாமதறிகிலர்
நந்திதொழுதுபோயார்த்தகன்றார்களே, (௪௫)

செவிக்குமந்திரஞ்செல்லுந்திசைபெற
வாவிக்குண்மந்திரமாதாரமாவன
பூவுக்குண்மந்திரம்போக்கறநோக்கிடி
லாவிக்குண்மந்திரமங்குசமாமே (௪௬)

அருவினிலம்பரமங்கெழுநாதம்
பெருகுதுடியிடைபேணியவிந்து
மருவியகாரசிகாரநடுவா
யுருவிடவூறுமுறுமந்திரமே. (௪௭)

விந்துவுநாதமுமேவியுடன்கூடிச்
சந்திரனோடேதலைப்படுமாயிடி
லந்தரவானத்தமுதப்வர்துறிடு
மந்திமந்திரமாகுதியாமே, (௪௮)

ஆகாரமுத்தோதுமறிவாரறிகிலா
ருகாரமுத்தொன்றுகவோதியுணரார்கள்
வேகாரமுத்தின்றியிளம்பவல்லார்கட்கு
வோரெழுத்தாலேயுயிர்பெறலாமே, (௪௯)

ஓசையெழுத்தோடுயிர்க்கலைமூவைஞ்ச
மாதியெழுத்தவையைம்பத்தோடொன்றென்பர்

சோதியெழுத்தினிலையிருமூன்றுள
நாதவெழுத்திட்டு நாடிக்கொளீரே. (௫௰)

விந்துவினுஞ்சுழிநாதமெழுந்திட
பந்தத்தலைவிபதினாறுகலையதாய்
கந்தரவாகரங்காலுடம்பாயினு
ளந்தமுமின்றியைம்பத்தொன்றாமே. (௫௧)

ஐம்பதெழுத்தேயனைத்தும்வேதங்களு
மைம்பதெழுத்தேயனைத்தாகமங்களு
மைம்பதெழுத்தேயுமாவதறிந்தபி
னைம்பதெழுத்தும்போயைஞ்செழுத்தாமே. (௫௨)

அஞ்செழுத்தாலைந்துபூதம்படைத்தன
னஞ்செழுத்தாற்பலயோனிபடைத்தன
னஞ்செழுத்தாலிவ்வகலிடந்தாங்கின
னஞ்செழுத்தாலேயமர்ந்துநின்றானே. (௫௩)

வீழ்ந்தெழலாம்விகிர்தன்றிருநாமத்தைச்
சேர்ந்தொழியாமற்றுடங்குமொருவற்குச்
சார்ந்தவினைத்துயர்போகத்தலைவனும்
போந்திடுமென்னும்புரிசடையோனே. (௫௪)

உண்ணுமருந்துமுலப்பிலிகாலமும்
பண்ணுறுகேள்வியும்பாடலுமாய்நிற்கும்
விண்ணின்றமரர்விரும்பியடிதொழ
வெண்ணின்றெழுத்தஞ்சுமாகிநின்றானே. (௫௫)

ஐந்தின்பெருமையகலிடமாவது
ஐந்தின்பெருமையேயாலயமாவது

ஐந்திற் பெருமையறவோன்வழக்கமு
லைமத்தின்வகைசெயப்பாலனுமாமே. (௫௬)

வேவெழுத்தாய்விண்ணையப்புறமாய்நிற்கு
நீரெழுத்தாய்நிலந்தாங்கியுமங்குள்ள
சிரொழுத்தாயங்கியாயுயிராமெழுத்
தோரெழுத்தீசனுமொண்சுடராமே, (௫௭)

நாலாமெழுத்தோசைஞாலமுருவது
நாலாமெழுத்தினுண்ஞாலமடங்கிற்று
நாலாமெழுத்தேநவிலவல்லார்கட்கு
நாலாமெழுத்ததுநன்னெறிதானே. (௫௮)

இயைந்தனளேந்திழையென்னுள்ளமேவி
நயந்தனளங்கேநமசிவயவென்னும்
பயந்தன்னையோரும்பதமதுபற்றும்
பெயர்ந்தனன்மற்றும்பிதற்றறுத்தேனே (௫௯)

ஆமத்தினிதிருந்தன்னமயத்தினை
போமத்திலேயுதம்பன்னுமொருத்திதன்
ஓமநமசிவயவென்றிருப்பாருக்கு
நேமத்தலைவிநிலவிநின்றாளே, (௬௰)

பட்டம்பரிசேபரமஞ்செழுத்ததி
லிட்டமறிந்திட்டிரவுபகல்வர
நட்டமதாடுநடுவேநிலயங்கொண்
டட்டதேசப்பொருளாகிநின்றாளே. (௬௧)

அகாரமுயிரேயுகாரம்பரமே
மகாரமலமாய்வருமுப்பதாறிற்

சிகாரஞ்சிவமாய்வகாரம்வடிவமா
யகாரமுயிரென்றறைய லுமாமே, (௬௨)

நகாரமகாரஞ்சிகாரநடுவாய்
வகாரமிரண்டும்வளியுடன்கூடி
யொகாரமுதற்கொண்டொருக்கா லுரைக்க
மகாரமுதல்வன்மனத்தகத்தானே, (௬௩)

ஐஞ்சுளவானையடவியுள்வாழ்வன
வஞ்சுக்குமஞ்செழுத்தங்குசமாவன
வஞ்சையுங்கூடத்தடுக்கவல்லார்கட்கே
யஞ்சாதியாதியகம்புகலாமே, (௬௪)

ஐந்துகலையிலகராதிதன்னிலே
வந்தநகராதிமாற்றிமகராதி
நந்தியைமூலத்தேநாடிப்பனையொடுஞ்
சந்திசெய்வார்க்குச்சடங்கில்லைதானே; (௬௫)

மருவுஞ்சிவாயமேமன்னுமுயிரு
மருமந்தயோகமுஞானமுமாகுந்
தெருள்வந்தசிவனார்சென்றிவற்றாலே
யருடங்கியச்சிவமாவதுவீடே. (௬௬)

அஞ்சுகவஞ்செழுத்துண்மையறிந்தபின்
னெஞ்சகத்துள்ளேநிறையும்பராபரம்
வஞ்சகமில்லைமனைக்குமழிவில்லை
தஞ்சமிதுவென்றுசாற்றுகின்றேனே. (௬௭)

சிவாயவொடவ்வேதெளிந்துள்ளத்தோதச்
சிவாயவொடவ்வேசிவனுருவாகுஞ்

சிவாயவொடவ்வுந்தெளியவல்லார்கள்
சிவாயவொடவ்வேதெளிந்திருந்தாரே. (௬அ)

சிகாரவகாரயகாரமுடனே
நகாரமகாரநடுவுறநாடி
யொகாரமுடனேயொருக்காலுரைக்கு
மகாரமுதல்வன்மதித்துநின்றானே. (௬௯)

நம்முதலோரைந்திலுடுங்கருமங்க
ளம்முதலைந்திலடங்கியவல்வினை
சிம்முதலுள்ளேதெளியவல்லார்கட்குத்
தம்முதலாகுஞ்சதாசிவன்றானே, (எ0)

நவமுஞ்சிவமுமுயிர்பரமாகுந்
தவமொன்றிலாதனதத்துவமாகுஞ்
சிவமொன்றியாய்ப்பவராதரவாலச்
சிவமென்பதானுமெனுந்தெளிவுற்றதே, (எக)

கூடியவெட்டுமிரண்டுங்குவிந்தறி
நாடியநந்தியைஞானத்துளேவைத்து
வாடியவவ்வருமந்நுறவாவர்க
டேடியதனைத்தெளிந்தறியீரோ, (எஉ)

எட்டுமிரண்டுமினிதறிகின்றில
ரெட்டுமிரண்டுமறியாதவேழைய
ரெட்டுமிரண்டுமிருமூன்றுநானெனப்
பட்டதுசித்தாந்தசன்மார்க்கபாதமே, (எ௩)

எட்டுவரையின்மேலெட்டுவரைகீறி
யிட்டநடுவுள்ளிறையெழுத்தொன்றில்

வட்டத்திலையறைநாற்பத்தெட்டுமிட்டுச்
சிட்டஞ்செழுத்துஞ்செபிசீக்கிரமே. (௭௪)

தானவர்சட்டர்சதிரரிருவர்க
ளானவிம்மூவரோடாற்றவராதிக
ளேனைப்பதினைந்தும்விந்துவுநாதமுஞ்
சேனையுஞ்செய்சிவசக்கரத்தானே. (௭௫)

பட்டணமாதவமாற்றும்பராபரம்
விட்டனர்தம்மைவிகிர்தாநமவென்ப
ரொட்டனையாயினுமீசன்றிறத்திற
மொட்டுவன்பேசுவனென்றறியேனே, (௭௬)

சிவமுதன்மூவரோடைவர்சிறந்து
வவைமுதலாறிரண்டொன்றொடொன்றுன
வவைமுதல்விந்துவுநாதமும்மோங்கச்
சவைமுதற்சங்கரன்றன்பெயர்தானே, (௭௭)

வித்தாஞ்செகமயமாகவரைகீறி
நத்தார்கலைபதினாறுநாட்டிப்பின்
னுத்தாரம்பன்னிரண்டாதிகலைதொகும்
பத்தாம்பிரமசடங்குபார்த்தோதிடே. (௭௮)

கண்டெழுந்தேன்கமலமலருள்ளிடை
கொண்டொழிந்தேனுடன்கூடியகாலத்துப்
பண்பழியாதபதிவழியேசென்று
நண்பழியாமேநமவெனலாமே (௭௯)

புண்ணியவானவர்பூமழைதூவிநின்
றெண்ணுவரண்ணலிணையடிமந்திர

நன்றுவர்நண்ணிநமவென்றுநாமத்தைக்
கண்ணெனவுன்னிக்கலந்துநின்றாரே. (௮௰)

ஆறெழுத்தாலவ்வாறுசமயங்க
ளாறுக்குநாலேயிருபத்துநாலென்பர்
சாவித்திரியிற்றலையெழுத்தொன்றுள
பேதிக்கவல்லார்பிறவியற்றார்களே, (௮௧)

எட்டினிலெட்டறையிட்டோரறையிலே
கட்டியவொன்றெட்டாய்க்காணநிறையிட்டுச்
சுட்டியிவற்றைப்பிரணவஞ்சூழ்ந்திட்டு
மட்டுமுயிர்கட்குமாபதியானுண்டே, (௮௨)

நம்முதலவ்வொடுதாவினராகியே
யம்முதலாகியவெட்டிடையுற்றிட்டு
வும்முதலாகவேயுண்பவருச்சிமே
லும்முதலாவனுற்றுநின்றானே. (௮௩)

நின்றவரசம்பலகைமேமேளராக
வொன்றிடமவ்விட்டுவோலையிற்சாதகந்
துன்றுமெழுகையுள்பூசிச்சுடரிடைந்
தன்றவெருப்பிடத்தம்பனங்காணுமே. (௮௪)

சரணவிறளிப்பலகையமன்றிசை
மரணமிட்டெட்டின்மகாரவெழுத்திட்டு
வரணமிலங்காயம்பூசியடுப்பிடை
மூரணிற்புலைதத்திடமோகனமாகுமே. (௮௫)

ஆந்துவடமேற்றிலையனூர்கோட்டத்திற்
பாங்குபடவேபுலாசம்பலகையிற்

காங்கருமேட்டிற்கடுப்பூசிவிந்துவிட்
டோங்காரம்வைத்திடுமுச்சாடனத்துக்கே. (௮௬)

உச்சியம்போதிலொளிவன்னிமூலையிற்
பச்சைசாலையிற்பஞ்சகாயத்தைப்பாரித்து
முச்சதிரத்தின்முதுகாட்டில்வைத்திடு
வைச்சபின்மேலோர்மாரணம்வேண்டிலே. (௮௭)

ஏய்ந்தவரிதாரமேட்டின்மேலேபூசி
யேய்ந்தவகாரமுகாரமெழுத்திட்டு
வாய்ந்ததோர்வில்லம்பலகைவசியத்துக்
கேய்ந்தவைத்தெண்பதினாயிரம்வேண்டிலே (௮௮)

எண்ணுக்கருடனையேட்டின்யகாரமிட்
டெண்ணுப்பொன்னுளிலெழுவெள்ளிபூசிடா
வெண்ணுவற்பலகையிட்டுமேற்கேநோக்கி
யெண்ணுவெழுத்தொடெண்ணாயிரம்வேண்டிலே. ()

---

அருச்சனை.

அம்புயநீலங்கழுநீரணிநெய்தல்
வம்பவிழ்பூகமுமாதவிமந்தாரந்
அம்பைவகுளஞ்சுரபுன்னைமல்லிகை
செண்பகம்பாதிரிசெவ்வந்திசாத்திடே. (௯௰)

சாங்கமதாகவேசந்தொடுசந்தனந்
தேங்கமழ்குங்குமங்கற்பூரங்காரகிற்
பாங்குபடப்பனிநீராற்குழைத்துவைத்
தாங்கேயணிந்துநீரார்ச்சியுமன்பொடே. (௯௧)

அன்புடனேநின்றமுதமுமேற்றியே
பொன்செய்விளக்கும்புகைதீபந்திசைதொறுந்
துன்பமகற்றித்தொழுவோர்நினைபுங்கா
லின்பமுடனேவந்தெய்திடுமுத்தியே. (௬௨)

எய்திவழிப்படிலெய்தாதனவில்லை
யெய்திவழிப்படினிந்திரன்செல்வமுன்
னெய்திவழிப்படிலெண்சித்தியுண்டாகு
மெய்திவழிப்படிலெய்திடுமுத்தியே. (௬௩)

நண்ணும்பிறதாரநீத்தாரவித்தார்
மண்ணியபறைவெத்தியமனுசர்தான
நண்ணியபஞ்சாங்கநன்னூற்செபமென்னு
மன்னுமனபவனத்தொடுவைகுமே. (௬௪)

வேண்டார்கள்கன்மம்விமலனுக்காட்பட்டோர்
வேண்டார்கள்கன்மமதிலிச்சையற்றபேர்
வேண்டார்கள்கன்மமிகுசிவயோகிகள்
வேண்டார்கள்கன்மமிருதியோராய்ந்தன்பே. (௬௫)

அறிவறுஞானத்தெவருமறியார்
பொறிவழிதேடிப்புலம்புகின்றார்க
ணெறிமனையுள்ளேநிலைபெறநோக்கி
லெறிமணியுள்ளேயிருக்கலுமாமே. (௬௬)

இருளும்வெளியும்போலிரண்டாமிதய
மருளறிபாமையுமன்னுமறிவு
மருளவைவிட்டெறிபாமைமயங்கு
மருளுஞ்சிவதத்தரோரவர்களாமன்றே. (௬௭)

தாளுவனாகவவனேதானயிட
வானவிரண்டிலறிவல்சிவமாக
போனவன்னபிதுநாலாமரபுறத்
தானவனாகுமோராதித்ததேவரே.　　(சுஅ)

ஓங்காரமுந்திக்கீழுற்றிடுமெற்நானு
நீங்காவகாரமுநீள்கண்டத்தாயிடும்
பாங்கார்நகாரம்பயிலெனற்றியுற்றிடும்
வீங்காகும்விந்துவுநாதமேலாகுமே.　　(சுசு)

நமவதுவாசனமானபசுவே
சிவமதுசித்திச்சிவமாம்பதியே
நமவறவாதிநாடுவதன்றாஞ்
சிவமாகுமாமோனஞ்சேர்தன்மெய்வீடே.　　(ரு)

தெளிவருநாளிற்சிவவமுதூறு
மொளிவருநாளிலொரொட்டிவுகளு
மொளிவருமப்பதத்தோரிரண்டாகில்
வெளிதருநாதன்வெளியாயிருந்தே.　　(ருக) ஆ. ருக.

---

## நவகுண்டம்.

நவகுண்டமானவைநானுரைசெய்யி
னவகுண்டத்துள்ளெழுநற்றீபந்தானு
நவகுண்டத்துள்ளெழுநல்மைகளெல்லா
நவகுண்டமானவைநானுரைப்பேனே.　　(க)

உரைத்திடுங்குண்டத்திருள்ளேமுக்காலு
நகைத்தெழுநாற்கோணநன்மைகளாத்து

பகைத்திடுமுப்புரம்பாரங்கியோடே
மிகைத்திடுகண்டங்கண்மேலறியோமே. (௨)

மேலறிந்துள்ளேவெளிசெய்தவப்பொருள்
காலறிந்துள்ளேகருத்துற்றசெஞ்சுடர்
பாரறிந்தண்டஞ்சிறகறநின்றது
நானறிந்துள்ளெழநாடிக்கொண்டேனே. (௩)

கொண்டவிக்குண்டத்தினுள்ளெழுசோதியா
யண்டங்களேழுமாக்கியழிக்கலாம்
பண்டையுள்வேதம்பரந்தபரப்பெலா
மின்றுசொல்நூலாயெடுத்துரைத்தேனே. (௪)

எடுத்தவக்குண்டத்திடம்பதினாறிற்
படுத்தகலைகளும்பாலித்துநிற்குங்
கதித்தனவுள்ளெழக்கண்டுகொள்வார்க்கே
கொதித்தெழுவல்வினைக்கூடகிலாவே (௫)

கூடமுக்கூடத்தினுள்ளெழுகுண்டத்து
ளாடியவைத்துமகம்புறம்பாய்நிற்கும்
பாடியபன்னிரிராசியுமங்கெழ
நாடிக்கொள்வார்கட்குநற்சுடர்தானே. (௬)

நற்சுடராகுஞ்சிரமுகவட்டமாங்
கைச்சுடராகுங்கருத்துற்றகைகளிற்
பைச்சுடர்மேனிபவளப்புற்றிலிங்கமு
நற்சுடராயெழுநல்லதென்றாளே (௭)

நல்லதென்றாளேநமக்குற்றநாயகஞ்
சொல்லதென்றாளேசுடர்முடிப்பாதமா

மெல்லநின் ருளேவினவகில்லாதவர்
கல்லதன் ருளேயுங்கற்றும்வின்ளுளே, (அ)

வின்ஞவிளம்பிறைமேவியகுண்டத்துச்
சொன்ஞலிரண்டுஞ்சுடர்நாகந்திக்கெங்கும்
பன்ஞநாகம்பரந்தபரஞ்சுட
ரொன்ஞகத்துள்ளேயிடங்கொண்டவாறே, (கூ)

இடங்கொண்டபாதமெழிற்சுடரோக
நடங்கொண்டபாதங்கணண்ணிரதற்குச்
சகங்கொண்டகையிரண்டாறுந்தழைப்ப
முகங்கொண்டசெஞ்சுடர்முக்கணஞர்க்கே, (ய)

முக்கணன் ருனேமுழுச்சுடராயவ
ணக்கணன் ருனேயகிலமுமுண்டவன்
றிக்கணஞகித்திசையெட்டுங்கண்டவ
னெக்கணன் ருனுக்குமெந்தைபிரானே. (யக)

எந்தைபிரானுக்கிருமூன்றுவட்டமாய்த்
தந்தைதன்முன்னேசண்முகந்தோன்றலாற்
கந்தன்சுவாமிகலந்தங்கிருத்தலான்
மைந்தனிவனென்னமாட்டிக்கொளீரோ (யஉ)

மாட்டியகுண்டத்தினுள்ளெழுவேதத்து
ளாட்டியகாலொன்றுமிரண்டுமலர்ந்திடும்
வாட்டியகையிரண்டொன்றுபதைத்தெழ
நாட்டுஞ்சுராரிவர்நல்லொளிதானே. (யங)

நல்லொளியாகநடந்தவுலகெங்கும்
கல்லொளியாகக்கலந்துளிருந்திடுஞ்

சொல்லொளியாகத் துடர்ந்தவுயிர்க்கெல்லாங்
கல்லொளிகண்ணா றூமாகிநின்றமே. (யச)

நின்றவிக்குண்டநிலையாறுகோணமாய்ப்
பண்டையில்வட்டம்பதைத்தெழுமாறுறுங்
கொண்டவித்தத்துவமுள்ளேகலந்தெழ
வின்னாறுமென்னவெடுக்கலுமாமே. (யரு)

எடுக்கின்றபாதங்கண்மூன்றதெழுத்தைக்
கடுத்தமுகமிரண்டாறுகண்ணாகப்
படித்தெண்ணுநாவெழுகொம்பொருநாலு
மடுத்தெழுகண்ணானந்தமிலார்க்கே, (யசு)

அந்தமில்லானுக்ககலிடந்தானில்லை
யந்தமில்லானையளப்பவர்தாமில்லை
யந்தமில்லானுக்கடுத்தசொற்றானில்லை
யந்தமில்லானையறிந்துகொள்பத்தே, (யஎ)

பத்திட்டங்கெட்டிட்டாறிட்டுநாலிட்டு
மட்டிட்டகுண்டமலர்ந்தெழுதாமரை
கட்டிட்டுநின்றுகலந்தமெய்யாகமும்
பட்டிட்டுநின்றுபார்ப்பதிபாலே. (யஅ)

பார்ப்பதிபாகன்பரந்தகைநாலைஞ்சு
காற்பதிபத்துமுகம்பத்துக்கண்களும்
பூப்பதிபாதமிரண்டுசுடர்முடி
நாத்பதுசோத்திரநல்லிருபத்தைஞ்சே, (யகூ)

அஞ்சிட்டசோலமளப்பனவையைந்து
மஞ்சிட்டகுண்டமலர்ந்தங்கிருத்தலாற்

பஞ்சிட்டசோதிப்பரந்தபராஞ்சுடர்
கொஞ்சிட்டவன்னியைக்கூடுநன்முத்தியே (௨௰)

முத்தநற்சோதிமுழுச்சுடராயவன்
கற்றற்றுநின்றார்கருத்துளிருந்திடும்
பற்றறநாடிப்பரந்தொளியூடுபோய்
செற்றற்றிருந்தவர்சேர்ந்திருந்தாரே (௨௧)

சேர்ந்தகலையஞ்சுஞ்சேருமிக்குண்டமு
மார்ந்ததிசைகளுமங்கேயமர்ந்திடும்
பாய்ந்தவைம்பூதமும்பார்க்கின்றவன்னியைக்
காய்ந்தவவொன்றுங்கலந்தவர்தாமே. (௨௨)

மெய்கண்டமாம்விரிநீருலகேழு
முய்கண்டஞ்செய்தவொருவனைச்சேருமின்
செய்கண்டஞானந்திருந்தியதேவர்கள்
பொய்கண்டமில்லாப்பொருள்கலந்தாரே, (௨௩)

கலந்திருபாதமிருகரமாகு
மலர்ந்திருகுண்டமகாரத்தோர்மூக்கு
மலர்ந்தெழுசெம்முகமற்றைக்கண்ணெற்றி
புணர்ந்திருகுஞ்சியங்குத்தமனார்க்கே. (௨௪)

உத்தமன்சோதியுளொருபாலனாய்
மத்திமனாகிமலர்ந்தங்கிருந்திடும்
பச்சிமத்திக்கும்பரந்துழிந்தன
சத்திமானாகத்தழைத்தகொடியே. (௨௫)

கொடியாறுசென்றுகுலாவியகுண்ட
மடியிருகோணமாய்நழுமொக்கும்

படியேழுலகும்பரந்தகடனா
மடிபாதுகண்டவர்மாதனமாமே. (௨௬)
மாதனமாகவளர்கின்றவன்னியைச்
சாதனமாகச்சமைந்தகுருவென்றும்
போதனமாகப்பொருந்தவுலகாளும்
பாதனமாகப்பரிந்தருபார்த்தே. (௨௭)

பார்த்திடமெங்கும்பரந்தெழுசோதியை
யாத்தமதாகவேயாய்ந்தறிவாரில்லை
காத்துடலுள்ளேகருதியிருந்தவர்
மூத்துடல்கோடியுகங்கண்டவாறே. (௨௮)

உகங்கண்டவொன்பதுகுண்டமுமொக்க
வகங்கண்டயோகியுண்ணாடியெழுப்பும்
பயங்கண்டுகொண்டவிப்பாய்கருவொப்பச்
சகங்கண்டுகொண்டதுசாதனமாமே. (௨௯)

சாதனைநாலுதழன்மூன்றுவில்வயம்
வேதனைவட்டம்விளையாறுபூநிலை
போதனைபோதைஞ்சுபொற்கயவாரண
நாதனைநாடுநவகோடிதானே. (௩௰) ஆ. ௱௬௧.

சத்திபேதம்-திரிபுராசக்கரம்.

மாமாயைமாயைவயிந்தவம்வைகரி
போமாயையுள்ளொளிபோராறுகோடியிற்
றூமானமந்திரஞ்சத்திதன்மூர்த்திக
ளாமாபல்வார்த்திரிபுரையாங்கே. (௧)

திரிபுரைசுந்தரியந்தரிசிந்தூரப்
பரிபுரைநாரணியாம்பலவன்னத்தி
யிருள்புரையீசிமனோன்மனியென்ன
வருபலவாய்நிற்குமாமாதுதானே. (௨)

தானாவமைந்தவம்முப்புரந்தன்னிடை
தானானமூவுருவோருத்ததன்மையள்
தானானபொன்செம்மைவெண்ணிறத்தாள்கல்வி
தானானபோகமுமுத்தியுநல்குமே. (௩)

நல்குந்திரிபுரைநாதநாதாந்தங்கள்
பல்கும்பராவிந்துபாரண்டமானவை
நல்கும்பரையபிராமியகோசரி
புல்குமருளுமப்போதந்தந்தாளுமே. (௪)

தாளணிநூபுரஞ்செம்பட்டுத்தானுடை
வாரணிகொங்கைமலர்க்கன்னல்வாளிவில்
வேரணியங்குசபாசமெழின்முடி
காரணிமாமணிக்குண்டலக்காதிக்கே. (௫)

குண்டலக்காதிகொலைவிற்புருவத்தள்
கொண்டவரத்தினின்மன்னுகோலத்தள்
கண்டிகையாரங்கதிர்முடிமாமதிச்
சண்டிகைநாற்றிசைதாங்கிநின்றாளே. (௬)

நின்றதிரிபுரைநீளும்புராதனி
குன்றலில்மோகினிமாதிருக்குஞ்சிகை
நன்றறிகண்டிகைநாற்காற்சரீடணி
துன்றியநற்சுத்ததாமரைச்சுத்தையே. (௭)

சுத்தவம்பாரத்தனத்திசுகோதயள்
வத்தவமாயாளுமாசத்திமாபன்னா
யத்தகையானமனோரணிதாளுமாய்
வைத்தவக்கோலமதியவளாகுமே. (அ)

ஆவளையறியாவமரருமில்லை
யவளன்றிச்செய்யுமருந்தவமில்லை
யவளன்றியைவராலாவதொன்றில்லை
யவளன்றியூர்புகுமாறறியேனே. (கூ)

அறிவார்பராசத்தியானந்தமென்பா
ரறிவாரறிவுருவாமவளென்பா
ரறிவார்கருமமவளிச்சையென்பா
ரறிவார்பரனுமவளிடந்தானே. (ய)

தானெங்குளதங்குளதையன்மாதேவி
யூனெங்குளவங்குளுயிர்க்காவலன்
வானெங்குளவங்குளைவந்துமப்பால்தான்
கோனெங்குநின்றகுறியலபாரோ, (யக)

பராசத்திமாசத்திபல்வகையாலுந்
தராசத்தியாய்நின்றதன்மையுணரா
ருராசத்திபூழிகடோறுமுடனே
புராசத்திபுண்ணியமாகியபோகமே. (யஉ)

போகஞ்செய்சத்திபுரிகுழலாளொடும்
பாகஞ்செய்தாங்கேபராசத்தியாய்நிற்கு
மாகஞ்செய்தாங்கேயடியவர்நாடோறும்
பாகஞ்செய்ஞானம்படர்கின்றகொம்பே. (யங)

கொம்பனையாளைக்குவிமுலைமங்கையை
வம்பவிழ்கோதையைவானவர்நாடியைச்
செம்பவளத்திருமேனிச்சிறுமியை
நம்பியென்னுள்ளேநயந்துவைத்தேனே. (௰௪)

வைத்தபொருளுமருவுயிர்ப்பன்மையும்
பத்துமுகமும்பரையும்பராபரைச்
சித்தக்கரணச்செயல்களுஞ்செய்திடுஞ்
சத்தியும்வித்தைத்தலையவளாமே. (௰௫)

தலைவிதடமுலைமேனிவ்றதை[illegible]ல்
தொலைவிற்றவஞ்செயுந்தூய்நெறித்தோகை
கலைபலவென்றிடுங்கன்னியென்னுள்ள
நிலைபெறவிங்கேநிறைந்துநின்றாளே. (௰௬)

நின்றவனேரிழைநீள்கலையோடுற
வென்றனகம்படிந்தேழுலகந்தொழ
மன்றதுவொன்றிடமேனுன்மணிமங்கலி
யொன்றென்னவொன்றிநின்றொத்தடைந்தாளே ()

ஒத்தடங்குங்கமலத்திடையாயிழை
யத்தகைசெய்கின்றவாயபெரும்பதி
மத்தடைகின்றமனோன்மணிமங்கலி
சித்தடைக்கும்வழிதேர்ந்துணரார்களே. (௰௮)

உணர்ந்துடனேநிற்குமுள்ளொளியாகி
மணங்கமழ்பூங்குழன்மங்கையுந்தானும்
புணர்ந்துடனேநிற்கும்போதருங்காலைக்
கணிந்தெழுவார்க்குக்கதியளிப்பாளே. (௰௯)

அளியொத்தபெண்பிள்ளையானந்தசுந்தரி
புளியுறுபுன்பழம்போலுள்ளநோக்கித்
தெளியுறுசித்துச்சிவகதிகாட்டி
யொளியுறவைத்தென்னையுய்யவுண்டாளே. (உ௰)

உண்டில்லையென்றதுருச்செயநின்றது
வண்டில்லைமன்றினுள்மன்னிநிறைந்தது
கண்டிலர்காரணகாரணிதம்மொடு
மண்டலமூன்றுறமன்னிநின்றாளே. (உ௧)

நின்றாளவன்றன்னுடலுமுயிருமாயச்
சென்றனள்சிவகதிசேருபராசத்தி
யொன்றாகவென்னுட்புகுந்துணர்வாகியே
நின்றாள்பரஞ்சுடரேடங்கையாளே. (உ௨)

ஏடங்கைநங்கையிறையெங்கண்முக்கண்ணி
வேடம்படிகம்விரும்பும்வெண்டாமரை
பாடுந்திருமுறைபார்ப்பினிபாதங்கள்
சூடுமென்சென்னிவாய்த்தோத்திரஞ்சொல்லுமே. ()

தோத்திரஞ்செய்துதொழுதுதுணையடி
வாய்த்திடவேத்திவழிபடுவ்வாறிரும்
பார்த்திடுமங்குசபாசம்பசுங்கரும்
பார்த்திடும்பூம்பிள்ளையாகுமாமாதிக்கே. (உ௪)

ஆதிவிதமிகுத்தண்டந்தமால்தங்கை
நீதிமலரின்மேனேரிழைநாமத்தைப்
பாதியில்வைத்துப் பலகாற்பயில்விரேற்
சோதிமிகுத்துமுக்காலமுந்தோன்றுமே. (உ௫)

மேதாதியீரொட்டுமாகியமெல்லியல்
வேதாதிநூலின்விளங்கும்பராபரை
யாதாரமாகியேயாய்ந்தபரப்பினை
ளுதாதிநாதத்துணைல்லருளாளே. (உசு)

அருள்பெற்றவர்சொல்லவாரீர்மனிதர்
பொருள்பெற்றசிந்தைப்புவனாபதியார்
மருளுற்றசிந்தையைமாற்றியருமைப்
பொருளுற்றசேவடிபோற்றுவனே. (உஎ)

ஆனவராகமுகத்திபதத்தின
னீனவராகமிடிக்குமுசலத்தோ
மேனையவேள்படையேந்தியவெண்ணகை
யூனமறவுணர்ந்தாருளத்தோங்குமே. (உஅ)

ஓங்காரியென்பாளவளொருபெண்பிள்ளை
நீங்காதபச்சைநிறத்தையுடையவ
ளாங்காரியாகியேயைவரைப்பெற்றிட்டு
றீங்காரத்துள்ளேயினிதிருந்தாளே. (உகூ)

தானேதலைவியெனநின்றதற்பரை
தானேயுயிர்வித்தாய்த்தந்தபதினாலும்
வானோர்தலமுமனமுதற்புத்தியுந்
தானேசிவகதிதன்மையுமாமே. (௩0) ஆ. ௱கூ௩.

---

வயிரவிமந்திரம்.

பன்னிரண்டாங்கலையாதிபயிரவி
தன்னிலகாரமுமாயையுங்கற்பித்துத்

பல்லிரண்டாதியோடந்தப்பதினாலுஞ்
சொல்லிலசோடசமந்தமென்றோதிட்ட (௧)
அந்தப்பதினாலுமதுவேவயிரவி
முந்துநடுவுமுடிவுமுதலாகச்
சிந்தைகலசத்தெழுகின்றமாசத்தி
யந்தமுமாதியுமாகிநின்றாளே. (௨)

ஆகின்றமூவருமங்கேபடைகுவர்
போகின்றபூதம்பொருந்துபுராதார்
சார்கின்றசார்வழிசாரார்சதிர்பெறப்
போகுந்திரிபுரைபுண்ணியத்தோரே. (௩)

புண்ணியநந்திபுனிதன்றிருவாகு
மெண்ணியநாட்களிருபத்தேழ்கும்மதி
பண்ணியவல்லிபகலோன்மதிமீது
திண்ணியசிந்தைதன்றென்னனுமாமே. (௪)

தென்னன்றிருநந்திசேவகன்றன்னொடும்
பொன்னங்கிரியிற்பூதலம்போற்றிடும்
பன்னும்பரிபிடியந்தம்பகவனே
யென்னுந்திரிபுரையோதிநின்றானுக்கே (௫)

ஓதியநந்தியுணருந்திருவரு
ணீதியில்வேதநெறிவந்தனாசெய்யும்
போதமிருபத்தெழுநாள்புணர்மதி
சோதிவயிரவிசூலம்வந்தாளுமே. (௬)

சூலங்கபாலங்கையேந்தியசூலிக்கு
நாலாங்கரமுளநாகபாசாங்குச,

மாலங்கயனறியாதவடிவுக்கு
மேலங்கமாய்நின்றமெல்லியலாளே. (௭)

மெல்லியல்வஞ்சிவிடமிகலைக்ஞானி
சொல்லியகிஞ்சுகநிறமன்றுசேயிலைஃழ
கல்லியலொப்பதகாறூர்திருமேனி
பல்லியலாடையும்பன்மணித்தானே, (௮)

பன்மணிசந்திரகோடிதிருமுடி
சொன்மணிகுண்டலக்காதியுழைக்கண்ணி
தன்மணிசூரியசோமநயனத்தள்
பொன்மணிவன்னியும்பூரிக்கின்றளே. (௯)

பூரித்தபூவிதழெட்டினுக்குள்ளேயோ
ராரியத்தாளுண்டங்கெண்மர்கன்னியர்
பாரித்தபெண்களறுபத்துநால்வரும்
சாரித்துச்சத்தியைத்தாங்கள்கண்டாரே. (௰)

கண்டசிலம்புவளைசங்குசக்கர
மெண்டிசையோகியிறைவிபராசத்தி
யண்டமொடெண்டிசைதாங்குமருட்செல்வி
புண்டரிகத்தியுள்பூசனையாளே. (௰௧)

பூசனைசெந்தம்பனைமலர்மாகோடி
யோசனைபஞ்சதிதொலிவர்துணைசெய்யும்
வாசமிலாதமணிமந்திரயோகந்
தேசந்திகழுந்திரிபுராகாணே, (௰௨)

காணும்பலபலதெய்வங்கள்வெவ்வேறு
பூணும்பலபலபொன்போலத்தோற்றிடும்

பேணுஞ்சிவனும்பிரமனுமாயனுங்
காணுந்தலைவிநற்காரணிதானே (௰௩)

காரணமந்திரமோதுஞ்சமலத்துப்
பூரணகும்பவிமாசம்பொருந்திய
நாரணிநந்திநவங்குரைசெய்த-
வாரணவேதநூலந்தமுமாமே, (௰௪)

அந்தநவிரலாதிசிறுவிரல்
வந்தவழிமுறைமாறியுரைசெய்யுஞ்
செந்தமிழாதிதெளிந்துவழிபடு
நந்தியிதனைநவமுரைத்தானே (௰௫)

உரைத்தநவசத்தியொன்றுமுடிய
நிரைத்தவிராசிநெடுமுறையெண்ணிப்
பிரைச்சதமெட்டுமுன்பேசியநந்தி
நிரைத்துநிட்கிதியமஞ்செய்தானே. (௰௬)

நாமக்குழலிதயைக்கண்ணியுண்ணின்ற
வேமத்திருளறவீசுமிளங்கொடி
யோமப்பெருஞ்சுடருள்ளெழுநுண்புகை
மேவித்தமுதொடுமீண்டதுகாணே. (௰௭)

காணுமிருதயமந்திரமுங்கண்டு
பேணுநமவென்றுபேசுந்தலைமேலே
வேணுநடுவுமிகநின்றவாகுதி
பூணுநடுவென்றவந்தஞ்சிகையே, (௰௮)

சிகைநின்றவந்தக்கவசங்கொண்டாதி
பகைநின்றவங்கத்தைப்பாரொன்றுமாதித்

தொகைநின்றநேத்திரமுத்திரைசூலம்
வகைநின்றயோனிவருத்தலுமாமே. (௰௯)

வருத்துமிரண்டுஞ்சிறுவிரன்மாறிப்
பொருத்தியணிவிரற்சுட்டிப்பிடித்து
நெறித்தோன்றவைத்துநெடிதுநடுவே
பெருத்தவிரலிரண்டுள்புக்குப்பேசே. (௨௰)

பேசியமந்திரமிகாரம்பிறித்துரை
கூசமிலாதசகாரத்தைமுன்கொண்டு
வாசிப்பிராணனுபதேசமாகைக்குக்
கூசியவிந்துவுடன்கொண்டுகூவே. (௨௧)

கூவியசிவன்பிராணன்முதலாகப்
பாவியல்சவ்வுடன்பண்ணும்யகாரத்தை
மேவியமானயவிரிசங்குமுத்திரை
தேவிநடுவுட்டிகழ்ந்துநின்றுளே. (௨௨)

நின்றவயிரவிநீலிநிசாசரி
யிரண்டுமிரண்டுமொருங்கியவுள்ளத்துச்
சென்றருளுயகிதேவர்பிரானுக்கே
நன்றருண்ஞாலத்துநாடிடுஞ்சாற்றியே. (௨௩)

சாற்றியவேதஞ்சராசரமைம்பூத
நாற்றிசைமுக்கண்ணிநாடியிருள்வெளி
தோற்றுமுயிர்ப்பன்மைசோதிப்பராபரை
யாற்றலொடாய்நிற்குமாதிமுதல்வியே. (௨௪)

ஆதிவயிரவிகன்னித்துறைமன்னி
யோதியுணரிலுடலுயிரீசனும்

பேதையுலகிற்பிறவிகளுசமா
மோதவுலவாதகோலமொன்றுகுமே. (௨௫)

கோலக்குழலிகுலாயபுருவத்த
ணிலக்குவளைமலரன்னகண்ணிரு
ளாலிக்குமின்னமுதானந்தசுந்தரி
மேலிச்சிவத்தைவெளிப்படுத்தாளே. (௨௬)

வெளிப்படுவித்துவிளைவறிவித்துத்
தெளிப்படுவித்தென்சிந்தையினுள்ளே
களிப்படுவித்துக்கதிர்ப்படுசோதியை
யொளிப்படுவித்தென்னையுய்யக்கொண்டாளே. (௨௭)

கொண்டனள்கோலங்கோடியனேகங்கள்
கண்டனளெண்ணெண்கலையின்கண்மாலைகள்
விண்டனன்மேலைவிரிகதிர்மூன்றையுந்
தண்டலைமேனின்றதையனல்லாளே. (௨௮)

தையனல்லாளைத்தலத்திற்றலைவியை
மையலைநோக்குமனோன்மணிமங்கையை
பையநின்றேத்திப்பணிமின்பணிந்தபின்
வெய்யபவமினிமேலிலாவே. (௨௯)

வேயனதோளிவிளையுறுமென்மல
ரோயகுழலியிளம்பிறையேந்திழை
தூயசடைமுடிசூலினிசுந்தரி
பேயெனதுள்ளத்தினிதிருந்தாளே. (௩௰)

இனியதெனமூலையிருக்குங்குமரி
தனியொருநாயகிதானேதலைவி

தனிபடுவித்தனள்சார்வுபடுத்து
நனிபடுவித்துள்ளநாடிநின்றாளே. (௫௧)

நாடியகண்மூன்றுநடுவெழுஞானத்துக்
கூடியிருந்தகுமரிகுலக்கன்னி
யாடகச்சீறடியம்பொற்சிலம்பொலி
யூடகமேவியுறங்குகின்றாளே. (௫௨)

உறங்குமளவின்மனோன்மனிவந்து
கறங்குவளைக்கைக்கழுத்தாரப்புல்லி
பிறங்கொளித்தம்பலம்வாயினுமிழ்ந்திட்
டுறங்கலையாவென்றுபாயஞ்செய்தாளே. (௫௩)

உபாயமளிக்குமொருத்தியென்னுள்ளத்
தபாயமறக்கெடுத்தன்புவிளைத்துச்
சுவாவைவிளக்குஞ்சுழியகத்துள்ளே
யவாவையடக்கிவைத்தஞ்சலென்றாளே. (௫௪)

அஞ்சொன்மொழியாளருந்தவப்பெண்பிள்ளை
செஞ்சொன்மடமொழிசீருடைச்சேயிழை
தஞ்சமென்றெண்ணித்தன்சேவடிபோற்றுவார்க்
கிஞ்சொலளிக்குமிறைவியென்றோமே. (௫௫)

ஆருயிராயுமருந்தவப்பெண்பிள்ளை
காரிபல்கோதையள்காரணிநாரணி
யோருமுயிருமுலகுமொடுங்கிடுங்
கோரியென்னுள்ளங்குலாவிநின்றாளே. (௫௬)

குலாவியகோலக்குமரியென்னுள்ள
நிலாவியிருந்துநெடுந்தாளணைந்து

மூலாவியிருந் துணர்ந் துச்சியினுள்ளே
கலாவியிருந்தகலைத்தலையாளே. (ருஎ)

கலைத்தலைநெற்றியொர்கண்ணுடைக்கண்ணுள்
முலைத்தலைமங்கைமுயங்கியிருக்குஞ்
சிலைத்தலையாயதெரிவினைநோக்கி
யலைத்தபூங்கொம்பினளாங்கிருந்தாளே. (ருஅ)

இருந்தனளேந்திழையென்னுள்ளமேவிப்
பொருந்திருநால்விரல்புக்கனள்புல்கித்
திருந்தியதாணுவில்சேர்ந்துடனொன்றி
யருந்தவமெய்தினளாதியினாளே. (ருகூ)

ஆதியனாதியகாரணிகாரணி
சோதியசோதிசுசம்பாசுந்தரி
மாதுசமாதிமனோன்மனிமங்கலி
யோதியென்னுள்ளத்துடனியைந்தாளே. (சுய)

இயைந்தனளேந்திழையென்னுளமேவி
நயந்தனளங்கேநமசிவவென்னும்
பயன்றலையோரும்பதமதுபற்றும்
பெயர்ந்தனள்மற்றும்பிறப்பறுத்தாளே. (சுக)

பிறப்பிலிழிந்தனர்பேதைமனிதர்
முயற்றியின்முத்திபருளுமுதல்வி
சயந்திகழ்முக்கண்ணுஞ்செம்பவளச்செவ்வாய்
முசத்தருநோக்குமுமுன்னுள்ளதாமே. (சுஉ)

உள்ளதிதயத்துமிரேஞ்சத்தொருமூன்றுள்
பின்னைத்நடமுமெளம்பசப்பிறந்தது

வள்ளத் திருவினை வயத்தினுண் மாமாயக்
கள்ள வொளியின் கருத்தாகுங் கன்னியே. (௪௩)

கன்னியுங் கன்னியழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி
பன்னிய நன்னூற் பகவரு மங்குள
வென்னவிம் மாயையி ருளது தானே. (௪௪)

இருளது சத்தி வெளியது எம்மண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துளின்பத்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
யருளது செய்யு மெம்மாதிப் பிரானே. (௪௫)

ஆதியனாதியுமாய பராசத்தி
பாதி பராபரை மேலுறைபைந் தொடி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
யோது மென்னுள்ளத்துடன் முகிழ்ந்தாளே. (௪௬)

ஓதிய வண்ணங் கலையினுயர்கலை
யாதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவமாய் நிற்ப
ளாதியென் றோதினளாவின் கிழத்தியே. (௪௭)

ஆவின் கிழத்தி நல்லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடுந்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. (௪௮)

வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவமாய் நிற்ப



ளேனயடிமைகொண்டவேந்திழையீசன்
கணவனேக்காணவருந்தியுமாமே. (சகூ)

ஆதியருதியகாரணிகாரணி
வேதமதாய்ந்தனள்வேதியர்க்காய்நின்ற
சோதிதனிச்சுடருருவமாய்நிற்கும்
பாதிபராபரைபன்னிரண்டாதியே. (ருய) ஆ உசக.

பூரணசத்தி.

அளந்தேனகலிடத்தந்தமுமீறு
மளந்தேனகலிடத்தாதிப்பிரானே
யளந்தேனகலிடத்தாளுடுபெண்ணு
மளந்தேனவனருளாய்ந்துணர்ந்தேனே. (க)

உணர்ந்திலரீசனேபூழிசெய்சத்தி
புணர்ந்ததுபூரணம்புண்ணியர்தங்கள்
கணங்களைத்தன்னருட்செய்கின்றகன்னி
குணர்ந்தவழிகொண்டுகும்பகமாகுமே. (உ)

கும்பக்களிறைந்துங்கோலொடுபாகனும்
வம்பித்திகழுமணிமுடிவண்ணனு
மின்பக்கலவியினிதறைதையனு
மின்பக்கலவியுளாயொழிந்தாரே. (ஙு)

இன்பக்கல்வியிலிட்டெழுகின்றதோ
ரன்பிற்புகவல்லனுமெங்களப்பனுந்
துன்பக்குழப்பிற்றுயருறும்பாசத்து
ளென்பிற்பராசத்தியென்னம்மைதானே. (ச)

மன்னம்மையென்னப்பனென் னுஞ்செருக்கற்று
வுன்னம்மையூழித்தலைவனுமங்குளன்
மன்னம்மையாகியருவியுமாசெயும்
பின்னம்மையாய்நின்றபேர்நந்திதானே. (௫)

தார்மேலுறைகின்றதண்மலர் நான்முகன்
பார்மேலிருப்பதொருநூறுதானுள
பூமேலுறைகின்றபோதகம்வந்தன
நாமேலுறைகின்றநாயகியாணையே. (௬)

ஆணையமாய்வருந்தானுளிருந்தவர்
மாணையமாயமனத்தையொருக்கிப்பின்
பாணையமாயபரத்தையறிந்தபின்
றூணையமாயதனுதனந்தானே. (௭)

தானேயெழுந்தவித்தத்துவநாயகி
வானேயொழுந்துமறியைவிளக்கின
டேனேயொழுகின்றதீபத்தொளியுடன்
மானேகடமுடைமன்றறியீரோ. (௮)

அறிவானமாயையுமைம்புலக்கூட்டத்
தறிவானமங்கையருளதுசேரில்
பிறியாவறிவறிவாருள்ளம்பேணு
நெறியாயசித்தநினைந்திருந்தானே. (௯)

இரவும்பகலுமிலாதவிடத்தே
குரவஞ்செய்கின்றகுழலியைநாடி
யரவஞ்செய்யாமலருடன் றூங்கப்
பருவஞ்செய்யாததோர்பாலதுமாமே. (௰)

பாலனுமாகும்பராசத்திதன்னொடு
மேலனுங்காவித்துநாதங்கள்விட்டிட
மூலமதாமெனுமுத்திக்குநேர்படச்
சாலவுமாய்நின்றதற்பரந்தானே. (௰௧)

நின்றபராசத்திநீள்பரன்றன்னொடு
நின்றறிஞானமுமிச்சையுமாய்நிற்கு
நன்றறியுங்கிரியாசத்திநண்ணவே
மன்றனவற்றுண்மருவிநிந்தானே. (௰௨)

மருவொத்தமங்கையுந்தானுமுடனே
யுருவொத்துநின்றமையொன்றுமுணராக்
கருவொத்துநின்றுகலக்கின்றபோது
திருவொத்தசிந்தைவைத்தெந்தைநின்றானே. (௰௩)

சிந்தையினுள்ளேதிரியுஞ்சிவசத்தி
விந்துவுநாதமுமாயேவிரிந்தனள்
சந்திரபூமிசடாதரிசாத்தவி
யந்தமொடாதிபதாம்வண்ணத்தாளே. (௰௪)

ஆதியிருந்தவமுதபயோதரி
மாதியிருந்தவழியறிவாரில்லை
தேதியிருந்துநற்றீபத்தொளியுட
னாதியிருந்தனனுள்ளுடையார்க்கே. (௰௫)

உடையவனங்கியுருத்திரசோதி
விடையவனேறிவிளங்கியிருக்குங்
கடையவர்போயிடுங்கண்டவர்நெஞ்சத்
தடையதுவாயசாதகர்தாமே. (௰௬)

தார்மேலுறைவிடமாறிதழானது
பார்மேலிதழ்பதினெட்டிருநூறுள
பூமேலுறைகின்றபுண்ணியவர்தனள்
பார்மேலுறைகின்றபைங்கொடியாளே. (௰எ)

பைங்கொடியாளும்பரமனிருந்திடந்
திங்கொடியாகத்திகழ்தருசோதியாம்
விண்கொடியாகிவிளங்கிவருதலாற்
பெண்கொடியாகநடந்ததுலகே. (௰அ)

நடந்ததுவம்மலர்நாலுடனஞ்சா
யிருந்தனர்கன்னிகளெட்டுடனொன்றாய்ப்
படர்ந்ததுதன்வழிப்பங்கயத்துள்ளே
தொடர்ந்ததுவுள்வழிச்சோதியடுத்தே. (௰கூ)

அடுக்குந்தாமரையாதியிருப்பிட
மெடுக்குந்தாமரையிலக்கத்துள்ளது
மடுக்குந்தாமரைமத்தகத்தேசெல
முடுக்குந்தாமரை முச்சதிரத்தே. (உ௰)

முச்சதிரத்தேயெழுந்தமுளைச்சுட
ரெச்சதிரத்துமிடப்பெறவோடிடக்
கைச்சதிரத்துக்கடந்துளொளிபெற
வெச்சதிரத்தமிருந்தனடானே, (உக)

இருந்தனடன்முகமாறெட்டுநாலாய்ப்
பரந்தனவாயுதிசைதிசைதோறுங்
குவிந்தனமுத்தின்முகவொளிநோக்கி
நடந்ததுதேறலதோமுகமட்டே. (உஉ)

அம்பன்னகண்ணியரிவைமனோன்மனி
கொம்பன்னநுண்ணிடைக்கோதைகுலாவிய
செம்பொன்செய்யாக்கைசெறிகமழ்நாடொறு
நம்பனைநோக்கிநவிலுகின்றாளே. (௨௩)

நவிலும்பெருந்தெய்வநான்மறைச்சத்தி
துகிலுடையாடைநிலம்பொதிபாத
மகிலமுமண்டமுழுதுஞ்செய்மாது
புகலுமுச்சோதிபுனைபதிப்பாளே. (௨௪)

புனையவல்லாள்புவனத்திறையெங்கள்
வினையவல்லாளண்டகோடிகளுள்ளே
புனையவல்லாள்மண்டலத்தொளிதன்னை
புனையவல்லாளையும்போற்றியென்பேனே! (௨௫)

போற்றியென்பேன்புவனாபதியம்மையென்
ஏற்றலுணிற்குமருந்தவப்பெண்பிள்ளை
சீற்றங்கடிந்ததிருநுதற்சேயிழை
கூற்றந்துரக்கின்றகொள்பைந்தொடியையே. (௨௬)

தொடியார்தடக்கைச்சுகோதயசுந்தரி
வடிவார்திரிபுரையாமங்கைகங்கைச்
செடியார்வினைகெடச்சேர்வரையென்றன்
னடியார்வினைகெடுத்தாதியுமாமே. (௨௭)

மெல்லிசைப்பாவைவியோமத்தின்மென்கொடிப்
பல்லிசைப்பாவைப்பயன்றருபைங்கொடி
பல்லிசைப்பாவையைப்போகத்துரந்திட்டு
வல்லிசைப்பாவைமனம்புகுந்தாளே; (௨௮)

தாவித்தவப்பொருட்டானவனெம்மிறை
பாவித்துலகம்படைக்கின்றகாலத்து
மேவிப்பராசத்திமேலொடுகீழ்தடர்ந்
தாவிக்குமப்பொருட்டாமதுதானே. (உ௬)

அதுவிதுவென்பரவனையறியார்
கதிவரநின்றதோர்காரணங்காணார்
மதுவிரிபூங்குழன்மாமங்கைநங்கை
திதமதுவுண்ணார்கடேர்ந்தவர்தாமே. (௩௰) ஆ. உ௱௭௧.

---

ஆதாரவாதேயம்.

நாலிதழாறிலவிர்ந்ததுதொண்ணூறு
தானிதழானவைநாற்பத்துநாலுள
பாலிதழானவப்பங்கயமூலமாய்த்
தானிதழாகித்தரித்திருந்தாளே. (௧)

தரித்திருந்தாளவடன்னொளிநோக்கி
விரித்திருந்தாளவள்வேதப்பொருளைக்
குறித்திருந்தாளவள்கூறியவைந்து
மறித்திருந்தாளவள்மாதுநல்லாளே. (உ)

மாதுநல்லாளுமணாளனிருந்திடப்
பாதிநல்லாளும்பகவருமானது
சோதிநல்லாளைத்துணைப்பெய்யவல்லிரேல்
வேதனைதீர்தரும்வெள்ளடையாமே (௩)

வெள்ளடையானிருமாமிகுமாமலர்க்
கள்ளடையாரக்கமழ்கழலார்மன

மன்னுடையானும்வலைத்திறமாய்நின்ற
பெண்ணொருபாகம்பிறவிபெண்ணாமே. (௪)
பெண்ணொருபெண்ணைப்புணர்ந்திடும்போதமை
பெண்ணிடையானும்பிறந்துகிடந்தது
பெண்ணுடையாணென்பிறப்பறிந்தீர்க்கின்ற
பெண்ணுடையாளிடைப்பேச்சற்றவாறே. (௫)
பேச்சற்றநன்பொருள்காணும்பெருந்நகை
மாச்சற்றசோதிமனோன்மனிமங்கையாங்
காச்சற்றசோதிகடவுளுடன்புணர்ந்
தாச்சென்றனுள்புகுந்தாலிக்குந்தானே. (௬)
ஆலிக்குங்கன்னிபருமைமனோன்மனி
பாலித்துலகிற்பரந்தபெண்ணாகும்
வேலைத்தலைவியைவேதமுதல்வியைப்
பாவித்தொருவனுகர்ந்துநின்றானே. (௭)
உகந்துநின்றானம்பியொண்ணுதற்கண்ணோ
டுகந்துநின்றானம்முலைபுகநோக்கி
யுகந்துநின்றானிவ்வுலகங்களெல்லா
முகந்துநின்றானவடன்றோடொகுத்தே, (௮)
குத்துமுலைச்சிகுழைந்தமருங்கின
டொத்திவிரிந்தசுணங்கினடமொழி
பத்தகச்சிறடிப்பாலவயுணர்வினைத்
தொத்தகருத்துச்சொல்லகில்லேனே. (௯)
சொல்லவொண்ணாதவழற்பொதிமண்டலஞ்
சொல்லவொண்ணாததிசைத்தங்கிருப்பார்கள்

வெல்லவொண்ணாகவினைத்தனிநாயகி
மல்லவொண்ணாதமனோன்மணிதானே. (௰)

தானேயிருநிலந்தாங்கிவிண்ணாய்நிற்குந்
தானேசுடுமங்கிஞாயிறுந்திங்களுந்
தானேமழைபொழிதையலுமாய்நிற்குந்
தானேவடவரைத்தண்கடற்கண்ணே. (௰௧)

கண்ணுடையாளைக்கலந்தங்கிருந்தவர்
மண்ணுடையாரைமனிதரிற்கூட்டொணாப்
பண்ணுடையார்கள்பலதைப்பற்றிருந்தவர்
விண்ணுடையார்களைமேலுறக்கண்டே. (௰௨)

கண்டெண்டிசையுங்கலந்துவருங்கன்னி
பண்டெண்டிசையும்பராசத்தியாய்நிற்கும்
விண்டெண்டிசையும்விரைமலர்க்கைக்கொண்டு
தொண்டெண்டிசையுந்தொழநின்றகன்னியே. (௰௩)

கன்னியொளியெனநின்றவிச்சந்திரன்
மன்னியிருக்கின்றமாளிகைசெந்திறஞ்
சென்னியிருப்பிடஞ்சேர்பதினாறுடன்
பன்னியிருப்பர்பராசத்தியாமே. (௰௪)

பராசத்தியென்றென்றுபல்வகையாலுந்
தராசத்தியானதலைப்பிரமாணி
யிராசத்தியாமளவாகமத்தாளாகுங்
குராசத்திகோலம்பலவுணர்ந்தேனே. (௰௫)

உணர்ந்துலகேழையும்யோகினிசத்தி
யுணர்ந்துயிராய்நிற்குமுன்னதனீசன்

புணர்ந்தொருகாலத்துப்போகமதாகி
யிணைந்துபரமென்றிசைந்திருந்தானே. (௰௬)

இதுவப்பெருந்தகையெப்பெருமானும்
பொதுவக்கல்வியும்போகமுமாகி
மதுவக்குழலிமனோன்மணிமங்கை
யதுவக்கல்வியுளாயுழிபோகமே. (௰௭)

யோகநற்சத்தியொளிபீடந்தானாகும்
யோகநற்சத்தியொளிமுகந்தெற்காகும்
யோகநற்சத்தியுதரநடுவாகும்
யோகநற்சத்திதாளுத்தரந்தேரே. (௰௮)

தேர்ந்தெழுமேலாஞ்சிவனங்கியோடுற
வார்ந்தெழுமாயைமந்தமதாய்நிற்கு
மோர்ந்தெழுவிந்துவுநாதமுமோங்கிடக்
கூர்ந்தெழுகின்றனள்கோல்வளைதானே. (௰௯)

தானானவாறெட்டதாம்பரைக்குண்மிசை
தானானவாறுமீரேழுஞ்சமைகலை
தானானவிந்துசகமேபரமெனுந்
தானாம்பரவாதனையெனத்தக்கதே. (உ௰)

தக்கபராவித்தைதானிருப்பாளெழிற்
றக்கெழுமோருத்திரஞ்சொல்லச்சொல்லவே
மிக்கிடுமென்சத்திவெண்ணிறமுக்கண்ணி
தொக்கத்தையோடுதோண்முத்திரையாளே. (உ௧)

முத்திரைமூன்றின்முடிந்தமெய்ஞ்ஞானத்தா
னத்துவமாயல்லவாயசகலத்தன்

வைத்தபராபரனுயபராபரை,
சத்தியுமானந்தசத்தியுங்கொங்கே. (உஉ)

கொங்கின்றகொம்பின் குரும்பைக்குலாங்கன்னி
பொங்கியகுங்குமத்தொளிபொருந்தின
வங்குசபாசமெனுமகிலங்கனி
தங்குமவள்மனைதானறிவாயே (உ௩)

வாயுமனமுங்கடந்தமனோன்மனி
பேயுங்கணமும்பெரிதுடைப்பெண்பிள்ளை
யாயுமறிவுங்கடந்தவரனுக்குத்
தாயுமகளுநற்றாரமுமாமே. (உ௪)

தாரமுமாகுவடத்துவமாய்நிற்பள்
காரணகாரியமாகுங்கலப்பினள்
பூரணவிந்துபொதிந்தபுராதனி,
பாரளவாந்திசைபத்துடையாளே. (உ௫)

பத்துமுகமுடையாணம்பராசத்தி
வைத்தனளாறங்கநாலுடன்றான்வேத
மொத்தனளாதாரமொன்றுடனேங்கியே
நித்தமாய்நின்றுளெம்நேரிழைகூடோ. (உ௬)

கூரியல்கண்ணிகுலாயபுருவத்தள்
சீரியளாயுலகேழுந்திகழ்ந்தவ
ளாரியநங்கையமுதபயோதரி
பேருயிராளிபிறிவறுத்தாளே. (உ௭)

பிறிவின்றிநின்றபெருந்தகைப்பேதை
குறியொன்றிநின்றிடுங்கோமளக்கொம்பு

பொறியொலிநீங்கிநற்புணர்ச்சிசெய்தாங்கோ
யறிவொடுநீத்தனளாருயிருள்ளே, (உஅ)

உள்ளத்திருள்ளேயுடனிருந்தைவர்தங்
கள்ளத்தைநீக்கிச்சலந்தடைபுல்கிக்
கொள்ளத்தவநெறிகூடியவின்பத்து
வள்ளற்றலைவிமருட்டிப்புரிந்தே (உகூ)

புரிந்தருள்செய்கின்றபோகமாசத்தி
யிருந்தருள்செய்கின்றவின்பமறியார்
பொருந்தியிருந்தபுதல்விபூவண்ணத்
திருந்தவிலக்கியிலிருந்தாளே. (௩௰)

இருந்தனளேந்திழையென்னுள்ளமேவித்
திருந்துபுணர்ச்சியிற்றேர்ந்துணர்ந்துன்னி
நிரந்தரமாகியநிரதிசயமொடு
பொருந்தவிலக்கின்புணர்ச்சியதுவே (௩௧)

அதுவிதுவென்னுமவாவினைநீக்கித்
துதிபதுசெய்துசுழிபுறநோக்கில்
விதிபதுதன்னையும்வென்றிடலாகு
மதிமலரான்சொன்னமண்டலமூன்றே. (௩௨)

மூன்றுளமண்டலமோகினிசேர்விட
மேய்ந்துளவீராறெழுகலையுச்சியிற்
றோன்றுமிலக்குறவாகுதல்மாமாயை
யேற்றனளேழிரண்டிந்துவோடமே. (௩௩)

இந்துவினின்றெழுநாதமிரவிபோல்
வந்தபின்னுக்கின்மதித்தெழுங்கண்டத்தி

ளுந்திய சோதியிதயத் தெழுமொலி
யிந்துவின் மேலுற்றவிற துதானே. (௫௪)

ஈற துதான் முதலெண்ணிரண்டாயிர
மாறுதலின் றிமனோவசமாயெழிற்
றாற துசெய்யுஞ்சுகந்தச்சுழிய து
பேற துசெய் துபிறந்திருந்தாளே. (௫௫)

இருந்தனளேந்திழையீறதிலாகத்
திருந்தியவானந்தஞ் செந்நெறிநண்ணிப்
பொருந்துபுவனங்கள் போற்றிசெய்தேத்தி
வருந்தவிருந்தனள் மங்கைநல்லாளே. (௫௬)

மங்கையுமாரனுந் தம்மொடுகூடிநின்
றங்குலிகூடியகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல்லாளுங் குமாரர்களைவருந்
தங்களின் மேவிச்சடங்குசெய்தாரே. (௫௭)

சடங்கதுசெய் துதவம்புரிவார்கள்
கடந்தனினுள்ளேகருதுவராகிற்
றொடர்ந்தெழுசோதி துணைவழியேறி
யடங்கிடுமன்பினதாயிழைபாலே. (௫௮)

பாலித்திருக்கும்பனிமலராறினு
மாலித்திருக்குமவற்றினகம்படி
சீலத்தைநீக்கத்திகழ்ந்தெழுமந்திர
மூலத்துமேல துமுத்த துவாமே. (௫௯)

முத்துவதனத்திமுகந்தொறுமுக்கண்ணி
சத்திச்சதிரிசகளிசடாதரி

பத்தக்கரத்திபராபரன்பைந்தொடி
வித்தகியென்னுள்ளமேவிநின்றாளே. (௪௰)

மேவியமண்டலமூன்றுடன்கீழெரி
நாவியநற்பதத்தண்மதியங்கதிர்
மூவருங்கூடிமுதல்வியாய்முன்னிற்பா
ரோவினுமேவிடுமுள்ளொளியாமே. (௪௧)

உள்ளொளிமூவிரண்டோங்கியவங்கங்கள்
வெள்ளொளியங்கியின்மேவியவரோடுங்
கள்ளவிழ்கோதைக்கலந்துடனேநிற்குங்
கொள்ளவிசுத்திக்கொடியமுதாமே. (௪௨)

கொடியதிரோதைகுருவுள்ளிருப்பப்
படியதுவாருனைப்பைக்கழலீசன்
வடிவதுவானந்தம்வந்துமுறைமே
யிடிமுதலாறங்கமேந்திழையாளே. (௪௩)

ஏந்திழையாளுமிறைவர்கண்மூவருங்
காந்தாரமாறங்கமுதலீரொட்டு
மாந்தருளந்தியுமந்திராயுவுஞ்
சார்ந்தனரேந்தவிருந்தனள்சத்தியே. (௪௪)

சத்தியென்பாளொருசாதகப்பெண்பிள்ளை
முத்திக்குநாயகியென்பதறிகிலர்
பத்தியைப்பாழிலுகுத்தவப்பாவிகள்
கத்தியநாய்போற்கதறுகின்றாரே. (௪௫)

ஆரேதிருவின்திருவடிகாண்பார்க
ளோரேழுமேழுநூறுமறியுஞ்சுவல்லார்க்குக்

காரோகுழலிகமலமலரன்ன
சீரோயுஞ்சேவடிசிந்தைவைத்தாளே. (௪௬)

சிந்தையில்வைத்துச்சிராதியிலேவைத்து
முந்தையில்வைத்துத்தம்மூலத்திலேவைத்து
நிந்தையில்வையாநினைவதிலேவைத்துச்
சந்தையில்வைத்துச்சமாதிசெய்வீரே. (௪௭)

சமாதிசெய்வார்கட்குத்தான்முதலாகிச்
சிவாதியிலாகுஞ்சிலைநுதலாளை
நவாதியிலாகநயந்ததுவோதி
லுவாதியவளுக்குறைவிலதாமே. (௪௮)

உறைபதிதோறுமுறைமுறைமேவி
நறைகமழ்கோதையைநாடொறுநண்ணி
மறையுடனேநிற்குமற்றுள்ளநான்கு
மிறைநினைப்போதினிலெய்திடலாமே. (௪௯)

எய்திடலாகுமிருவினையின்பயன்
கொய்தளிர்மேனிகுமரிகுலாங்கன்னி
மைதவழ்கண்ணிநன்மாரிதுர்க்கையொடு
கைதவமின்றிக்கருத்துறும்வாறே. (௫௰)

கருத்துறுங்காலங்கருதுமனமுந்
திருத்தியிருந்தவைசேருநிலத்து
வொருத்தியையுன்னியுணர்ந்திடுமன்மே
விருத்திபெண்குணமெய்தலுமாமே. (௫௧)

ஆமையொன்றேறியகம்படியானென
வோமவென்றோதியெம்முள்ளொளியாய்நிற்கு

நாமநறுங்குழற்றைபலைக்கண்டபின்
சோமநறுமலர்சூடிநின்றாளே. (௫௨)

சூடுமெங்குசபாசந்துணைவழி
கூடுமிருவளைக்கோலக்கைக்குண்டிகை
நாடுமிருபதநன்னெடுருத்திர
மாடிடுஞ்சீர்புனையாடகமாமே. (௫௩)

ஆமயன்மாலரனீசன்சதாசிவன்
றாமடிசூடிநின்றெய்தினர்தம்பதங்
காமனுஞ்சாமனிரவிகனலுடன்
சோமனும்வந்தடிசூடநின்றாளே. (௫௪)

சூடுமிளம்பிறைசூலிகபாலினி
நீடுமிளங்கொடிநின்மலிநேரிழை
நாடிநடுவிடைஞானமுருவநின்
றாடுமதன்வழிபண்டமுதல்வியே. (௫௫)

அண்டமுதலாயவனிபரியந்தங்
கண்டதோன்றில்லைகனங்குழையல்லது
கண்டனுங்கண்டியுமாகியகாரணங்
குண்டிகைகோளிகைக்கண்டதனாலே. (௫௬)

ஆலமுண்டானமுதாங்கவர்தம்பதஞ்
சாலவந்தெய்துந்தவத்தின்பத்தான்வருங்
கோலிவந்தெய்துங்குவிந்தபதவையோ
டேலவந்தீண்டியிருந்தனள்மேலே. (௫௭)

மேலாமருந்தவமேன்மேலும்வந்தெய்தக்
காலால்வருந்திக்கழிவர்கணத்திடை

நாலாநளினநின்றேத்திநட்டுச்சிதன்
மேலாமெழுத்தினளாமத்திருளே. (௫௯)

ஆமத்தினிருந்தன்னமயத்தின
ளோமத்திலேயுமொருத்திபொருந்தின
ளமநமசிவவென்றிருப்பார்க்கு
நேமத்துணைவிநிலாவிநின்றாளே. (௬௰)

நிலாமயமாகியநீள்படிகத்தின்
சிலாமயமாகுஞ்செழுந்தரளத்தின்
சுலாமயமாகுஞ்சுரிகுழற்கோதை
கலாமயமாகக்கலந்துநின்றாளே. (௬௧)

கலந்துநின்றாள்கன்னிகாதலனோடுங்
கலந்துநின்றாளுயிர்கற்பனையெல்லாங்
கலந்துநின்றாள்கலைஞானங்களெல்லாங்
கலந்துநின்றாள்கன்னிகாலமுமாயே. (௬௨)

காலவியெங்குங்கருத்துமருத்தியுங்
கூலவியொன்றுகுங்கூடலிழைத்தனள்
மாலினிமாகுலிமந்திரசண்டிகை
பாலினிபாலவன்பாகமதாமே. (௬௩)

பாகம்பராசத்திபைம்பொன்சடைமுடி
யேகமிருதயமீரைந்துதிண்புய
மோகமுகமைந்துமுக்கண்முகந்தொறு
நாகமுரித்துநடஞ்செய்யுநாதர்க்கே. (௬௪)

நாதனுநாலொன்பதின்மருங்கூடிநின்
றோதிடுங்கூட்டங்களோரைந்துளவவை

வேதனுமீரொன்பதின்மருமேவநின்
றாதியுமந்தமுமாகிநின்றாளே. (௬௪)

ஆகின்றநாள்கலையைம்பத்தொருவர்க
ளாகிநின்றார்களிலாருயிராமவ
ளாகிநின்றாளுடனாகியசக்கரத்
தாகிநின்றானவனாயிழைபாடே. (௬௫)

ஆயிழையாளொடுமாதிப்பரமிட
மாயதொரண்டவையாறுமிரண்டுள
வாயமனர்தொறறுமுகமவைதனி
லேயவார்குழலியினிதுநின்றாளே. (௬௬)

நின்றனளேரிழையோடுடனேர்பட
வின்றனகப்படிப்பழுமுயிர்ப்பெய்துந்
றுன்றியவோரொன்பதின்மருஞ்சூழவு
ளொன்றுயர்வோதியுணர்ந்துநின்றாளே. (௬௭)

உணர்ந்தெழுமந்திரமோமெனுமுள்ளே
மணைந்தெழுமாங்கதியாகியதாகுங்
குணர்ந்தெழுசூதனுஞ்சூதியுங்கூடிக்
கணந்தெழுங்காணுமகோமுகையாமே. (௬௮)

ஆமதுவங்கியுமாதியுமீசனு
மாமதுமண்டலமாருதமாதியு
மேமதுசிவஞ்சிதையந்திருண்டிடக்
கோமலர்க்கோதையுங்கோதண்டமாகுமே. (௬௯)

ஆகியகோதண்டத்தாகுமனோன்மணி
யாகியவைம்பத்துடனேயடங்கிடு

மாகும்பராபரையோடப்பரையவ
ளாகுமவளிங்கருமத்தன்தாமே. (௭௰)

தானிகழ்மோகினிசார்வானயோகினி
போனமயமுடையாரடிபோற்றுவ
ரானவராவியிருகியவர்சிவந்
தானும்பரசிவமேலதுதானே. (௭௧)

தானந்தமேமேலதருஞ்சிகைதன்னுட
னானந்தமோகினிபம்பொற்றிருவொடு
மோனையில்வைத்துமொழிதருகூறது
வானவையோமெனுமவ்வுயிர்மார்க்கமே. (௭௨)

மார்க்கங்களின்றமமேருன்மனிமங்கலி
யார்க்குமறிவரியாளவளாகும்
வாக்குமனமுமருவியொன்றாய்விட்ட
நோக்கும்பெருமைக்குநுண்ணறிவாமே. (௭௩)

நுண்ணறிவாகுநுழைபுலன்மாந்தர்க்குப்
பின்னறிவாகும்பிரானறிவத்தடஞ்
சென்னெறியாகுஞ்சிவகதிசேர்வார்க்குத்
தன்னெறியாவதுசன்மார்க்கமாமே. (௭௪)

சன்மார்க்கமாகச்சமைதருமார்க்கமுந்
துன்மார்க்கமானவையெல்லாந்துரந்திடு
நன்மார்க்கத்தேவருநன்னெறியாவதுஞ்
சன்மார்க்கத்தேவியுஞ்சத்தியென்பாளே. (௭௫)

சத்திபுநானுஞ்சயம்புவுமல்லது
முத்தியையாருமுதலறிவாரில்லை.

சத்திமேல்வித்திடிலத்திபமூந்தக்கான்
முத்தியிலேறவழியதுவாமே. (௭௬)

அதுவிதுவென்றவமேகழியாதே
மதுவிரிபூங்குழன்மங்கைநல்லாளைப்
பதிமதுமேவிப்பணியவல்லார்க்கு
விதிவழிதன்னையும்வென்றிடலாமே. (௭௭)

வென்றிடலாகும்விதிவழிதன்னையும்
வென்றிடலாகும்வினைப்பெரும்பாசத்தை
வென்றிடலாகும்விழைபுலன்றன்னையும்
வென்றிடுமங்கைதன்மெய்யுணர்வோர்க்கே. (௭௮)

ஓராம்பதின்மருளொன்றியேநின்றது
பாரம்பரியத்துவந்தபராமிது
மாரன்குழலாளுமப்பதிதானுமுன்
சாரும்பதமிதுசத்தியமாமே. (௭௯)

சத்தியினோடுசயம்புவுநேர்படில்
வித்துவின்றியேயெல்லாம்விளைந்தன
அத்தகையாகியவைம்பத்தொருவருஞ்
சித்தருமேவித்திருந்திடுவாரே. (௮௰)

திருந்தசிவனுஞ்சிலைநுதலாளும்
பொருந்தியவானவர்போற்றிசெய்தேத்த
அருந்திடவவ்விடமாரமுதாக
இருந்தனடானங்கிளம்பிறையென்றே. (௮௧)

என்றமெழுகின்றவேரினையெய்தினர்
நன்றதுவாகுவர்தார்குழலாளொடு

மன்றருகங்கைமதியொடுமாதவர்
துன்றியதாரகைசோதிநின்றாளே. (௮௨)

நின்றனணேரிழையாளொடுநேர்பட
வொன்றியவுள்ளொளியாலேயுணர்ந்தது
சென்றபிராணிகள்சிந்தையில்வேண்டிய
துன்றிடுஞானங்கடோன்றிடுந்தானே. (௮௩)

தோன்றிடும்வேண்டுருவாகியதாய்நெறி
யீன்றிடுமாங்கவளெய்தியபல்கலை
மான்றருகண்ணியுமாரனும்வந்தெதிர்
சான்றதுவாகுவர்தாமவளாயுமே (௮௪)

ஆயுமறிவுங்கடந்தனுவாரணி
மாயமதாகிமதோமதியாயிடுஞ்
சேயவரிவைசிவானந்தசுந்தரி
நேயமதாநெறியாகிநின்றாளே (௮௫)

நெறியதுவாய்நின்றநேரிழையாளைப்
பிறிவதுசெய்யாதுபின்றுசனோடுங்
குறியதுகூடிக்குறிக்கொண்டுநோக்கு
மறிவொடுமாங்கேயடங்கிடலாமே. (௮௬)

ஆமயன்மாலரனீசன்மாலாங்கதி
யோமயமாகியவொன்பதுமொன்றிடந்
தேமயனுளுந்தெளுதெனவென்றிடு
மாமயமானதுவந்தெய்தலாமே. (௮௭)

வந்தடிபோற்றுவர்வானவர்தானவ
ரிந்திரமுதலாகவெண்டிசையோர்களுங்

கொந்தவிழ்க்குழலாளொடுகோனையும்
வந்தனைசெய்யும்வழிநவில்வீரே (௮௮)

நவிற்றுநன்மந்திரநன்மலர்தூயங்
கவற்றிபக்கத்தவர்ந்தெரிதீபம்
பயிற்றுமுலகினிற்பார்ப்பதிபூசை
யவிக்கொண்டசோதிக்கோரர்ச்சனைதானே. (௮௯.)

தாங்கியுலகிற்றரித்தபராபர
னேங்கியகாலத்தொருவனுலப்பிலி
பூங்கிளிதங்கும்புரிகுழலாளன்று
பாங்குடனேத்தப்பராசத்திபோற்றே.. (௯௰)

பொற்கொடிமாதர்புனைகடிமேலத்துவ
ரற்கொடிமாதுமையார்வத்தவிமக
ணற்கொடிமாதைநயனங்கணறுந்துடை
விற்கொடிமாதைவிரும்பிவிளங்கே. (௯௧)

விளங்கொளியாயவிரிசுடர்மாலை
துளங்குபராசத்திதூங்கிருணீக்கக்
களங்கொண்மணியுடன்காமவிநோத
முளங்கொளிலம்பியமொன்றுதுடரே. (௯௨)

துடக்கியுலகினிற்சோதிமருள
ளடங்கியிருப்பதென்னெம்பின்பெருமை
விடங்கொள்பெருஞ்சடைமேல்வருகங்கை
யொடுங்கியமைவொடுமோருருவாமே (௯௩)

உருவம்பலவுயிராய்வந்தநீத்தி
தெருவம்புகுந்தமைதேர்வுறநாடித்

புரிவளைக்கைச்சியெம்பொன்னணிமாதை
மருவியிறையவன்மகிழ்வனமாயமே. (௧௰௪)

மாயம்புணர்க்கும்வளர்சடையானடி
தாயம்புணர்க்குஞ்சலநதியமலனைக்
காயம்புணர்க்குங்கலவியுண்மாசத்தி
யாயம்புணர்க்குமவ்வியோனியுமாமே. (௧௰௫)

உணர்ந்தொழிந்தேனவனுமெங்களீசனைப்
புணர்ந்தொழிந்தேன்புவனாபதியானை
யணைந்தொழிந்தேனெங்களாதிதன்பாதம்
பிணைந்தொழிந்தேன்றனருள்பெற்றவாறே. (௧௰௬)

பெற்றாள்பெருமைபெரியமனோன்மனி
நற்றாளிறைவனைநன்பயனேயென்பர்
கற்றானறியுங்கருத்தறிவார்கட்குப்
பொற்றாளுலகம்புகல்தனியாமே. (௧௰௭)

தனிநாயகன்றனோடென்னெஞ்சநாடி
யினியாரிருப்பிடமேழுலகென்பர்
பனியான்மலர்ந்தபைம்போதுகையேந்திக்
கனியாய்நினைவதென்காரணமம்மையே, (௧௰௮)

அம்மனையம்மையரிவைமனோன்மனி
செம்மனைசெய்துதிருமங்கையாய்நிற்கு
மிம்மனைசெய்தவிந்நிலமங்கையு
மம்மனையாதியமர்ந்துநிற்றாளே. (௧௰௯)

அம்மையுமத்தனுமன்புற்றதல்லது
வம்மையுமத்தனுமாரறிவாரொய்னை

யம்மையொடத்தனுமியானுமுடனிருந்
தம்மையொடத்தனையான்புரிந்தேனே.() ஆ௨ாாஎக,

---

ஏரொளிச்சக்கரம்.

ஏரொளியுள்ளெழுதாமரைநாலிதழ்
ழேரொளிவிந்துவினுலெழுநாதமா
மேரொளியக்கலையெங்குநிறைந்தபின்
னேரொளிச்சக்கரமந்நடுவன்னியே (க)

வன்னியெழுத்தவைமாபலமுள்ளன
வன்னியெழுத்தவைவானுறவோங்கின
வன்னியெழுத்தவைமாபெருஞ்சக்கரம்
வன்னியெழுத்திடுவாறதுசொல்லுமே. (உ)

சொல்லியவிந்துவுமீராறுநாதமாஞ்
சொல்லிடுமப்பதியவ்வெழுத்தாவன
சொல்லிருநூறொடுநாற்பத்துநாலுரு
சொல்லிடுசக்கரமாய்வருமேலதே, (ஙு)

மேல்வரும்விந்துமவ்வெழுத்தாய்விடு
மேல்வருநாதமுமோங்குமெழுத்துடன்
மேல்வருமப்பதியவ்வெழுத்தேவரின்
மேல்வருஞ்சக்கரமாய்வருஞாலமே. (சு)

ஞாலமதாகவிரிந்ததுசக்கர
ஞாலமதாய்விடும்விந்துவுநாதமு
ஞாலமதாயிடுமப்பதியோசனை
ஞாலமதாகவிரிந்தவெழுத்தே. (ரு)

விரிந்தவெழுத்ததுவிந்தவுநாதமும்
விரிந்தவெழுத்ததுசக்கரமாக
விரிந்தவெழுத்ததுமேல்வரும்பூமி
விரிந்தவெழுத்தினிலப்புறமப்பே. (சு)

அப்பதுவாகவிரிந்ததுசக்கர
மப்பினிலப்புறமவ்வனலாயிடு
மப்பினிலப்புறமாருதமாயெழ
வப்பினிலப்புறமாகாசமாமே. (எ)

ஆகாசவக்கரமாவதுசொல்லிடி
லாகாசவக்கரத்துள்ளேயெழுத்தவை
யாகாசவவ்வெழுத்தாகிச்சிவானந்த
மாகாசவக்கரமாவதறிமினே. (அ)

அறிந்திடுசக்கரமையஞ்சுவிந்து
வறிந்திடுஞ்சக்கரநாதமுதலா
வறிந்திடுமவ்வெழுத்தப்பதியோர்க்கு
மறிந்திடுமெப்பகலானிலையாமே. (கூ)

அம்முதலாறுமவ்வாதியெழுத்தாகு
மம்முதலாறுமவ்வம்மையெழுத்தாகு
மம்முதனுலும்இருநடுவன்னியே
யிம்முதலாகுமெழுத்தவையெல்லாம். (ய)

எழுத்தவைநூறொடுநாற்பத்துநாலு
மெழுத்தவையாறதுவந்நடுவன்னி
யெழுத்தவையந்நடுவச்சுடராகி
யெழுத்தவைதான்முதலந்தமுமாமே. (யக)

அந்தமுமீறுமுதலானவையற
வந்தமுமப்பதினெட்டுடனாதலா
லந்தமும்மப்பதியிரொன்றிலமர்ந்தபி
னந்தமுயிர்த்துவையாருடமானதே. (௰௨)

ஆவினமானவைமுந்நூற்றறுபது
மாவினமப்பதினைந்தினமாயுறு
மாவினமப்பதினெட்டுடனாயுறு
மாவினமக்கதிரோன்வரவந்ததே (௰௩)

வந்திடுமாகாசமாறதுநாழிகை
வந்திடுமக்கரமுப்பதிராசியும்
வந்திடுநாளதுமுந்நூற்றறுபதும்
வந்திடுமாய்டுவகுத்துணையவ்வியே. (௰௪)

அவ்வினமூன்றுமவ்வாடதுவாய்வருஞ்
செவ்வினமூன்றுங்கிளர்தருமேவரதாஞ்
செவ்வினமூன்றுந்தழைத்திடுந்தண்டதா
மிவ்வினமூன்றுமிராசிகளெல்லாம், (௰௫)

இராசிப்புட்சக்கரமெங்குநிறைந்தபின்
னிராசிப்புட்சக்கரமெல்லறிவித்துவா
மிராசிப்புட்சக்கரநாதமுமொத்தபி
னிராசிப்புட்சக்கரதிக்கெட்டுமாமே. (௰௬)

திக்கெட்டுமேவித்துவென்றன்னவெழுத்தெல்லா
திக்கெட்டுநாதமுமோங்குமெழுத்துட
னிக்கெட்டுமப்பதியவ்வெழுத்தேவரி
னிக்கெட்டுமப்புறத்தாரகையானதே. (௰௭)

தாரகையாகச்சமைந்ததுசக்கரந்
தாரகைமேலோர்தழைத்ததுபேரொளி
தாரகைசந்திரனற்பகலோன்வரத்
தாரகைதாரகைதாரகைகண்டதே (௰௮)

கண்டிடுசக்கரம்விந்துவளர்வதாங்
கண்டிடுநாதமுந்தன்மேலெழுந்திடக்
கண்டிடுவன்னிக்கொழுந்தனவொத்தபின்
கண்டிடுமப்புறங்காரொளியானதே. (௰௯)

காரொளியண்டம்பொதிந்துலகெங்கும்
பாரொளிநீரொளிசாரொளிகாலொளி
வாரொளியொக்கவளர்ந்துகிடந்தபின்
மேரொளியொன்றாய்நிறைந்துநின்றதே. (௨௰)

நின்றதுவண்டமுநீளும்புவியெலா
நின்றவிவ்வண்டநிலைபெறக்கண்டிட
நின்றவிவ்வண்டமுமூலமலமொக்கு
நின்றவிவ்வண்டம்பலமதுவிந்துவே. (௨௧)

விந்துவுநாதமுமொக்கவிழுந்திடில்
விந்துவுநாதமுமொக்கவிளையதாம்
விந்திற்குறைந்திடுநாதமெழுந்திடில்
விந்துவையன்மடிகொண்டதுவீசமே. (௨௨)

வீசமிரண்டுளநாதத்தெழுவன
வீசமொன்றுவிளைந்திடுமேலுற
வீசமுநாதமுமெழுந்துடனுந்தபின்
வீசமும்விந்துவிரிந்ததுகாணுமே. (௨௩)

விரிந்தது விந்துவுங் கட்டது விசம்
விரிந்தது விந்துவு நாதத்தளவினில்
விரிந்தது வுட்கட்ட வெட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விளையது வாமே. (உ௪)

விளையது விந்து விளைந்தன வெல்லாம்
விளையது விந்து விளைந்தவுயிரும்
விளையது விந்து விளைந்த விஞ்ஞானம்
விளையது விந்து விளைந்தவன் றுளே. (உ௫)

விளைந்த வெழுத்தது விந்துவு நாதமும்
விளைந்த வெழுத்தது சக்கரமாக
விளைந்த வெழுத்தவை மெய்யினினிற்கும்
விளைந்த வெழுத்தவை மந்திரமாமே. (உ௬)

மந்திர சக்கரமானவை சொல்லிடிற்
றந்திரத் துள்ளெழுதோன்றெரி வட்டமாங்
கந்தரத்துள் ளுமி ரேகையி லொன்றில்லை
பந்தமதாகும் பிரணவமுன்னிடே, (உ௭)

உன்னிட்டவட்டத்தி லொத்தெழு மந்திரம்
பின்னிட்டரேகைப் பிழைப்பது தானில்லை
தன்னிட்டெழுந்ததைப் பறட்பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலுமாமே. (உ௮)

பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்
காக்கலுமாகுங் கருத்திற்றடமென்று
நோக்கலுமாகு நுணக்கற்ற நண்பொரு
ளாக்கலுமாகு மதிந்து கொள்வார்க்கே, (உ௯)

அறிந்திடுஞ்சக்கரமாறியெழுத்து
விரிந்திடுஞ்சக்கரமேலெழுத்தம்மை
பரிந்திடுஞ்சக்கரம்பாரங்கிநாலும்
குவிந்திடுஞ்சக்கரங்கூறனுமாமே. (௬௱)

கூறியசக்கரத்துள்ளெழுமந்திர
மாறியல்பாகவமைந்துவிரிந்திடுந்
தேறியவஞ்சுடன்சேர்ந்தெழுமாரண
மாறியல்பாகமறிந்துக்கொள்வார்க்கே. (௬௧)

மறித்திடுமய்மையுமாமாதுமாகு
மறித்திடுமெம்மையுமங்கனலொக்கு
மறித்தங்கெழுந்தவைகாரணமாகில்
கொறித்தங்கெழுந்தவைகூடகிலாவே. (௬௨)

கூடியதம்பனமாரணவசிய
மாடியல்பாகவமைந்துசெறிந்திடும்
பாடியுள்ளாகப்பகைவரும்வந்துறுந்
தேடியுள்ளாகத்தெளிந்துகொள்வார்க்கே. (௬௩)

தெளிந்திடுஞ்சக்கரமூலத்தினுள்ளே
யளிந்தவகாரத்தையந்நடுவாக்கிக்
குளிந்தவரவினைக்கூடியுள்வைத்து
வளிந்தவைபங்கெழுநாடியகாலே. (௬௪)

காலனைமுக்கான்முழுதெனுமந்திர
மாலித்தெழுந்தமைந்தாறியெழுத்ததாய்ப்
பாலித்தெழுந்துபகையறநின்றபின்
மாலுற்றமந்திரமாறிக்கொள்வார்க்கே. (௬௫)

கொண்டவிம்மந்திரங்கூத்தனெழுத்தாய்ப்
பண்டையுளாவிற்பகையறவிண்டபின்
மன்றுணிறைந்தமணிவிளக்காயிடு
மின்றுமிதபத்தெழுந்துநமவெனே. () ஆ. ௪௱௭.

---

## வயிரவசக்கரம்.

அறிந்தபிரதமையோடாறுமறிஞ்சு
வறிந்தவச்சத்தமிமேலவைகுற்ற
மறிந்தவையொன்றுவிட்டொன்றுபத்தாக
வறிந்தவலமதுவாகநடவே. (௧)

நடந்தவயிரவன்சூலகபாலி
கடந்தபகைவினைக்கண்ணதுபோக்கித்
தொடர்ந்தவுயிரதுவுண்ணும்பொழுது
படர்ந்தவுடல்கொடுபந்தாடலாமே. (௨)

ஆமேவப்பூண்டருளாதிவயிரவ
னாமேகபாலமுஞ்சூலமுங்கைக்கொண்டங்
காமேதமருகபாசமுங்கையது
வாமேசிரத்தொடுவாளதுகையே. (௩)

கையதுவாளுங்கருத்துறநோக்கிடு
மெய்யதுசெம்மைவிளங்குவயிரவன்
றய்பருளத்திற்றான்குமெய்யுற்றதாய்ப்
பொய்வகைவிட்டுநீபூசனைசெய்யே. (௪)

பூசனைசெய்யப்பொருந்தியோராயிரம்
பூசனைசெய்யுமதுவுடனுமா

பூசனைசார்ந்தசவாதுபுழுகுநெய்
பூசனைசெய்துநீர்பூசலைவேண்டுமே. (௭)

வேண்டியவாறுகலகமுமாயிடும்
வேண்டியவாறினுண்மெய்யருபெற்றபின்
வேண்டியவாறுவரும்வழிநீநட
வேண்டியவாறதுவாகுங்கருத்தே. (௮) ஆக சாரம் ௬.

---

சாம்பவிமண்டலச்சக்கரம்.

சாம்பவிமண்டலச்சக்கரஞ்சொல்லிடி
லாம்பதமெட்டாகவிட்டிடின்மேலதாங்
காண்பதந்தத்துவநாலுணையனமும்
தாம்பதங்கண்டபினுடறிந்தோமே. (௧)

நாடறிமண்டலநல்லவிக்குண்டத்துக்
கோடறவீற்றியுங்கொடர்ந்துள்ளிரண்டதி
யாடறிபத்துடனுறுநடுவீதி
யேடறநாலைந்திடவகையாமே. (௨)

நாலைந்திடவகையுள்ளதோர்மண்டல
நாலுதல்வீதியுணல்லலிங்கமாய்
நானுநற்கோணமுநந்நாலிலிங்கமாய்
நாலுநற்பூநடுநண்ணல்வாமே. (௩)

ஆதிருபந்துநாலஞ்செழுத்தஞ்சையும்
வேறுருவாகவிளைந்துகிடந்தது
தேறுதிருப்பிலசிவாயநமவென்று
கூறுமின்கூறிற்குறைகளுமில்லையே. (௪)

குறைவதில்லைகுறைகழற்கூடு
மறைவதுமாரணமவ்வெழுத்தாகித்
திறமதுவாகத்தெளியவல்லார்க்கு
விறவில்லையென்றெலிந்தியம்பினர்காணே. (௫)

காணும்பொருளுங்கருதியதெய்வமும்
பேணும்பதியும்பெருகியதீர்த்தமு
மூணுமுணர்வுமுறக்கமுந்தானுகக்
காணுங்கனகமுங்காரிகையாமே. (௬)

ஆயெழுத்தஞ்சாம்வழியேபோகப்
போமெய்யருதானும்போம்வழியேபோரு
றுமேதினைத்தனைசெய்யனுமாகுமப்
பார்மேலொருவர்பகையில்லைதானே. (௭)

பகையில்லையென்றும்பணிந்தவர்தம்பா
லசையில்லைநாளுறுநன்மைகளாகும்
வினையில்லையென்றும்விருத்தமுமில்லை
தகைவில்லைதானுஞ்சலமதுவாமே. (௮)

திருமுறைசெப்பலாமஞ்செழுத்தாலே
யாருமறியாதவானந்தரூபமாம்
பாரும்விசும்பும்பசுமதியதி
யூருமுயிருமுணர்வதுவாமே. (௯)

உணர்ந்தெழுமந்திரமோமெனுமுள்ளே
மணந்தெழுமாங்கதனுதியதாகுங்
குணர்ந்தெழுசசனுஞ்சூரியுங்கடிக்
கணர்ந்தெழுங்காணுமக்காமுலைபோலே. (௰) ஆக ௪௨௩

## புவனாபதிசக்கரம்.

நகராதியோரைந் துங்காணியபொன்மை
யகராதியோராறரத்தமேயோலுஞ்
சகராதியோர்நான்குந்தான்சுத்தவெண்மை
ககராதிமூவித்தைகாமியமுத்தியே. (க)

ஓரிலிதுவேயுமையுமித்தெய்வத்தைத்
தேரிற்பிறிதில்லையாமென்றுசெப்பக்கேள்
வாரித்திரிகோணமனமின்பமுத்தியுந்
தேரிலறியுஞ்சிவகாயந்தானே. (உ)

ஏகபராசத்திமீசற்காமங்கமே
யாகம்பராவித்தையாமுத்திசித்தியே
யேகம்பராசத்தியாகச்சிவகுரு
யோகம்பராசத்தியுண்மையெட்டாமே. (௩)

எட்டாகியசித்தியெட்டாகும்யோகத்துக்
கட்டாகுநாதாந்தத்தெட்டுங்கலப்பித்து
தொட்டாதவிந்துவுந்தானற்றொழிந்தது
விட்டாதொழிந்ததுவிஞ்ஞானமூடர்க்கே. (௪)

வதும்பலமாமியந்திராசன்னடி
யோதிக்குருவினுபதேசமுட்கொண்டு
நீதங்குமங்கநியாசந்தன்னைப்பண்ணிச்
சாதங்கெடச்செம்பிற்சட்கோணந்தானிடே. (ரு)

சட்கோணந்தன்னில் ரீம்ஹிரீய்தானிட்டு
வக்கோணமாறின்றலையிலீங்காரமிட்

டெக்கோணமூன்றுழவெழில்வட்டமிட்டுப்பின்
யிக்கிரொட்டகரமம்முதன்மேலிடே. (௬)

இட்டவிதழ்களிடையந்தரத்திலே
யட்டஹ்ரீம்விட்டதின்மேலையுமிட்டுக்
கிட்டவிதழ்களின்மேலேகிரோம்சிரோ
மிட்டுவாமத்தாங்கிரோங்கென்றுமேவிடே. (௭)

மேவியசக்கரமீதுவலத்திலே
கோவையுடனேவருக்ரோங்சிரோங்கென்றிட்டுத்
தாவில்ரீங்காரத்தாற்சக்கரஞ்சூழ்ந்து
பூவைப்புவனாபதியைப்பின்பூசியே. (௮)

பூசிக்கும்போதுபுவனாபதிதன்னை
யாசற்றகத்தினிலாவாகனம்பண்ணிப்
பேசிப்பிராணப்பிரதிட்டையதுசெய்து
தேசுற்றிடவேதியானமதுசெய்யே. (௯)

செப்பதிருமேனிசெம்பட்டுடைதானுங்
கையிற்படையங்குசபாசத்தோடபய
மெய்யிலணிகலமிரத்தினமாமேனி
ஐயமுடியுமவயவத்திற்றோற்றமே. (௰)

தோற்போர்வைநீக்கித்துதித்தடைவிற்பூசித்துப்
பாற்போனகமந்திரத்தாற்பயின்றேந்தி
நாற்பாலநாரதாயாசுவாகவென்று
ஏற்பாகச்சேடத்தைமாற்றிப்பின்சிவியே. (௰௧)

சிவிப்பதன்முன்னேதேவியையுத்வாசனத்தாற்
பாவித்திதயகமலம்பதிவித்தங்

கிடாவர்க்குமெட்டாவியந்திராசனை
நிலைவந்துச்சேவிநினைந்தது தருமே. (௪௨) ஆக ௪௫௫.

---

## நவாக்கரிசக்கரம்.

நவாக்கரிசக்கரநானுரைசெய்யி
னவாக்கரியொன்றுநவாக்கரியாக
நவாக்கரியெண்பத்தொருவகையாக
நவாக்கரியக்கிலீசௌமுதலீறே. (௧)

சௌமுதலவ்வொடுஹௌவுடனுங்கிறீம்
கௌவுனுமையுனுங்கலந்திறீப் சிறீமென்
றுவ்விலெமுங்கிலீமந்திரபாதமாச்
செவ்வுளெழுந்துசிவாயநமவெனே. (௨)

நவாக்கரியாவதுநாணறிவித்தை
நவாக்கரியுள்ளெழுநன்மைகளெல்லா
நவாக்கரிமந்திரநாவுளேயோத
நவாக்கரிசத்திநலந்தருந்தானே. (௩)

நலந்தருஞானமுங்கல்வியுமெல்லா
முரந்தருவல்வினையும்மைவிட்டோடுஞ்
சிரந்தருதீவினைசெய்வதகற்றி
வரந்தருசோதியும்வாய்த்திடுந்தானே. (௪)

கண்டிடுஞ்சக்கரம்வெள்ளிபொன்செம்பிடை
கொண்டிடுமுள்ளேகுறித்தவினைகளை
வென்றிடுமண்டலம்வெற்றிதருவிக்கு
நின்றிடுஞ்சக்கரநினைக்குமளவே. (௫)

நினைந்திடுமச்சிதிமக்கிலிமீறு
நினைந்திடுஞ்சக்கரமாதியுமீறு
நினைந்திடுயநல்கொடுபுல்லினையுள்ளே
நினைந்திடுமருச்சனைநேர்தருவாளே. (௬)

நேர்தருமத்திருநாயகியானவள்
பாதொருவண்ணமறிந்திடும்பொற்பூவை
கார்தருவண்ணங்கருதினவைவரு
நார்தருவண்ணநடத்திடுநீயே. (௭)

நடத்திடும்பாரினினன்மைகளெல்லாங்
கடந்திடுங்காலனுமெண்ணியநாளும்
படர்ந்திடுநாமமும்பாய்கதிர்போல
வடைந்திடுவண்ணமடைந்திடுநீயே. (௮)

அடைந்திடும்பொன்வெள்ளிகல்லுடனெல்லா
மடைந்திடுமாதிபருளுந்திருவு
மடைந்திடுமண்டத்தமரர்கள்வாழ்வு
மடைந்திடும்வண்ணமறிந்திடுநீயே. (௯)

அறிந்திடுவார்களமரர்களாகத்
தெரிந்திடுவாரேனோர்தேவர்கள்தேவன்
பரிந்திடும்வானவர்பாட்புனல்சூடி
முரிந்திடுவாரைமுயற்றிநிந்திரோ. (௰)

நீர்பணிசக்கரந்நேர்தருவண்ணங்கள்
பாரணியுந்திருமூலனமிருந்
தாரணியும்புகழ்த்தையனல்லாடலைக்
காரணியும்பொழிற்கண்டுகொளீரோ. (௰௧)

கண்டுகொள்ளுந்தனிநாயகிதன்னையு
மொண்டுகொளும்முகவசியமதாயிடும்
பண்டுகொளும்பரமாயபரஞ்சுடர்
நின்றுகொளும்நிலைபேறுடையாளையே. (௰௨)

பேறுடையாடன்பெருமையெண்ணிடி-
றூடுடையார்களுநம்வசமாயிடு
மாறுடையார்களும்வாழ்வதுதானில்லை
கூறுடையாளையுங்கூறுமினிரோ, (௰௩)

கூறுமினெட்டுத்திசைக்குந்தலைவியை
யாறுமினண்டத்தமரர்கள்வாழ்வென
மாறுமின்வையம்வரும்வழிதன்னையுந்
தேறுமின்றூயசிவ்சேவடிசேர்ந்தே (௰௪)

சேவடிசேரச்செறியவிருந்தவர்
தாவடியுள்ளேநவின்றுநின்றேத்துவர்
பூவடியிட்டுப்பொலியவிருந்தவர்
மாவடிகாணும்வகையறிவாரே. (௰௫)

ஐம்முதலாகவளர்ந்தெழுசக்கரம்
மைம்முதலாகவமர்ந்திரிமீருகு
மம்முதலாகியவர்க்குடையாடனை
மைம்முதலாகவழுத்திடுநீயே. (௰௬)

வழுத்திடுநாவுக்கரசிவடன்னைப்
பகுத்திடும்வேதமெய்யாகமமெல்லாந்
தொகுத்தொருநாவிடைசொல்லவல்லாளை
முகத்துளுமுன்னெழக்கண்டுகொளீரோ. (௰௭)

கண்டவிச்சக்கரநாவிலெழுதிடிற்
கொண்டவிம்மந்திரங்கூத்தன்குறியதா
மன்றினுள்வித்தையுமானிடர்கையதாய்
வென்றிடும்வையகமெல்லியல்மேவிடே. (௰௮)

மெல்லியலாகியமெய்ப்பொருளாடனைச்
சொல்லியலாலேதொடர்ந்தங்கிருந்திடும்
பல்லியல்பாகப்பரந்தெழுநாட்பல
நல்லியல்பாலேநடந்திடுந்தானே. (௰௯)

நடந்திடுநாவினுண்மைகொள்ளாத்
தொடர்ந்திடுஞ்சொல்லொடுசொற்பொருடானுங்
கடந்திடுங்கல்விக்கரசிவனாகப்
படர்ந்திடும்பாரிற்பகையில்லைதானே. (௨௰)

பகையில்லைகௌமுதலையநவிரு
நகையில்லைசக்கரநல்லறிவார்க்கு
மிகையில்லைசொல்லியபல்லுருவெல்லாம்
வகையில்லையாகவணங்கிடுந்தானே. (௨௧)

வணங்கிடுந்தத்துவநாயகிதன்னை
நலங்கிடுநல்லுயிரானவையெல்லாங்
கலங்கிடுங்காமவெகுளிமயக்கந்
அடங்கிடுஞ்சொல்லியசூழ்வினைதானே. (௨௨)

தானேயழித்தவையவும்வல்லனாய்த்
தானேநினைத்தவைசொல்லவும்வல்லனாய்த்
தானேதனிநடங்கண்டவடவினையுந்
தானேவணங்கித்தலைவனுமாமே. (௨௩)

ஆமேயனைத்துயிராகியவம்மையுந்
தாமேசகலமுமீன்றவத்தையனு
மாமேயவளடிபோற்றிவணங்கிடிற்
போமேவினைகளும்புண்ணியனாகுமே. (௨௪)

புண்ணியனாகிப்பொருந்தியுலகெங்குங்
கண்ணியனாகிக்கலந்தங்கிருந்திடுந்
தண்ணியனாகித்தரணிமுழுதுக்கு
மண்ணியனாகவமர்ந்திருந்தானே. (௨௫)

தானதுகிறீம்கௌவதுவீறு
தானதுசக்கரநன்றறிவார்க்கெல்லாம்
சானதுகன்னிகலந்தபராசத்தி
கேளதுவையங்கிளரொளியானதே. (௨௬)

ஒளிக்கும்பராசத்தியுள்ளேயமரிற்
களிக்குமிச்சிந்தையிற்காரணங்காட்டித்
தெளிக்குமழையுடன்செல்வமுண்டாக்கு
மளிக்குமிவளையறிந்துகொள்வார்க்கே. (௨௭)

அறிந்திடுஞ்சக்கரமருச்சனையோடே
வெறிந்திடும்வையத்திடரவைகாணல்
மறிந்திடுமன்னனும்வந்தனைசெய்யும்
பொறிந்திடுஞ்சிந்தைபுகையில்லைதானே. (௨௮)

புகையில்லைசொல்லியபொன்னொளியுண்டாங்
குகையில்லைகொல்வதிலாமையினாலே
வகையில்லைவாழ்கின்றமன்னுயிர்க்கெல்லாந்
திகையில்லைசக்கரஞ்சேர்ந்தவர்தாமே. (௨௯)

சேர்த்தவரொன்றுந்திசையொளியானவர்
காய்த்தெழுமேல்வினைகாணகிலாதவர்
பாய்ந்தெழுமுள்ளொளிபாரிற்பரந்தது
மாய்ந்ததுகாரிருள்மாறொளிதானே. (௯௰)

ஒளியதுஹௌமுன்கிறீமதுவீறுங்
களியதுசக்கரங்கண்டறிவார்க்குத்
தெளிவதுஞானமுஞ்சிந்தையுந்தேறப்
பணிவதுபஞ்சாக்கரமதுவாமே. (௯௧)

ஆமேசதாசிவநாயகியானவ
ளாமேயதோமுகத்துள்ளறிவானவ
ளாமேசுவையொளியூறோசைகண்டவ
ளாமேபனைத்துயிர்தன்னுறுமாமே. (௯௨)

தன்னுருமாகித்தரணிமுழுதுங்கொண்
டென்னுருமாகியிடப்பெறநின்றவள்
மன்னுருநீரனல்காலுரும்வானுரும்
கன்னுருமெய்யுருங்காணலுமாமே. (௯௩)

காணலுமாகுங்கலந்துயிர்செய்வன
காணலுமாகுங்கருத்துளிருந்திடிற்
காணலுமாகுங்கலந்துவழிசெய்யக்
காணலுமாகுங்கருத்துறநில்லே. (௯௪)

நின்றிடுமேழுபுவனமுமொன்றாகக்
கண்டிடுமுள்ளங்கலந்தெங்குந்தானாகக்
கொண்டிடுமவையங்குணம்பலதன்னையும்
விண்டிடும்வல்வினைமெய்ப்பொருளாகுமே. (௯௫)

மெய்ப்பொருளௌமுதல்ஹௌவதுவிரும்
கைப்பொருளாகக்கலந்தெழுசக்கரந்
தற்பொருளாகச்சமைர்தமுதேஸ்வரி
நற்பொருளாகநடுவிருந்தாளே. (௫௬)

தாளதினுள்ளேசமைந்தமுதேஸ்வரி
காலதுகொண்டுகலந்துறவீசிடில்
நாளதுநாளும்புதுமைகள்கண்டபின்
கேளதுகாயமுங்கேடில்லைகாணுமே. (௫௭)

கேடில்லைகாணுங்கிளரொளிகண்டபின்
ஊடில்லைகாணுநாண்முதலற்றபின்,
மாடில்லைகாணும்வரும்வழிகண்டபின்
காடில்லைகாணுங்கருத்துற்றிடத்துக்கே, (௫௮)

உற்றிடமெல்லாமுலப்பில்பாழாக்கிக்
கற்றிடமெல்லாங்கடுவெளியானது
மற்றிடமில்லைவழியில்லைதானில்லை
சற்றிடமில்லைசலிப்பறநின்றிடே. (௫௯)

நின்றிடுமேழ்கடலேழ்புவியெல்லா
நின்றிடுமுள்ளநினைந்தவைதானெக்கு
நின்றிடுஞ்சத்திநிலைபெறக்கண்டிட
நின்றிடுமேலைவிளக்கொளிதானே. (௬௰)

விளக்கொளிஸௌமுதலௌவதுவிரு
விளக்கொளிசக்கரமெய்ப்பொருளாகும்
விளக்கொளியாகியமின்கொடியாளை
விளக்கொளியாகிவிளங்கிடுநீயே. (௬௧)

விலக்கிடுமேல்வருமெய்ப்பொருள்சொல்லில்
விளக்கிடுமெல்லியலானதுவாகும்
விளக்கிடுமெய்நியமஞானப்பொருளை
விளக்கிடுவார்கள்விளங்கினர்தாமே. (௪௨)

தானேவெளியெனவெங்குநிறைந்தவ
டானேபரமவெளியதுவானவ
டானேசகலமுமாகியழித்தவ
டானேபனித்துளவண்டசகலமே. (௪௩)

அண்டத்தினுள்ளேயளப்பரிதானவன்
பிண்டத்தினுள்ளேபெருவெளிகண்டவன்
குண்டத்தினுள்ளேகுணம்பலகாணினுங்
கண்டத்தினின்றகலப்பறியார்களே. (௪௪)

கலப்பறியார்கடல்சூழுலகெல்லா
மூலப்பறியாருடலோடுயிர்தன்னைச்
சிலப்பறியார்சிலதேவரைநாடித்
தலைப்பறியாகச்சமைந்தவர்தானே. (௪௫)

தானேயெழுந்தவச்சக்கரஞ்சொல்லிடின்
மானேமதிவளையத்திட்டுவைத்தபின்
றேனேயிரேகைதிசைப்படவொன்பதிற்
றானேகலந்தவறையெண்பத்தொன்றுமே. (௪௬)

ஒன்றியசக்கரமோதிடும்வேளையில்
வெள்ளிகொண்மேனிமதிவட்டம்பொய்மையாங்
கந்திபரேகைகலந்திடுஞ்செம்மையி
வெள்ளியலம்மையெழுத்தவைபச்சையே. (௪௭)

ஏய்ந்தமரவுரிதன்னிலெழுதிய
வாய்ந்தவிப்பெண்ணெண்பத்தொன்றில்நிறைத்தபின்
காய்ந்தவிநெய்யெட்கலந்துடனேழமூ
மாந்தலத்தாமுயிராகுதிபண்ணுமே. (௪௮)

பண்ணியபொன்னைப்பரப்பறநீயிடி
யெண்ணியநாட்களிலின்பமுமெய்திடு
நண்ணியநாமமுநான்முகனெழுத்தபின்
றுண்ணெனநேயநற்சேர்க்கலுமாகுமே. (௪௯)

ஆகின்றசந்தனங்குங்குமங்கத்தூரி
போகின்றசாந்துசவாதுபுழுகுநெ
யாகின்றகற்பூரமாகோசனநீருஞ்
சேர்கின்றவொன்பதுஞ்சேரநீவைத்திடே. (௫௰)

வைத்திடும்பொன்னுடன்மாதவநோக்கிடக்
கைச்சிறுகொங்கைகலந்தெழுகன்னியைத்
தச்சிதுவாகச்சமைந்தவிம்மந்திர
மர்ச்சனையாயிரமாயிரஞ்சிந்தியே. (௫௧)

சிந்தையினுள்ளேதிகழ்தருசோதியா
வெந்தைகரங்களிருமூன்றுமுள்ளது
பந்தமாசூலம்படைபாசம்வில்லம்பு
முந்தகிலிபெழுமுன்னிருந்தாளே. (௫௨)

இருந்தனர்சத்திகளறுபத்துநால்வ
ரிருந்தனர்கன்னிகளெண்வகைபெண்ம
ரிருந்தனர்சூழவெதிர்சக்கரத்தே
யிருந்தனரிருவில்லம்புகொண்டே (௫௩)

கொண்டகனகக்குழைமுடியாடையாய்க்
கண்டவிம்முத்தங்கனல்திருமேனியாய்ப்
பண்டமர்சோதிப்படரிதழானவ
ளுண்டங்கொருத்தியுணரவல்லாருக்கே. (கச)

உணர்ந்திருந்துள்ளேயொருத்தியைநோக்கிற்
கலந்திருந்தெங்குங்கருணைபொழியு
மணந்தெழுமோசையொளியதுகாணுந்
தணந்தெழுசக்கரந்தான்றருவாளே. (கரு)

தருவழியாகியதத்துவஞானங்
குருவழியாகுங்குணங்களுணின்று
கருவழியாகுங்கணக்கையறுத்துப்
பெருவழியாக்கும்பேரொளிதானே. (கசு)

பேரொளியாயபெரியபெருஞ்சுடர்
சீரொளியாகித்திகழ்தருநாயகி
காரொளியாகியகன்னிகைபொன்னிறம்
பாரொளியாகப்பரந்துநின்றாளே. (கஎ)

பரந்தகரமிருபங்கயமேந்திக்
குவிந்தகரமிருகொய்தளிர்ப்பாணி
பரித்தருள்கொங்கைகண்முத்தார்பவள
மிருந்தநல்லாடைமணிபொதிந்தன்றே. (கஅ)

மணிமுடிபாதஞ்சிலம்பணிமங்கை
யணிபவளன்றியருளில்லையாருந்
தணிபவர்நெஞ்சினுட்டன்னருளாகிப்
பணிபவர்க்கன்றோபரகதியாமே. (கக)

பரந்திருந்துள்ளேயறுபதுசத்தி
கரந்தனகன்னிகளப்படிசூழ
மலர்ந்திருகையின்மலரவையேந்திச்
சிறந்தவரோத்துஞ்சிறீம்தனமாமே. (சுய)

தனமதுவாகியதையலைநோக்கி
மனமதுவோடிமரிக்கிலோராண்டிற்
கனமிவையற்றுக்கருதியநெஞ்சந்
தினகரனுரிடசெய்தியதாமே. (சுக)

ஆகின்றமூலத்தெழுந்தமுழுமலர்
போகின்றபேரொளியாயமலர்த்தாய்
போகின்றபூரணமாகநிறைந்தபின்
சேர்கின்றசெந்தழன்மண்டலமானதே. (சுஉ)

ஆகின்றமண்டலத்துள்ளேயமர்ந்தவ
ளாகின்றவைம்பத்தறுவகையானவ
ளாகின்றவைம்பத்தறுசத்திநேர்தரு
வாகின்றவைம்பத்தறுவகைசூழவே. (சுஙு)

சூழ்ந்தெழுசோதிசுடர்முடிபாதமா
யாங்கணிமுத்தமழகியமேனியுந்
தாங்கியகையவைதார்கிளிஞானமா
யேந்துகரங்களெடுத்தமர்பாசமே. (சுச)

பாசமதாகியவேரையறுத்திட்டு
நேசமதாகநினைந்திருமும்முளே
நாசமதெல்லாநடந்திடுமையாண்டிற்
காசினிமேலமர்கண்ணுதலாகுமே. (சுரு)

கன்றுடைநாயகிதன்னருளாம்வழி
பன்றுறுநாதம்பகையறநின்றிடில்
விண்ணமர்சோதிவிளங்கஹ்ரீங்கார
மன்றுடைநாயகிமண்டலமாகுமே. (௬௬)

மண்டலத்துள்ளேமலர்ந்தெழுதீபத்தைக்
கண்டகத்துள்ளேகருதியிருந்திடும்
விண்டகத்துள்ளேவிளங்கிவருதலாற்
றண்டகத்துள்ளவைதாங்கலுமாமே. (௬௭)

தாங்கியநாபித்தடமலர்மண்டலத்
தோங்கியெழுங்கலைக்குள்ளுணர்வாள்வ
ளேங்கவரும்பிறப்பெண்ணியறுத்திட
வாங்கியநாதம்வலியுடனாகுமே. (௬௮)

நாவுக்குநாயகிநன்மணிபூணாரம்
பூவுக்குநாயகிபொன்முடியாடையாம்
பாவுக்குநாயகிபாலொத்தவண்ணத்தா
ளாவுக்குநாயகியங்கமர்ந்தாளே. (௬௯)

அந்திருக்கையிலளந்தபொருண்முறை
யிந்திருக்கையிலெடுத்தவெண்குண்டிகை
மந்திரகோணும்வழியதுவாகவே
கண்டிருந்தவர்காரணிகாணுமே. (௭௰)

காரணிசத்திகளைம்பத்திரண்டெனக்
காரணிகன்னிகளைம்பத்திருவராய்க்
காரணிசக்கரத்துள்ளேகரந்தெங்குங்
காரணிதன்னருளாகிநின்றாளே. (௭௧)

நின்றவிச்சத்திநிலைபெறநின்றிடிற்
கண்டவிவ்வண்ணிகலந்திடுமோராண்டிற்
கொண்டவிரதநீர்குன்றுமனின்றிடின்
மன்றினிலாடுமணியதுகாணுமே. (எஉ)

கண்டவிச்சத்தியிருதயபங்கயங்
கொண்டவித்தத்துவநாயகியானவள்
பண்டையவ்வாயுப்பகையையறுத்திட
வின்றென்மனத்துளினிதிருந்தாளே. (எஙு)

இருந்தவிச்சத்தியிருநாலுகையிற்
பரந்தவிப்பூங்கிளிபாசமழுவாள்
கரந்திடுகேடகம்வில்லம்புகொண்டங்
குரந்தங்கிருந்தவள்கூத்துகந்தாளே. (எச)

உகந்தனள்பொன்முடிமுத்தாரமாகப்
பரந்தபவளமும்பட்டாடைசாத்தி
மலர்ந்தெழுகொங்கைமணிக்கச்சணிந்து
தழைந்தங்கிருந்தவடான்பச்சையாமே. (எரு)

பச்சையிவளுக்குப்பாங்கிமாராறெட்டு
கொச்சையாரொண்மர்கள்கூடிவருதலாற்
கச்சணிகொங்கைகள்கையிருகாப்பதா
யெச்சவிடைச்சியினிதிருந்தாளே. (எசா)

தாளதினுள்ளேதாங்கியசோதியைக்
காலதுவாகக்கலந்துகொள்ளென்று
மாலதுவாகவழிபாடுசெய்துநீ
பாலதுபோலப்பரந்தெழுவிண்ணிலே, (எஎ)

விண்ணமர்நாபியிருதயமாங்கிடைக்
கண்ணமர்கூபங்கலந்துவருதலாற்
பண்ணமர்ந்தாதித்தமண்டலமானது
தண்ணமர்கூபந்தழைத்ததுகாணுமே. (எஅ)

கூபத்துச்சத்திகுளிர்முகம்பத்துள
தாபத்துச்சத்திதயங்கிவருதலா
லாபத்துக்கைகளடைந்தனநாலைந்து
பாசமறுக்கப்பரந்தனசூலமே. (எகூ)

சூலந்தண்டொள்வாள்சுடர்பறைஞானமாய்
வேலம்புதமருகமாகிளிவிற்கொண்டு
காலம்பூப்பாசமழுகத்திகைக்கொண்டு
கோலஞ்சேர்சங்குவிந்தகையெண்ணதே. (அ௰)

எண்ணமர்சத்திகளறுபத்துநாலுட
னெண்ணமர்சத்திகளறுபத்துநால்வரா
மெண்ணியபூவிதழுள்ளேயிருந்தவ
ளெண்ணியவெண்ணங்கடந்துநின்றாளே. (அக)

கடந்தவள்பொன்முடிமாணிக்கத்தோடு
தொடர்ந்தணிமுத்துபவளங்கச்சாகப்
படர்ந்தல்குற்பட்டாடைபாதச்சிலம்பு
மடந்தைசிறியவள்வந்துநின்றாளே. (அஉ)

நின்றவிச்சத்திநிரந்தரமாகவே
கண்டிடுமேருவணிமாதிதானாகிப்
பண்டையவானின்பகட்டையறுத்திட
வொன்றியதிபமுணர்ந்தார்க்குண்டாமே. (அ௩)

உண்டோரதோமுகமுத்தமமானது
கண்டவிச்சத்திசதாசிவநாயகி
கொண்டமுகமைந்துகூறுங்கரங்களு
மொன்றிரண்டாகவேமூன்றுநாலானதே. (௮௪)

நன்மணிசூலங்கபாலங்கிளியுடன்
பன்மணிநாகமழுகத்திபந்தாகுங்
கன்மணிதாமரைக்கையிற்றமருகம்
பொன்மணிபூணாரம்பூசனையானதே. (௮௫)

பூசனைசத்திகளெண்ணைவர்சூழவே
நேசவள்கன்னிகளொற்பத்துநேராய்க்
காசினிசக்கரத்துள்ளேகலந்தவள்
மாசடையாமன்மகிழ்ந்திருந்தார்களே. (௮௬)

தாரத்தினுள்ளேதங்கியசோதியைப்
பாரத்தினுள்ளேபரந்தெழுந்திட
வேரதுவொன்றிநின்றெண்ணுமனோமயங்
காரதுபோலக்கலந்தெழுமண்ணிலே. (௮௭)

மண்ணிலெழுந்தஅகாரஉகாரங்கள்
விண்ணிலெழுந்துசிவாயநமவென்று
கண்ணிலெழுந்ததுகாண்பரிதன்றுகொல்
கண்ணிலெழுந்ததுகாட்சிதரவென்றே. (௮௮)

என்றங்கிருந்தவமுதகலையிடை
சென்றங்கிருந்தவமுதபயோதரி
கண்டக்கரமிருவெள்ளிபொன்மண்ணடை
கொண்டங்கிருந்ததுவண்ணமமுதே. (௮௯)

அமுதமதாகவழகியமேனி
படிகமதாகப்பரந்தெழுமுள்ளே
குமுதமதாகக்குளிர்ந்தெழுமுத்து
கெமுதமதாகியகேடிலிதானே. (௯௰)

கேடிலிசத்திசண்முப்பத்தறுவரு|
நாடிலிகன்னிகளொன்பதின்மரும்
பூவிலிபூவிதழுள்ளேயிருந்திவர்
நாளிலிதன்னைநணுகிநின்றார்க்கே. (௯௧)

நின்றதுபுந்திநிறைந்திடும்வன்னியுங்
கண்டதுசோதிகருத்துளிருந்திடக்
கொண்டதுவோராண்டுகூடிவருகைக்கு
விண்டவெளகாரம்விளங்கினவன்றே. (௯௨)

விளங்கிடுவானிடைநின்றவையெல்லாம்
வளங்கிடுமண்டலமன்னுயிராக
நலங்கிளர்நன்மைகளாரணனொத்திச்
கணங்கிடைநின்றிவைசொல்லலுமாமே. (௯௩)

ஆமேயதோமுகமேலேயமுதமாய்த்
தாமேயுகார்தலைத்தெழுஞ்சோமனுங்
காமேல்வருகின்றகற்பகமானது
பூமேல்வருகின்றபொற்கொடியானதே. (௯௪)

பொற்கொடியாளுடைபூசனைசெய்திட|
வக்கரியாகியவாங்காரம்போயிடு
மர்கடமாகியமண்டலந்தன்னுளே
பிற்கொடியாகியபேதையைக்காணுமே. (௯௫)

பேதையவருக்குப்பெண்மையழகாகுந்
தாதையிவனுக்குத்தானுவுமாய்நிற்கு
மாதையவனுக்குமன்றுந்திலதமாய்க்
கோதையர்சூழக்குவிந்திடங்காணுமே. (௯௬)

குவிந்தனசத்திகண்முப்பத்திருவர்
நடந்தனர்கன்னிகளுமெல்லைமர்சூழப்
பரந்திதழாகியபங்கயத்துள்ளே
யிருந்தனள்காணுமிடம்பலகொண்டே. (௯௭)

கொண்டங்கிருந்தனர்கூத்தமெருளியினைக்
கண்டங்கிருந்தனர்காரணத்துள்ளது
பண்டைமறைகள்பரந்தெங்குந்தேடுமா
லின்றென்மனத்துளேயில்லடைந்தாளுமே. (௯௮)

இல்லடைந்தானுக்குமில்லாததொன்றில்லை
யில்லடைந்தானுக்கிரப்பதுதானில்லை
யில்லடைந்தானுக்கிமையவர்தாமொவ்வா
ரில்லடைந்தானுக்குவில்லாதில்லானையே. (௯௯)

ஆனையக்குமறுபத்துநாற்றறி
யானையிருக்குமறுபத்துநாலொளி
யானையிருக்குமறுபத்துநாலறை
யானையுங்கோடுமறுபத்துநாலிலே. (௱)

ஆ அதிகாரம்-௰௪௩-திருமந்திரம்-௩௯௩.
நாலாந்தந்திரமுற்றும்.
ஆ சிறப்புப்பாயிரமுள்பட-அதிகாரம்-௯௩
௩.டிய திருமந்திரம்- ௩௬௱௮.

 

## ஐந்தாந்தந்திரம்.

### சுத்தசைவம்.

ஊருமுலகமுமொக்கப்படைக்கின்ற
பேரறிவாளன்பெருமைகுறித்திடின்
மேருவுமூவுலகாளியிலங்கெழுந்
தாரணிநால்வகைச்சைவமுமாமே. (௧)

சத்துமசத்துஞ்சதசத்துந்தான்கண்டு
சித்துமசித்துஞ்சேர்வுறாமேநீத்த
சுத்தமசுத்தமுந்தோய்வுறாமேநின்று
நித்தம்பரஞ்சுத்தசைவர்க்குநேயமே. (௨)

கற்பனைபற்றுக்கலைமன்றுமெய்யோக
முற்பதஞானமுறைமுறைநண்ணியே
தொற்பதமேவித்துரிசற்றுமேலான
தற்பரங்கண்டுளோர்சைவசித்தாந்தரே. (௩)

வேதாந்தஞ்சுத்தம்விளங்கியசித்தாந்த
நாதாந்தங்கண்டோர்நடுக்கற்றகாட்சியர்
பூதாந்தபோதாந்தமாகப்புனஞ்செய்ய
நாதாந்தபூரணர்ஞானநேயத்தரே. (௪)

---

### அசுத்தசைவம்.

இணையார்திருவடியெத்துஞ்சிரங்கத்
திணையாரிணைக்குழையீரணைமுத்திரை
குணமாரிணைக்கண்டமாலையுங்குன்றா
தணைவாஞ்சரியைகிரியையினோர்க்கே. (௧)

காதுப்பொனூர்ந்தகடுக்கனிரண்டுசேர்த்
தோதுந்திருமேனியுட்கட்டிசண்டுடன்
சோதனைசெய்துவுபதேசமார்க்கரா
யோதியிருப்பாரொருசைவராகுமே. (உ)

கண்டங்களொன்பதுங்கண்டவர்கண்டனர்
கண்டங்களொன்பதுங்கண்டாயரும்பொருள்
கண்டங்களொன்பதுங்கண்டவர்கண்டமாங்
கண்டங்கள்கண்டோர்கடுஞ்சுத்தசைவரே. (ங)

ஞானிபுவியெழுநன்னூலனைத்துடன்
மோனதிசையுமுழுவெண்ணெண்சித்தியு
மேனைநிலமுமெழுதாமறையீறுங்
கோனொடுதன்னையுங்காணுங்குணத்தரே. (ச) ஆ அ.

மார்க்கசைவம்.

பொன்னாற்சிவசாதனம்பூதிசாதன
நன்மார்க்கசாதனமாஞானசாதனந்
துன்மார்க்கசாதனந்தோன்றாததசாதனஞ்
சன்மார்க்கசாதனமாஞ்சுத்தசைவர்க்கே. (க)

கேடறுஞானிகிளர்ஞானபூபதி
பாடறுவேதாந்தசித்தாந்தபாகத்தி
னூடுறுஞானோதயனுண்மைமுத்தியோன்
பாடுறுசுத்தசைவப்பத்தநித்தனே. (உ)

ஆகமமொன்பானதிலானநாலேழு
மோகமினாலேழுமுப்பேதமுற்றுடன்

வேகமில்வேதாந்தசித்தாந்தமெய்மையொன்
ருகமுடிந்தவருஞ்சுத்தசைவமே. (௫)

சுத்தமசுத்தந் துரியங்களோரேழுஞ்
சத்துமசத்துந்தணந்தபராபரா
யுய்த்தபராபரையுள்ளாம்பராபரா
யத்தனருட்சத்தியாயெங்குமாமே. (௬)

சத்துமசத்துந்தணந்தவர்தானுகிச்
சித்தமசித்துந்தெரியாச்சிவோகமாய்
முத்தியுளானந்தசத்தியுண்மூழ்கினர்
சித்தியுமங்கேசிறந்துளதாமே. (௭)

தன்னைப்பரனைச்சதாசிவனென்கின்ற
மன்னைப்பதிபசுபாசத்தைமாசற்ற
முன்னைப்பழமலமுன்கட்டைவிட்டினை
யுன்னத்தகுஞ்சுத்தசைவருபாயமே. (௮)

பூரணந்தன்னிலேவைத்தற்றவப்போத
மாரணமந்தமதித்தானந்தத்தோடு
நேரானவிராறுந்திநெடும்போகங்
காரணமாஞ்சுத்தசைவர்க்குக்காட்சியே. (௯)

மாறுதஞானமதிப்பறமாயோகந்
தேறுதசித்தையைத்தேற்றிச்சிவமாக்கிப்
பேறுணபாவனைபேணிநெறிநிற்றல்
கூறுருஞானிசரிதைகுறிக்கிலே. (௧௦)

வேதாந்தங்கண்டோர்பிரமவித்தியாதரர்
நாதாந்தங்கண்டோர்நடுக்கற்றயோகிகள்

வேதாந்தமில்லாதசித்தாந்தங்கண்டுளோர்
சாதாரணமன்னசைவருபாயமே. (௯)

விண்ணினைச்சென்றணுகாவியன்மேகங்கள்
கண்ணினைச்சென்றணுகாப்பலகாட்சிக
ளெண்ணினைச்சென்றணுகாமலெனப்படு
மண்ணலைச்சென்றணுகாப்பசுபாசமே. (௰)

ஒன்றுமிரண்டுமிலதுமாயொன்றாக
நின்றுசமயநிராகாரநீங்கியே
நின்றுபராபரைநேயத்தைப்பாதத்தாற்
சென்றுசிவமாதல்சித்தாந்தசித்தியே. (௰௧) ஆ. ௰௬.



கடுஞ்சுத்தசைவம்.

வேடங்கடந்துவிகிர்தன்றன்பான்மேவி
யாடம்பரமின்றியாசாபாசஞ்செற்று
பாடொன்றுபாசம்பசுத்துவம்பாழ்படச்
சாடுஞ்சிவபோதகர்சுத்தசைவரே. (௧)

உடலானவைந்தையுமோராறுமைந்து
மடலானமாமாயைமற்றுள்ளநீவப்
படலானகேவலபாசந்துடைத்துத்
திடமாய்த்தனையுற்றல்சித்தாந்தமார்க்கமே. (௨)

சுத்தச்சிவனுரைதானதிற்றோயாமல்
முத்தர்பதப்பொருண்முத்திவித்தாமூல
மத்தகையான்மாவரனையடைந்தற்றாற்
சத்தச்சிவமாவரேசுத்தசைவரே. (௩)

நானென்றுந்தானென்றுநாடிநான்சாரவே
தானென்றுநானென்றிரண்டிலாத்தற்பதந்
தானென்றுநானென்றதத்துவநல்கலாற்
றனென்றுநானென்றுஞ்சாற்றகிலேனே. (ச)

சாற்றரிதாகியதத்துவஞ்சித்தித்தா
லாற்றரிதாகியவைந்துமடங்கிடு
மேற்றிசைஞானம்விளக்கொளியாய்நிற்கும்
பாற்பரசாயுச்சியமாகும்பதியே. (ரு) உயிச.

சரிதை.

நேர்ந்திடுமூலசரிதைநெறியிதென்
றாய்ந்திடுங்காலாங்கிகஞ்சமயமா
மோர்ந்திடுங்கந்துருகேண்மின்கள்பூதலத்
தோர்ந்திடுஞ்சுத்தசைவத்துக்குயிரதே. (க)

உயிர்க்குயிராய்நிற்றலொண்ஞானபூசை
யுயிர்க்கொளிநோக்கன்மகாயோகபூசை
யுயிர்ப்பெறுமாவாகனம்புறப்பூசை
செயிற்கடைநேசஞ்சிவபூசையாமே. (உ)

நாடுநகரமுநற்றிருக்கோயிலுந்
தேடித்திரிந்துசிவபெருமானென்று
பாடுமின்பாடிப்பணிமின்பணிந்தபின்
கூடியநெஞ்சத்துக்கோயிலாய்க்கொள்வனே. (ங)

பத்தர்சரிதைபடுவோர்கிரியையோ
ரத்தகுதொண்டருள்வேடத்தாருவோர்

சுத்தஷீயமாதிசாதகர் தூயோகர்
சித்தர்சிவஞானஞ்சென்றெய்துவோர்களே. (௪)

சார்ந்தமெய்ஞ்ஞானத்தோர் தானவனாயினோர்
சேர்ந்தவெண்யோகத்தர்சித்தர் சமாதியோ
ராய்ந்தகிரிமையோர ருச்சனைதப்பாதோர்
நேர்ந்தசரிதையோர்நீணிலத்தோரே. (௫)

கிரியையோகங்கள்கிளர்ஞானபூசை
யரியசிவனுருவமருமரூபந்
தெரியும்பருவத்துத்தேர்ந்திடும்பூசை
யுரியனதேயத்துயர்பூசையாமே. (௬)

சரிதாதிநான்குந்தருஞானநான்கும்
விரிவானவேதாந்தசித்தாந்தமாறும்
பொருளானதுநந்திபொன்னகர்போந்து
மருளாகுமாந்தர்வணங்கவைத்தானே. (௭)

சமையம்பலசுத்திதன்செயலற்றிடு
மமையும்விசேடமுமரன்மந்திரசுத்தி
சமையநிருவாணங்கலாசுத்தியாகு
மமைமன்னுஞானமார்க்கம்மபிடேகமே. () ௲௯௨

---

## கிரியை.

பத்துத்திசையும்பரமொருதெய்வமுண்
டெத்திக்கிலரிஃலயென்பதினமலர்க்
கொத்துத்திருவடிநீழல்சரணெனத்
தத்தும்வினைக்கடல்சாராதுகாணுமே. (௧)

காணுறுகோடிகடிகமழ்சந்தனம்
வாணுறுமாமலரிட்டுவணங்கினு
மூனினைநீக்கியுணர்பவர்க்கல்லது
தேனமர்பூங்குழல்சேரவொண்ணாதே (௨)

கோனக்கன்றாயேகுரைகழலேத்துமின்
ஞானக்கன்றாகியநடுவேயுழிதரும்
வானக்கன்றாகியவானவர்கைதொழு
மானக்கன்றீசனருள்வள்ளமாமே. (௩)

இதுபணிந்தெண்டிசைமண்டலமெல்லா
மதுபணிசெய்கின்றவளொருகூற
னிதுபணிமானிடர்செய்பணியீசன்
பதிபணிசெய்வதுபத்திமைகாணே. (௪)

பத்தன்கிரியைசரிதைபயில்வுற்றுச்
சுத்தவருளாற்றுரிசற்றயோகத்தி
லுய்த்தநெறியுற்றுணர்கின்றஞானத்தாற்
சித்தன்குருவருளாற்சிவமாகுமே. (௫)

அன்பினுருகுவனாளும்பணிசெய்வன்
செம்பொன்செயம்மணிகமலத்திருவடி
முன்புநின்றாங்கேமொழிவதெனக்கரு
ளென்பிலுட்சோதியிலங்குகின்றானே. (௬) ஆக ௩௮.

---

யோகம்.

நெறிவழியேசென்றுநேர்மையுளொன்றித்
தறியிருந்தாற்போலத்தம்மையிருத்திச்

சொறியினுந்தாக்கினுந் தன்மணென்றுணராக்
குறியறிவாளர்க்குக்கூடலுமாமே. (௧)

ஊழிதோறூழியுணர்ந்தவர்க்கல்லது
ஆழிதோறூழியுணரவுந்தாமொட்டா
ளூழியமருமரியயனென்றுளா
ரூழிமுயன்றுமொருச்சியுளானே. (௨)

பூவினிற்கந்தம்பொருந்தியவாறுபோற்
சீவனுக்குள்ளேசிவமணம்பூத்தது
ஓவியம்போலவுணர்ந்தறிவாளர்க்கு
நாவியணைந்தநடுதறியாமே (௩)

உய்ந்தனமென்பீருறுபொருள்காண்கிலீர்
கந்தமலரிற்கரக்கின்றநந்தியைச்
சிந்தையுறவேதெளிந்திருணீங்கினல்
மூந்தப்பிறவிக்குமூலவித்தாகுமே. (௪)

எழுத்தொடுபாடலுமெண்ணெண்கலையும்
பழித்தலைப்பாசப்பிறவியுநீங்கா
வழித்தலைச்சோமனோடங்கியருக்கன்
வழித்தலைசெய்யும்வகையுணர்ந்தேனே. (௫)

விரும்பிநின்றேசெய்யில்மெய்த்தவராகும்
விரும்பிநின்றேசெய்யின்மெய்யுணராகும்
விரும்பிநின்றேசெய்யின்மெய்த்தவமாகும்
விரும்பிநின்றேசெயில்விண்ணவனாமே. (௬)

பேணிற்பிறவாவுலகருட்செய்திடுங்
காணிற்றனதுகலவியுள்ளநிற்கு

நானினரகநெறிக்கேவழிசெயு
மூனிற்சுடுமங்கியுத்தமன்றானே (எ)

ஒத்தசெங்கோலாருலப்பிலிமாதவ
ரெத்தனையாயிரம்வீழ்ந்தவரொண்ணிலி
சித்தர்கடேவர்கள்மூவர்பெருமையா
மத்தனிவனென்றேயன்புறுவார்களே. (அ)

யோகிக்குயோகாதிமூன்றுளகொண்டுற்றோ
ராகத்தகுகிரியாதிசரிதையாந்
தாகத்தைவிட்டசரிதையொன்றுமொன்று
ளாதித்தன்பத்தியுளன்புவைத்தேனே. (கூ)

யோகச்சமயமேயோகம்பலவுன்னல்
யோகவிசேடமேயட்டாங்கயோகமாம்
யோகநிர்வாணமேயுற்றபரோதயம்
யோகவபிடேகமேயொண்சித்தியுற்றலே. (ய) ஆக சஎ.

---

## ஞானம்.

ஞானத்தின்மிக்கவறநெறிநாட்டில்லை
ஞானத்தின்மிக்கசமயமுநன்றது
ஞானத்தின்மிக்கவைநன்முத்திநல்காவா
ஞானத்தின்மிக்கார்நரரின்மிக்காரே. (க)

சத்தமுஞ்சத்தமனனுத்தகுமன
முய்த்தவுணர்வுமுணர்த்துமகந்தையுஞ்
சித்தமென்றிம்மூன்றுஞ்சிந்திக்குஞ்செய்கையுஞ்
சத்தங்கடந்தவர்பெற்றசன்மார்க்கமே. (உ)

தன்பாலுலகுந்தனக்கருகாவது
மன்பாலெலாங்கருளாவதுமாவன
வென்பாசகன்ஞானமுமெய்ப் ஞ்சிவோகமும்
பின்பாவினையமும்பெற்றிருந்தானே. (௩).

இருக்குஞ்செம்மியிடம்பிரமமாகும்
வருக்கஞ்சராசரமாகுமுலகந்
தருக்கியவாசாரமெல்லாந்தருமே
திருக்குமின்ஞானத்தைத்தேர்ந்துணர்ந்தோர்க்கே. ().

அறிவுமடக்கமுமன்புமுடனே
பிறிபாதசர்மன்னுய்பேரருளாளன்
குறியுங்குணமுந்துறைகழனிங்க
நெறியறிவார்க்கிதுநீர்த்தெதானியாமே. (௫).

ஞானம்விளைந்தெழுகின்றதோர்சிந்தையு
ளானம்விளைந்தெதிரேகாணவழிதோறுங்
கூனல்மதிமண்டலத்தெதிர்நீர்கண்டு
ஊனமறுத்துநின்றொளிர்சுடராகுமே. (௬).

ஞானிக்குடன்குணஞானத்திலுங்குமா
மோனிக்கிவையொன்றுங்கூடாமுன்மோகித்து
மேனிற்றலாஞ்சத்திவித்தைவிளைத்திடுந்
தானிக்குலத்தோர்சரிதைகிரியையே. (௭).

ஞானத்தின்ஞானாதிநான்குமாஞானிக்கு
ஞானத்தின்ஞானமேநான்னெனத்தன்னுமல்
ஞானத்தில்யோகமேநாதாந்தநல்லொளி
ஞானக்கிரியையேநன்முத்திநாடலே. (௮)

நண்ணியஞானத்தின்ஞானாதிநண்ணுவோன்
புண்ணியபாவங்கடந்தபிணக்கற்றோன்
கண்ணியநேயக்கலாஞானக்கண்ணினோன்
திண்ணியசுத்தன்சிவமுத்தன்சித்தனே. (௯)

ஞானச்சமயமேநாடுந்தனைக்காண்டல்
ஞானவிசேடமேநாம்பரோதய
ஞானநிர்வாணமேநன்றறிவானருள்
ஞானாபிடேகமேநற்குருபாதமே. (௰) ஆ ௨௮.

சன்மார்க்கம்.

சாற்றுஞ்சன்மார்க்கமாந்தற்சிவதத்துவத்
தோற்றங்களானசுருதிச்சுடர்கண்டு
சீற்றமொழிந்துசிவயோகசித்தராய்க்
கூற்றத்தைவென்றார்குறிப்பறிந்தார்களே. (௧)

சைவப்பெருமைத்தனிநாயகனந்தி
உய்யவகுத்தகுருநெறியொன்றுண்டு
தெய்வச்சிவநெறிசன்மார்க்கஞ்சேர்ந்துய்ய
வையத்துளார்க்குவகுத்துவைத்தானே. (௨)

தெரிசிக்கப்பூசிக்கச்சிந்தனைசெய்யப்
பரிசிக்கக்கீர்த்திக்கப்பாதுகஞ்சூடக்
குருபத்திசெய்யுங்குவலயத்தோர்க்குத்
தருமுத்திசார்பூட்டுஞ்சன்மார்க்கந்தானே. (௩)

தெளிவறியாதார்சிவனையறியார்
தெளிவறியாதார்சிவனுமாகார்

தெளிவறியாதார்சிவமாகமாட்டார்
தெளிவறியாதவர்தீரார்பிறப்பே. (௪)

தானவனாகித்தானைந்தாமலஞ்செற்று
மோனமதாமொழிப்பான்முத்தராவது
மீனமில்ஞானானுபூதியிலின்பமுந்
தானவனாயுற்றலானசன்மார்க்கமே. (௫)

சன்மார்க்கத்தார்க்குமுகத்தொடுபீடமுஞ்
சன்மார்க்கத்தார்க்குமிடத்தொடுதெய்வமுஞ்
சன்மார்க்கத்தார்க்குவருக்கந்தெரிசன
மெம்மார்க்கத்தார்க்குமியப்புவன்கேண்மினே. (௬)

சன்மார்க்கசாதனந்தான்ஞானஞேயமாம்
பின்மார்க்கசாதனம்பேதையர்க்காய்நிற்குந்
துன்மார்க்கம்விட்டதுரியத்துரிசற்றோர்
சன்மார்க்கந்தானவனாகுஞ்சன்மார்க்கமே.' (௭)

சன்மார்க்கமெய்தவருமருஞ்சீடர்க்குப்
பின்மார்க்கமுன்றும்பெறவியல்பாமென்று
நன்மார்க்கந்தானேசிவமென்றுநாடலே
சொன்மார்க்கமென்னச்சுருதிகைக்கொள்ளுமே (௮)

அவ்வியபாசமுமாகுங்கருமமு
மூன்றுமலத்தையுமூலப்பகுதியும்
பின்னியஞானமும்பேதாதிபேதமுந்
தன்னொடுங்கண்டவர்சன்மார்க்கத்தோரே. (௯)

பசுபாசநீக்கிப்பதியுடன்கூட்டிக்
கசியாதநெஞ்சங்கசியக்கசிவித்

தெரியாதவுண்மைச்சொருபோதயத்தற்
றசைவானதில்லாமையானசன்மார்க்கமே. (யி)

மார்க்கஞ்சன்மார்க்கிகளிட்டவருப்பது
மார்க்கஞ்சன்மார்க்கமேயன்றிமற்றொன்றில்லை
மார்க்கஞ்சன்மார்க்கமெனுநெறிவைகாதோர்
மார்க்கஞ்சன்மார்க்கமாஞ்சித்தயோகமே() ஆஉகக.

---

சகமார்க்கம்.

சன்மார்க்கந்தானேசகமார்க்கமான து
மன்மார்க்கமாமுத்திசித்திக்குள்வைப்பதாம்
பின்மார்க்கமானதுபோராப்பிறந்திறந்
துன்மார்க்கஞானத்துறுதியுமாமே. (க)

மருவுந்துவாதசமார்க்கமில்லாதார்
குருவுஞ்சிவனுஞ்சமயமுங்கூடார்
வெருவுந்திருமகள்வீட்டில்லையாகு
முருவுங்கிளையுமொருங்கிழப்போரே. (உ)

யோகச்சமாதியினுள்ளேயகலிடம்
யோகச்சமாதியினுள்ளேயுளவொளி
யோகச்சமாதியினுள்ளேயுளசத்தி
யோகச்சமாதியுகந்தவர்சித்தரே. (ந)

போதமும்போகமும்யோகியர்க்காகுமால்
போகஞ்சிவரூபமுற்றிடமுகந்தோர்
போகப்புவியிற்புருடார்த்தசித்திய
தாகுமிரண்டுமழியதயோகிக்கே. (ச)

ஆதாரசோதனையானாடிசுத்திகள்
மேதாதியீரெண்கலந்ததுவிண்ணொளி
போதாலயத்துட்புலன்கரணப்புந்தி
சாதாரணங்கெடலாஞ்சகமார்க்கமே.　　　　(௫)

பிணங்கிநிற்கின்றவையைந்தையும்பின்னை
யணங்கியெறிவனுயிர்மனவாளாற்
கணம்பதினெட்டுங்கருதுமொருவன்
வணங்கவல்லான்சிந்தைவந்துநின்றானே.　　　　(௬)

வளங்கனியொக்கும்வளநிறத்தார்க்கும்
வளங்கனியொப்பதோர்வாய்மையனாகு
முளங்கனிந்துள்ளமுகந்திருப்பார்க்குப்
பழங்கனிந்துள்ளேபகுந்துநின்றானே. (௭) ஆட என.

---

சற்புத்திரமார்க்கம்.

மேவியசற்புத்திரமார்க்கமெய்த்தொழி
றாவிப்பதாஞ்சகமார்க்கஞ்சகத்தொழி
லாவதிரண்டுமகன்றசகமார்க்கத்
தேவியோடொன்றல்சன்மார்க்கத்தெளிவதே.　　　　(௮)

பூசித்தல்வாசித்தல்போற்றல்செபித்திட
லாசற்றநற்றவம்வாய்மையழுக்கின்மை
நேசித்திட்டன்னமுநீசுத்திசெய்தன்மற்
றாசற்றசற்புத்திரமார்க்கமாகுமே.　　　　(௯)

அறுகாற்பறவையலர்தேர்ந்துழலு
மறுகாநறையன்னந்தாமரைநீலம்

குறுகாநறுமலர்கொய்வனகண்டுஞ்
சிறுகாலறநெறிசேரகிலாரே. (௩)

அருங்கரையாவதவ்வடிநீழற்
பெருங்கரையாவதுபிஞ்ஞகனாணை
வருங்கரையேகின்றமன்னுயிர்க்கெல்லா
மொருங்கரையாயுலகேழினொத்தானே. (௪)

உயர்ந்தும்பணிந்துமுகந்துந்தழுவி
வியர்ந்துமரனடிக்கேமுறைசெய்மின்
பயந்துபிறவிப்பயனதுவாகும்
பயந்துபரிக்கிலப்பாற்கமையருமே. (௫)

நின்றுதொழுவன்கிடந்தெம்பிரான்றன்னை
யென்றுந்தொழுவனெழிற்பரஞ்சோதியைத்
துன்றயலர்தூவித்தொழுமின்றொழுந்தோறுஞ்
சென்றுவெளிப்படுந்தேவர்பிரானே. (௬)

திருமன்றுஞ்சற்புத்திரமார்க்கச்சரிதை
யுருமன்னிவாழுமுலகத்திர்கேண்மின்
கருமன்னுபாசங்கைகூப்பித்தொழுது
விருமன்றுநாடோறுமின்புற்றிருந்தே. (௭) ஆக ௮௫.

---

தாசமார்க்கம்.

எளியனறீபமிடமலர்கொய்த
லளிதின்மெழுகலதுதூர்த்தல்வாழ்த்தற்
பளிமணிபற்றல்பன்மஞ்சனமாதி
தளிதொழில்செய்வதுதான்றாசமார்க்கமே. (௧)

அதுவிதுவாதிப்பரமென்றகல்வ
ரிதுவழியென்றங்கிறைஞ்சினரில்லை
விதிவழியேசென்றுவேந்தனைநாடு
மதுவிதுமென்றஞ்சிற்றணிக்கின்றவாறே. (௧)

அந்திப்பன்றிங்களதன்பின்புஞாயிறு
சிந்திப்பனென்றுமொருவன்செறிகழல்
வந்திப்பவானவர்தேவனைநாடொறும்
வந்திப்பதெல்லாம்வகையின்முடிந்ததே. (௨)

அண்ணலைவானவராயிரம்பேர்சொல்லி
யுள்ளுவருண்மகிழ்ந்துண்ணின்றடிதொழக்
கண்ணவனென்றுகருதுமவர்கட்குப்
பண்ணவன்பேரன்புபற்றிநின்றானே. (௩)

வாசித்துப்பூசித்துமாமலர்கொய்திட்டும்
பாசிக்குளத்தில்வீழ்கல்லாமனம்பார்க்கின்
மாசற்றசோதிமணிமிடற்றண்ணலை
நேசத்திருந்தநினைவறியாரே. (௪) உ௮௮.

சாலோகம்.

சாலோகமாதிசரிதாதியிற்பெறுஞ்
சாலோகசாமீபந்தங்குஞ்சரியையா
மாலோகஞ்சேரில்வழியாகுஞ்சாரூபம்
பாலோகமில்லாப்பரனுருவாமே. (௧)

சமயங்கிரியையிற்றன்மனங்கோயிற்
சமயமனுமுறைதானேவிசேடஞ்

சமயபத் தமூலந் தானே தரசல் மூன்றுஞ்
சமயாபி டேகமே தானுஞ் சமாதியே. (௨) ஆ. ௩௦

---

சாமீபம்.

பாசம் பசுவான தாகுமிச் சாலோகம்
பாச மருளான தாகுமிச் சாமீபம்
பாசஞ் சிவமான தாகுமிச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே. (௧) ஆ. ௩௧

---

சாரூபம்.

தங்கிய சாரூபந் தானெட்டா யோகமாந்
தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா
அங்கத் துடல்சித்தி சாதன ராகுவ
ரிங்கிவ ராகவி ழிவற்ற யோகமே. (௧)

சயில லோகத் தினைச்சார்ந்த பொழுதே
சயில மதாகுஞ் சராசரம் போலப்
பயிலுங் குருவின் பதிபுக்க போதே
கயிலை யிறைவன் கதிர்வடி வாமே. (௨) ஆ. ௩௨

---

சாயுச்சியம்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தன்னைச் சாராம னீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. (௧)

சாயுச்சியஞ்சாக்கிராதீதஞ்சாருதல்
சாயுச்சியமுபசாந்தத்துத்தங்குதற்
சாயுச்சியஞ்சிவமாதல்முடிவிலாச்
சாயுச்சியமனத்தானந்தசத்தியே. (௨) ஆ-௯௫.



## சத்திநிபாதம்-மந்தம்.

இருட்டறைமூலையிருந்தகுமரி
குருட்டுக்கிழவனைக்கூடற்குறித்துக்
குருட்டினைநீக்கிக்குணப்பலகாட்டி
மருட்டியவனைமணப்புரிந்தாளே. (௧)

தீம்புலனானதிசையதுசிந்திக்கி
லாம்புலனாயறிவார்க்கமுதாய்நிற்குந்
தேம்புலனானதெளிவறிவார்கட்குக்
கோம்புலனாடியகொல்லையுமாமே. (௨)

இருணீக்கியெண்ணில்பிறவிகடத்தி
யருணீங்காவண்ணமேயாதியருளு
மருணீங்காவானவர்கோனொடுங்கூடிப்
பொருணீங்காவின்பப்புலப்பயில்தானே, (௩)

இருள்சூழறையிலிருந்ததுநாடிற்
பொருள்சூழ்விளக்கதுபுக்கெரிந்தாற்போல்
மருள்சூழ்மயக்கத்துமாமலர்நந்தி
யருள்சூழிறைவனுமம்மையுமாமே, (௪) ஆ-௯௯.



## மந்தரம்.

மருட்டிப்புணர்ந்துமயக்கமுறுத்தி
வெருட்டிவினையறுத்தின்பம்விளைத்துக்
குருட்டினைநீக்கிக்குணம்பலகாட்டி
யருட்டிகழ்ஞானமதுபுரிந்தானே, (௧)

கன்னித்துறைபடிந்தாடியவாடவர்
கன்னித்துறைபடிந்தாமெங்கருத்திலர்
கன்னித்துறைபடிந்தாமெங்கருத்துண்டேற்
பின்னைப்பிறவிப்பிறிதில்லைதானே, (௨)

செய்யன்கரியன்வெளியனற்பச்சைய
னெய்தவுணர்ந்தவரெய்வரிறைவனை
மைவென்றகன்றபகரிபோர்த்தவெங்
கைபணிவனென்றகாதல்செய்யீரோ, (௩)

எய்தியகாலங்களெத்தனையாயினுந்
தையலுந்தானுந்தனிநாயகமெம்பர்
வைகலுந்தன்னைவணங்குமவர்கட்குக்
கையிற்கருமஞ்செய்காட்டதுவாமே. (௪)

கண்டுகொண்டோமிரண்டுந்தொடர்ந்தாங்கொளி
பண்டுபண்டோயும்பரமன்பரஞ்சுடர்
வண்டுகொண்டார்மலர்வார்சடையண்ணலை
னின்றுகண்டார்க்கிருணீக்கிநின்றானே. (௫) ஆ_ா௪,

---

## தீ வி ர ம்.

அண்ணிக்கும்பெண்பிள்ளையப்பனார்தோட்டத்தி
லெண்ணிக்குமேழேழ்பிறவியுணர்விக்கு
முண்ணிற்பதெல்லாமொழியமுதல்வனைக்
கண்ணுற்றுநின்றகனியதுவாகுமே, (௧)

பிறப்பையறுக்கும்பெருந்தவநல்கு
மறப்பையறுக்கும்வழிபடவைக்குங்
குறப்பெண்குவிமுலைக்கோமளவல்லி
சிறப்பொடுபூசனைசெய்யநின்றார்க்கே. (௨)

தாங்குமினெட்டுத்திசைக்குந்தலைமகன்
பூங்கமழ்கோதைப்புரிகுழலாளொடு
மாங்கதுசேருமறிவுடையார்கட்குத்
தூங்கொளிநீலந்துடர்தலுமாமே. (௩)

நணுகினுஞானக்கொழுந்தொன்றுநல்கும்
பணிகினும்பன்மலர்தூவிப்பணிவ
னணுகியதொன்றறியாதவொருவ
னணுகுமுலகெங்குமாவியுமாமே. (௪) ௲௱௮.

---

## தீ வி ர த ர ம்.

இருவினைநேரொப்பிலின்னருட்சத்தி
குருவெனவந்துகுணம்பலநீக்கித்
தருமெய்ஞ்ஞானத்தாற்றன்செயலற்றுத்
திரிமலந்தீர்ந்துசிவனவனாமே. (௧)

இரவுப்பகலுமிலாதவிடத்தே
குரவஞ்செய்கின்றகுழலியையுன்னி
யரவஞ்செய்யாமலவளுடன்சேரப்
பரிசொன்றிலாருப்பராபரைதானே. (௨)

மாலைவிளக்குமதியமுஞாயிறுஞ்
சாலவிளக்குந்தனிச்சுடரண்ணலுள்
ஞானம்விளக்கியநாதனென்னுள்புகுந்
தூனைவிளக்கியுடனிருந்தானே. (௩) ஆக ௱௰௧.

---

## புறச்சமயதூஷணம்.

ஆயத்துளின்றவறுசமயங்களுங்
காயத்துணின்றகடவுளைக்காண்கிலா
மாயக்குழியில்விழுவர்மனைமக்கள்
பாசத்திலுற்றுப்பதைக்கின்றவாறே. (௧)

உள்ளத்தினேதான்கரந்தெங்குநின்றவன்
வள்ளற்றலைவன்மலருறைமாதவன்
பொள்ளக்குரம்பைபுகுந்துபுறப்படுங்
கள்ளத்தலைவன்கருத்தறியார்களே. (௨)

உள்ளத்துமுள்ளன்புறத்துள்ளனென்பவர்க்
குள்ளத்துமுள்ளன்புறத்துள்ளனெம்மிறை
யுள்ளத்துமில்லைபுறத்தில்லையென்பவர்க்
குள்ளத்துமில்லைபுறத்தில்லைதானே. (௩)

ஆறுசமயமுங்கண்டவர்கண்டில
ராறுசமயப்பொருளுப்பயனில்லை

தேறுமின்றேறித்தெளிமின்றெளிந்தபின்
மாறாதமின்றிடனேபுகலாமே. (௫)

சிவமல்லதில்லையறையேசிவமாந்
தவமல்லதில்லைதலைப்படுவார்க்கிங்
கவமல்லதில்லையறுசமயங்கள்
தவம்வல்லநந்திதாட்சார்ந்துய்யநீரே. (௬)

அண்ணலைநாடியவாறுசமயமும்
விண்ணவராகமிகவும்விரும்பியே
முன்னணின்றழியுமுயன்றிலராதலான்
மன்னணின்றெழியுப்வகையறியார்களே. (௭)

சிவகதியேகதிமற்றுள்ளவெல்லாம்
பவகதிபாசப்பிறவியொன்றுண்டு
தவகதிதன்னொடுநேரொன்றுதோன்றி
லவகதிமூவருமவ்வகையாமே (௮)

நூறுசமயமுளவாநுவலுங்கா
லாறுசமயமவ்வாறுட்படுவன
கூறுசமயங்கள்கொண்டநெறிநில்லா
நீறுபரநெறியில்லாநெறியன்றே. (௯)

கற்றுங்கழுதைகள்போலுங்கலதிகள்
சுத்தசிவனெங்குந்தோய்வுற்றுநிற்கின்றான்
குற்றந்தெரியாதார்குணங்கொண்டுகோதாட்டார்
பித்தேறிநாளும்பிறந்திறப்பாரே, (௰)

மயங்குகின்றாருமதிதெளிந்தாரு
முயங்கியிருவினைமுழைமுகப்பாசி

காணங்கடந்தகடவுளைநாடுமின்
னூனங்கடந்தவுருவதுவாமே. (௰௬)

அந்நெறிநாடியவமரர்முனிவருஞ்
சென்னெறிகண்டார்சிவனெனப்பெற்றார்பின்
முன்னெறிநாடிமுதல்வனருளிலார்
சென்னெறிசெல்லார்திகைக்கின்றவாறே. (௰௭)

உறுமாறறிவதுமுண்ணின்றசோதி
பெறுமாறறிகிற்பினைக்கொன்றுமில்லை
யறுமாறதுவானவங்கியுளாங்கே
யிறுமாறறிகிலரேழைகடாமே. (௰௮)

வழிநடக்கும்பரிசொன்றுண்டுவையங்
கழிநடக்குண்டவர்கற்பனைகேட்பர்
சுழிநடக்குந்துயரம்மதுநீக்கிப்
பழிநடப்பார்க்குப்பரவலுமாமே. (௰௯)

வழிசென்றமாதவம்வைகின்றபோது
பழிசெல்லும்வல்வினைப்பற்றறுத்தாங்கே
வழிசெல்லும்வல்வினையார்திறம்விட்டிட்
டுழிசெல்லிலும்பர்தலைவன்முன்னாமே (௨௰) ஆ ௱௯௧

---

நிராகாரம்.

இமையங்களாய்நின்றதேவர்களாறு
சமையங்கள்பெற்றனர்சாத்திரமோதி
யமையறிந்தோமென்பராதிப்பிரானுங்
கமையறிந்தாருட்கலந்துநின்றானே. (௧)

பாங்கமர்கொன்றைப்படர்சடையானடி
தாங்குமனிதர்தரணியிலொப்பர்
நீங்கியவண்ணநினைவுசெய்யாதவ
ரேங்கியுலகிலிருந்தழுவாரே. (உ)

இருந்தழுவாருமியல்புகெட்டாரு
மருந்தவமேற்கொண்டங்கண்ணலையெண்ணில்
வருந்தாவகைசெய்துவானவர்கோனும்
பெருந்தன்மைநல்கும்பிறப்பில்லைதானே. (௩)

ஆரறிவாளர்துணைவர்நினைப்பிலர்
பாரறிவாளர்படிபயன்றுண்பர்
காரறிவாளர்கரந்துபிறப்பார்க
ணீரறிவார்நெடுமாமுகிலாமே. (௪)

அறிவுடன்கூடியழைத்ததோர்தோணி
பறியுடன்பாரம்பழம்பதிசிந்துங்
குறியதுகண்டுங்கொடுவினையாளர்
செறியநினைக்கிலர்சேவடிதானே. (௫)

மன்றுமொருவன்மருவுமனமைய
னென்னின்மனிதரிகழ்வரிவ்வேழைக
ளொன்றிமனமேதொழுமின்றுணையிலி
தன்னையுமங்கேதலைப்படலாமே, (௬)

ஓங்காரத்துள்ளொளியுள்ளேயுதயமுற்
றாங்காரமற்றவனுபவங்கைகூடார்
சாங்காலமுன்னார்பிறவாமைசார்வுறார்
நீங்காச்சமயத்துணின்றொழிந்தார்களே. ()அ௱௬௪.

## உட்சமயம்.

இமையவர்தம்மையுமெம்மையுமுன்ன
மமையவகுத்தவனாதிப்புராணன்
சமயங்களாறுந்தன்றாளிணைநாட
வமையஞ்சூழ்கின்றவாதிப்பிரானே. (க)

ஒன்றதுபேரூர்வழியாறதற்குள
வென்றதுபோலவிருமுச்சமயமு
நன்றிதுதீதிதுவென்றுரையாளர்கள்
குன்றுகுரைத்தெழுநாயையொத்தார்களே. (உ)

சைவப்பெருமைத்தனிநாயகன்றன்னை
யுய்யவுயிர்க்கின்றவொண்சுடர்நந்தியை
மெய்யபெருமையர்க்கன்பனையின்பஞ்செய்
வையத்தலைவனைவந்தடைந்துய்மினே. (௩)

சிவனவன்வைத்ததோர்தெய்வநெறியிற்
பவனவன்வைத்தபழவழிநாடி
யிவனவனென்பதறியவல்லார்கட்
கவனவனங்குளனாங்கடனாமே. (௪)

ஆமாறுணர்க்குமறுசமயாதிக்குப்
போமாறுதானில்லைப்புண்ணியமல்லது
காமாம்வழியாக்குமவ்வேறுயிர்கட்கும்
போமாறவ்வாதாரப்பூங்கொடியாளே. (௫)

ஆரநெறியாவதறிந்தேனுநானுஞ்
சிலநெறிதேடித்திரிந்தவந்நாளு

மூாநெறியுள்ளக்கடல்கடந்தேறுந்
தாநெறிநின்றதனிச்சுடர்தானே. (சு)

தேர்ந்தவரன்னயடைந்தசிவநெறி
பேர்ந்தவருன்னிப்பெயர்ந்தபெருவழி
யார்ந்தவரண்டத்துப்புக்கவருநெறி
போந்துபுனைந்துபுணர்நெறியாமே. (எ)

சாருமனத்தையிரண்டறவீசுமின்
னாருஞ்சகாரத்தையோதுமின்ஞோதியே
வாருமரனெறிமன்னியமுன்னியத்
தாருஞ்சுடரொளிதோன்றலுமாமே. (அ)

யினைத்குறியாளனைவேதியர்வேதத்
தனைக்குறியாளனையாதிப்பிரான்றன்னை
நினைக்குறியாளனைஞானக்கொழுந்தி
னைபக்குறிகாணிலரனெறியாமே. (கூ)

ஆய்ந்துணரார்களினுன்மாச்சதிர்பல
வாய்ந்துணராவகைநின்றவரனெறி
பாய்ந்துணர்வாரரன்சேவடிகைதொழு
தேர்ந்துணர்செய்வதோரின்பமுமாமே. (ய)

சைவச்சமயத்தனிநாயகனந்தி
யுப்பவகுத்தகுருநெறியொன்றுண்டு
தெய்வச்சிவநெறிசன்மார்க்கஞ்சேர்ந்துய்ய
வையத்துளார்க்குவகுத்துவைத்தானே. (யக)

இத்தவமத்தவமென்றிருபேரிடும்
பித்தரைகாணினருமங்கள்பேர்நந்தி

யெத்தவமாகிலென்னெங்குப்பிறக்கிலென்
னொத்துணர்வார்க்கொல்லையூர்புகலாமே. (௰உ)

ஆமேபிரான்முகமைந்தொடுமாருயி
ராமேபிரானுக்கதோமுகமாறுள
தாமேபிரானுக்குந்தன்சிரமாலைக்கு
நாமேபிரானுக்குநரரியல்பாமே. (௰௩)

ஆதிப்பிரானுலகேழுமளந்தவ
னோதக்கடலுமுயிர்களுமாய்நிற்கும்
பேதிப்பிலாமையினின்றபராசத்தி
யாதிக்கட்டெய்வமுமந்தமுமாமே. (௰௪)

ஆய்ந்தறிவார்களமரர்வித்தியாதர
ராய்ந்தறியாவண்ணநின்றவரனெறி
வாய்ந்தறிந்தேனவன்சேவடிகைதொழக்
காய்ந்தறிந்தேனிம்மையம்மைகண்டேனே. (௰௫)

அறியவொண்ணாதவ்வுடம்பின்பயனை
யறியவொண்ணாதவறுவகையாக்கி
யறியவொண்ணாதவறுவகைகோசத்
தறியவொண்ணாதவொரண்டம்பதிந்ததே. (௰௬)

ஆ-அதிகாரம்-உ௬இ-திருமந்திரம்-௩௫௪.

ஐந்தாந்தந்திரமுற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுள்பட- அதிகாரம்-௩௰௬இ.

கூ.டியதிருமந்திரம்- ௲௫௭உ.







## சிவகுருதெரிசனம்.

பத்திப்பணித்துப்பரவுமடிநல்கிச்
சுத்தவுராபாற்றரிசறச்சோதித்துச்
சத்துமசத்துஞ்சதசத்துங்காட்டலாற்
சித்தமிறையேசிவகுருவாமே. (௧)

பாசத்தைக்கூட்டியேகட்டிப்பறித்திட்டு
நேசித்தகாயம்விடுவித்துநேர்நேரே
கூசற்றமுத்தியிற்கூட்டலாநாட்டத்த
தாசற்றசற்குருவம்பலமாமே. (௨)

சித்திகளெட்டொடுந்திண்சிவமாக்கிய
சுத்தியுமெண்சத்தித்தூய்மையும்யோகத்துச்
சத்தியுமந்திரசாதகபோதமும்
பத்தியுநாதனருளிற்பயிலுமே. (௩)

கல்லாவுலகிற்குமப்பாலோனிப்பாலாய்
நல்லாருள்ளத்துமிக்கருணல்கலா
லெல்லாருமுய்யக்கொண்டிங்கேயளித்தலாற்
சொல்லார்ந்தநற்குருசுத்தசிவமே. (௪)

தேவனுஞ்சுத்தகுருவும்பாயத்துள்
யாவையுமூன்றாயுனக்கண்டோயாலே
மூவாப்பசுபாசமாற்றியேமுத்திப்பால்
யாவையுநல்குங்குருபரனன்புற்றே. (௫)

சுத்தசிவன்குருவாய்வந்துதூய்மைசெய்
தத்தனைநல்கருள்காணுவதிமூடர்,

பொய்த்தருகண்ணுனமரொஸ்பர்புண்ணிய
சத்தனிவனென்றடிபணிவாரே. (௬)

உண்மையிற்பொய்மையொழித்தலு முண்மைப்பார்
திண்மையுமொண்மைச்சிவமாயவவ்வரன்
வண்மையுமெட்டெட்டுச்சித்திமயக்கமு
மண்ணலருளன்றியாரறிவாரே. (அ)

சிவனேசிவஞானியாதலாற்சுத்த
சிவனேயெனவடிசேரவல்லார்க்கு
நவமானதத்துவநன்முத்திநண்ணும்
பவமானதின்றிப்பரலோகமாமே. (௯)

குருவேசிவமெனக்கூறினனந்தி
குருவேசிவமென்பதுகுறித்தோரார்
குருவேசிவனுமாய்கோனுமாய்நிற்குங்
குருவேயுரையுணர்வற்றதோர்கோவே. (௰)

சித்தமியாவையுஞ்சிந்தித்திருந்திடு
மத்தனுணர்த்துவதாகுமருளாலே
சித்தமியாவையுந்திண்சிவமானக்கா
லத்தனுமவ்விடத்தேயமர்ந்தானே. (௰)

தானந்திசீர்மையுட்சந்தித்தசீர்வைத்த
கோனந்தியெந்தைகுறிப்பறிவாரில்லை
வானந்தியென்றுமகிழுமொருவற்குத்
தானந்தியங்கித்தனிச்சுடராமே. (௰௧)

திருவாயசித்தியுமுத்தியுஞ்சீர்மை
மருளாதருளுமயக்கறும்வாய்மை

பொருளாயவேதாந்தப்போதமுநாத
னுருவாயருளாவிடிலோர்வொண்ணாதே. (௰௨)

பத்தியுஞானவைராக்கியமும்பர
சித்திக்குவித்தாஞ்சிவோகமேசேர்தலான்
முத்தியின்ஞானமுளைத்தலாலம்முளை
சத்தியருடரிற்றுனெனிதாமே. (௰௩)

இன்னெய்தவைத்ததோரில்பப்பிறப்பினை
முன்னெய்தவைத்தமுதல்வனையெய்மிறை
தன்னெய்துங்காலத்துத்தானேவெளிப்படு
மன்னெய்தவைத்தமனமதுதானே. (௰௪)

சிவமானஞானந்தெளியவொண்சித்தி
சிவமானஞானந்தெளியவொண்முத்தி
சிவமானஞானஞ்சிவபரத்தேயேகச்
சிவமானஞானஞ்சிவானந்தநல்குமே. (௰௫)

அறிந்துணர்ந்தேனிவ்வகலிடமுற்றுஞ்
செறிந்துயர்ந்தோதித்திருவருள்பெற்றேன்
மறந்தொழிந்தேன்மதிமாண்டவர்வாழ்க்கைப்
பிறிந்தொழிந்தேனிப்பிறவியைநானே. (௰௬)

தரிக்கின்றபல்லுயிர்க்கெல்லாந்தலைவ
னிருக்கின்றதன்மையைப்பேதுமுணரார்
பிரிக்கின்றவிந்தப்பிணக்கறுத்தெல்லாங்
கருக்கொண்டவீசனைக்கண்டுகொண்டேனே. (௰எ)



## திருவடிப்பேறு.

இசைந்தெழுமன்பிலெழுந்தபடியே
பசைந்தெழுமீசரைப்பாசத்துளேகச்
சிவந்தகுருவந்துசென்னிகைவைக்க
வுவந்தகுருபதமுள்ளத்துவந்ததே. (க)

நாடந்தபோதேதலைதந்தவெம்மிறை
வாடந்தஞானவலியையுந்தந்திட்டு
வீடந்தமின்றியேயாள்கெனவிட்டருட்
பாடின்முடிவைத்துப்பார்வந்துதந்ததே. (உ)

நானவனாகிச்சொருபத்துவந்திட்டு
வானசொருபங்களாங்குமகற்றின
வேனையமுத்திரைபீந்தாண்டநன்னந்தி
தானடிமுற்சூட்டித்தாபித்ததண்மையே. (ரு)

உரையற்றுணர்வற்றுயிர்பரமற்றுத்
திரையற்றநீர்போற்சிவமாதலீர்த்துக்
கரையற்றசத்தியாதிநான்குங்கடந்து
சொருபத்திருத்தினன்சொல்லிறந்தோமே. (ச)

குரவனுயிர்முச்சொருபமுங்கைக்கொண்
டரியபொருண்முத்திரையாகக்கைக்கொண்டு
பெரியபிரானடிநந்திபேச்சற்று
வுருகிடவென்னையங்குய்யக்கொண்டானே. (ரு)

பேச்சற்றவின்பத்துப்பேரானந்தத்திலே
மாச்சற்றவென்னைச்சிவமாக்கிமாளவித்துக்

காச்சற்றசோதிகடன்மூன்றங்கைக்கொண்டு
வாச்சபுகழ்மாளத்தாடந்தருமன்றுமே. (௬)

இதயத்துநாட்டத்துமென்றன்சிரத்துப்
பதிவித்தபாதம்பராபரநந்தி
கதிவைத்தவாறுமெய்காட்டியவாறும்
விதிவைத்தவாறும்விளம்பவொண்ணாதே. (௭)

திருவடிவைத்தென்சிரத்தருணோக்கிப்
பெருவடிவைத்தந்தபேர்நந்திதன்னைக்
குருவடிவிற்கண்டகோனைமயங்காவைக்
கருவழிமாற்றிடக்கண்டுகொண்டேனே. (௮)

திருவடிஞானஞ்சிவமாக்குவிக்குந்
திருவடிஞானஞ்சிவலோகஞ்சேர்க்குந்
திருவடிஞானஞ்சிறைமலமீட்குந்
திருவடிஞானமேதிண்சித்திமுத்தியே. (௯)

மேல்வைத்தவாறுசெய்யாவிடின்மேல்வினை
மால்வைத்தசிந்தையைமாயமதாக்கிடும்
பால்வைத்தசென்னிப்படரொளிவானவன்
றான்வைத்தவாறுதரிப்பித்தவாறே. (௰)

கழலார்கமலத்திருவடியென்னு
நிழல்சேரப்பெற்றேனெம்மாலறியா
அழல்சேருமங்கியுளாதிப்பிரானுங்
குழல்சேருமின்னுயிர்க்கூடுங்குலைத்ததே. (௧௧)

முடிமன்னராகிமூவுலகமதாள்வ
ரடிமன்னரின்பத்தளவில்லைகேட்கின்

முடிமன்னராய்நின்றதேவர்களீசன்
குடிமன்னராய்க்குற்றமற்றுநின்றாரே. (௰௨)

வைத்தேனடிகண்மனத்தினுள்ளேநான்
பொய்த்தேயெரியும்புலன்வழிபோகாமே
யெய்த்தேனுழலுமிருவினைமாற்றிட்டு
மெய்த்தேனறிந்தேனவ்வேதத்தினந்தமே. (௰௩)

அடிசாரலாமண்ணல்பாதமிரண்டு
முடிசாரவைத்தனர்முன்னைமுனிவர்
படிசார்ந்தவின்பப்பழவடிவெள்ளக்
குடிசார்நெறிகூடிநிற்பவர்கொள்கையே. (௰௪)

மந்திரமாவதுமாமருந்தாவதுந்
தந்திரமாவதுந்தானங்களாவதுஞ்
சுந்தரமாவதுந்தூய்நெறியாவது
மெந்தைபிரான்றனிணையடிதானே. (௰௫) ஆ ௩௨,

## ஞாதுருஞானஞேயம்.

நீங்காச்சிவானந்தஞேயத்தேநின்றிட்ப்
பாங்கானபாசம்படரப்படரினு
மாங்காரநீங்கியதனிலைநிற்கவே
நீங்காவமுதநிலைபெறலாமே. (௧)

ஞேயத்தேநின்றோர்க்குஞானாதிநின்றிடு
ஞேயத்தின்ஞாதுருஞேயத்தில்வீடாகு
ஞேயத்தின்ஞேயத்தைஞேயத்தையுற்றவ
ராயத்தினின்றவறிவறியாரோ. (௨

தானென்றவனென்றிரண்டாகுந்தத்துவந்
தானென்றவனென்றிரண்டுந்தனிற்கண்டு
தானென்றபூவையவனடிசாத்திஞ
ஞனென்றவனென்கைநல்லதொன்றன்றே. (௩)

வைச்சனவாறாறுமாற்றியெனைவைத்து
மெச்சப்பரன்றன்வியாப்துவமேலிட்டு
நிச்சயமாக்கிச்சிவமாக்கிஞேயத்தா
லச்சங்கெடுத்தென்னையாண்டனனந்தியே. (௪)

முன்னையறிவறியாதவம்மூடர்போற்
பின்னையறிவறியாமையைப்பேதித்தான்
றன்னையறியப்பரனாக்கித்தற்சிவத்
தென்னையறிவித்திருந்தனனந்தியே. (௫)

காணாதகண்ணுடன்கேளாதகேள்வியுங்
கோணாதபோகமுங்கூடாதகூட்டமு
நாணாதநாணமுநாதாந்தபோதமுங்
காணாயெனவந்துகாட்டினனந்தியே, (௬)

மோனங்கைவந்தோர்க்குமுத்தியுங்கைகூடு
மோனங்கைவந்தோர்க்குச்சித்தியுமுன்னிற்கு
மோனங்கைவந்தூமையாமொழிமுற்றுங்காண்
மோனங்கைவந்தைங்கருமமுமுன்னுமே (௭)

முத்திரைமூன்றின்முடிந்ததுமூன்றின்பால்
வைத்தகலைகால்நான்மடங்காம்மாற்றி
யுய்த்தவத்தானந்தத்தொண்குருபாதத்தே
பெத்தமறுத்தோர்பிறந்திறவாரே. (௮).

மேலைச்சொருபங்கண்மூன்றுமிகுசத்தி
பாலித்தமுத்திரைபற்றும்பரஞானி
யாலித்தநட்டமேஞேயம்புகுர்தற்ற
மூலச்சொருபன்மொழிஞா துருவனே,(௯) ௲௪௧.

---

துறவு.

இறப்பும்பிறப்புமிருமையுநீங்கித்
துறக்குந்தவங்கண்டசோதிப்பிரானை
மறப்பிலராய்நித்தய்வாய்மொழிவார்கட்
கறப்பதிகாட்டுமமரர்பிரானே, (௧)

பிறந்துபிறந்தும்பல்பேதமையாலே
மறந்துமலவிருணீங்கமறைந்து
சிறந்தசிவனருட்சேர்பருவத்துத்
துறந்தவுயிர்க்குச்சுடரொளியாமே. (௨)

அறவன்பிறப்பிலியாருமிலாதா
னுறைவதுகாட்டகமுண்பதுபிச்சை
துறவெனுங்கண்டீர்துறந்தவர்தம்மைப்
பிறவியறுத்திடும்பித்தன்கண்டீரே. (௩)

நெறியைப்படைத்தானெருஞ்சில்படைத்தா
னெறியில்வழுவினெருஞ்சில்முட்பாயு
நெறியில்வழுவாதியங்கவல்லார்க்கு
நெறியினெருஞ்சின்முட்பாயகிலாவே. (௪)

கேடுங்கடமையுங்கேட்டுவந்தைவரு
நாடிவளைந்ததுநான்கடவேனலே

றுடைக்விடையுடையண்ணல்திருவடி
கூடுந்தவஞ்செய்தகொள்கையன்றனே. (௫)

உழவனுழவுழவானப்வழங்க
வுழவனுழவினிற்பூத்தம்விளை
யுழவனுழத்தியர்கண்ணேக்குமென்றிட்
டுழவனதனையுழலொழிந்தானே. (௬)

மேல்துறந்தண்ணல்விளங்கொளிகூறுவன்
தான்றுறந்தார்க்கவனண்பனல்லாவிலி
கார்துறந்தார்க்கவன்கண்ணுதலாய்நிற்கும்
பார்துறந்தார்க்கேபதஞ்செயலாமே. (௭)

நாகமுமொன்றுபடமைந்துநாலது
போகமுட்புற்றிற்பொருந்திநிறைந்தது
வாகமிரண்டும்படம்விரித்தாட்டொழிந்
தேகப்படஞ்செய்துடம்பிடமாமே. (௮)

அகன்றார்வழிமுதலாதிப்பிரானு
மிவன்றனெனநின்றெளியனுமல்லன்
சிவன்றான்பலபலசிவனுமாகு
நயன்றான்வரும்வழிநாமறியோமே. (௯)

காம்புதிர்ந்தனவொன்பதுவாய்தனு
மாய்பற்குழலியின்கஞ்சளிப்பட்ட து
வேம்பேறிநோக்கினன்மீகாமன்கூறையிற்
கூம்பேறிக்கோயிலிற்புக்கின்றவாறே. (௰) ஆ திக.

## தவம்.

ஒடுக்குநிலைபெற்றவுத்தமருள்ள
நடுங்குவதில்லைநமனுமங்கில்லை
யிடும்பையுமில்லையிராப்பகலில்லை
படும்பயனில்லைபற்றுவிட்டோர்க்கே. (௧)

எம்மாருயிருமிருநிலத்தோற்றமுஞ்
செம்மாதவத்தின்செயலின்பெருமையு
மம்மான்திருவருட்பெற்றவர்க்கல்லா
திம்மாதவத்தினியல்பறியாரே. (௨)

பிறப்பறியார்பலபிச்சைசெய்மாந்தர்
சிறப்பொடுவேண்டியசெல்வம்பெறுவர்
மறப்பிலராகியமாதவஞ்செய்வார்
பிறப்பினைநீக்கும்பெருமைபெற்றாரே. (௩)

இருந்துவருந்தியெழிற்றவஞ்செய்யும்
பெருந்தன்மையாளரைப்பதிக்கவென்றே
யிருந்திந்திரனேயெவரேவரினுந்
திருந்துந்தன்சிந்தைசிவனவன்பாலே. (௪)

கரந்துங்கரந்திலன்கண்ணுக்குந்தோன்றான்
பரந்தசடையன்பசும்பொன்னிறத்த
னருந்தவர்க்கல்லாலணுகலுமாகான்
விரைந்துதொழப்படும்வெண்மதியானே. (௫)

இன்னெய்தவைத்ததோரின்பப்பிறப்பினை
முன்னெய்தவைத்தமுதல்வனையெம்மிறை

தங்காலத் துத்தானேவெளிப்படு
ப்தலையைத்தமனமதுதானே. (சு)

மைச்சருமானைக்குழாமுமரசும்
பகைத்தெழும்பூசலுட்பட்டார்நடுவே
யமைத்தமைதார் ஞானமுமாத்தமுநோக்கி
யிமைத்தழியாதிருந்தார்தவத்தாரே. (எ)

சாத்திரமோதுஞ்சதிர்களைவிட்டுநீர்
மாத்திரைப்போதுமறித்துள்ளேநோக்குமின்
பார்த்தவிப்பார்வைபசுமரத்தாணிபோ
லார்த்தபிறவியகலவிட்டோடுமே. (அ)

தவம்வேண்டுஞானந்தலைப்படவேண்டிற்
றவம்வேண்டாஞானசமாதிகைகூடிற்
றவம்வேண்டாமச்சகசமார்க்கத்தோர்க்குத்
தவம்வேண்டாமாற்றந்தனையறியாரே. (கூ) ஆக கூய.

---

தவதூடணம்.

ஓதலும்வேண்டாமுயிர்க்குயிருள்ளுற்றாற்
காதலும்வேண்டாமெய்க்காயமிடங்கண்டாற்
சாதலும்வேண்டாஞ்சமாதிகைகூடினாற்
போதலும்வேண்டாம்புலன்வழிபோகார்க்கே. (க)

கத்தவும்வேண்டாங்கருத்தறிந்தாறினாற்
சுத்தமும்வேண்டாஞ்சமாதிகைகூடினாற்
சுத்தமும்வேண்டாந் ... டக்கற்றுநிற்றலாற்
சித்தமும்வேண்டாஞ்செயலற்றிருக்கிலே. (உ)

விளைவறிவார்பண்டைமெய்த்தவஞ்செய்வார்
விளைவறிவார்பண்டைமெய்யுணாசெய்வார்
விளைவறிவார்பண்டைமெய்யறஞ்செய்வார்
விளைவறிவார்விண்ணின்மண்ணின்மிக்காரே. (௩)

கூடித்தவஞ்செய்துகண்டேன்குரைகழல்
தேடித்தவஞ்செய்துகண்டேன்சிவகதி
வாடித்தவஞ்செய்வதேதவமிவைகளந்
தூடிற்பலவுலகோரொத்தவரோ. (௪)

மனத்துறைமாகடலேழுங்கைநீந்தித்
தவத்திடையாளர்தஞ்சார்வத்துவந்தார்
பவத்திடையாளரவர்பணிகேட்கின்
முகத்திடைநந்தியையுமுந்தலுமாமே. (௫)

மனத்திடைநின்றமதிவாளுருவி
யினத்திடைநீக்கியிரண்டறவிர்த்துப்
புனத்திடையஞ்சும்போகாமல்மறித்தாற்
றவத்திடையாமொருளிதன்னொளியாமே. (௬)

ஒத்துமிகவுநின்றானையுரைப்பது
பத்திகொடுக்குப்பணிந்தடியார்தொழு
முத்திகொடுக்குமுனிவனெனும்பதச்
சத்தானசெய்வதாந்தான்றவர்தானே, (௭)

இலைதொட்டுப்பூப்பறித்தெத்தைக்கென்றென்னணி
மலர்தொட்டுக்கொய்யேவருப்புனல்காணேண்
றலைதொட்டநூற்கண்டுதாழ்ந்தவென்னுள்ளந்
தலைதொட்டுக்கண்டேன்றவங்கண்டவாறே. (௮)

படர்சடைமாதவம்பத்தியபத்தர்க்
கிடரடையாவண்ணமீசனருளு
விடரடைசெய்தவர்மெய்த்தவநோக்கி
னுடரடைசெய்வதொருமனத்தாமே. (௯)

ஆற்றிற்கிடந்தமுதலைகண்டஞ்சிப்போ
யீற்றுக்கரடிக்கெதிர்ப்பட்டதனொக்கு
நோற்றுத்தவஞ்செய்யார்நூலறியாதவர்
சோற்றுக்குநின்றுசுழல்கின்றவாறே. (௰)

பழுக்கின்றவாறும்பழமுண்ணுமாறுங்
குழக்கன்றுதுள்ளியக்கோணியைப்புல்காற்
குழக்கன்றுகொட்டிலிற்கட்டவல்லார்க்குள்
ளிழுக்காதநெஞ்சத்திடவொன்றுமாமே.

சித்தஞ்சிவமாகச்செய்தவம்வேண்டாவாற்
சித்தஞ்சிவானந்தஞ்சேர்ந்தோருறவுண்டாற்
சித்தஞ்சிவமாகவேசித்திமுத்தியாஞ்
சித்தஞ்சிவமாதல்செய்தவப்பேறே. (௰௨) ஆ. ௭

---

அருளுடைமையின்ஞானம்வருதல்.

பிரானருளுண்டெனிலுண்டுநற்செல்வம்
பிரானருளுண்டெனிலுண்டுநன்ஞானம்
பிரானருளிற்பெருந்தன்மையுமுண்டு
பிரானருளாற்பெருந்தெய்வமுமாமே. (௧)

தமிழ்மண்டலமைந்துந்தாவியஞான
னுமிழ்வதுபோலவுலகந்திரிவா

ரவீரு மணமுமெய்மாதிபதிவுந்
தமிழ்மண்டலமைந்தாந்தத்துவமாமே. (உ)

புண்ணியபாவமிரண்டுள பூமியி
னென்றும்பொழுதறிவார்சிலஞானிக
ளெண்ணிரெண்டையும்வேராறுத்தப்புறத்
தண்ணலிருப்பிடமாய்ந்துகொள்வீரோ. (௩)

முன்னின் மருளுமுடிகின்றகாலத்து
நன்னின்றுலகினவ்வுயிராய்நிற்கும்
பின்னின்றருளும்பிறவியைநீக்கிடு
முன்னின்றெனக்கொருமுத்தித்தானே. (௪)

சிவனருளாற்சிலர்தேவருமாவர்
சிவனருளாற்சிலர்தெய்வத்தோடொப்பர்
சிவனருளால்வினைசேரகிலாமை
சிவனருட்கூறிலச்சிவலோகமாமே. (௫)

புண்ணியமெந்தைபுனிதனிணையடி
நண்ணிவிளக்கெனஞானம்விளைந்தது
மண்ணவராவதும்வானவராவது
மண்ணலிறைவனருட்பெற்றபோதே. (௬)

காலத்தேறிமனப்பாகன்கைகூட்ட
மாயத்தேறிமயங்குமவையுணர்
நேயத்தேறிநிமலனருட்பெற்று
லாயத்தேறிபவனிவருமே. (௭)

அவ்வுலகத்தேபிறக்கிலுடலொடு
மவ்வுலகத்தேயருந்தவர்நாடுவ

னவ்வுலகத்தேயானடிகூடுவ
னவ்வுலகத்தேயருள்பெறுவாறே. (௮)

கதிர்கண்டகாந்தங்கனலின்வடிவா
மதிகண்டகாந்தமணிநீர்வடிவாஞ்
சதிகொண்டசாக்கியெரியின்வடிவா
மெரிகொண்டவீசனெழில்வடிவாமே. (௯)

நாடுமுறவுங்கலந்தெங்கணாதியைத்
தேடுவன்றேடிச்சிவபெருமானென்று
கூடுவன்கூடிக்குறைகழற்கேசெல
வீடுமளவும்விடுகின்றிலேனே. (௰) ஆ. அ௨.

---

அவவேடம்.

ஆடம்பரங்கொண்டடிசிலுண்பான்பயன்
வேடங்கள்கொண்டுவெருட்டிடும்பேதைகா
ளாடியும்பாடியுமழுதுமரற்றியுந்
தேடியுங்காணீர்சிவனவன்றாள்களே. (௧)

ஞானமிலார்வேடம்பூண்டிந்தநாட்டிடை
யீனமதேசெய்திரந்துண்டிருப்பினு
மானநலங்கெடுமப்புவியாதலா
லீனவர்வேடங்கழிப்பித்தலின்பமே. (௨)

இன்பமுந்துன்பமுநாட்டாரிடத்துள
நன்செயல்புன்செயலாலந்தநாட்டிற்கா
மென்பவிறைநாடிநாடோறுநாட்டினின்
மன்பதைசெப்பஞ்செயில்வையம்வாழுமே. (௩)

இழிகுலத்தார்வேடம்பூண்பர்மேலெய்த
வழிகுலத்தோர்வேடம்பூண்பர்தேவாகப்
பழிகுலத்தாகியபாழ்சண்டராஞர்
கழிகுலத்தோர்கள்களையப்பட்டோரே. (ச)

பொய்த்தவஞ்செய்வார்புகுவார்நரகத்துப்
பொய்த்தவஞ்செய்தவர்புண்ணியராகாரோற்
பொய்த்தவமெய்த்தவம்போகத்துட்போக்கியஞ்
சத்தியஞானத்தாற்றங்குந்தவங்களே. (ரு)

பொய்வேடம்பூண்பர்பொசித்தற்பயஞக
மெய்வேடம்பூண்போர்மிகுமிச்சைக்கொள்வர்
பொய்வேடமெய்வேடம்போதவேபூணிஞு
முய்வேடமாகுமுணர்ந்தறிந்தோர்க்கே. (சூ) அ அ

---

## தவவேடம்.

தவமிக்கவரேதலையானவேட
மவமிக்கவரேயறிகொலைவேட
ரவமிக்கவர்வேடத்தாகாரவ்வேடந்
தவமிக்கவர்க்கன்றித்தாங்கவொண்ணுதே. (க)

பூதியணிவதுசாதனமாறியிற்
காதணிதாம்பிரகுண்டலங்கண்டிகை
யோதியவர்க்குமுருத்திரசாதனந்
தீதில்சிவயோகிசாதனந்தேரிலே. (உ)

யோகிக்கிடுமதுவுட்கட்டுகஞ்சுளி
தோகைக்குப்பாசத்துச்சுற்றுஞ்சடையதோன்

ருகத் துநிறனியாங்கக்கபாலஞ்
சிகத்தமாத்திரைதிண்பிரம்பாகுமே. (௩)

காதணிகுண்டலங்கண்டிகைநாதமு
மூதநற்சங்குமுயர்கட்டிக்கப்பரை
யேதமில்பாதுகமியோகாந்தமாதன
மேதமிலியோகப்படந்தண்டமீரைந்தே (௪) ஆ. கஉ.



திருநீறு.

நூலுஞ்சிகையுமுணரார்நின்மூடர்கள்
நூலதுவேதாந்தநுண்சிகைஞானமாம்
பாலொன்றுமந்தணர்பார்ப்பார்பரமுயி
ரோரொன்றிரண்டினிலோங்காரமோதிலே. (க)

கங்காளன்பூசுங்கவசத்திருநீற்றை
மங்காமற்பூசமகிழ்விரோயாமாகிற்
றங்காவினைகளுஞ்சாருஞ்சிவகதி
சிங்காரமானதிருவடிசேர்வரே. (உ)

அரசடலுலத்தியாகுமக்காரம்
விரவுகனலில்வியனுருமாறி
நிரவயனிர்மலன்றுள்பெற்றநீத
ருருவப்பிரமனுயர்குலமாமே. (௩) ஆ. கரு.

ஞானவேடம்.

ஞானமிலார்வேடம்பூண்டிநரகத்தர்
ஞானமுள்ளோர்வேடமின்றெனினன்முத்தர்

ஞானமுளதாகவேண்டுவோர்நக்கன்பான்
ஞானமுளவேட நண்ணிநிற்பாரே. (௧)

புன்ஞானத்தோர்வேடம்பூண்டும்பயனில்லை
நன்ஞானத்தாவ்வேடம்பூணாருணண்ணித்
துன்ஞானத்தோர்சமயத்துரிசுள்ளோர்
பின்ஞானத்தோரொன்றும்பேசகில்லாரே. (௨)

சிவஞானிகட்குஞ்சிவயோகிகட்கு
மவமானசாதனமாகாதுதேரி
லவமாமவர்க்கதுசாதனநான்கு
முவமானமில்பொருளுள்ளுறலாமே. (௩)

கத்தித்திரிவர்கழுவடிநாய்போற்
கொத்தித்திரிவர்குரக்களிஞானிக
ளொத்துப்பொறியுமுடலுமிருக்கவே
செத்துத்திரிவர்சிவஞானியோர்களே. (௪)

அடியாரவரேயடியாரலாதா
ரடியாருமாகாரவ்வேடமுமாகா
ரடியார்சிவஞானமானதுபெற்றோ
ரடியாரலாதாரடியார்களன்றே. (௫)

ஞானிக்குச்சுந்தரவேடமுநல்லவாந்
தானுற்றவேடமுந்தற்சிவயோகமே
யானவவ்வேடமருண்ஞானசாதன
மானதுமாமொன்றுமாகாதவனுக்கே. (௬)

ஞானத்திறுற்பதரண்ணுஞ்சிவஞானி
தானத்தில்வைத்தநதனியாலயத்தநு

மோனத்தனாதலின்முத்தனுஞ்சித்தனு
மேனைத்தவசியிவனெனலாகுமே. (எ)

ஞானம்றித்தல்லையுந்தானவனாதலு
மேனையவச்சிவமாயவியற்கையுந்
தானுறுசாதகமுத்திரைசாத்தலு
மேனமுநந்திபதமுத்திபெற்றதே. (அ) ஆ ௱௫.

---

## சிவவேடம்.

அருளாலரனுக்கடிமையதாகிப்
பொருளாந்தன தடற்பொற்பதிநாடி
யிருளானதின்றியிருஞ்செயலற்றோர்
தெருளாமடிமைச்சிவவேடத்தாரே. (க)

உடலிற்றுவக்கியவேடமுயிர்க்காகா
வுடல்சழன்றால்வேடமுடனேகழலு
முடலுயிருண்மையென்றோர்ந்துகொள்ளாதார்
கடலிலகப்பட்டகட்டையொத்தாரே. (உ)

மயலற்றிருளற்றுமாமனமற்றுக்
கயலுற்றகண்ணியர்கைப்பிணக்கற்றுத்
தயலற்றவரோடுந்தாமேதாமாகிச்
செயலற்றிருந்தார்சிவவேடத்தாரே. (௩)

ஓடுங்குதிரைக்குசைதின்னம்பற்றுமின்
வேடங்கொண்டென்செய்வீர்வேண்டாமனிதரே
நாடுமினந்தியைநம்பெருமான்றன்னைத்
தேடுமின்பட்பொருள்சென்றெய்தலாமே.() ஆ ௱௭.

## அபக்குவன்.

குருட்டினைநீக்குங்குருவினைக்கொள்ளார்
குருட்டினைநீக்காக்குருவினைக்கொள்வர்
குருடுங்குருடுங்குருட்டாட்டமாடிக்
குருடுங்குருடுங்குழிவிழுமாறே. (௧)

மனத்திலெழுந்ததோர்மாயக்கண்ணாடி
நினைப்பினதனினிழலையுங்காணார்
வினைப்பயன்போகவிளக்கியுங்கொள்ளார்
புறக்கடையிச்சித்துப்போகின்றவாறே. (௨)

ஏயெனிலென்னெனமாட்டார்பிரசைகள்
வாய்முலைபெய்யமதுரநின்றூறிடுந்
தாய்முலையாவதறியார்தமருளோ
ரூனிலைசெய்யுமுருவிலிதானே. (௩)

வாயொன்றுசொல்லமனமொன்றுசிந்திக்க
நீயொன்றுசெய்யவுறுதிநெடுந்தகாய்
தீயென்றிங்குன்னைத்தெளிவன்றெளிந்தபின்
பேயென்றிங்கென்னைப்பிறர்தெளியாரோ. (௪)

பஞ்சத்துரோகத்திப்பாதகர்தம்மை
பஞ்சச்சமயத்தோர்வேந்தனருந்தண்டம்
விஞ்சச்செய்திட்புவிவேறேவிடாவிடிற்
பஞ்சத்துளாய்ப்புவிமுற்றும்பாழாகுமே. (௫)

தவத்திடைநின்றவர்தாமுண்ணுங்கன்மஞ்
சிவத்திடைநின்றதுதேவரறியார்

நவத்திடைநின்றறியாதவரெல்லாம்
பவத்திடைநின்றதோர்பாடதுவாமே. (௬)

கன்றலுங்கருதலுங்கருமஞ்செய்தலுந்
தின்றலுஞ்சுவைத்தலுந்தீமைசெய்தலும்
பின்றலும்பிறங்கலும்பெருமைகூறலு
மென்றிவையிறைபாலியற்கையல்லவே. (௭)

வெடிவதறியார்வெளிகாணமாட்டார்
வெடியில்வெளியில்விழிக்கவுமாட்டார்
கடியதோருண்ணிமைகட்டியின்கால்மின்
விடியாமைகாக்கும்விளக்கதுவாமே. (அ)

வைத்தபசுபாசமாற்றுநெறிவைகிப்
பெத்தமறமுத்தராகிப்பிறழ்வுற்றுத்
தத்துவமுன்னித்தகைப்படாதவ்வாறு
பித்தானசீடனுக்கீயப்பெறுதானே. (௯)

மன்னுமலமைந்துமாற்றும்வகையோராக்
கன்னியகாமாதிதோயுந்தொழிலீங்கான்
பின்னியபொய்யல்பிறப்பிறப்பஞ்சாதா
னன்னியனவனசற்சீடனுமே. (௰) ஆ ௱௰௭.

---

பக்குவன்.

தொழிலறிவாளர்சுருதிகண்ணாகப்
பழுதறியாதபரமகுருவை
வழியறிவார்நல்வழியறிவாளா
ரழிவறிவார்மற்றையல்லாதவரே. (௧)

பதைந்தொழிந்தேன் பரமாவுன்னை நாடி
யதைத்தொழிந்தேனினியாருடன் கூடேன்
சிதைத்தடியேன் வினை சிந்தனை தீர
வுதைத்துடையாயுகந் தாண்டருளாயே. (உ)

பதைக்கின்றபோதே பரமென்னும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேனின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி
யிசைக்கின்றவன் பருக்கீயனுமாமே. (௩)

கொள்ளினு நல்ல குருவினைக் கொள்ளுக
வுள்ளபொருளுடலாவியுடனீக
வெள்ளத்தனையுமிடைவிடாதே நின்று
தெள்ளியறியச் சிவபதந்தானே. (௪)

சோதிவிசாகந் தொடர்ந்திருதேள் நண்டு
வோதியதாளே யுணர்வது தானென்று
நீதியுணர்மை நினைந்தவர்க்கல்லது
வாதியுமேது மறியகிலானே. (ரு)

தொழிலாரமாமணி தூய்தானசிந்தை
யெழிலாலிறைவனிடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலார் திருவடி கண்டருளாமே. (௬)

சாத்திகனாய்ப் பரதத்துவந்தானுன்னி
யாத்திக பேத நெறிதோற்றமாகியே
யார்த்தபிறவியினஞ்சி பரநெறி
சாத்தவல்லானவன் சற்சீடனாமே. (எ)

சத்துமசத்துமெவ்வாறெனத்தானுன்னிச்
சித்தையுருக்கிச்சிவனருட் கைகாட்டப்
பத்தியிஞ் ஞானப்பெறப்பணிந்தானந்தச்
சத்தியிலிச்சைத்தருவோன்சற்சீடனே. (௮)

அடிவைத்தருளுதியாசானின்றன்று
வடிவைத்தமாமுடிமாயப்பிறவி
யடிவைத்தகாயவருட்சத்தியாலே
யடிபெற்றஞானத்தனுசற்றமேளாமனே. (௯)

சீராருஞானத்தினிச்சைசெலச்செல்ல
வாராதகாதற்குருபரன்பாலாகச்
சாராதசாதகநான்குந்தன்பாலுற்றோ
ராராயுஞானத்தனுமடிவைக்கவே. (௰)

உணர்த்துமதிபக்குவர்க்கேயுணர்த்தி
யிணைக்கிற்பராபரத்தெல்லையுளிட்டுக்
குணக்கொடுதெற்குத்தரபச்சிமங்கொண்டு
வுணர்த்துமின்றுவுடையான்றன்னையுன்னியே (௰௧)

இறையடிதாழ்ந்தைவணக்கமுமெய்திக்
குறையதுகூறிக்குணங்கொண்டுபோற்றச்
சிறையுடனீபறக்காட்டிச்சிவத்தோ
டறிவுக்கறிவிப்போன்சன்மார்க்கியாமே. (௰௨)

வேட்கைவிடுநெறிவேதாந்தமாதலால்
வாழ்க்கைப்பலன்வழிமாற்றிச்சித்தாந்தத்து
வேட்கைவிடுமிக்கவேதாந்திபாதமே
தாழ்க்குந்தலையினான்சற்சீடனாமே. (௰௩)

சற்குணம்வாய்மைதயாவிவேகந்தன்மை
சற்குருபாதமேசாயைபோனிங்காமே
சிற்பரஞானந்தெளியத்தெளிவோர்த
லற்புதமேமேதான்றலாகுஞ்சற்சீடனே. (௯)

ஆக அதிகாரம்-௧௪௨-திருமந்திரம்-௩௬௬.
ஆறுந்தந்திரமுற்றும்.
ஆக சிறப்பாயிரமுள்பட-அதிகாரம்-௩௬௨
கூடியதிருமந்திரம்-௲௩௬.





## ஏழாந்தந்திரம்.

### ஆறாதாரம்.

நாலுமிருமூன்றுமீரைந்துமீராறுங்
கோலிமேலிரண்டிருக்குறிகள்பதினாறு
மூலங்கண்டாங்கேமுடிந்தூமுதலிரண்டுங்
காலங்கண்டானடிகாணலுமாமே. (௧)

ஈராறுநாதத்திலீரெட்டாமர்தத்தின்
மேதாதிநாதாந்தமீதாம்பராசத்தி
போதாலயத்தவிகாரந்தனிற்போத
மேதாதியாதாரமீதானவுண்மையே. (௨)

மேலென்றுங்கீழென்றிரண்டறக்காணுங்காற்
றானென்றுநானென்றுந்தன்மைகளோராறும்

பாரெங்குமாகிப்பரந்தபராபரங்
காரொண்றுகற்பகமாகநின்றுனே. (ரு)

ஆதாரசோதனையாநாடிசுத்திகண்
மேதாதியீரெண்கலந்தவிந்தொளி
போதாலயத்துப்புலன்கரணம்புந்தி
சாதாரணங்கெட்டான்ருன்சகமார்க்கமே. (சு)

மேதாதியாலேவிடாதோமெனத்துண்டி
யாதாரசோதனையத்துவாசோதனை
தாதாரமாகவேதாவெழுச்சாதித்தா
லாதாரஞ்செய்போகமாவதுகாயமே. (ஞ)

ஆறந்தமுங்கூடியாகுமுடம்பினிற்
கூறியவாதாரமற்றுங்குறிக்கொண்மி
னூறியவக்கரமன்பதின்மேலே
யூறியவாதாரத்தோரெழுத்தாமே. (சா)

ஆறுமுடம்புமழிகின்றவவ்வுடல்
போகுமுடம்பும்பொருந்தியவாறுதா
னாகியவக்கரமைம்பதுதத்துவ
மாகுமுடம்புக்குமாறந்தமாமே (எ)

ஆயுமலரினணிமலர்மேலது
வாயவிதழும்பதினாறுமங்குள
தாயவறிவுசிவானந்தமாகிப்போய்
மேயவறிவாய்விளைந்ததுதானே. (அ)

## அண்டலிங்கம்.

இலிங்கமதாவதியாருமறியா
ரிலிங்கமதாவதுவெண்டிசையெல்லா
மிலிங்கமதாவதுவெண்ணெண்கலையு
மிலிங்கமதாகவெடுத்ததுலகே. (௧)

உலகிலெடுத்தது சத்திமுதலா
வுலகிலெடுத்தது சத்திவடிவா
யுலகிலெடுத்தது சத்திகுணமா
யுலகமெடுத்தசதாசிவன்றானே. (௨)

போகமுமுத்தியும்புத்தியுஞ்சித்தியு
மாகமுமாறாறுதத்துவத்தப்பாலா
மேகமுநல்கியிருக்குஞ்சதாசிவ
மாகமவத்துவாவாறுஞ்சிவமே. (௩)

எத்தினரெண்ணிலிதேவரொப்பீசனை
வாழ்த்தினர்வாசப்பசுந்தென்றல்வள்ளலென்
றூர்த்தனரண்டங்கடந்தப்புறநின்று
காத்தனனென்னுங்கருத்தறியாரே. (௪)

ஒண்சுடரோனயன்மால்பிரசாபதி
யொண்சுடரானவிரவியொடிந்திரன்
கண்சுடராகிக்கலந்தெங்குந்தேவர்க
டண்சுடராயெங்குந்தற்பரமாமே. (௫)

தாபரத்துண்ணின்றருளவல்லான்சிவன்
மாபரத்துண்மைவழிபடுவாரில்லை

மாபரத்தன்மைவழிபடுவாளர்க்கும்
பூவகத்தன்னிற்றம்பொற்கொடியாகுமே. (௬)

ஞாயவிமானமுந்தூலமதாகுமா
லாயசதாசிவமாகுநற்சூக்குமம்
பாயபலிபீடம்பத்திரலிங்கமா
மாயவரனிலையாய்ந்துகொள்வார்கட்கே. (௭)

முத்துடன்மாணிக்கமொய்த்தபவளமுங்
கொத்துமக்கொட்புசிலைநீறுகோமள
மத்தன்றன்னாகமமன்னமரிசியா
முட்த்ததிற்சாதனம்பூமணலிங்கமே. (௮)

துன்றுந்தயிர்நெய்பாலுய்யமெழுகுடன்
கன்றியசெப்புகனலிரதஞ்சலம்
வன்றிறற்செங்கல்வடிவுடைவில்லம்பொன்
றென்றியக்கொன்றைதெளிசிவலிங்கமே. (௯)

மறையவரர்ச்சனைவண்படிகந்தா
னிறையவரர்ச்சனையேயபொன்னாகுங்
குறைவிலாவயிசியர்க்குக்கோமளமாந்
துறையுடைசூத்திரர்தொல்வாணலிங்கமே. (௰)

அதுவுணர்ந்தோனொருதன்மையைநாடி
யேதுவுணராவகைநின்றனனீசன்
புதுவுணர்வானபுவனங்களெட்டு
மிதுவுணர்ந்தென்றுடற்கோயில்கொண்டானே (௰௧)

அகலிடமாயறியாமலடங்கு
முகலிடமாய்நின்றமுனைநிறுள்ளே

பகலிடமாமுனம்பாவவிநாசன்
புகலிடமாய்நின்றபுண்ணியன்றானே. (௬௨)

போதுபுனைகழற்பூமியதாவது
மாதுபுனைமுடிவானகமாவது
நீதியுளீசனுடல்விசும்பாய் நிற்கு
மாதியுறநின்றதப்பரிசாமே. (௬௩)

தனையுற்றசத்திதனிலிங்கம்விண்ணாந்
தினைபெறுநீரறுமஞ்சனசாலை
வனைதவழ்மஞ்சுநீரவானுடுமாலை
கனையற்றநந்திக்கலையுந்திக்காமே. (௬௪) ஆ ௨௨.

பிண்டலிங்கம்.

மானிடராக்கைவடிவுசிவலிங்க
மானிடராக்கைவடிவுசிதம்பர
மானிடராக்கைவடிவுசதாசிவ
மானிடராக்கைவடிவுதிருக்கூத்தே. (௧)

உலந்திலர்பின்னுமுளரொனநிற்பர்
நிலந்தருநீர்தெளியூனவைசெய்யப்
புலந்தருபூதங்களைந்துமொன்றாக
வலந்தருதேவரைவந்துசெய்வீரே. (௨)

கோயில்கொண்டன்றேகுடிகொண்டதைவரும்
வாயில்கொண்டாங்கேவழிநின்றருளுயிர்
தாயில்கொண்டாற்போற்றலைவனென்னுட்புக
வாயில்கொண்டீசனுமாளவந்தானே. (௩)

கோயில்கொண்டானடிகொல்லைப்பெருமறை
வாயில்கொண்டானடிநாடிகள்பத்துள
பூசைகொண்டான்புவனாத்தும்பிறகிட்டு
வாயில்கொண்டானெங்கள்மாநந்திதானே ( ) ௲௨௬

---

சதாசிவலிங்கம்.

கூடியபாதமிரண்டும்படிமிசை
பாடியகையிரண்டெட்டும்பரந்தெழுந்
தேடுமுகமைந்துசெங்கையின்மூவைந்து
நாடுஞ்சதாசிவநல்லொளிமுத்தே. (௧)

வேதாநெடுமாலுருத்திரன்மேலீசன்
மீதானவைம்முகன்விந்துவுநாதமு
மாதாகசத்தியுமந்தச்சிவனொடுஞ்
சாதாரணமாகுஞ்சதாசிவந்தானே. (௨)

ஆகின்றசத்தியினுள்ளேகலைநிலை
யாகின்றசத்தியினுள்ளேகதிரொளி
யாகின்றசத்தியினுள்ளேயமர்ந்தபின்
னாகின்றசத்தியுளத்திசைபத்தே. (௩)

அத்திசைக்குள்ளேயமர்ந்தனவாறங்க
மத்திசைக்குள்ளேயமர்ந்தனநால்வேத
மத்திசைக்குள்ளேயமர்ந்தசரியையோ
டத்திசைக்குள்ளேயமர்ந்தசமயமே. (௪)

சமயத்தெழுந்தவவத்தையீரைந்துள
சமயத்தெழுந்தவிராசியீராறுள

சமயத்தெழுந்தசதிரீராறெட்டுள
சமயத்தெழுந்தசதாசிவந்தானே. (௫)

நடுவுகிழக்குதெற்குத்தரமேற்கு
நடுவுபடிகநற்குங்குமவன்ன
மடையுளவஞ்சனஞ்செவ்வரத்தம்பா
லடியேற்கருளியமுகமிவையஞ்சே. (௬)

அஞ்சுமுகமுளவைம்மூன்றுகண்ணுள
வஞ்சினொடஞ்சுகரதலந்தானுள
வஞ்சுடனஞ்சாயுதமுளநம்பியென்
னெஞ்சுபுகுந்துநிறைந்துநின்றானே. (௭)

சத்திதராதலமண்டஞ்சதாசிவஞ்
சத்திசிவமிக்கதாபரசங்கமஞ்
சத்தியுருவமருவஞ்சதாசிவஞ்
சத்திசிவதத்துவமுப்பத்தாறே. (௮)

தத்துவமாவதருவஞ்சராசரந்
தத்துவமாவதுருவஞ்சுகோதயந்
தத்துவமெல்லாஞ்சகலமுமாய்நிற்குந்
தத்துவமாகுஞ்சதாசிவன்றானே. (௯)

கூறுமினூறுசதாசிவனெம்மிறை
வேறொருவாசெய்துமிகைப்பொருளாய்நிற்கு
மேறுவாசெய்தொழில்வானவர்தம்மொடு
மாறுசெய்வானென்மனம்புகுந்தானே. (௰)

இருளார்ந்தகண்டமுமேந்துமழுவுஞ்
சுருளார்ந்தசெஞ்சடைச்சோதிப்பிறையு

மருளார்ந்தசிந்தையெம்மாதிப்பிரானைத்
தெருளார்ந்தென்னுள்ளேதெளிந்திருந்தேனே. (௰௧)

சத்திதானிற்கின்றவைம்முகஞ்சாற்றிடி
லுத்தமம்வாமமுரையத்திருந்திடுந்
தத்துவம்பூருவந்தற்புருடன்சிர
மத்தகுகோரமகுடத்தீசானனே. (௰௨)

நாணுநல்லீசானனடுவுச்சிதானாகுந்
தாணுவின்றன்முகந்தற்புருடமாகுங்
காணுமகோரமிருதயங்குய்யமாம்
வாணுறவாமமாஞ்சத்திநற்பாதமே. (௰௩)

நெஞ்சுசிரஞ்சிகைநீள்கவசங்கண்ணும்
வஞ்சமில்விந்துவளர்நிறம்பச்சையாஞ்
செஞ்சுறுசெஞ்சுடர்சேகரிமின்னுகுஞ்
செஞ்சுடர்போலுந்தெசாயுதந்தானே. (௰௪)

எண்ணிலிதயமிறைஞானசத்தியாம்
விண்ணிற்பராசிரமிக்கசிகையாதி
வண்ணக்கவசம்வனப்புடையிச்சையாம்
பண்ணுங்கிரிகைபரநேத்திரத்திலே. (௰௫)

சத்திநாற்கோணஞ்சலமுற்றுநின்றிடுஞ்
சத்தியறுகோணஞ்சயனத்தையுற்றிடுஞ்
சத்திநல்வட்டஞ்சலமுற்றிருந்திடுஞ்
சத்தியுருவாஞ்சதாசிவன்றானே. (௰௬)

மானந்தியெத்தனைகாலமழைக்கினுந்
தானந்தியஞ்சின்றனிச்சுடராய்நிற்கும்

கானந்தியுந்திகடந்துகமலத்தின்
மேனந்தியொன்பதின்மேவிநின்றானே (௰௭)

ஒன்றியவாறுமுடலினுடன்கிடந்
தென்றுமெம்மீசனடக்குமியல்பது
தென்றலைக்கேறத்திருந்துசிவனடி
நின்றுதொழுதேனென்னெஞ்சத்தினுள்ளே. (௰௮)

உணர்ந்தேனுலகினிலொண்பொருளானைக்
குணர்ந்தேன்குவலயங்கோயிலென்னெஞ்சம்
புணர்ந்தேன்புனிதனும்பொய்யல்லமெய்யே
பணிந்தேன்பகலவன்பாட்டுமொழியே. (௰௯)

ஆங்கவைமூன்றினுமாரழல்வீசிடத்
தாங்கிடுமீரொழுதானடுவானதி
லோங்கியவாதியுமந்தமுமாமென
வீங்கிவைதம்முடலிந்துவுமாமே. (௨௰)

தன்மேனிதற்சிவலிங்கமாய்நின்றிடுந்
தன்மேனிதானுஞ்சதாசிவமாய்நிற்குந்
தன்மேனிதற்சிவன்றற்சிவானந்தமாந்
தன்மேனிதானாகுந்தற்பரந்தானே. (௨௧)

ஆருமறியாரகாரமவனென்று
பாருமுகாரம்பரந்திட்டநாயகி
தாரமிரண்டுந்தரணிமுழுதுமாய்
மாறியெழுந்திடுமோசைபதாமே. (௨௨)

இலிங்கநற்பீடமிசையுமோங்கார
மிலிங்கநற்கண்டநிறையுமகார

மிலிங்கத்துள்வட்டநிறையுமுகார
மிலிங்கமகாரநிறைவிந்துநாதமே. (உ௩) ஆ. ௬௧.

---

## ஆத்துமலிங்கம்.

அகாரமுதலாயனைத்துமாய்நிற்கு
முகாரமுதலாவுயிர்ப்பெய்துநிற்கு
மகாரவுகாரவிரண்டுமறியி
லகாரவுகாரமிலிங்கமதாமே. (க)

ஆதாரமாதேயமாகின்றவிந்துவு
மேதாதிநாதமுமீதேவிரிந்தன
வாதாரவிந்துவதிபீடநாதமே
போதாவிலிங்கப்புணர்ச்சியதாமே. (உ)

சத்திசிவமாமிலிங்கமேதாபரஞ்
சத்திசிவமாமிலிங்கமேசங்கமஞ்
சத்திசிவமாமிலிங்கஞ்சதாசிவஞ்
சத்திசிவமாகுந்தாபரந்தானே. (௩)

தானேயெழுகின்றசோதியைக்காணலாம்
வானேயெழுகின்றவைம்பதமர்ந்திடம்
பூனேயெழுகின்றபொற்கொடிதன்னுடன்
றானேயெழுகின்றவகாரமதாமே. (௪)

விந்துவுநாதமுமேவுமிலிங்கமாம்
விந்துவதேபீடநாதமிலிங்கமா
மந்தவிரண்டையுமாதாரதெய்வமாய்
வந்தகருவைந்துஞ்செய்யுமவையைந்தே. (௫)

சத்திநற்பீடந்தகுநல்லவான்மாச்
சத்திநற்கண்டந்தகுவித்தைதானகுஞ்
சத்திநல்லிங்கந்தகுஞ்சிவதத்துவஞ்
சத்திநல்லான்மாச்சதாசிவந்தானே. (௬)

மனம்புகுந்தென்னுயிர்மன்னியவாழ்க்கை
மனம்புகுந்தின்பம்பொழிகின்றபோது
நலம்புகுந்தென்னொடுநாதனைநாடு
மிலம்புகுந்தாதியுமேற்கொண்டவாறே. (௭)

பராபரனெந்தைபனிமதிசூடி
தராபரன்றன்னடியார்மனக்கோயிற்
சிராபரன்றேவர்கள்சென்னியின்மன்னு
மராமரன்மன்னிமனத்துறைந்தானே. (௮)

பிரானல்லநாமெனிற்பேதையுலகங்
குராலென்றுமென்மனங்கோயில்கொளீச
னராநின்றசெஞ்சடையங்கியுநீரும்
பொராநின்றவர்செய்யப்புண்ணியன்றானே. (௯)

அன்றுநின்றான்கிடந்தானவனென்று
சென்றுநின்றெண்டிசையேத்துவர்தேவர்க
ளென்றுநின்றேத்துவனெம்பெருமான்றன்னை
யொன்றியென்னுள்ளத்தினுள்ளிருந்தானே (௰) ௲௫௱௯.

---

ஞானலிங்கம்.

உருவுமருவுமுருவோடருவு
மருவுபரசிவன்மன்பல்லுயிர்க்குங்

குருவுமெனநிற்குங்கொள்கையனுகுந்
தருவெனநல்குஞ்சதாசிவன்றானே. (௧)

நாலானகீழதுருவநடுநிற்க
மேலானநான்குமருவுமிருநாப்ப
ணாலானவொன்றுமருவுருநண்ணலாற்
பாலாமிவையாம்பரசிவன்றானே. (௨)

தேவர்பிரானைத்திசைமுகநாதனை
நால்வர்பிரானைநடுவுற்றநந்தியை
யேவர்பிரானென்றிறைஞ்சுவரவ்வழி
யாவர்பிரானடியண்ணலுமாமே. (௩)

வேண்டிநின்றேதொழுதேன்வினைபோயற
வாண்டொருதிங்களுநாளுமளக்கின்ற
காண்டகைபாகனுங்கன்னியுமாரினு
மூண்டகைமாறினுமொன்றதுவாமே. (௪)

ஆதிபரந்தெய்வமண்டத்துநற்றெய்வஞ்
சோதியடியார்தொடரும்பெருந்தெய்வ
நீதியுண்மாதெய்வநின்மலனெம்மிறை
பாதி[illegible]மன்றும்பராசத்தியாமே. (௫)

சத்[illegible]மேல்பராசத்திதன்னுள்ளே
சுத்[illegible]தாயாததுய்வாளி
யத்[illegible]யழுக்கப்பாலிக்கப்பாலா
மெ[illegible]சல்லுருவுண்மையே. (௬)

செ[illegible]ளத்தானன்றுவலயந்தோன்று
மெ[illegible]காணிருக்கவுமாகும்

பரந்திடங்காணிற்பார்ப்பதிமேலே
திரண்டெழக்கண்டவன்சிந்தையுளானே. (எ)

எந்தைபரமனுமென்னம்மைகூட்டமு
முந்தவுரைத்துமுறைசொல்லின்ஞானமாஞ்
சந்தித்திருந்தவிடப்பெருங்கண்ணியை
யுந்தியின்மேல்வைத்துகந்திருந்தானே. (அ)

சத்திசிவன்விளையாட்டாமுயிராகி
யொத்தவிருமாயாகூட்டத்திடையூட்டிச்
சுத்தமதாகுந்துரியம்பிறிவித்துச்
சித்தம்புகுந்துசிவமகமாக்குமே (கூ)

சத்திசிவன்றன்விளையாட்டுத்தாரணி
சத்திசிவமுமாஞ்சிவஞ்சத்தியுமாகுஞ்
சத்திசிவமன்றித்தாபரம்வேறில்லை
சத்திதானென்றுஞ்சமைந்துருவாகுமே, (ய) ஆ. ௩௱௬.

---

## சிவலிங்கம்.

குரைக்கின்றவாரிக்குவலயநீரும்
பரக்கின்றகாற்றுப்பயில்கின்றதீயு
நிரைக்கின்றவாறிவைநீண்டகன்றானை
வரைத்துவலஞ்செயுமாறறியேனே, (க)

வரைத்துவலஞ்செய்யுமாறிங்கொன்றுண்டு
நிரைத்துவருகங்கைநீர்மலரேந்தி
யுரைத்தவனுமமுணரவல்லார்க்குப்
புரைத்தெங்கும்போகான்புரிசடையோனே. (உ)

ஒன்றெனக்கண்டேயெம்மீசனொருவனை
நன்றென்றடியிணைநானவனைத்தொழ
வென்றைம்புலனுமிகக்கிடந்தின்புற
வன்றென்றருள்செய்யுமாதிப்பிரானே. (௩)

மலர்ந்தவயன்மாலுருத்திரன்மகேசன்
பலந்தருமைம்முகன்பரவிந்துநாதந்
நலந்தருஞ்சத்திசிவன்வடிவாகிப்
பலந்தருலிங்கம்பராநந்தியாமே. (௪)

மேவியெழுகின்றசெஞ்சுடரூடுசென்
றாவியெழுமளவன்றேயுடலுற
மேவப்படுவதும்விட்டுநிகழ்வதும்
பாவித்தடக்கிற்பரகதிதானே. (௫) ஆக ௭௰௪.

---

## சம்பிரதாயம்.

உடல்பொருளாவியுதகத்தாற்கொண்டு
படர்வினைபற்றறப்பார்த்துக்கைவைத்துத்
தொடியினடிவைத்துநன்றுணர்வாக்கிக்
கடியப்பிறப்பறக்காட்டினனந்தியே. (௧)

உயிருஞ்சரீரமுமொண்பொருளான
வியவார்பரமும்பின்மேவும்பிரானென்
செயலார்சிவமுஞ்சிற்சத்தியாதிக்கே
புயலார்குருபரனுய்யக்கொண்டானே. (௨)

பச்சிமதிக்கிலேவைச்சவாசாரிய
னிச்சதுமென்னைநினையென்றவப்பொரு

ளுச்சிக்குங்கீழதுவுண்ணாக்குமேலது
வைச்சபதமிதுவாய்திறவாதே. (௩)

பொட்டடித்தெங்கும்பிதற்றித்திரிவேனை
பொட்டடித்துள்ளமர்மாசெலாம்வாங்கிப்பின்
றட்டொடாக்கமொறினல்றன்னையுமென்னையும்
வட்டமதொத்ததுவாணிபம்வாய்த்ததே, (௪)

தரிக்கின்றபல்லுயிர்க்கெல்லாந்தலைவ
னிருக்கின்றதன்மையையேதுமுணரார்
பிரிக்கின்றவிந்துபிணக்கறுத்தெல்லாங்
கருக்கொண்டவீசனைக்கண்டுகொண்டானே. (௫)

கூடுமுடல்பொருளாவிகுறிக்கொண்டு
நாடியடிவைத்தருண்ஞானசத்தியாற்
பாடலுடலினிற்பற்றறநீக்கியே
கூடியதானவனுங்குளிக்கொண்டே. (௬)

கொண்டானடியேனடிமைகுறிக்கொள்ளக்
கொண்டானுயிர்பொருள்காயக்குழாத்தினைக்
கொண்டான்பலமுற்றுந்தந்தவன்கோடலாற்
கொண்டானெனவொன்றுங்கூறகிலேனே. (௭)

குறிக்கின்றதேசமுந்தேகியுங்கூடி
நெறிக்குப்பிராணனிலைபெற்றசீவன்
பறிக்கின்றகாயத்தைப்பற்றியநேர்மை
பிறக்கவறியாதார்பேயுடனொப்பரோ. (௮)

உணர்வுடையார்கட்குலகமுந்தோன்று
முணர்வுடையார்கட்குறுதுயரில்லை

யுணர்வுடையார்களுணர்ந்தவக்கால
முணர்வுடையார்களுணர்ந்துகண்டாரே. (௯)

காயப்பரப்பிலலைந்துதுரியத்துச்
சாலவிரிந்துகுவிந்துசகலத்தி
லாயவவ்வாறுறடைந்துதிரிந்தோர்க்குத்
தூயவருடந்ததந்திக்கென்சொல்வதே. (௰)

நானெனநீயெனவேறில்லைநண்ணுத
லூனெனவூனுயிரென்னவுடனின்று
வானெனவானவர்நின்றுமனிதர்க
டேனெனவின்பந்திளைக்கின்றவாறே. (௰௧)

அவனுமவனுமவனையறியா
ரவனையறியிலறிவானுமில்லை
யவனுமவனுமவனையறியி
லவனுமவனுமவனிவனாமே. (௰௨)

தானிதுதானெனநின்றிவனோடோறு
மூனிதுதானுயிர்போலுணர்வானுளன்
வானிறமாமுகில்போற்பொழிவானுள
னானிதுவம்பரநாதனுமாமே. (௰௩)

பெருந்தன்மைதானெனயானெனவேறா
யிருந்ததுமில்லையதிசனறியும்
பொருந்துமுடலுயிர்போலுமைமெய்யே
திருந்தமுன்செய்கின்றதேவர்பிரானே. (௰௪) ஆ-அ.



## திருவருள்வைப்பு.

இருபதமாவதிரவும்பகலு
முருவதுவாவதுயிருமுடலு
மருளதுவாவதறமுந்தவமும்
பொருளதுவுண்ணின்றபோகமதாமே. (௧)

காண்டற்கரியன்கருத்திலனந்தியுந்
தீண்டற்குஞ்சார்தறஞ்சேயனுத்தோன்றிடும்
வேண்டிக்கிடந்துவிளக்கொளியானெஞ்ச
மீண்டிக்கிடந்தங்கிருளறுமாமே. (௨)

குறிப்பினிலுள்ளேகுவலயந்தோன்றும்
வெறுப்பிருணீங்கில்விகிர்தனுநிற்குஞ்
செறிப்புறுசிந்தையைச்சிக்கெனநாடி
லறிப்புறுகாட்சியமரருமாமே. (௩)

தேர்ந்தறியாமையின்சென்றனகாலங்கள்
பேர்ந்தறிவானெங்கள்பிஞ்ஞகனெம்மிறை
யார்ந்தறிவாரறிவேதுவீனையாமெனச்
சார்ந்தறிவான்பெருந்தன்மைவல்லானே. (௪)

தானேயறியும்வினைகளழிந்தபி
ஞானேயறிகிலனந்தியறியுங்கொல்
லூனேயுருகியுணர்வையுணர்ந்தபின்
றேனேயனையனந்தேவர்பிரானே. (௫)

நானறிந்தன்றேயிருக்கின்றதீசனை
வானறிந்தாரறியா மயங்கின

ருணர்ந்துள்ளேயுயிர்க்கின்றவொண்சுடர்
தானறியான்பின்னையாரறிவாரோ (௬)

அருளெங்குமானவளவையறியா
ரருளுருவாகமுதானதுந்தேரா
ரருளிங்கருமத்ததிருக்கமுன்னா
ரருளெங்குங்கண்ணானதாரறிவாரோ. (௭)

அறிவிலணுகவறிவதுநல்கிப்
பொறிவழியாசைபுகுத்திப்புணர்ந்திட்
டறிவதுவாக்கியடியருணல்குஞ்
செறிவொடுநின்றார்சிவமாயினாரே. (௮)

அருளிற்பிறந்திட்டருளில்வளர்ந்திட்
டருளிலழிந்திளைப்பாறிமறைந்திட்
டருளானவானந்தத்தாரமுதூட்டி
யருளாலென்னந்தியகம்புகுந்தானே. (௯)

அருளாலமுதப்பெருங்கடலாட்டி
யருளாலடிபுனைந்தார்வமுந்தந்திட்
டருளானவானந்தத்தாரமுதூட்டி
யருளாலென்னந்தியகம்புகுந்தானே. (௰)

பாசத்திலிட்டதருளந்தப்பாசத்தி
னேசத்தைவிட்டதருளந்தநேசத்திற்
கூசற்றமுத்திதருளந்தக்கூட்டத்தி
னேசத்துத்தோன்றுநிலையருளாமே. (௰௧)

பிறவாநெறிதந்தபேரருளாளன்
மறவாவருடந்தமாதவனந்தி

யறவாழியந்தணனாதிப்பராபர
னுறவாகிவந்தென்னுள்ம்புகுந்தானே. (௰௨)

அகம்புகுந்தானடியேற்கருளாலே
யகம்புகுந்துந்தெரியானருளில்லோர்க்
ககம்புகுந்தானந்தமாக்கிச்சிவமா
யகம்புகுந்தானந்தியானந்தியாமே. (௰௩

ஆயுமறிவோடறியாதமாமாயை
யாயகரணம்படைக்குமைம்பூதமு
மாயபலவிந்திரியமவற்றுட
னாயவருளைந்துமாமருட்செய்கையே, (௰௪)

அருளேசகளமுமாயபவுதிக
மருளேசராசரமாயவமலமே
யிருளேவெளியேயெனுமெங்குமீச
னருளேசகளத்தனன்றியின்றாமே, (௰௫)

சிவமொடுசத்திதிகழ்நாதம்வித்து
தவமானவைம்முகனீசனரனும்
பவமுறுமாலும்பதுமத்தோனீறு
நவமவையாகிநடிப்பவன்றானே, (௰௬)

அருட்கண்ணிலாதார்க்கரும்பொருடோன்று
வருட்கண்ணுளோர்க்கெதிர்தோன்றுமரனே
யிருட்கண்ணினோர்க்கங்கிரவிபுந்தோன்றாத்
தெருட்கண்ணினோர்க்கெங்குஞ்சிரொளியாமே,(௰௭)

தானேபடைத்திடுந்தானேயளித்திடுந்
தானேதுடைத்திடுந்தானேமறைத்திடுந்

தானேயிவைசெய்துதான்முத்திதந்திடுந்
தானேவியாபித்தலைவனுமாமே. (௰௯)

தலையானநான்குந்தனதருவாகு
மலையாவருவுருவாகுஞ்சதாசிவ
நிலையானவீழ்நான்குநீடுருவாகுந்
துலையாவிவைமுற்றுமாயல்லதொன்றே. (௰௯)

ஒன்றதுவாலேயுலப்பிலிதானாகி
நின்றதுதான்போலுயிர்க்குயிராய்நிலை
நன்றியவையல்லவாகுந்துணையென்ன
நின்றதுதான்விளையாட்டெனுமேயமே. (௨௰)

நேயத்தேநின்றிடுநின்மலன்சத்தியோ
டாயக்குடிலையுளதமடைந்திட்டுப்
போயக்கலைபலவாகப்புணர்ந்திட்டு
வீயத்தகாவிந்துவாகவிளையுமே. (௨௧)

விளையும்பரவிந்துதானேவியாபி
விளையுந்தனிமாயைமிக்கமாமாயை
கிளையொன்றுதேவர்கிளர்மனுவேத
மளவொன்றிலாவண்டகோடிகளாமே, (௨௨) ௬௱௰௮,



அருளொளி,

அருளிற்றலைநின்றறிந்தழிந்தாரு
மருளிற்றலைநில்லாரைப்பாசநீங்கா
ரருளிற்பெருமையறியார்செறியா
ரருளிற்பிறந்திட்டறிந்தறிவாரோ, (௧)

வாராவழிதந்தமாநந்திபேர்நந்தி
யாராவமுதளித்தானந்திபேர்நந்தி
பேராயிரமுடைப்பெம்மான்பேரொன்றினி
லாராவருட்கடலாடுகென்றானே, (௨)

ஆடியும்பாடியுமழுதுமரற்றியுந்
தேடியுங்கண்டேன்சிவன்பெருந்தன்மையைக்
கூடியவாறேகுறியாக்குறிதந்தென்
னூடுநின்றானவன்றன்னருளுற்றே, (௩)

உற்றபிறப்புமுறுமலமானதும்
பற்றியமாயாப்படலமெனப்பண்ணி
யத்தனைநீயென்றடிவைத்தான்பேர்நந்தி
கற்றனவிட்டேன்கழல்பணிந்தேனே, (௪)

விளக்கினையேற்றிவெளியையறிமின்
விளக்கினின்முன்னேவேதனைமாறும்
விளக்கைவிளக்கும்விளக்குடையார்கள்
விளக்கில்விளங்கும்விளக்கவர்தாமே, (௫)

ஒளியுமிருளுமொருக்காலுந்தீரா
வொளியுளோர்க்கன்றோவொழியாதொளியு
மொளியிருள்கண்டகண்போலவேறாயுள்
ளொளியிருணீங்கவுயிர்சிவமாமே, (௬)

பறமேதிரிந்தேனைப்பொற்கழல்சூட்டி
நிறமேபுகுந்தென்னைநின்மலனாக்கி
யறமேபுகுந்தெனக்காரமுதீந்த
திறமேதென்றெண்ணித்திகைத்திருந்தேனே (௭)

அருளது வென்றவகலிடமொன்றும்
பொருளது வென்றபுகலிடமொன்று
மருளது நீங்கமனம்புகுந்தானைத்
தெருளுறும்பின்னைச்சிவகதியாமே, (அ)

கூறுமின்னீர்முன்பிறந்திங்கிறந்தமை
வேறொருதெய்வத்தின்மெய்ப்பொருணீக்கிடும்
பாறணியும்முடல்வீழவிட்டாருயிர்
தேறணிவோமிதுசெப்பவல்லீரே, (௯) ஆ ௱௰௯,

---

சிவபூசை,

உள்ளம்பெருங்கோயிலூனுடம்பாலயம்
வள்ளற்பிரானார்க்குவாய்கோபுரவாசற்
றெள்ளத்தெளிந்தார்க்குச்சீவன்சிவலிங்கங்
கள்ளப்புலனைந்துங்காளாமணிவிளக்கே, (௧)

வேட்டவிபுண்ணும்விரிசடைநந்திக்குக்
காட்டவுநாமிலங்காலையுமாலையு
மூட்டவியாவனவுள்ளங்குளிர்விக்கும்
பாட்டவிகாட்டுதும்பாலவியாமே, (௨)

பாய்மொழிபாகன்பராபரன்றானாகு
மாணசதாசிவன்றன்னையாவாகித்து
மேன்முகமீசானமாகவேகைக்கொண்டு
சின்முகஞ்செய்யச்சிவனவனாகுமே, (௩)

நினைவதும்வாய்மைமொழிவதுமல்லாற்
கனைகழலீசனைக்காணவரிதாந்

கனைகழலீசனைக்காண்குறவல்லார்
புனைமலர்நீர்கொண்டும்பாற்றவல்லாரே. (௫)

மஞ்சனமாலைநிலாவியவானவர்
நெஞ்சினுள்ளீசனிலைபெறுகாரணம்
மஞ்சமுதாமுபசாரமெட்டெட்டோடு
மஞ்சலியோடுங்கலந்தர்ச்சித்தார்களே. (௬)

புண்ணியஞ்செய்வார்க்குப்பூவுண்டுநீருண்டு
வண்ணமலதுகண்டருள்புரியாநிற்கு
மெண்ணிலிபாவிகளெம்மிறையீசனை
நண்ணறியாமனமூவுகின்றாரே. (௬)

அத்தனவதீர்த்தமாடும்பரிசுகே
ளொத்தமெய்ஞ்ஞானத்துயர்ந்தார்பதத்தைச்
சுத்தமதாகவிளக்கித்தெளிக்கவே
முத்தியாமென்றுநம்மூலன்மொழிந்ததே. (௭)

மறப்புற்றுவிவ்வழிமன்னிநின்றாலுஞ்
சிறப்பொடுபூநீர்திருத்தமுன்னேத்தி
மறப்பின்றியுன்னைவழிபடும்வண்ண
மறப்பெறவேண்டுமமரர்பிரானே. (௮)

ஆராதனையுமமரர்குழாங்களுந்
தீராக்கடலுநிலத்துமதாய்நிற்கும்
பேராயிரமும்பிரான்றிருநாமமு
மாராவழியெங்களாதிப்பிரானே. (௯)

ஆனந்தமாட்டியமரர்கணந்தொழத்
தானந்தமில்லாத்தலைவனருளது

தேனுந்துமாமலருள்ளேதெளிந்ததோர்
பானாக்குணமும்படைத்துநின்றானே, (௰)

உழைக்கொண்டபூநீரொருங்குடனேந்தி
மழைக்கொண்டமாமுகின்மேற்சென்றுவானோர்
தழைக்கொண்டபாசந்தயங்கிநின்றேத்தப்
பிழைப்பின்றியெம்பெருமானருளாமே. (௰௧)

வெள்ளக்கடலுள்விரிசடைநந்திக்
குள்ளக்கடற்புக்குவார்சுமைபூக்கொண்டு
கள்ளக்கடல்விட்டுக்கைதொழமாட்டாதா
ரள்ளக்கடலுளழுந்துகின்றாரே. (௰௨)

கழிப்படுந்தன்கடற்கௌவையுடைத்து
வழிப்படுவார்மலர்மொட்டறியார்கள்
பழிப்படுவார்பலரும்பழிவீழ
வெளிப்படுவோருச்சிமேவிநின்றானே. (௰௩)

பயனறிவொன்றுண்டுபன்மலர்தூவிப்
பயனறிவார்க்கரன்றானேபயிலு
நயனங்கண்மூன்றுடையானடிசேர
வயனங்களாலென்றும்வந்துநின்றானே. (௰௪)

எத்துவர்மாமலர்தூவித்தொழுதுநின்
றார்த்தெமதீசனருட்சேவடியென்றன்
மூர்த்தியைமூவாமுதலுருவாய்நின்ற
தீர்த்தனையாருந்துதித்துணராரே. (௰௫)

தேவர்களோடிசைவந்துமண்ணோடும்
பூவொடுநீர்சுமந்தேத்திப்புனிதனை

மூவரிற்பன்மைமுதல்வனாய்நின்றரு
ளீர்மையையாவர்நினைக்கவல்லாரே. (௰௪)

உழைக்கவல்லோர்நடுநீர்மலரேந்திப்
பிழைப்பின்றியீசன்பெருந்தவம்பேணி
யிழைக்கொண்டபாதத்தினமலர்தூவி
மழைக்கொண்டல்போலவேமன்னிநில்லீரே. (௰௭)

வென்றுவிரைந்துவிரைப்பணியென்றனர்
நின்றுபொருந்தவிறைபணிநேர்படத்
துன்றுசலமலர்தூவித்தொழுதிடக்
கொண்டிடுநித்தலுங்கூறியவன்றே. (௰௮)

சாத்தியும்வைத்துஞ்சயம்புவென்றேத்தியு
மேத்தியுநாளுமிறையையறிகிலா
ராத்திமலக்கிட்டகத்திழுக்கற்றக்கான்
மாத்திக்கேசெல்லும்வழியதுவாமே. (௰௯)

ஆவிக்கமலத்தினப்புறத்தின்புற
மேவித்திரியும்விரிசடைநந்தியைக்
கூவிக்கருதிக்கொடுபோய்சிவத்திடை
தாவிக்குமந்திரந்தாமறியாரே. (௨௰)

சாணாகத்துள்ளேயழுந்தியமாணிக்கங்
காணுமளவுங்கருத்தறிவாரில்லை
பேணிப்பெருக்கிப்பெருக்கிநினைவோர்க்கு
மாணிக்கமாலைமனம்புகுந்தானே. (௨௧)

பெருந்தன்மைநந்திபிணங்கிருணீமி
யிருந்தன்மையாலுமென்னெஞ்சிடங்கொள்ள

வருந்தன்மையாளனை வானவர்தேவர்
தருந்தன்மையாளனைத் தாங்கிநின்றாரே. (௨௨)

சமைய மலசுத்தி தன்செயலற்றிடு
மமையும் விசேடமு மான மந்திரசுத்தி
சமைய நிர்வாணங் கலாசுத்தியாகு
மமைமன் னுஞானமா னார்க்கபிடேகமே. (௨௩)

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது
வூழி லுயிரை யுணரவுந் தானொட்டா
வாழிய மருமரிய யனென்றுளோ
ரூழிகடந்து மோருச்சியு ளானே. (௨௪) ஆ. ௩௪௫.

---

குருபூசை.

ஆகின்ற நந்தியடித்தாமலா பற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையு
மாகின்ற வாதார மாறுறதனின்மேற்
போகின்றபொற்பையும் போற்றுவனியானே. (௧)

காணுறு கோடிகடிசமழ் சந்தனம்
வாணுறமாமலரிட்டு வணங்கினு
மாணிலை நீக்கியுணர்பவர்க் கல்லது
சேணமர் பூங்கழல் சேரவொண்ணாதே. (௨)

மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஞாவையின் ஞானநெறி நிற்றலர்ச்சனை
போவறவுட் பூசனை செய்யி லுத்தமஞ்
சேவடி சேரல் செயலற்றானே. (௩)

உச்சியுங்காலையுமாலையுமீசனை
நச்சுமின்னச்சிநமவென்றுநாமத்தை
விச்சுமின்விச்சிவிரிசுடர்மூன்றினு
நச்சுமின்பேர்நந்திநாயகனாகுமே. (௪)

புண்ணியமண்டலம்பூசைநூறாகுமாம்
பண்ணியமேனியும்பத்துநூறாகுமா
மெண்ணிலிக்கையமிடிற்கோடியாகுமாற்
பண்ணிடில்ஞானிபூண்பார்க்கில்விசேடமே. (௫)

இந்துவும்பானுவுமிலங்குந்தலத்திடை
வந்தித்ததெல்லாமசுரர்க்குவாரியா
மிந்துவும்பானுமிலங்காத்தலத்திடை
வந்தித்தநந்திக்குமாபூசையாமே. (௬)

இந்துவும்பானுவுமென்றெழுகின்றதோர்
விந்துவுநாதமுமாகிமீதானத்தே
சிந்தனைசாக்கிராதீதத்தேசென்றிட்டு
நந்தியைப்பூசிக்கநற்பூசையாமே. (௭)

மனபவனங்களைமூலத்தான்மாற்றி
யனிதவுடற்பூதமாக்கியகற்றிப்
புனிதனருடனிற்புக்கிருந்தின்பத்
தனியுறுபூசைசதாசிவற்காமே. (௮)

பகலுமிரவும்பயில்கின்றபூசை
யியல்புடையீசர்க்கிணைமலராகப்
பகலுமிரவும்பயிலாதபூசை
சகலமுந்தான்கொள்வன்றாழ்சடையோனே. (௯)

இராப்பகலற்றவிடத்தேயிருந்து
பராக்கறவானந்தத்தேறல்பருகி
யிராப்பகலற்றவிறையடியின்பத்
திராப்பகன்மாயையிரண்டடித்தேனே.(ய) ஆ௱௩௩..

---

மயேசுரபூசை.

படமாடக்கோயிற்பகவற்கொன்றீயி
னடமாடக்கோயினம்பர்க்கங்காகா
நடமாடக்கோயினம்பர்க்கொன்றீயிற்
படமாடக்கோயிற்பகவற்கதாமே. (௧)

தண்டறுசிந்தைதபோதனர்தாமகிழ்ந்
துண்டதுமூன்றுபுவனமுமுண்டது
கொண்டதுமூன்றுபுவனமுங்கொண்டதென்
றெண்டிசைநந்தியெடுத்துரைத்தானே. (௨)

மாத்திரைபோதினின்மன்னியமர்ந்துறை
யாத்தனுக்கீந்தவரும்பொருளானவை
மூர்த்திகண்மூவர்க்குமூவேழ்குரவர்க்குந்
தீர்த்தமதாமதுதேர்ந்துகொள்ளீரோ. (௩)

அகரமாயிரமந்தணர்க்கீயிலென்
சிகரமாயிரஞ்செய்துமுடிக்கிலென்
பகரஞானிபகலூண்பலத்துக்கு
நிகரிலையென்பதறிச்சயந்தானே. (௪)

ஆறிடும்வேள்வியருமறைநூலவர்
கூறிடுமந்தணர்கோடிபேருண்பதி

வீறிடுந்தொண்டர் தீவினையின்பயனில்லை
பேறெனிலோர்பிடிபேறதுவாகுமே. (௫)

ஏறுடையாயிறைவாவெம்பிரானென்று
நீறிடுவாரடியார் நிகழ்தேவர்க
ளாறணிசெஞ்சடையண்ணலிவரொன்று
வேறணிவார்க்குவினையில்லைதானே. (௬)

சீர்நந்திகொண்டுதிருமுகமாய்விட்ட
பேர்நந்தியென்னும்பிறங்குசடையனை
நாளொருந்துநோந்துவருமளவுஞ்சொல்லப்
பேர்நந்தியென்னும்பிதற்றொழியேனே. (௭)

அழிதகவில்லாவரனடியாரைத்
தொழுதகைஞாலத்துத்துங்கருணீங்கும்
பழுதுபடாவண்ணம்பண்பனைநாடித்
தொழுநெழுவையகத்தோரின்பமாமே. (௮)

பகவற்கேதாகிலும்பண்பிலராகிப்
புகுமத்தராய்நின்றுபூசனைசெய்யு
முகமத்தோடொத்துநின்றூழிதோறூழி
யகமத்தராகிநின்றாய்ந்தொழிந்தாரே. (௯)

வித்தகமாகியவேடத்தருண்டவூ
ணத்தனயன்மாலருந்தியவண்ணமாஞ்
சித்தந்தெளிந்தவர்சேடம்பருகிடின்
முத்தியாமென்றுநம்மூலன்மொழிந்ததே (௰)

தாழ்விலர்பின்னுமுயல்வசருந்தவ
மாழ்வினையாழவவர்க்கேயறஞ்செய்யு

மாழ்வினை நீக்கியருவினை நன்றொடும்
போழ்வினை தீர்க்குமப் பொன்னுலகாமே() ஆ௱௬௬

## அடியார்பெருமை.

திகைக்குரியானொருதேவனை நாடும்
வகைக்குரியானொருவாதியிருக்கிற்
பகைக்குரியாரில்லை பார்மழை பெய்யு
மகக்குறைகேடில்லையவ்வுலகுக்கே. (௧)

அவ்வுலகத்தேபிறந்தவ்வுடலொடு
மவ்வுலகத்தேயருந்தவநாடுவ
ரவ்வுலகத்தேயரனடிகூடுவ
ரவ்வுலகத்தேயருள்பெறுவாரே. (௨)

கொண்டகுறியுங்குலவரையுச்சியு
மண்டருமண்டத்தமரருமாதியு
மெண்டிசையோரும்வந்தென்னகத்தலத்தினு
ளுண்டெனிலுமினியுய்ந்தொழிந்தோமே. (௩)

அண்டங்களேழுமகண்டமுமாவியுங்
கொண்டசராசரமுற்றுங்குணங்களும்
பண்டைமறையும்படைத்தளிப்பாதியுங்
கண்டசிவனுமென்கண்ணன்றியில்லையே. (௪)

பெண்ணல்லவாணல்லபேடல்லமூடத்து
ளுண்ணின்றசோதியொருவர்க்கறியொண்ணுக்
கண்ணின்றிகாணுஞ்செவியின்றிக்கேட்டிடு
மண்ணற்பெருமையையாய்ந்தது மப்பே. (௫)

இயங்குமுலகினிலீசனடியார்
மயங்காவழிசெல்வர்வானுலகாள்வர்
புயங்களுமெண்டிசைபோதுயாதாள
மயங்காப்பகிரண்டமாமுடிதானே. (௩)

அகம்படிகின்றநம்மையனையோரு
மகம்படிகண்டவரல்லிற்சேரா
ரகம்படியுள்புக்கறிகின்றநெஞ்ச
மகம்படிகண்டாரழிக்கலுமெட்டே. (௪)

கழிவுமுதலுங்காதற்றுணையு
மழிவுமதாய்நின்றவாதிப்பிரானைப்
பழியும்புகழும்படுபொருண்முற்று
மொழியுமென்னுவிபுழவுகொண்டானே. (அ)

என்றுயோடென்னப்பனேழேழ்பிறவியு
மன்றேசிவனுக்கெழுதியவாவண
மொன்றுயுலகம்படைத்தானெழுதினு
னின்றுன்முகில்வண்ணனேடொழுத்தாயே. (௯)

துணித்தாரகம்படிதுன்னியுறையும்
பணிந்தாரகம்படிபாற்பட்டொழுகு
மணிந்தாரகம்படியாதிப்பிரானைக்
கணிந்தாரொருவர்க்குக்கைவிடலாமே. (௰)

தலைமிசைவானவர்தாழ்சடைநந்தி
மிலைமிசைவைத்தணண்மெய்ப்பணிசெய்யப்
புலைமிசைநீக்கியபொன்னுலகாளும்
பலமிசைசெய்யும்படர்சடையோனே. (௰௧)

அறியாப்பருவத்தரனடியாரைக்
குறியாலறிந்தின்பங்கொண்டதடிமை
நெறியார்சடைமுடிகட்டிநடப்பார்
மறியார்புனல்மூழ்கமாதவமாமே. (௰௨)

அவன்பாலணுகியேயன்புசெய்வார்கள்
சிவன்பாலணுகுதற்செய்யவும்வல்ல
னவன்பாலணுகியேநாடுமடியா
ரிவன்பாற்பெருமையிலயமதாமே. (௰௩)

முன்னிருந்தார்முழுதெண்கணத்தேவர்க
ளெண்ணிறந்தன்பால்வருவரிருநிலத்
தெண்ணிருநாலுதிசையந்தரமோக்கப்
பன்னிருகாதம்பதஞ்செய்யும்பாரே. (௰௪)

சிவயோகிஞானிசெறிந்தவத்தேச
மவயோகமின்றியறிவோருண்டாகு
நவயோகங்கைகூடுநல்லியல்காணும்
பவயோகமின்றிப்பரலோகமாமே. (௰௫)

மேலுணர்வான்மிகுஞாலம்படைத்தவன்
மேலுணர்வான்மிகுஞாலங்கடந்தவன்
மேலுணர்வார்மிகுஞாலத்தமரர்கள்
மேலுணர்வார்சிவன்மெய்யடியார்களே,() ௲௱௮௰,

---

போசனவிதி.

எட்டுத்திசையுமிறைவனடியவர்க்
கட்டவடிசிலமுதென்றெதிர்கொள்வ

ரொட்டியொருநிலமாள்பவரந்திலம்
விட்டுக்கிடக்கில்விருப்பறியாரே. (௧)

அச்சிவனுண்ணின்றவருளையறிந்தவ
ருச்சியம்போதாகவுள்ளமர்கோவிற்குப்
பிச்சைபிடித்துண்டுபேதமறநினைந்
திச்சைகெட்டோர்ந்தத்தேறியிருப்பரே.() ஆ௱அ௨

பிட்சாவிதி.

விச்சுக்கல்முண்டுவேலிச்செய்யொன்றுண்டு
வுச்சிக்குமுன்னேயுழவுசலைமர்தது
வச்சங்கெட்டச்செய்யறுத்துண்ணமாட்டாதா
ரிச்சைக்குப்பிச்சையிரக்கின்றவாறே. (௧)

பிச்சையதேற்றான்பிரமன்றலைதன்னில்
பிச்சையதேற்றான்பிரியாவறஞ்செய்யப்
பிச்சையதேற்றான்பிரமன்சிரங்காட்டிப்
பிச்சையதேற்றான்பிரமன்பரமாகவே (௨)

பரந்துலகேழும்படைத்தபிரானை
யிரந்துணியென்பர்களெற்றுக்கிரக்கு
நிரந்தரமாகநினையுமடியா
ரிரந்துண்டுதன்கழலெட்டச்செய்தானே. (௩)

வரவிருந்தான்வழிநின்றிடுமீசன்
றரவிருந்தான்றன்னை நல்லவர்க்கின்பம்
பொரவிருந்தான்புகலேபுகலாக;
வரவிருந்தாலறியானென்பதாமே. (௪)

அங்காரபசியுமவாவும்வெகுளியுந்
தங்கார்சிவனடியார்சரீரத்திடைப்
பொங்கார்புவனத்துப்புண்ணியலோகத்துந்
தங்கார்சிவனைத்தலைப்படுவாரே. (௫)

மெய்யகஞானமிகத்தெளிந்தார்களுங்
கையகநீண்டார்கடைத்தலைக்கேசெல்வ
ரையம்புகாமலிருந்ததவசியார்
வையகமெல்லாம்வரவிருந்தாரே. (௬) ஆ௱அ.

---

முத்திராபேதம்.

நாலெழுமாறவேநண்ணியமுத்திரை
பாலானமோனமொழியிற்பதிவித்து
மேலானநந்திதிருவடிமீதுய்யக்
கோலாகலங்கேட்டுக்கூடுநன்முத்தியே. (௧)

தூரியங்கண்மூன்றுஞ்சொருகிடஞ்கி
யரியவுணர்த்தாரமங்கேயடக்கி
மருவியசாம்பவிகேசரியுண்மை
பெருகியஞானம்பிறழ்முத்திரையே. (௨)

சாம்பவிநந்திதன்னருட்பார்வையா
மாம்பவமில்லாவருட்பாணிமுத்திரை
யோம்பயிலொக்கியவுண்மையகேசரி
நாம்பயினாதன்மெய்ஞ்ஞானமுத்திரையே. (௩)

தானத்திலுள்ளேசதாசிவனாயிடும்
ஞானத்திலுள்ளேநற்சிவமாதலா

லேனைச்சிவமாஞ்சொரூபமறைந்திட்ட
மோனத்துமுத்திரைமுத்தாந்தமுத்தியே. (௪)

வாக்குமனமுமிரண்டுமவுனமாம்
வாக்குமவுனத்துவத்தாலுமூங்கையாம்
வாக்குமனமுமவுனமாசுத்தரே
யாக்குமச்சுத்தத்தையாரறிவார்களே. (௫)

யோகத்தின்முத்திரையோரட்டசித்தியா
மேகத்தஞானத்துமுத்திரையெண்ணுங்கா
லாகத்தகுவேதகேசரிசாம்பவி
யோகத்துகேசரியோகமுத்திரையே. (௬)

யோகியெண்சித்தியருளொலிவாதனை
போகிதன்புத்திபுருடார்த்தநன்னெறி
யாகுநன்சத்தியுமாதாரசோதனை
யேகமுங்கண்டொன்றிலெய்தநின்றானே. (௭)

துவாதெசமார்க்கமெண்சோடசமார்க்கமா
மவாவறுமீரைவகையங்கமாறு
தவாவறுவேதாந்தசித்தாந்தத்தன்மை
நவாவகமோடுன்னநற்சுத்தசைவமே. (௮)

மோனத்துமுத்திரைமுத்தர்க்குமுத்திரை
ஞானத்துமுத்திரைநாதர்க்குமுத்திரை
தேனிக்குமுத்திரைசித்தாந்தமுத்திரை
கானிக்குமுத்திரைகண்டசமையமே. (௯)

தூநெறிகண்டசுவடுநடுவெழும்
பூநெறிகண்டதுபொன்னகமாய்நிற்கு

மேனெறிகண்டது வெண்மதிமேதினி
நீனெறிகண்டுளதில்மலனாமே. (௰) ஆக ௱௬௮



பூரணக்குகைநெறிச்சமாதி.

வளர்பிறையிற்றேவர்தம்பாலின்மன்னி
யுளசொலிபானுவினுள்ளேயொடுங்கித்
தளர்விற்பிதிர்பதந்தங்கிச்சசியு
ளளதுறும்யோகியுடல்விட்டாற்றானே. (௧)

தானிலவயொக்குஞ்சமாதிகைகூடாது
போனவியோகிபுகலிடம்போந்துபின்
னானவைநிரந்தரமாயோக
மானவைசேர்வாரருளின்சார்வாகியே (௨)

தானிவ்வகையேபுவியோர்நெறிதங்கி
யானசிவயோகத்தாமாறுமவ்விந்து
தானதிலந்தச்சிவயோகியாகுமுன்
ஞானத்தோர்சித்திவந்தோர்காயமாகுமே. (௩)

சிவயோகிஞானிசிதைந்துடல்விட்டாற்
றவலோகஞ்சேர்ந்துபின்றான்வந்துகூடிச்
சிவயோகஞானத்தாற்சேர்ந்தவர்நிற்பர்
புவலோகம்போற்றுனர்புண்ணியத்தோரே (௪)

ஊனமின்ஞானிநல்யோகியுடல்விட்டாற்
றானறமோனச்சமாதியுட்டங்கியே
தானவனாரும்பரகாயஞ்சாராதே
தூனமின்முத்தராய்மீளாருணர்வுற்றே. (௫)

செத்தார்பெறும்பயனாவ தேதெனிற்
செத்துநீர்சேர்வது சித்தினைக்கூடிடிற்
செத்தாரிருந்தாற்செகத்திற்றிரிமலஞ்
செத்தார்சிவமாகியேசித்தர்தாமே, (௬)

உன்னக்கருவிட்டுரவோனரனருட்
பன்னப்பரனேயருட்குலம்பாலிப்ப
னென்னப்புதல்வர்க்கும்வேண்டியிடுஞானி
தன்னிச்சைக்கீச னுருச்செய்யுந்தானே. (௭)

எங்குஞ்சிவமாயருளாமிதயத்துத்
தங்குஞ்சிவஞானிக்கெங்குமாந்தற்பர
மங்காங்கெனநின்றுசகமுண்டவான்றேய்த்த
லிங்கேயிறந்தெங்குமாய்நிற்குமீசனே (௮) ஆ-உ௱௬

சமாதிக்கிரியை.

அந்தமின்ஞானிதன்னாகந்தீயினில்
வெந்திடினாடெலாம்வெப்புத்தீயினி
னொந்ததுநாய்நரிநுகரினுண்செரு
வந்துநாய்நரிக்குணவாகும்வையமே, (௧)

எண்ணிலாஞானியுடலெரிதாவிடி
லண்ணறங்கோயிலழலிட்டதாங்கொக்கு
மண்ணின்மழைவிழாவையகம்பஞ்சமா
மெண்ணருமன்னரிழப்பாரரசே. (௨)

புண்ணியமாமவர்தம்மைப்புதைப்பது
நண்ணியனல்கோக்கினுட்டிலழிவாகு

மண்ணிலழிபிலலங்காரபங்கமா
மன்னுலகெல்லாமயங்குமனன்மண்டியே. (௩)

அந்தமிழ் ஞானியருளையடைந்தக்கா
லந்தவுடனுங் குகைசெய்திருத்திடிற்
சுந்தரமன்னருந்தொல்புவியுள்ளோரு
மந்தமிலின்பவருள்பெறுவாரே. (௪)

நவமிகுசாலைநல்லாழஞ்செய்து
குவைமிகுகுழலைவஞ்சாலைக்கோட்டித்
தவமிகுகுகைமுக்கோணமுச்சாலைக்கிப்
பவமறநற்குகைபத்மாசனமே. (௫)

தன்மனைசாலைகுளங்கரையாற்றிடை
நன்மலர்ச்சோலைநகரிநற்பூமி
யுன்னருங்கானமுயர்ந்தமலைச்சார
லெந்நிலத்தான்குகைக்கெய்துமிடங்களே. (௬)

நற்குகைநால்வட்டம்பஞ்சாங்கபாதமாய்
நிற்கின்றபாதநவபாதநேர்விழப்
பொற்பமரோசமும்மூன்றுக்குமூன்றணி
நிற்பவர்தாஞ்செய்யுநேர்மையதாமே. (௭)

பஞ்சலோகங்களவமணிபாரித்து
விஞ்சப்படுத்ததன்மேலாசனமிட்டு
முஞ்சிப்படுத்துவெண்ணீறிட்டதன்மேலே
பொன்செய்நற்கன்ணம்பொதியவுமாமே. (௮)

நன்குகைநால்வட்டம்படுத்ததன்மேற்சாரக்
கன்னவிழ்தாமக்களபங்கத்தூரியுத்

தெள்ளியசாந்துபுழுகுபன்னீர்சேர்த்து
வொள்ளியதூபமுவந்திடுவீரே. (௯)

ஓதிடும்வெண்ணீற்றுவுத்தூளங்குப்பாய
மீதினிலிட்டாசனத்தினின்மேல்வைத்துப்
போதறுசுண்ணமுநீறும்பொலிவித்து
மீதிலிருத்தியிருத்திடுவீரே. (௰)

விரித்தபின்னூற்சாருமேவுதல்செய்து
பொரித்தகறிபோனகமிளநீருங்
குருத்தலம்வைத்தோர்குகைமுகம்பார்வை
தரித்தபின்மேல்வட்டஞ்சாத்திடுவீரே. (௰௧)

மீதுசொரிந்திடும்வெண்ணீறுஞ்சுண்ணமும்
போதுபலகொண்டுதெற்பைப்புல்வில்லமும்
பாதவுதகத்தான்மஞ்சனஞ்செய்நுபார்
மீதுமூன்றுக்குமூன்றணிநிலஞ்செய்யுமே. (௰௨)

ஆதனமீதிலரசுசிவலிங்கம்
போதுமிரண்டினிலொன்றைத்தாபித்து
மேதகுசந்நிதிமேவுத்தரம்பூர்வங்
காதலிற்சோடசங்காணுபசாரமே. (௰௩) ஆ-உ௱௰௩.

## விந்துற்பனம்.

உதயத்தில்விந்துவிம்லாங்குண்டலியு
முதயக்குடிலில்வயிந்தவமொங்பான்
விதியிற்பிரமாதிகள்மிகுசத்தி
கதியிற்கரணங்கலைவைகரியே. (௧)

செய்திடும்விந்துபேதத்திறனையைந்துஞ்
செய்திடுநாதபேதத்திறனாலாறுஞ்
செய்திடுமற்றிவையீரிரண்டிற்றிறஞ்
செப்திடுமாறுறுசேர்தத்துவங்களே. (௨)

வந்திடும்பேதமெலாம்பரவிந்து
தந்திடுமாமாயைவாகேசிதற்பரா
புந்துகுடிலையோரேழுறுகுண்டலி
விந்துவிலிந்நான்குமேவாவிளங்குமே. (௩)

விளங்குநிவிர்த்தாதிமேவகராதி
வளங்கொளுகாரமகாரத்துள்விந்து
களங்கமினாதாந்தங்கண்ணினுண்ணணி
புளங்கொள்மனாதியுளந்தமுமாமே. (௪)

அந்தமுமாதியுமாகிப்பராபரன்
வந்தவியாபியெனலாயவந்நெறி
சந்தமதாகியகாரணகாரியந்
தந்தைதங்கருமமுந்தான்செய்யும்வியமே. (௫)

வியமதாகியவிந்துவின்சத்தியா
லாயவகண்டமுமண்டமும்பாரிப்பக்;
காயவைம்பூதமுங்காரியமாயையி
லாயிடவிந்துவகம்புறமாகுமே. (௬)

புறமகமெங்கும்புகுந்தொளிர்விந்து
நிறமதுவெண்மைநிகழ்நாதஞ்செம்மை
புறமகிழ்சத்திசிவபாதமாயுட்
டிறமிகுவிடளிக்குஞ்செயற்கொண்டே. (௭)

கொண்டவிவ்விந்துபரமம்போற்கோதற
நின்றபடங்கடமாய்நிலைநிற்றலிற்
கண்டகலாதியின்காரணகாரியத்
தண்டமனைத்துமாய்மாமாயையாகுமே. (அ)

அதுவித்திலேநின்றங்கண்ணிக்குநந்தி
யிதுவித்திலேயுளவாறையுணரார்
மதுவித்திலேமலரன்னமதாகிப்
பொதுவித்திலேநின்றபுண்ணியன்றானே. (கூ)

வித்தினிலன்றிமுளையில்லையம்முளை
வித்தினிலன்றிவெளிப்படுமாறில்லை
வித்துமுளையுடனல்லவேறில்லை
யத்தன்மையாகுமரனெறிகாணுமே. (௰)

அருந்தியவன்னமவைமூன்றுகூறாம்
பொருந்துமுடன்மனம்போமலமென்னத்
திருந்துமுடன்மனமாங்கூறுசேர்ந்திட்
டிருந்தனமுன்னுளிரதமதாகுமே. (௰௧)

இரதமுதலானவேழ்தாதுமூன்றி
லுரியதினத்திலொருபுற்பனிபோ
லரியதுளிவிந்துமாகுமேழ்மூன்றின்
மருவியவிந்துவளருங்காயத்திலே. (௰௨)

காயத்திலேமூன்றுநாளிற்கலந்திட்டுக்
காயத்துட்டன்மனமாகுங்கலாவிந்து
நேயத்தேநின்றோர்க்குநீங்காவிடாமையின்
மாயத்தேசெல்வோர்மனத்தோடழியுமே. (௰௩)

அழிகின்றவித்தவளவையறியார்
கழிகின்றதலினையுள்காக்கவுந்தேரா
ரழிகின்றகாயத்தழிந்தயர்வுற்ரு
ரழிகின்றதன்மையறிந்தொழியாரே. (௰௪) ஆ உ௩௩.



விந்துஜயம்- போகசரவோட்டம்.

பார்க்கின்றமாதரைப்பாராதகன்றுபோ
யோர்க்கின்றவுள்ளமுருகவழன்மூட்டிப்
பார்க்கின்றகண்ணுசைபாழ்படமூலத்தே
சேர்க்கின்றயோகிசிவயோகிதானே. (க)

தானேயருளாற்சிவயோகந்தங்காது
தானேயக்காமாதிதங்குவோனும்முட்குந்
தானேயதிசாரந்தங்கிற்சடங்கெடு
மூனேவத்துள்ளுயிரோம்பாமாயுமே. (உ)

மாயாள்வசத்தேசென்றிவரவேண்டி
லோயாவிருபக்கத்துள்வளர்பக்கத்து
ளேயாவெண்ணுளிலம்பமேற்பனிமூன்றிரண்
டாயாவபரத்துளாதிநாளாறுமே. (௩)

ஆறைந்துபஞ்செஞ்சுமஞ்சிச்சகமார்க்கம்
வேறன்புவேண்டுவோர்பூவரிற்பின்னந்தோ
டேறுமிருபத்தொருநாளிடைத்தோங்கு
மாறின்மிகுத்தோங்குமக்காலஞ்செய்யவே. (௪)

செய்யுமளவிற்றிருநான்முகூர்த்தமே
யெய்யுங்கலைகாலமிந்துப்பருதிகா

ணையுமிடத்தோடினங்காமநூனெறி
செய்கவலமிடந்திர்ந்துவிழுக்கவே. (௭)

விடுங்காண்முனைந்திந்திரியங்களைப்போ
னடுங்காதிருப்பானுமையைந்துதண்ணப்
படுங்காதன்மாதின்பாற்பற்றறவிட்டுக்
கடுங்காற்கரணங்கருத்துறக்கொண்டே. (௮)
கொண்டகுணமேனநலனேநற்கோமளப்
பண்டையுருவேபகர்வாய்பவளமே
விண்டுதனமேமிடையவிடும்போதிற்
கண்டகரணமுட்செல்லக்கண்டேவிட்ட. (௯)
விட்டபின்கெற்பவுற்பத்திவிதியிலே
தொட்டுறுங்காலங்கடோன்றக்கருதிய
கட்டியவாளுள்சாநாள்குணங்கீழ்மைசீர்ப்
பட்டநெறியிதென்றெண்ணியும்பார்க்கவே. (௧௦)

பார்த்திட்டுவையத்துப்பரப்பற்றுருப்பெற்று
வார்ச்செற்றகொங்கைமடந்தையைநீக்கியே
சேர்த்துற்றிருதிங்கள்சேராவகலினு
மூப்புற்றேறபின்னுளிலாயெல்லாமுள்ளவே. (௧௧)
வித்திடுவோர்க்கன்றிமேலோர்விளைவில்லை
வித்திடுவோர்க்கன்றிமிக்கோரறிவில்லை
வித்தினில்வித்தைவிதறவுணர்வரேல்
மத்திலிருந்ததோர்மாங்கனியாமே (௧௨)

கருத்தினிலக்கரமாயுவுமியாவுங்
கருத்துளனீசன்கருவுயிரோடுங்

கருத்தறிவித்தாய்க்காரணகாரியங்
கருத்துறமாறிவைகற்பனைதானே (௰௧)

ஒழியாதவிந்துவுடலிற்கதிற்கு
மழியாப்பிராணனதிபெலஞ்சத்தி
யொழியாதபுத்திதபஞ்செபமோன
மழியாதசித்தியுண்டாம்விந்துவற்றிலே. (௰௨)

வற்றவனலைக்கொளுவிமறித்தேறித்
துற்றசுழியனல்சொருகிச்சுடருற்று
முற்றுமதியத்தமுதைமுறைமுறை
செற்றுண்பவரோசிவயோகியாரே. (௰௩)

யோகியுஞானியுமுத்தமசித்தனும்
யோகிஞானபுரந்தரனுவோனு
மோகமுறினுமுரையமிர்துண்போனு
மாகிய்விந்துவழியாதவண்ணமே. (௰௪)

அண்ணனுடலாகியவ்வனல்விந்துவு
மண்ணிடைமாய்க்கும்பிராணனும்விந்துவுங்
கண்ணுங்கனலிடைக்கட்டிக்கலந்தெரித்
துண்ணிலமிர்தாகியோகிக்கறிவாமே. (௰௫)

அறியாதழிகின்றவாதலாளும்
பொறியாலழிந்துபுலம்புகின்றார்க
ளறிவாய்மனவிலதீதம்புரியச்
செறிவாயிருந்துசேரவேமாயுமே. (௰௬)

மாதனைமாய்வருங்கூற்றமென்றுன்னக்
காதலதாகியகாமங்கழிந்திடுஞ்

சாதலுமில்லைசதகோடியாண்டினுஞ்
சோதியினுள்ளேதுரிசறுங்காலமே. (௰௭)

காலங்கடந்தவன்காண்விந்துசெற்றவன்
காலங்கடந்தழிந்தான்விந்துசெற்றவன்
காலங்களின்விந்துசெற்றுற்றகாரிகை
காலின்கண்வந்தகலப்பறியாரே. (௰௮)

கலக்குநாள்முன்னுடன்னிடைக்காத
னலத்தகவேண்டிலந்நாரியுதரக்
கலத்தின்மலத்தைத்தண்சீதத்தைப்பித்தை
விலக்குவனசெய்துமேவணைவீரே. (௰௯)

மேலாநிலத்தெழுவிந்துவுநாதமுங்
கோலானடத்திக்குறிவழியேசென்று
பாலாமமிர்துண்டுபற்றறப்பற்றினன்
மாலானதுமாளமாளுமவ்விந்தே. (௨௰)

விந்துவிளைவும்விளைவின்பயன்முற்று
மந்தவழிவுமடக்கத்திலாக்கமு
நந்தியநாசமுநாதத்தாற்பேதமுந்
தந்துணர்வோர்க்குச்சயமாகும்விந்துவே, (௨௧)

விந்துவென்வீசத்தைமேவியமூலத்து
நிந்தியவங்கியினாலேநயந்தெரித்
தந்தமில்பானுவதிகண்டமேலேற்றிச்
சந்திரன்சார்புறத்தண்ணமுதாமே. (௨௨)

அமுதச்சசிவிந்துவாம்விந்துமாள
வமுதப்புனலோடியங்கியின்மாள

வமுதச்சிவபோகமாதலாற்சித்தி
யமுதப்பலாவனமாங்குறும்யோகிக்கே. (உ௩)

யோகமவ்விந்துவொழியாவகைபுணர்ந்
தாகமிரண்டுங்கலந்தாலுமாங்குறிப்
போகஞ்சிவபோகம்போகிநற்போகமா
மோகங்கெடமுயங்கார்மூடர்மாதர்க்கே. (உச)

மாதரிடத்தேசெலுத்தினுமவ்விந்து
காதலினால்விடார்யோகங்கலந்தவர்
மாதருயிராசைக்கைக்கொண்டேவாடுவர்
காதலர்போன்றங்வல்காதலாஞ்சாற்றிலே. (உரு)

சாற்றியவிந்துசயமாகுஞ்சத்தியா
லேற்றியமூலத்தழலையெழமூட்டி
நாற்றிசைபோடாநடுநாடிநாதத்தோ
டாற்றியமுதமருந்தவிந்தாமே. (உசு)

விந்துவுநாதமுமேவக்கனன்மூல
வந்தவனன்மயிர்க்காற்றுமன்னிடச்
சிந்தனைமாறச்சிவமகமாகவே
விந்துவுமாளுமெய்க்காயத்தில்வித்திலே. (உஎ)

வித்துக்குற்றுண்பான்விளைவறியாதவன்
வித்துக்குற்றன்றுமல்வித்துச்சுட்டுண்பவன்
வித்துக்குற்றுண்பானிலவேறலன்றறகன்
வித்துக்குற்றுண்ணாமல்வித்துவித்தானன்றே. (உஅ)

அன்னத்தில்விந்துவடன்றேம்படிகண்டு
மன்னப்பிராணனுய்விந்துமறித்திட்டு

பின்னொத்தவிந்துநாதாந்தத்துவிட்டிட்
வன்னத்திருவிந்துமாயுங்காயத்திலே. (௨௯)

அன்னம்பிராணனென்றார்க்குமிருவிந்து
தன்னையறிந்துண்டுசாதிக்கவல்லார்க்குச்
சொன்னமுமாமுருத்தோன்றுமெண்சித்திய
மன்னவரெல்லாமழிவறநின்றதே, (௩௰)

நின்றசிகாரநினைக்கும்பிராணனா
யொன்றுமகாரமொருமூன்றொடொன்றவை
சென்றுபராசத்திவிந்துசயந்தன்னை
யொன்றவுளாக்கவுபதேசந்தானே, (௩௧)

தானேயுபதேசந்தானல்லாதொன்றில்லை
வானேயுயர்விந்துவந்தபதினாலு
மானேரடங்கவதன்பின்புபுத்தியுந்
தானேசிவகதிதன்மையுமாமே (௩௨)

விந்துவுநாதமும்விளையவிளைந்தது
வந்தவிப்பல்லுயிர்மன்னுயிருக்கெலா
மந்தமுமாதியுமாமந்திரங்களும்
விந்துவடங்கவிளையுஞ்சிவோகமே (௩௩)

வறுக்கின்றவாறுமனத்துலாவெற்றி
திறக்கின்றவாறுமந்நீள்வரையொட்டிப்
பொறிக்கின்றவாறுமப்பொல்லாவினையை
யறுக்கின்றநாள்வருமத்திப்பழமே. (௩௪)

விந்துவுநாதமுமேவியுடன்கூடிச்
சந்திரனோடேதலைப்படுமாயிடி

லந்தரவானத்தமுதம்வந்தூறிடு
மங்குதிமந்திரமாகுதியாகுமே (௫௫)

மனத்தொடுசத்தமனஞ்செவியென்ன
வினத்தெழுவார்களிசைந்தனநாடி
மனத்திலெழுகின்றவாக்குவசனங்
கனத்தவிரதமக்காமத்தைநாடிலே. (௫௬)

சத்தமுஞ்சத்தமனமுமனக்கருத்
தொத்தறிகின்றவிடமுமறிகிலர்
மெய்த்தறிகின்றவிடமறிவாளர்க்கு
வத்தனிருப்பிடமவ்விடந்தானே. (௫௭)

உரமடிமேதினியுந்தியிலப்பாம்
விரவியதன்மூலமேவியகீழங்கி
கருமூலமீமிசைகைக்கீழிக்காறும்
விரவியகந்தரமேல்வெளியாமே. (௫௮) ஆ ௨௭௪.

---

ஆதித்தநிலை அண்டாதித்தன்.

செஞ்சுடரோன்முதலாகியதேவர்கண்
மஞ்சுடைமேருவலம்வருங்காரண
மெஞ்சுடரீசனிறைவனிணையடி
தஞ்சுடராகவணங்குந்தவமே. (௧)

பகலவன்மாலவன்பல்லுயிர்க்கெல்லாம்
புகலவனாய்நின்றபுண்ணியநாத
னிகலறவேழுலகும்முறவோங்கும்
பகலவன்பல்லுயிர்க்காதியுமாமே. (௨)

ஆதித்தனன்பினோடாயிரநாமமுஞ்
சோதியினுள்ளேசுடரொளியாய்நிற்கும்
வேதியர்வேண்டினும்விண்ணவர்சொல்லினு
மாதியிலன்புபழுக்கின்றவாறே, (௩)

தானேயுலகுக்குத்தத்துவனாய்நிற்குந்
தானேயுலகுக்குத்தையனுமாய்நிற்குந்
தானேயுலகுக்குச்சம்புவுமாய்நிற்குந்
தானேயுலகுக்குத்தண்சுடராகுமே (௪)

வலையமுக்கோணம்விட்டமறுகோணந்
துலையிருவட்டந்துய்யவிதழெட்டி
லலையுற்றவட்டத்திலீரெட்டிதழா
மலைவற்றுதித்தனனாதித்தனுமே. (௫)

ஆதித்தனுள்ளிலானமுக்கோணத்திற்
சோதித்திரங்குநற்சூரியனாலாங்
கேதமுறுங்கேணிசூரியனெட்டிற்
சோதிதன்னீட்டிற்சோடசந்தானே. (௬)

ஆதித்தனோடேயவனியிருண்டது
பேதித்தநாளும்பிதற்றிக்கழிந்தது
சோதிக்குணின்றுதுடியிடைசெய்கின்ற
வேதப்பொருளைவிளங்குகிலீரோ (௭)

பாருக்குக்கீழேபகலோன்வரும்வழி
யாருக்குங்காணவொண்ணாதவரும்பொரு
ணீருக்குந்தீக்குநடுவேயுதிப்பவ
னூருக்குமெட்டாதவாதித்தன்றானே. (௮)

மண்ணையிடந்ததின் கீழோடுமாதித்தன்
விண்ணையிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணையிடந்து களிதந்தவானந்த
மென்னுங்கிழமைக் கிசைந்து நின்றானே. (௯)

பாரையிடந்து பகலோன் வரும்வழி
யாருமறியாருங்கடை நூலவர்
நீரனிருந்த திருமலைக்கூழேன்பா
ருரையுணர்ந்தாருணர்ந்திருந்தாரோ, (௰) ஆ. உ௱அ௪.

---

## பிண்டாதித்தன்.

நின்றுமிருந்துங்கிடந்து நடந்தேதுங்
கன்றுபதந்திக் கருத்துளிருந்தனன்
கொன்றுமலங்கள் குழல்வழியோடிட
வென்றுவிளங்கும் விரிசுடர்காணுமே. (௧)

ஆதித்தனோடேயடங்குமிடங்கண்டு
சாதிக்கவல்லவர் தம்மையுணர்ந்தவர்
பேதித்துலகம் பிறப்பிறப் பென்றெலா
மாதித்தனோடே யடங்குகின்றாரே. (௨)

உருவிப்புறப்பட்டுலகை வலம்வந்து
சொருகிக்கிடக்குந் துறையறிவாரில்லை
சொருகிக்கிடக்குந் துறையறிவாளர்க்
குருகிக்கிடக்குமென் னுள்ளன்புதானே. (௩) உ௱அ௪.

---

## மனவாதித்தன்.

எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரு
மெறிகதிர் சோமனெதிர் நின்றெறிப்ப
விரிகதிருள்ளே வியங்குமென் னுயி
யொருகதிராகி யுவாவது வாமே. (௧)

சந்திரன் சூரியன் றன்வழிப் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தெய்ம் முறை
யந்தவி ரண்டு முபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. (௨)

ஆங்கு கலையோ டருக்கனன் மதி
யாங்கு கலையிடை நான்கெனலா மென்பா
ராங்கு மருக்கனனல் மதியோ டொன்ற
வாங்கு மப்பூரணை யாமென் றறியுமே. (௩)

ஈரண்டத் தப்பாலியங்கிய வவ்வொளி
யோரண்டத் தார்க்கு முணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங் கொளியாய் நின்று
தாரண்டத் தக்கா ரறியத் தக்காரே. (௪)

ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரு
மொன்பது மீசனியல் பறிவாரில்லை
முன்பதின் மேவி முதல்வனருளிலா
ரின்பமிலா ரிருள் சூழநின்றாரே. (௫) ஆ உ௱௪௯.

## ஞானசித்தன்.

விந்துவபரம்பரமிரண்டாய்விரித்
தந்தவபரம்பரநாதமாகியே
வந்தனதம்மிற்பரங்கலையாதிவைத்
தந்துமருணோதயமென்னவுள்ளத்தே. (௧)

உள்ளவருணோதயத்தெழுமோசைதான்
றெள்ளும்பரநாதத்தின்செயலென்பதால்
வள்ளல்பரவிந்துவைகரியாதிவாக்
குள்ளனவைங்கலைக்கொன்றுமுதயமே. (௨)

தேவர்பிரான்றிசைபத்துதயஞ்செய்யு
மூவர்பிரானெனமுன்னொருகாலத்து
நால்வர்பிரானடுவாயுளாயாநிற்கு
மேவுபிரானென்பர்விண்ணவர்தாமே. (௩)

பொய்யிலன்மெய்யன்புவனபதியெந்தை
மெய்யிருணீக்குமதியங்கிஞாயிறு
செய்யிருணீக்குந்திருவுடைநந்தியென்
கையிருணீங்கக்கலந்தெழுந்தானே. (௪)

தனிச்சுடரெற்றித்தயங்கிருணீங்க
வனித்திடுமேலையருங்கனியூறல்
கனிச்சுடராய்நின்றகயிலையிலீச
னனிச்சுடர்மேல்கொண்டவண்ணமுமாமே. (௫)

நேரறிவாகநிரம்பியபேரொளி
போரறிவாதபுவனங்கள்போய்வருந்

நேரறியாததிசையொளியாயிடு
மாரறிவாரிதுநாயகமாமே. (௬)

மண்டலத்துள்ளேமலர்ந்தெழுமாதித்தன்
கண்டிடத்துள்ளேகதிரொளியாயிடுஞ்
சென்றிடத்தெட்டுத்திசையெங்கும்போய்வரு
நின்றிடத்தேநிலைநேரறிவார்க்கே. (௭)

நாபிக்கண்ணாசிநயனநடுவினுந்
தூபியோடைந்துஞ்சுடர்விடுசோதியைத்
தேவர்களீசன்றிருமால்பிரமனு
மூவருமாகவுணர்ந்திருந்தாரே. (௮) ஆக உ௱௯௭.

---

## சிவாதித்தன்.

அன்றியபாசவிருளுமஞ்ஞானமுஞ்
சென்றிடுஞானச்சிவப்பிரகாசத்தா
லொன்றுமிருசுடராமருளேதயத்
துன்றிருணீங்குதல்போலத்தொலைந்ததே (௧)

கடங்கடந்தோறுங்கதிரவனேன்றி
லடங்கிடமுடிலவற்றிலடங்கான்
விடங்கொண்டகண்டனுமேவியகாயத்
தடங்கிடநின்றதுமப்பரிசாமே, (௨)

தானேவிரிசுடர்மூன்றுமொன்றாய்நிற்குந்
தானேயயன்மாலெனநின்றுதாபிக்குந்
தானேயுடலுயிர்வேறன்றிநின்றனன்
முனேவெளியொளிதானிருட்டாமே, (௩)

தெய்வச்சுடரங்கிஞாயிறுந்திங்களும்
வையம்புனலனல்மாருதம்வானகஞ்
சைவப்பெருப்பதிதாங்கியபல்லுயி
ராவர்க்கிடமிடையாறங்கமாமே, (௪) ௲௯௱௭௧.

---

பசுவிலக்கணம்-பிராணன்.

உள்ளுமளவிலுணருமொருவனைப்
பன்னுமறைகள்பயிலும்பரமனை
யென்னுளிருக்குமிளையாவிளக்கினை
யன்னமயமென்றறிந்துகொண்டேனே. (௧)

அன்னமிரண்டுளவாற்றங்கரையினிற்
றுன்னியிரண்டுந்துணைப்பிரியாதன்னந்
தன்னிலைபன்னந்தனியொன்றதென்றக்கால்
பின்னமடவன்னம்பேறணுகாதே. (௨) ௲௯௱௭௫

---

புருடன்.

வைகரியாதியுமாயாமலாதியும்
பொய்கரியானபுருடாதிபேதமு
மெய்கரிஞானங்கிரியாவிசேடத்துச்
செய்கரியீசனருளியேசெய்ததே, (௩) ௲௯௱௭௪

---

அணு.

அணுவிலணுவினையாதிப்பிரானை
யணுவிலணுவினையாயிரங்கூறிட்

டணுவிலணுவையணுகவல்லார்கட்
கணுவிலணுவையணுகலுமாமே. (௩)

படர்கொண்டவாலதின்வித்ததுபோலச்
சுடர்கொண்டணுவினைத்தூவழிசெய்ய
விடர்கொண்டபாசவிருளறவோட்டி
நடர்கொண்டநல்வழிநாடலுமாமே. (௪)

அணுவுளவனுமவனுளணுவுங்
கணுவறநின்றகலப்பதுணரா
ரிணையிலியீசனவனெங்குமாகித்
தணிவறநின்றசராசரந்தானே. (௫) ஆக ௩௱௭.

---

சீவன்.

மேவியசீவன்வடிவதுசொல்லிடில்
கோவின்மயிரொன்றுநூறுடன்கூறிட்டு
மேவியகூறதுவாயிரமாயினா
லாவியின்கூறுநூறாயிரத்தொன்றே. (௧)

ஏனோர்பெருமையனாயினுமெம்மிறை
யூனேசிறுமையினுட்கலந்துளன்
வானோரறியுமளவல்லன்மாதேவன்
றானேயறியுந்தவத்தினளவே. (௨)

உண்டுதெளிவனுணாக்கவியோகமே
கொண்டுபயிலுங்குணமில்லையாயினும்
பண்டுபயிலும்பயில்சீவனார்பின்னைக்
கண்டுசிவனுருக்கொள்வர்கருத்துளே. (௩)

மாயாவுபாதிவசத்தாகுஞ்சேதனத்
தாயகுருவருளாலேபதிற்றாண்ட
வோயுமுபாதியோடொன்றியொன்றாதியி
னாயதுரியப்புகுந்ததிவாகவே. (௪) ஆ௨ ௩௫௰௧.

---

## பசு.

கற்றபசுக்கள்கதறித்திரியினுங்
கொற்றபசுக்கள்குறிகட்டிமேயினு
முற்றபசுக்களொருகுடம்பால்போது
மற்றைப்பசுக்கள்வறள்பசுதானே. (௧)

கொல்லையில்மேயும்பசுக்களைச்செய்வதென்
னெல்லைகடப்பித்திறைவனடிகூட்டி
வல்லசெய்தாற்றமறித்தபினல்லது
கொல்லைசெய்நெஞ்சங்குறிப்பறியாதே ( ) ஆ௨ ௩௫௰௫.

---

## போதன்.

சிவனெனச்சிவனென்னவேறில்லை
சிவனார்சிவனாரையறிகிலர்
சிவனார்சிவனாரையறிந்தபின்
சிவனார்சிவனாயிட்டிருப்பரே. (௧)

குணவிளக்காகியகூத்தப்பிரானு
மணவிளக்காகியமன்றுயிர்க்கெல்லாம்
பணவிளக்காகியபல்தலைநாகந்
துணைவிளக்காகியகன்னியாகுமே. (௨)

அறிவாயறியாமைநீங்கியவனே
பொறிவாயொழிந்தெங்குந்தானனபோத
மறிவாயவற்றினுட்டானாயறிவன்
செறிவாகிநின்றவச்சீவனுமாகுமே. (௬)

ஆறறின்றன்மையறியாதிருந்தேனுக்
காறறின்றன்மையறிவித்தான்பேர்நந்தி
யாறறின்றன்மையருளாலறிந்தபி
ன்னாறுக்கப்புறமாகிநின்றானே. (௭)

சிவமாகியவருணின்றறிந்தோரா
சவமாமலமைந்துமாவதறியார்
தவமானசெய்துதலைப்பறிகின்றார்
நவமானதத்துவநாடகிலாரே. (௮)

நாடோறுமீசனடத்துந்தொழிலுன்னார்
நாடோறுமீசனயத்தூட்டனுடிடார்
நாடோறுமீசனல்லோர்க்கருணல்கலா
னாடோறுநாடார்களாள்விளையாளரோ. (௯) ஆ ௬௩௯௪.



ஐந்திந்திரியமடக்குமருமை.

ஆகமதத்தன வைந்துகளிறுள
வாகமதத்தறியோடணைகின்றில
பாகனுமெய்த்தவைதானுமிளைத்தபின்
யோகுதிருந்துதலொன்றறியோமே. (௧)

கருத்தினன்னூல்கற்றுக்கால்கொத்திப்பாகன்
திருத்தலும்பாய்மாத்திகைத்தன்றிப்பாயா

வெருத்துறவேறியிருக்கினுமாங்கே
வருத்தினுமெய்மாவழிநடவாதே. (௨)

புலமைத்துபுள்ளைத்துபுட்சென்றுமேயு
நிலமைத்துநீரைத்துநீர்மையுமைத்து
குலமொன்றுகோல்கொண்டுமேய்ப்பானொருவ
னுலம்வந்துபோம்வழியொன்பதுதானே, (௩)

அஞ்சுளசிங்கமடவியில்வாழ்வன
வஞ்சும்போய்மேய்ந்துதம்மஞ்சகமேபுகு
மஞ்சினுகிருமெயிருமறுத்திட்டா
லெஞ்சாதிலிறைவனையெய்தலுமாமே. (௪)

ஐவரமைச்சருட்டொண்ணூற்றறுவர்க
ளைவருமைந்தருமாளக்கருதுவ
ராவருமைந்தினைத்தொட்டநின்றிடி
லைவர்க்கிறையிறுத்தாற்றகிலோமே (௫)

சொல்லகில்லேன்சுடர்ச்சோதியைநாடொறுஞ்
சொல்லகில்லேன்றிருமங்கையுமங்குள
வெல்லகில்லேன்புலனைந்துடன்றன்னையுங்
கொல்லநின்றேறுங்குதிரையொத்தேனே. (௬)

கண்ணிலிவில்லியுடைத்தவ்விருட்டறை
பெண்ணிலியில்லியோடேகிற்பிழைதரு
மெண்ணிலியில்லியோடேகாமைகாக்குமே
லெண்ணிலியில்லதோரின்பமதாமே. (௭)

விதியிற்பெருவலிவேலைசூழ்வையந்
துதியிற்பெருவலிதொல்வானுலக

மதியின்பெருவலிமானிடர்வாழ்க்கை
நெறியின்பெருவலிநீர்வலிதானே, (௮) ஆகூ ௩௱௨௭.

---

## ஐந்திந்திரியமடக்குமுறைமை.

குட்டமொருமுழமுள்ளதரைமுழம்
வட்டமமைந்ததோர்வாவியுள்வாழ்வன
பட்டனமீன்பலபரவின்வலைகொணர்ந்
திட்டனமியாமினியேதமிலோமே, (௧)

கிடக்குமுடலிற்கிளரிந்திரிய
மடக்கலுறுமவன்றன்னையமரன்
விடக்கிரண்டின்புறமேவுறசிந்தை
நடக்கினடக்குநடக்குமளவே, (௨)

அஞ்சுமடக்கடக்கென்பரறிவிலா
ரஞ்சுமடக்குமமரருமங்கில்லை
யஞ்சுமடக்கிலசேதனமாமென்றிட்
டஞ்சுமடக்காவறிவறிந்தேனே. (௩)

முழக்கியெழுவனமும்மதவேழ
மடக்கவறிவென்னுங்கோட்டையைவைத்தேன்
பிழைத்தனவோடிப்பெருங்கேடுமண்டிக்
கொழுத்தனவேழங்குலைக்கின்றவாறே. (௪)

ஐந்திலொடுங்கிலகலிடமாவது
வைந்திலொடுங்கினருந்தவமாவது
வைந்திலொடுங்கிலரன்பதமாவது
வைந்திலொடுங்கிலருளுடையாரே. (௫)

பெருக்கப்பிதற்றிலென்பேய்த்தேர்நினைந்தென்
விரித்தபொருட்கெல்லாமவித்தாவதுள்ளம்
பொருக்கிற்பெருக்குஞ்சுருக்கிற்சுருக்கு
மருத்தமுமத்தனையாய்ந்துகொள்வார்க்கே. (௬)

இளைக்கின்றவாறதிந்தின்னுயிர்வைத்த
கிளைக்கொன்றுமீசனைக்கேடில்புகழோன்
றளைக்கொன்றநாகமஞ்சாடலொடுக்கத்
துளைக்கொண்டதவ்வழிதூங்கும்படைத்தே. (௭)

பாய்ந்தனபூதங்களைந்தும்படரொளி
சார்ந்திடுஞானத்தறிவினிற்பூட்டிட்டு
வாய்ந்துகொளானந்தமென்னுமருள்செய்யில்
வேய்ந்துகொண்மேலைவிதியந்தானே. (௮)

நடக்கின்றநந்தியைநாடோறுமுன்னில்
படர்க்கின்றசிந்தையைப்பையவொடுக்கிக்
குறிக்கொண்டசிந்தைகுறிவழிநோக்கில்
வடக்கொடுதெற்குமனக்கோயிலாமே (௯)

சென்றனநாழிகைநாள்கள்சிலபல
நின்றதுநீள்பொருணீர்மேனெருப்பொத்து
வென்றுபுலன்கள்விளைத்துவிழுமின்கள்
ஒன்றுவிழவிற்றூங்கதுமாமே. (௰

போற்றிசைத்தும்புனிதன்றிருமேனியைப்
போற்றிசெய்மீண்டேபுலனைந்தும்புத்தியா
லூற்றிசைக்கும்பின்னையாருக்குநாதனை
[illegible]ற்றுறையுள்ளத்தொருங்கதுமாமே. (௰௧)

தரிக்கின்றநெஞ்சஞ்சகளத்தினுள்ளே
யரிக்கின்றவைவரையாருமுணரார்
சிரிக்கின்றவாறுசிலபலப்பசில்
வரிக்கொண்டமைசூழ்வரையதுவாமே. (௰௨)

கைவிடலாவதொன்றில்லைகருத்தினு
ளெய்தியவனையிசையினாலேத்துமி
னைவருடையவவாவினிற்றூய்திமே
பொய்வருடையபுலன்களுமைந்தே(௰௩)ஆ௩௱௪௰.

அசற்குருநெறி.

உணர்வொன்றிலாமூடனுண்மையோராதோன்
கணுவின்றிவேதாகமநெறிகாணான்
பணிவொன்றிலாதோன்பரநிந்தைசெய்வோ
னணுவின்குணத்தோன்சற்குருவாமே. (௧)

மந்திரதந்திரமாயோகஞானமும்
பந்தமும்வீடுந்தெரிசித்துப்பார்ப்பவர்
சிந்தனைசெய்யாத்தெளிவியாதூண்பொருட்
டந்தகராவோரசற்குருவாமே. (௨)

ஆமாறறியாதோன்மூடனதிமூடன்
காமாதிநீங்காக்கலதிகலதிகட்
காமாறசத்தறிவிப்போனறிவிலோன்
கோமானலனசத்தாகுங்குரவனே. (௩)

கற்பாயகற்பங்கணிக்காமற்கற்பித்தாற்
றற்பாவங்குன்றுந்தனக்கேபகையாகு

நற்பாலரசுக்குநாட்டுக்குங்கேடென்றே
முற்பாலேநந்திமொழிந்துவைத்தானே. (௪)

குருடர்க்குக்கோல்காட்டிச்செல்லுங்குருடர்
முரணும்பழங்குழிவீழ்வராமுன்பின்
குருடரும்வீழ்வராமுன்பின்னறவே
குருடரும்வீழ்வார்குருடமோடாடியே (ரு) ஆ ௩௪௫.

---

## சற்குருநெறி.

தாடந்தளிக்குந்தலைவனேசற்குரு
தாடந்துதன்னையறியத்தரவல்லோன்
கூடந்துதத்துவாதீதத்துச்சார்சிவன்
கூடந்துபாசந்தணிக்குமவன்சத்தே. (க)

தவிரவைத்தான்வினைதன்னடியார்கோ
டவிரவைத்தான்சிரத்தோடுதன்பாதந்
தவிரவைத்தானமன்றூதுவர்கூட்டந்
தவிரவைத்தான்பிறவித்துயர்தானே. (உ)

குறித்தவிரும்பேகனகமதாகும்
மறித்திரும்பாகாவகையதுபோலக்
குறித்தவப்போதேகுருவருள்பெற்றால்
மறித்துப்பிறவியில்வந்தணுகாரே. (௩)

பாசத்தைநீக்கிப்பரனோடுதன்னையு
நேசத்துநாடிமலமறநீக்குவோ
ராசற்றசற்குருவாவோரறிவற்றுப்
பூசற்கிரங்குவோர்போதக்குருவன்றே. (௪)

நேயத்தேநிற்குநிமலன்மலமற்ற
நேயத்தைந கவல்லோனித்தம்சுத்தனே
யாயத்துவாதத்துவமுணர்ந்தாங்கற்ற
நேயர்க்களிப்பவனீங்குரவனே. (௫)

பரிசனவேதிபரிசித்ததெல்லாம்
வரிசைதரும்பொன்வகையாகுமாபோற்
குருபரிசித்தகுவலயமெல்லாந்
திரிமலந்தீர்ந்துசிவகதியாமே. (௬)

தானேயெனநின்றசற்குருசந்நிதி
தானேயெனநின்றதன்மைவெளிப்படிற்
றானேதனைப்பெறவேண்டுஞ்சதிர்பெற
வூனேயெனநினைந்தோர்ந்துகொளுன்னிலே, (௭)

வரும்வழிபோம்வழிமாயாவழியைக்
கருவழிகண்டவர்காணுவழியை
பெரும்வழியாநந்திபேசும்வழியைக்
குருவழியேசென்றுகூடலுமாமே. (௮)

குருவென்பவனேவேதாகமங்கூறும்;
பரவின்பனாகிச்சிவபோசம்பாவித்
தொருசிந்தையின்றியுயர்பாசநீக்கி
வருநல்குரவன்பால்வைக்கலுமாமே. (௯)

சத்துமசத்துஞ்சதசத்துந்தான்காட்டிச்
சித்துமசித்துஞ்சிவபாதத்தேசேர்த்துச்
சுத்தமசுத்தமறச்சுகமானசொ
லத்தனருட்குருவாமவன்கூறிலே. (௰)

உற்றிடுமும்மலம்பாசவுணர்விருற்
பற்றறுநாதனடியிற்பணிதலாற்
சற்றிபபேதந்துரியமூன்றுல்வாட்டித்
தற்பரமேவுவோர்சாதகராமே. (௰க)

எல்லாமிறைவனிறைவியுடனின்ப
மல்லார்புலனும்வருங்காலுயிர்தோன்றிச்
சொல்லாமலமைந்தடங்கியிட்டோங்கியே
செல்லாச்சிவகதிசேர்தல்விளையாட்டே. (௰உ)

ஈனப்பிறவியிலிட்டதுமீட்டுமிட்டுத்
தானத்துளிட்டுத்தன்னைச்சூட்டித்தாழ்த்தலு
ஞானத்தின்மீட்டலுநாட்டலும்விட்டற்று
மோனத்துள்வைத்தலுமுத்தன்றன்செய்கையே (௰௩)

அத்தனருளின்விளையாட்டிடஞ்சடஞ்
சித்தொடசித்தறத்தெளிவித்துச்சீவனைச்
சுத்தனுமாக்கித்துடைத்துமலத்தினைச்
சத்துடனேங்கருமத்திடுத்தன்மையே. (௰௪)

ஈசத்துவங்கடந்திலையென்றப்புறம்
பாசத்துளேயென்றும்பாவியுமண்ணலை
நேசத்துளேநின்றநின்மலனெம்மிறை
தேசத்தையெல்லாந்தெளியவைத்தானே. (௰௫)

மாணிக்கமாலைமலர்ந்தெழுமண்டல
மாணிப்பொனின்றங்கமுதம்விளைந்தது
பேணிக்கொண்டுண்டார்பிறப்பற்றிருந்தார்க
ளூணுக்கிருந்தாருணராதமாக்களே. (௰௬)

அசத்தொடுசத்துமசத்சத்துநீங்க
விசைத்திடுபாசப்பற்றிங்கறுமாறே
யசைத்திருமாயையணுத்தானுமாங்கே
யிசைத்தானுமொன்றறிவிப்போனிறையே. (பிஎ)

வேறுநெறியேமலத்தைமெரித்தலா
லீறிலுளாயாலிருளையறுத்தலான்
மாறில்பசுபாசம்வாட்டலால்வீடுக
வேறுபரனேகுருவாமியம்பிலே. (யஅ) ஆ ருசுரு

---

கூடாவொழுக்கம்.

கண்காணியில்லெலன்றுகள்ளம்பலசெய்வார்
கண்காணியில்லையிடமில்லைகாணுங்கால்
கண்காணியாகக்கலந்தெங்குநின்றானைக்
கண்காணிகண்டார்களவொழிந்தாரே. (க)

செய்தானறியுஞ்செழுங்கடல்வட்டத்துப்
பொய்தான்மிகவும்புலம்புமனிதர்கள்
மெய்தானுணாக்கில்வின்னோர்தொழச்செய்வன்
மைதாழ்ந்திலங்குமிடறுடையோனே. (உ)

பத்திவிற்றுண்டுபகலைக்கழிவிடு
மத்தகர்க்கன்றேமறுபிறப்புள்ளது
வித்துக்குற்றுண்டுவிளைபுலம்பாழ்செய்யும்
பித்தர்கட்கென்றும்பிறப்பில்லைதானே. (ஈ)

வடக்குவடக்கென்பர்வைச்சதொன்றில்லை
நடக்கவுறுவாரோஞானமிலாதார்

வடக்கிலடக்கியவையகமெல்லா
மகத்திலடங்குமறிவுடையோர்க்கே. (௪)

காயக்குழப்பனைக்காயநன்னாடனைக்
காயத்தினுள்ளேகமழ்கின்றநந்தியைத்
தேயத்துளேயெங்குந்தேடித்திரிவர்கள்
காயத்துணின்றகருத்தறியாரோ, (௫)

கண்காணியாகவேவையகத்தேயெழுங்
கண்காணியாகக்கருத்துளிருந்திடுங்
கண்காணியாகக்கலந்துவழிசெய்யுங்
கண்காணியாகியகாதலன்றானே. (௬)

கன்னியொருசிறைகற்றோரொருசிறை
மன்னியமாதவஞ்செய்வோரொருசிறை
தன்னியல்புன்னியுணர்ந்தோரருஞ்சிறை
யென்னிதவிசையியல்பறியாரோ. (௭)

காணாதகண்ணிற்படலமேகண்ணொளி
காணாதவர்கட்குங்காணாதவவ்வொளி
காணாதவர்கட்குங்கண்ணாம்பெருங்கண்ணைக்
காணாதகண்டார்களவொழிந்தாரோ. (௮)

பித்தன்மருந்தாற்றெளிந்துபிரகிருதி
யுட்டொன்றுமாபோல்விழியந்தங்கண்ணொளி
யத்தன்மையாதல்போனர்திருடரச்
சித்தந்தெளிந்தேன்செயலொழிந்தேனே. (௯)

பிரான்மயமாகப்பெயர்ந்தனவெட்டும்
பராமயமென்றெண்ணிப்பள்ளியுணரார்

சுராமயமுன்னியசூழ்வினையாளர்
நிராமயமாகநினைப்பொழிந்தாரே. (௰)

ஒன்றிரண்டாகிநின்றொன்றியொன்றாயினோர்க்
கொன்றுமிரண்டுமொருக்காலுங்கூடிடா
வொன்றிரண்டென்றேயுரைதருவோர்க்கெலா
மொன்றிரண்டாய்நிற்குமொன்றோடொன்றன்றே( )

உயிரதுநின்றாலுணர்வெங்குநிற்கு
மயரறிவில்லையாலாருடல்வீழு
முயிருமுடலுமொருங்கிக்கிடக்கும்
பயிருங்கிடந்துள்ளம்பாங்கறியாரே. (௰௨)

உயிரதுவேறாயுணர்வெங்குமாகு
முயிரையறியிலுணர்வறிவாகு
முயிரன்றுடலைவிழுங்குமுணர்வை
யயரும்பெரும்பொருளாங்கறியாரே. (௰௩)

உலகாணியொண்சுடருத்தமசித்த
னிலவாணியைந்திலும்ணருநிற்குஞ்
சிலவாணியாகியதேவர்பிரானைத்
தலைவாணிசெய்வதுதன்னையறிவதே. (௰௪)

தானந்தமாமெனநின்றதனிச்சுட
ரானந்தமாயுலகாய்நின்றவொண்சுடர்
மேனந்தமாய்நின்றசிற்றின்பநீயொழி
யோனந்தமில்லாக்குணத்தருளாமே. (௰௫)

உன்முதலாகியவூனுயிருண்டெனுந்
தன்முதலீசன்கருத்தறிவாரில்லை

நன்முதலேறிப்பரமமறநின்றாற்
றன்முதலாகியதத்துவமாமே. (௰௬)

இந்தியமந்தக்கரணமிவையுயிர்
வந்தனகுக்கவுடலன்றுமானது
தந்திடுமைவிதத்தாற்றற்புருடனு
மூர்த்தனுமன்னுமாறுறுமுடிவிலே. (௰௭) ஆ௩அ௰.

## கேடுகண்டிரங்கல்.

வித்துப்பொதிவார்விளைவிட்டுநாற்றுவா
ரத்தந்தம்வாளுளறிகிலாப்பாவிக
ளுற்றவினைத்துயரொன்றுமறிகிலார்
முற்றொளிதீயின்முளைகின்றவாறே. (௧)

போதுசடக்கெனப்போகின்றதுகண்டும்
வாதுசெய்தென்னேமனிதர்பெறுவது
நீதியுள்ளேநின்றுநின்மலன்றாளணிந்
தாதியையன்பிலறிகில்லார்களே. (௨)

கடன்கொண்டுநெற்குத்துக்கையரையூட்டி
யுடம்பினைப்போம்பியுயிரார்திரிவர்
நடங்கொண்டசாரத்தழன்முருடேறி
யிடங்கொண்டுடலார்கிடக்கின்றவாறே. (௩)

விரைந்தன்றநால்வர்க்குமெய்ப்பதிருந்து
பரந்தகல்லாலிழற்புலனியல்சொன்ன
பரந்தன்னையோராப்பழமொழியாள
ருரந்தன்மையாகவொருங்கிநின்றார்களே. (௪)

நின்றபுகழுநிறைதவத்துண்மையு
மென்றுமெம்மீசனடியவர்க்கேநல்கு
மன்றியுலகமதுவிதுதேவென்று
குன்றுகையாலேகுறைப்பட்டவாறே. (௫)

இன்பத்துளேபிறந்தின்பத்துளேவளர்ந்
தின்பத்துளேநினைக்கின்றதிதுமறந்
துன்பத்துளேசிலர்சோறுங்கூறையென்
றுன்பத்துளேநின்றுதூங்குகின்றார்களே. (௬)

பெறுதற்கரியபிறவியைப்பெற்றும்
பெறுதற்கரியபிரானடிபேணார்
பெறுதற்கரியபிராணிகளெல்லாம்
பெறுதற்கரியதோர்பேறிழந்தாரே. (௭)

ஆர்வமனமுமளவிலிளமையு
மீரமுநல்லவொன்றின்புறுகாலத்துத்
தீரவருவதோர்காமத்தொழினின்று
மாதவனின்பமறந்தொழிந்தார்களே. (௮)

இப்பரிசேயிளஞாயிறுபோலுரு
வப்பரிசங்கியினுள்ளுறையம்மனை
யிப்பரிசேகமலத்துறையீசனை
மெய்ப்பரிசேவினவாதிருந்தோமே. (௯)

கூடகில்லார்குருவைத்தகுறிகண்டு
நாடகில்லார்நயம்பேசித்திரிவர்கள்
பாடகில்லாரவன்செய்தபரிசறிந்
தாடவல்லாரவர்பேறெதுவாமே. (௰)

நெஞ்சுநிறைந்தங்கிருந்தநெடுஞ்சுடர்
நஞ்சம்பிரானென்றுநாதனைநாடொறுந்
துஞ்சுமளவுந்தொழுமின்றொழாவிடி
னஞ்சற்றுவிட்டதோராணையுமாமே. (௰௪)

மிருகமனிதர்மிக்கோர்பறவை
யொருவர்செய்தல்புலைத்துன்றாதலில்லை
பருகுவரோவேவர்பார்பயன்கொள்வர்
திருமருமாதவஞ்சேர்ந்துணர்ந்தாரே. (௰௫)

நீதியிலோர்பெற்றபொன்போலிறைவனைச்
சோதியிலாருந்தொடர்ந்தறிவாரில்லை
யாதிபரனென்றமரர்பிரானென்று
நாதியேவைத்ததுநாடுகின்றேனே. (௰௬)

இருந்தேன்மலர்களைந்தின்புறவண்டு
பெருந்தேனிழைக்கின்றபெற்றிமையோரார்
வருந்தேனுகாதவாய்புகுதேனை
யருந்தேனையாருமறியகிலாரே. (௰௭)

கருத்தறியாதுகழிந்தனகால
மருத்தியுள்ளானமராபதிநாத
னொருத்தனுள்ளானுலகத்துயிர்க்கெல்லாம்
வருத்திதில்லாதுவழுக்குகின்றாரே. (௰௮)

குறித்தோடிப்போகின்றகூற்றமுஞ்சார்வாய்
விதித்தனநாட்களுநம்வீழ்ந்துகழிந்த
வதித்திருந்தென்செய்திராருதிராகிற்
கொதிக்கின்றகூழிற்றுப்பிடலாமே. (௰௯)

களையருகாருக்கழலிணையீந்த
திளையருகாமுன்னைத்தேர்ந்தின்பமெய்தும்
வளையருகூடியமாதவர்நோக்கி
ளையுருவாச்செல்லுநாளில்லவாமே. (௰௭)

வரவறிவானைமயங்கிருண்ஞாலத்
திரவறிவானைச்செழுஞ்சுடர்ச்சோதியை
யரவறிவார்முன்னொருதெய்வமென்று
விரவறியாமலேமேல்வைத்தவாறே. (௰௮) ஆக ௩௬௮.

---

## இதோபதேசம்,

மறந்தொழிமண்மிசைமன்னுப்பிறவி
யிறந்தொழிகாலத்துமீசனையுள்கும்
பறந்தலமந்துபடுதுயர்தீர்ப்பான்
சிறந்தசிவநெறிசிந்தைசெய்யீரோ, (௧)

செல்லுமளவுஞ்செலுத்துமின்சிந்தையை
வல்லபரிசாலுரைமின்கள்வாய்மையை
யில்லையெனினும்பெரிதுளனெம்மிறை
நல்லவரனெறிநாடுமினீரோ. (௨)

ஒன்றேகுலமுமொருவனேதேவனு
நன்றேநினைமினமனில்லைநாணுமே
சென்றேபுகுங்கதியில்லைநுஞ்சித்தத்து
நின்றேநிலைபெறநீர்நினைந்துய்மினே. (௩)

போற்றிசெயந்[illegible]பொருப்பனை
நாற்றிசைக்கு[illegible]நம்பனைக்

ஆர்ந்திசைக்குங்கமழாக்கைகளைக்கைக்கொண்டு
கூற்றுதைத்தான்றன்னைக்கூறிநின்றுய்மினே, (௪)

இக்காயநீக்கியினியொருகாயத்திற்
புக்குப்பிறவாமற்போம்வழிதேடுமி
னெக்காலத்திவ்வுடல்வந்தெமக்கானதென்
றக்காலமுன்னவருள்பெறலாமே. (௫)

போகின்றவாறேபுகுகின்றவப்பொரு
ளாகின்றபோதுமரனறிவானுளன்
சாகின்றபோதுந்தலைவனைநாடுமி
னாகின்றவப்பொருளக்கரையாகுமே. (௬)

பறக்கின்றவொன்றுபயனுறவண்டி
யிறக்கின்றகாலத்துமீசனையுள்குஞ்
சிறப்பொடுசேருஞ்சிவகதியின்னைப்
பிறப்பொன்றிலாமையும்பேருலகாமே. (௭)

கூடியுநின்றுந்தொழுதெம்மிறைவனைப்
பாடியுளேநின்றுபாதம்பணிமின்க
ளாடியுளேநின்றறிவுசெய்வார்கட்கு
நீடியவீற்றுப்பசுவதுவாகுமே. (௮)

விடுகின்றசீவனார்மேலெழும்போது
நடுநின்றநாடியினூதன்றன்பாதங்
கெடுகின்றவல்வினைகேடில்புகழோ
னிடுகின்றதும்மையிமையவரோடே, (௯)

ஏறுடையாயிறைவாவெம்பிரானென்று
நீற்றேவாரடியார்நிகழ்தேவர்க

ளாறணிசெஞ்சடையண்ணறிருவடி
வேறணிவார்க்குவினையில்லைதானே. (௰)

இன்புறுவீரறிந்தேயெம்மிறைவனை
யன்புறுவீர்தவஞ்செய்யுமெய்ஞ்ஞானத்துப்
பண்புறுவீர்பிறவித்தொழிலேநின்று
துன்புறுபாசத்துழைத்தொழிர்ந்தீரே. (௰க)

மேற்கொள்ளலாவதோர்மெய்த்தவமொன்றுண்டு
மேற்கொள்ளலாவதோர்மெய்த்தாளுமொன்றுண்டு
மேற்கொள்ளலாவதோர்மெய்ந்நெறியொன்றுண்டு
மேற்கொள்ளலாம்வண்ணம்வேண்டிநின்றோர்க்கே (௰உ)

சார்ந்தவர்க்கின்பங்கொடுக்குந்தழல்வண்ண
னேர்ந்தவர்க்கின்னாப்பிறவிகொடுத்திடுங்
கூர்ந்தவர்க்கங்கேகுரைகழல்காட்டுஞ்
சேர்ந்தவர்தேவராச்சென்றுணர்வாரே. (௰௩)

முத்தியைஞானமுமுத்தமிழோசையை
யெத்தனைகாலமுமேத்துவரீசனை
நெய்த்தலைபால்போனிமலனுமங்குள
னத்தகுசோதியதுவிரும்பாரே. (௰௪)

நியமத்தனாகியநின்மலன்வைத்த
வுகமெத்தனையென்றொருவருந்தேறார்
பவமத்திலேவந்துபாய்கின்றதல்லாற்
சிவமத்தையொன்றுந்தெளியகில்லாரே. (௰௫)

இங்கித்தைவாழ்வுமெனத்தோரகிதமுந்
தஞ்சொத்தகாலத்துத்தாய்மணியண்ணனை

விஞ்சத்துறையும்விகிர்தாவெனநின்னை
நஞ்சத்தவர்க்கன்றிநாடவொண்ணாதே. (௰௬)

பஞ்சமுமாம்புவிசற்குருபான்முன்னி
வஞ்சகரானவர்வைகிலவர்தம்மை
யஞ்சுவநாதனருநரகத்திடுஞ்
செஞ்சநிற்போரைத்தெரிசிக்கச்சித்தியே. (௰௭)

சிவனைவழிபட்டாரெண்ணிலிதேவ
ரவனைவழிபட்டங்காமாறொன்றில்லை
யவனைவழிபட்டங்காமாறுகாட்டுங்
குருவைவழிபடிற்கூடலுமாமே. (௰௮)

நரருஞ்சுரரும்பசுபாசநண்ணிக்
கருமங்களாலேகழிதலிற்கண்டு
குருவென்பவன்ஞானிகோதிலனானாற்
பரமென்றலன்றிப்பகர்வொன்றுமின்றே. (௰௯)

ஆட்கொண்டவர்தனிநாயகனன்புற
மேற்கொண்டவர்வினைபோயறநாடோறு
நீர்க்கின்றசெஞ்சடைநீளனுருவத்தின்
மேற்கொண்டவாறலைவீவித்துளானே. (௨௰)

ஆக அதிகாரம்-௯௯இ-திருமந்திரம்-௪௱௰௮.
எழாந்தந்திரமுற்றும்.
ஆக சிறப்புப்பாயிரமுள்பட-அதிகாரப்-௱௯௯இ
கூடியதிருமந்திரம்-௨௲௨௧.

# எட்டாந்தந்திரம்.

## உடலிற்பஞ்சபேதம்.

காயப்பையொன்றுசரக்குப்பலவுள
மாயப்படைதன்னில்மற்றுமோர்பையுண்டு
காயப்பைக்குண்ணின்றகள்வன்புறப்பட்டால்
மாயப்பைமண்ணாமயங்கியவாறே. (௧)

அத்தனமைத்தவுடலிருகூறினிற்
சுத்தமதாகியசூக்குமஞ்சொல்லுங்காற்
சத்தபரிசரூபரசகெந்தம்
புத்திமானாங்காரம்புரியட்டகாயமே. (௨)

எட்டினிலைந்தாகுமிந்திரியங்களுங்
கட்டியமூன்றுகரணமுமாயிடு
மொட்டியபாசமுணர்வதுவாகவே
கட்டியவிழ்த்திடுங்கண்ணுதல்காணுமே. (௩)

இரதமுதிரமிறைச்சிதோன்மேதை
மருவியவத்திவழும்பொடுமச்சை
பரவியசுக்கிலம்பாழாமுபாதி
யுருவமலாலுடலொன்றெனலாமே. (௪)

ஆரேயறிவாரடியின்பெருமையை
யாரேயறிவாரங்கவர்நின்றது
வாரேயறிவாரறுபத்தெட்டாக்கையை
யாரேயறிவாரடிக்காவலானதே. (௫)

எண்சாணளவாலெடுத்தவுடம்புக்குட்
கண்ணாலுடலிற்கரக்கின்றவைகளிற்

புண்காலறுபத்தெட்டாக்கைபுணர்க்கின்ற
நல்யாலுடம்புதன்னாலுடம்பாகுமே. (௬)

உடம்புக்குநாலுக்குமுயிராயசிவ
னொடுங்கும்பானென்டொழியாப்பிரமன்
கடந்தோறுநின்றகணக்கதுகாட்டி
யடங்கியேயற்றதவாராறிவாரோ. (௭)

அறந்தமாகிநடுவுடன்கூடிலூற்
றேறியமூவாறஞ்சிக்கெயிருந்திடுந்
கூறுங்கலைகள்பதினெட்டுங்கூடியே
யூறமுடம்பையுயிருடம்பென்னுமே. (௮)

மெய்யினிற்றாலமிருத்தமுகத்தையும்
பொய்யினிற்குக்கப்பொருந்துமுடலையுங்
கையினிற்றவ்விடங்காட்டுமுடலையு
மையனடிக்குளடங்குமுடம்பே. (௯)

காயுங்கடும்பரிகால்வைத்துவாங்கல்போற்
சேடவிடமுண்மைசெல்லவும்வல்லது
காயத்துகிற்போர்வையொன்றுவிட்டாங்கொன்றிட்
டேயுமவனென்னவேய்ந்திடுங்காயமே. (௰)

நாகமுடலுரிபோலுநல்லண்டச
மாகநருவிற்கனுமறந்தல்லது
போகமுமாருமரனருளாலேசென்
றேகுமிடஞ்சென்றிருபயனுண்ணுமே. (௰௧)

உய்ந்நரககவர்க்கத்திலுள்ளன
கண்டுவிடுக்குக்கங்காரணருச்செலப்

பயின்றுடராப்பரகாயயோகிபோற்
பிண்டமெடுக்கும்பிறப்பிறப்பெய்தியே. (௰௨)

தானவனாகியதற்பரந்தாங்கினோ
னானவைமாற்றிப்பரமத்தடைந்திடு
மேனையுயிர்வினைக்கெய்துமிடஞ்சென்றும்
வானுறிலனும்புகுந்தும்வருந்துமே. (௰௩)

ஞானிக்குக்காயஞ்சிவமேதனுவர்கும்
ஞானிக்குக்காய்முடம்பேயதுவாகு
மேனிற்கும்யோகிக்குவிந்துவுநாதமு
மோனிக்குக்காயமுப்பாழ்கெட்டமுத்தியே. (௰௪)

விஞ்ஞானத்தோர்க்காணவமேமிகுதனு
வெஞ்ஞானத்தோர்க்குத்தனுமாயைதானென்ப
வஞ்ஞானத்தோர்க்குக்கன்மதனுவாகு
மெய்ஞ்ஞானத்தோர்க்குச்சிவதனுமேவுமே. (௰௫)

மலமென்றுடம்பைமதியாதவூமர்
தலமொன்றுவேறுதரித்தமைகண்டீர்
நலமென்றிதனையேநாடியிருக்கிற்
பலமுள்ளகாயத்திற்பற்றுமிவ்வண்டத்தே. (௰௬)

நல்லவசனத்துவாக்குமனாதிகள்
மெல்லவிளையாடும்விமலனகத்திலே
யல்லசெவிசத்தமாகிமனத்தையு
மெல்லத்தரித்தார்முகத்தார்பனித்தே. (௰௭)

---

## உடல்விடல்,

பண்ணாருங்காமம்பயிலும்வசனமும்
விண்ணாம்பிராணன்விளங்கியசத்தமும்
புண்ணாமுடலிற்பொருந்துமனத்தையு
மண்ணாந்துபார்க்கவழியுமுடம்பே. (௧)

அழிகின்றவோருடம்பாகுஞ்செவிகண்
கழிகின்றகாலவ்விரதங்கடான
மொழிகின்றவாக்குமுடிகின்றநாடி
யொழிகின்றவூனுக்குறுதுணையில்லையே. (௨)

இலையாமிடையிலெழுகின்றகாம
முலைவாய்நெஞ்சத்துமூழ்குமுளத்துத்
தலையாயமின்னுடற்றாங்கித்திரியுஞ்
சிலையாயசித்தஞ்சிவமுன்னிடைக்கே (௩) ஆ-உ௰.

---

## அவத்தைபேதம்கீழாலவத்தை

ஐயைந்துமத்திமையானதுசாக்கிரங்
கைகண்டபன்னொன்றிற்கண்டங்கனவென்பர்
பொய்கண்டிலாதபுருடனிதயஞ்சுழுனை
மெய்கண்டவனுந்தியாகுந்துரியமே, (௧)

முப்பதோடாறின்முதனனவைந்தாகச்
செப்பதினான்காயத்திகழ்ந்திரண்டொன்றாகி
யொப்பதியாகுதிபதிமுதலாகச்
செட்டஞ்சிவமிருய்த்தேர்ந்துகொள்ளீரே, (௨)

இந்தியமீரைந்தீரைந்துமாத்திரை
மந்திரமாய்நின்றமாருதமீரைந்து
மந்தக்கரணமொருநான்குமான்மாவும்
பந்தவச்சக்கரப்பாலதுவாகுமே, (௩)

பாரதுபொன்மைபசுமையுடையது
நீரதுவெண்மைசெம்மைநெருப்பதுடையது
காரறுமாருதங்கறுப்பையுடையது
வானகந்தூமமறைந்துநின்றோ, (௪)

பூதங்களைந்தும்பொறியவையைந்துள
மேதம்படுஞ்செய்திருந்தபுறநிலை
யோதுமலங்குணமாகுமாதாரமோ
டாதியவத்தைக்கருவிதொண்ணூற்றாறே, (௫)

இடவகைசொல்லிலிருபத்தஞ்சானை
படுபரசேனையும்பாய்பரியைந்து
முடையவன்மத்திமையுள்ளுறநால்வ
ரடையநெடுங்கடையத்தொடுநான்கே, (௬)

உடம்புமுடம்புமுடம்பைத்தழுவி
யுடம்பிடைநின்றவுயிரையறியா
ருடம்பொடுயிரிடைநட்பறியாதார்
மடம்புகுநாய்போன்மயங்குகின்றாரே. (௭)

இருக்கின்றவாறொன்றறிகிலரேழைகள்
முருக்குமசனையைமாற்றிமுகந்து
கருக்கொண்டுகோமாரிசாரமுகந்தேர்ந்
துருக்கொண்டுதொக்கவுடலொழியாதே. (௮)

ஒளித்திட்டிருக்குமொருபதிறுலே
யளித்தனனென்றுள்ளேயாரியன்வந்து
வளிக்குந்தலைவிறலருபதத்து
வொளித்திட்டுவைத்தான்றுங்கியசித்தே. (௯)

மெய்ஞ்ஞானியொன்றமலர்திருமங்காகும்
பொன்ஞானிலங்கிபுகழ்வளியாகாய
மன்றுமனேருபுத்தியாங்காரமோடொன்று
யுள்ளிமுடிந்ததுபூசயமே. (௰)

முன்னிக்கொருமகன்மூர்த்திக்கிருவர்
வன்னிக்குமூவர்வதனைக்குநால்வர்
கன்னிக்குப்பிள்ளைகளைவர்முன்றில்லை
கன்னியைக்கன்னியேகாதலித்தாளே; (௰௧)

கண்டசைவந்துங்கலந்தனதானந்துஞ்
செல்றுண்டநான்குமொருங்கியுணர்ந்தபின்
பண்டையதாகிப்பரந்தவியாக்கிரத்
தண்டமுந்தாருமமர்ந்துநின்றனே. (௰௨)

நின்றவிற்பப்பிறலிற்பத்துநீத்
தொன்றியவற்றக்காரணங்களுடன்
மன்றுகலந்தமனைவாழ்க்கைவாதனை
கன்றிடகண்டத்திற்கண்டான்கனவதே. (௰௩)

தானமிழந்துதனிப்புக்கிதயத்து
மானமழிந்துமதிகெட்டுமாலாகி
யானவிரிவறியாவவ்வியத்தத்தின்
மேனியமுழ்ந்துசுழுத்தியதாமே. (௰௪)

சுழுனையைச்சேர்ந்துளமூன்றுடன்காட்சி
கெழுமியசித்தம்பிராணன்றன்போத
மொழுகக்கமலத்தினுள்ளேயிருந்து
விழுமப்பொருளுடன்மேவிநின்றானே. (௰௫)

தானத்தெழுந்ததருக்குந்துரியத்தின்
வானத்தெழுந்துபோய்வையம்பிறகிட்டுக்
கானத்தெழுந்தகருத்தின்றலையிலே
யூனத்தவித்தையிட்டூமனின்றானே. (௰௬)

ஊமையெழுத்தொடுபேசுமெழுத்துறி
லாமையகத்தினிலஞ்சுமடங்கிடு
மோமயமுற்றதுவுள்ளொளிபெற்றது
நாமயமற்றதுநாமறியோமே. (௰௭)

துரியமிருப்பதுஞ்சாக்கிரத்துள்ளே
நரிகள்பதினாலுநஞ்சுண்டுசெத்தது
பரியபுரவியும்பாரிற்பரந்தது
துரியமிறந்திடஞ்சொல்லவொண்ணாதே. (௰௮)

மாறுமலமைந்தான்மன்னுமவத்தையின்
வேறாயமாயாதனுகரணாதிக்கிங்
கீறாகாதேயெவ்வுயிரும்பிறந்திறந்
தாறாதவல்வினையாலடியுண்ணுமே. (௰௯)

உண்ணுந்தன்னூடாடாதூட்டிமாயையு
மண்ணலருளபெற்றமுத்தியதாவது
தண்ணவிலாவுயிர்ஞானத்தினாற்பிறந்
தெண்ணுறுஞானத்தினேர்முத்தியெய்துமே. (௨௰)

அதிமூடநித்திரையாணவரந்த
வதனுவுணர்வோனருங்கன்மமூலவித்
திதமானசெயலயித்திறந்துசென்று
பரமாகாவையவத்தைப்படுவானே. (௨௧)

ஆசான்முன்னேதுயில்மாணவகனைத்
தேசாயதண்டாலெழுப்புஞ்செயல்போ
னேசாயவீசனுநீடாணவத்தரை
பேசாதமாயாடன்றுவேலெழுப்புமே (௨௨)

மன்றொடுமந்தாப்பினிகுடமாமென
விஞ்சறிவில்லோன்விளம்புமிகுமதி
யெஞ்சலிலொலிசெறுமாறெனவிவ்வுட
லஞ்ஞானமன்னனய்தேபோமளவே. (௨௩)

படையுடைமன்னவன்பாய்பரியேறி
வடிவுடைமாநகர்தான்வரும்போது
வடியுடையைவருமங்குறைவோருந்
துடியில்லம்பற்றித்துயின்றனர்தாமே, (௨௪)

நேராமலத்தைநடைந்தவத்தையி
னோரானவாறுங்கிறீபிறனவினின்
னேராமலைமந்துநேரோதெரிசித்து
நேராம்பரத்துடனிற்பதுநித்தமே. (௨௫) ஆ௨௪௫.

---

மத்தியசாக்கிராவத்தை.

சாக்கிரசாக்கிரந்தன்னிற்றிரோதாயி
சாக்கிரசொற்பனந்தன்னிடைமாமாயை

சாக்கிரந்தன்னிற்சுழுத்திதற்காமியஞ்
சாக்கிரந்தன்னிற்றுரியத்துமாயையே. (௫)

மாயையெழுப்புங்கலாதியைமற்றதி
னேயவிராகாதியேய்ந்ததுரியத்துத்
தோயுஞ்சுழுனைகளுநனவுந்துன்னி
யாயினனந்தச்சகலத்துளானே. (௬)

மேவியவந்தகன்விழிகட்குருடனு
மாலவையின்முன்னடிக்காணுமதுவேபோல்
மேவுந்தடிகொண்டுசொல்லும்விழிபெற
மூவையினுன்மாமுயலுங்கருமமே, (௭)

மத்திமமொத்தசிலந்திவலயத்து
ளொத்தங்கிருந்துவுயிருண்ணுமாறுபோ
லத்தனுமைம்பொறியாடகத்துண்ணின்று
சத்தமுதலைந்துந்தானுண்ணுமாறே. (௮)

வைச்சனவச்சுவகையிருபத்தஞ்சு
முச்சுமுடன்மனைவாரொருவன்றுளன்
பிச்சன்பெரியன்பிறப்பிலியென்றென்று
நச்சியவனருளானுய்ந்தவாறே (௯)

நாலாறுடன்புருடனற்றத்துவமுடன்
வேறானவையைந்துமெய்ப்புருடன்பரங்
கூறுவியோமம்பரமெனக்கொண்டனன்
வேறானநாலேழுவேதாந்ததத்வமே. (௧௦)

ஏலங்கொண்டாங்கேயிடையொடுபிங்கலை
கோலங்கொண்டாங்கேகுணத்திருடன்புக்கு

மூலங்கொண்டாங்கேமுறுக்கிமுக்கோணிலுங்
காலங்கொண்டானடிகாணலுமாமே, (எ)

நாடிகள்பத்துநலந்திகழ்வாயுவு
மோடியகாலிலொடுங்கியிருந்திடுங்
கூடியகாமங்குளிக்குமிரதமு
நாடியநல்லமனமுமுடலிலே. (அ)
ஆவனவாவவழிவவழிவன
ம்பாவனபோவபுகுவபுகுவன
காவலன்பேர்நந்திகாட்டித்துக்கண்டவ
னேவனசெய்யுமிளங்கிளையோனே. (௯)

பத்தொடுபத்துமோர்மூன்றும்பகுதியு
முய்த்ததுரியமுமுள்ளுணர்காலமு
மெய்த்தவியோமமும்மேலைத்துரியமுந்
தத்துவநாலேழெனவுன்னத்தக்கதே. (௰)
விளங்கிடுமுந்நூற்றுமுப்பத்தோடொன்பான்
றளங்கொளிரட்டியதாறுநடத்தால்
வணங்கிடுமைம்மலம்வாயுவெழுந்து
விளங்கிடுமவ்வழிதத்துவநின்றே. (௰௧)

நாலொருகோடியேநாற்பத்தெண்ணாயிர
மேலுமோரைந்நூறுவேறாயடங்கிடும்
பாலவைதொண்ணூறோடாறுட்படுமவை
கோலியவைவைந்துளாகுங்குறிக்கிலே. (௰௨)
ஆகின்றதொண்ணூறோடாறும்பொதுவென்ப
ராகின்றவாறாறுஞ்சைவர்தத்துவ

மாகின்றநாலேழ்வேதாந்திவயிணவர்க்
காகின்றநாலாறையைந்துமாயாவாதிக்கே (௰௩)

தத்துவமான துதல்வழிநின்றிடில்
வித்தகனாகிவிளங்கியிருக்கலாம்
பொய்த்தவமாமவைபோயிடுமவ்வழி
தத்துவமாவதகாரவெழுத்தே. (௰௪)

அறிவொன்றிலாதனவையேழுமொன்று
மறிகின்றவென்னையறியாதிருந்தே
னறிகின்றாய்நீயென்றருள்செய்தார்நந்தி
யறிகின்றநானென்றறிந்துகொண்டேனே. (௰௫)

சாக்கிரசாக்கிரமாதிதனிலைந்து
மாக்குமலாவத்தையைந்துநனவாதி
போக்கியிவற்றொடும்பொய்யானவாறாறு
நீக்கிநெறிநின்றொன்றாகியேநிற்குமே, (௰௬)

ஆணவமாதிமலமைந்தலோனுக்
காணவமாதிநான்காமாற்கரனுக்கு
வாணவமாதிமூன்றீசர்க்கிரண்டென்ப
வாணவமொன்றேசதாசிவற்காவதே. (௰௭) ஆ ௩௨

---

அத்துவாக்கள்.

தத்துவமாறாறுதன்மனுவேழ்கோடி
மெய்த்தருவன்னமைம்பானொன்றாமேதினி
யொத்திருநாற்றிருபானெண்கெண்பானொன்று
வைத்தபதங்கலைபாலோரைந்தம்வந்தமே (௧)

நாடியமண்டலமூலநலந்தெரிந்
தோடுமேவரோடுள்ளிருபத்தைஞ்சுங்
கூடிவர்கூடிக்குறிவழியேசென்று
தேடியபின்னர்த்திகைத்திருந்தார்களே. (௨)

சாக்கிரசாக்கிரமாதித்தலையாக்கி
யாக்கியநாலமளவாக்கியதீதத்துத்
தாக்கியவல்பானதாண்டவஞ்சார்ந்தது
தேக்குஞ்சிவமாதலைந்துஞ்சிவாயமே. (௩) ஆக ௩௫.

---

சுத்தநனவாதிபருவம்.

நனவாதிநாலமேருக்கப்பகுதி
யனதானவையந்தம்வித்துவின்சத்தி
தனதாமுயிர்வித்துதானின்றுபோந்து
கனவாநனவிற்கலந்ததிவ்வாறே. (௧)

நனவிலதீதப்பிறந்தார்கிடந்தார்
நனவிற்றுரியநகழ்ந்தார்தவழ்ந்தார்
நனவிற்சுழுனைநடந்தார்வளர்ந்தார்
நனவிற்கனவோடனஞ்செய்தியானதே. (௨)

செறியக்கிரியைசிவதத்துவமாம்
பிறிவிற்சகயோகம்பேரருள்கல்வி
குறிதந்திருமேனிகுணம்பலவாகு
மறிவிற்சாசரமண்டத்தளவே. (௩)

ஆதிபரஞ்சிவஞ்சத்திசதாசிவ
மேதமிலீசனல்வித்தியாதத்துவம்

போதங்கலைகாலநியதிமாமாயை
நீதியீருகநிறுத்தினனென்னே, (௪)

தேசுதிகழ்சிவஞ்சத்திசதாசிவ
மீசனனல்வித்தையிராகங்கலைகால
மாசகல்வித்தைநியதிமகாமாயை
யாசில்புருடாதியான்மாவீறுமே. (௫)

ஆணவமாயையுங்கன்மமுமாமலங்
காணுமுளைக்குத்தவுடுமியான்மாவுந்
தாணுவையொவ்வாமற்றண்டுலமாய்நிற்கும்
பேணுவாய்மற்றுநின்பாசம்பிறித்தே. (௬)

பசுக்கள்பலவண்ணம்பாலொருவண்ணம்
பசுக்களைமேய்க்கின்றவாயனொருவண்ணம்
பசுக்களைமேய்க்கின்றவாயன்கோல்போடிற்
பசுக்கடலைவனைப்பற்றிவிடாவே. (௭)

உடலிந்திரியமனமொண்புத்திசித்த
மடலொன்றகர்தையறியாமைமன்னிக்
கெடுமவ்வுயிர்மயல்மேலுங்கிளைத்தா
லடைவதுதானேழ்நரகத்துளாயே. (௮)

தற்றெரியாதவதீதந்தற்காணவஞ்
சொற்றெரிகின்றதுரியஞ்சொற்காமியம்
பெற்றசுழுத்திப்பின்பேசுறுங்காதலா
மற்றதுவுண்டிக்கனநனவாதலே. (௯)

நனவிற்கனவில்லையந்துநனவிற்
கனவிலாச்சுக்குமங்காணுஞ்சுழுத்தி

தனாலுண்பகுதியேதற்கூட்டுமாயை
தனிற்றுரியமதிதந்தலைவந்தே. (௰)

ஆறுநிலையைத்தகலநனுநனு
வாறுமலைவிடவாகுநனுக்கனு
வேறுணவைத்துய்விடம்வநனுவினி
சீறுஞ்சுழுனையிதின்மாயைதானே. (௰௧)

மாயையில்வந்தபுருடன்றுரியத்தி,
லாயமுறைவிட்டதுவுந்தானன்றாகிச்
சேபகேவலவிற்றுடன்செல்லச்சென்றக்கா
லாயதனுவின்பயனில்லையாகுமே. (௰௨)

அதீதத்துரியத்தறிவனுமான்மா
வதீதத்துரியமதனுற்புரிந்தா
லதீதத்தெழுந்தறிவாகியமானன்
முதியவனவிற்றுரியத்துமுற்றுமே. (௰௩)

ஐயைந்துபத்துடனுனதுசாக்கிரங்
கைகண்டனவஞ்சிற்கண்டங்களுவென்பர்
பொய்கண்டமூவர்புருடன்சுழுனையின்
மெய்கண்டவனுந்திமேவலிருவரோ. (௰௪)

புரியட்டகமேபொருந்தனைவு
புரியட்டகந்தன்னின்மூன்றுகனவு
புரியட்டகத்திரண்டுசுழுத்தி
புரியட்டகத்தொன்றுபுக்கதுரியமே. (௰௫)

நனவினனவுபுலனில்வழக்க
நனவிற்கனவுநினைந்தன்மறந்த

னனவிற்சுழுனையுள்ளுடலிலாமை
நனவிற்றுரியமதீதத்துநந்தியே. (௰௬)

கனவினனவுபோற்கண்டனனவாங்
கனவினிற்கண்டுமறத்தற்கனவாங்
கனவிற்சுழுத்தியுங்காணாமைகாண
லனுமாதிசெய்தலிலானதுரியமே. (௰௭)

சுழுத்திநனவொன்றுந்தோன்றாமைதோன்றற்.
சுழுத்திகனவதனுண்மைசுழுத்தியிற்
சுழுத்தியறிவறிவாலேயழிகை
சுழுத்தித்துரியமாஞ்சொல்லரும்பாழே. (௰௮)

துரியநனவாமிதமுணர்போதந்
துரியக்கனவாமகமுணர்போதந்
துரியச்சுழுத்திவியோமந்துரியந்
துரியம்பரமெனத்தோன்றிடுந்தானே. (௰௯)

அறிவறிகின்றவறிவுநனவா
மறிவறியாமையுடையக்கனவா
மறிவறியவ்வறியாமைசுழுத்தி
யறிவறிவாகுமானதுரியமே. (௨௰)

தானெங்குமாயவனைம்மலந்தான்விட்டு
ஞானந்தனதுருவாகிநயந்தபின்
றானெங்குமாய்நெறிநின்றதுதான்விட்டு
மேனந்தச்சூக்கமவைவன்னமேவிட்டே. (௨௧)

ஐயைந்துமாறுமோராறுநனாவினி
லெய்யுநனவுகனவுசுழுத்தியா

மெய்யும்பின் சுக்கமுமெய்ப்பகுதிமாயை
யையுமுந்தானவனத் துரியத்தனே. (௨௨

ஈதென்றறிந்திலனித்தனைகாலமு
மீதென்றறிந்தபினேதுமறிந்திலே
னீதென்றறியுமறிவையறிந்தபி
னீதென்றறியுமியல்புடையோரே. (௨௩)

உயிர்க்குயிராகியுருவாயருவா
யயற்புணர்வாகியறிவாய்ச்செறிவாய்
நயப்புறுசத்திபுநாதனுலகாதி
யியற்பின்றியெல்லாமிருண்மூடமாமே. (௨௪)

சத்தியிராகத்திற்றானல்லுயிராகி
பொத்துறுபாசமலமைந்தோடாறு
தத்துவபேதஞ்சமைத்துக்கருவியும்
வைத்தனனீசன்மயமறுமாறே. (௨௫)

சாக்கிராதீதத்திலாணவந்தன்னுண்மை
சாக்கிராதீதந்துரியத்திற்றானுறச்
சாக்கிராதீதத்திலாணவந்தான்விடாச்
சாக்கிராதீதம்பரனுண்மைதங்குமே. (௨௬)

மலக்கலப்பாலேமறைந்ததுசத்தி
மலக்கலப்பாலேமறைந்ததுஞான
மலக்கலப்பாலேமறைந்தனன்றானு
மலக்கலப்பற்றான்மதியொளியாமே. (௨௭)

திகைக்கின்றசிந்தையுட்சிங்கங்களமூன்று
நகைக்கின்றநெஞ்சுணரிக்குட்டிநாலு

வகைக்கின்றநெஞ்சினுளானைக்கன்றைந்து
பகைக்கின்றநெஞ்சுக்குப்பாலிரண்டாமே. (௨௮)

கதறுபதினெட்டுக்கண்களும்போகச்
சிதறியெழுந்திடுஞ்சிந்தையைநீரும்
விதறுபடாமுன்னமெய்வழிநின்று
லதிரவருவதோரானையுமாமே. (௨௯)

நனவகத்தேயொருநாலைந்தும்விடக்
கனவகத்தேயுட்கரணங்களோடு
முனவகத்தேநின்றுதறியுள்புக்கு
நினைவகத்தின்றிச்சுழுத்திநின்றானே. (௩௰)

நின்றவனாசானிகழ்துரியத்தனு
மொன்றியுலகினியமாதிகளுற்றுச்
சென்றுதுரியாதீதத்தேசிலகால
நின்றுபரனாய்நின்மலனாகுமே. (௩௧)

ஆனவவ்வீசனதீதத்தில்வித்தையாய்
தானுலகுண்டுசதாசிவமாசத்தி
மேனிகளைந்தும்போய்விட்டுச்சிவமாகி
மோனமடைந்தொளிமூலத்தனாமே. (௩௨)

மண்டலமூன்றினுள்மாயநன்னாடனைக்
கண்டுகொண்டுள்ளேகருதிக்கழிகின்ற
விண்டலர்தாமரைமேலொன்றுங்கீழாகத்
தண்டமுந்தானாயகத்தினுள்ளாமே. (௩௩)

போதறியாதுபுலம்பினபுள்ளின
மாதறியாவகைநின்றுமயங்கின

வேதறியாவணநின்றனனெம்மிறை
ஞுதறிவாருச்சிகூடிநின்றாரோ. (௬௪)

கருத்தறிந்தொன்பதுகண்டமுமாங்கே
பொருத்தறிந்தோன்புவனாபதிநாடித்
திருத்தறிந்தேன்மிகுதேவர்பிரானை
உருத்தறிந்தேன்மனமன்னிநின்றேனே. (௬௫)

ஞானவிளக்கொளிதூண்டுமவனென்னுந்
தானவிளக்கொளியாமூலசாதனத்
தானவிதிமூலத்தானத்திலவ்விளக்
கேனமதிமண்டலங்கொண்டெரியுமே. (௬௬)

உண்ணாடுமைவர்க்குமண்டைபொதுங்கிய
விண்ணாடநின்றவெளியைவினவுறி
லண்ணாந்துபார்த்தைவர்கூடியசந்தியிற்
கண்ணாடிகாணுங்கருத்ததென்றானே. (௬௭)

அறியாதவற்றையறிவானறிவா
னறிவானறியாதான்றன்னறிவாகா
னறியாதவத்தையறிவானைக்கூட்டி
யறியாதறிவானையாரறிவாரோ. (௬௮)

துரியதரிசனஞ்சொற்றேம்பியாத்த
மரியனதுடனமத்நலவாதி
பெரியனகாலபரம்பிற்றுரிய
மரியவதீதமதீதத்ததாமே. (௬௯)

மாயையிற்சேதனன்மன்னுபகுதியோன்
மாயையின்மற்றதுநீவுதன்மாயையாங்

கேவலமாகுஞ்சகலயாயோனியுட்
டோயுமனிதர் துரியத்துட்சிவனே. (௪௰) ஆ. ௫.

---

கேவலசகலசுத்தம்.

தன்னையறிசுத்தன் றற்கேவலன்றனும்
பின்னமுறநின்றபேதசகலனு
மன்னியசத்தசத்துச்சதசத்துடன்
றுன்னுவர்தத்தந்தொழிற்களவாகவே. (௧)

தானேதனக்குப்பகைவனுநட்டானுந்
தானேதனக்குமறுமையுமிம்மையுந்
தானேதான்செய்தவினைப்பயன்றுய்ப்பானுந்
தானேதனக்குத்தலைவனுமாமே. (௨)

ஆமுயிர்கேவலமாமாயையின்னடந்
தாமுயிர்மாயையெறிப்பவறிவுற்றுக்
காமியமாயேயமுங்கலவாநிற்பத்
தாமுறுபாசஞ்சகலத்ததாமே. (௩)

சகலவவத்தையிற்சார்ந்தோர்சகலர்
புகலுமலமுவகையும்புணர்ந்தோர்
நிகரின்மலரோன்மானிடுபல்தேவர்க
ணிகழ்நரர்கீடமந்நமுமாமே. (௪)

தாவியமாயையிற்றங்கும்பிரளய
மேவியமற்றதுடம்பாய்மிக்குள்ளன
வோவலிலக்கணரொன்றிபசிகண்ட
ராவயினூற்றெட்டுருத்திராகுமே. (௫)

ஆகின்றகேவலத்தாணவத்தானவ
ராகின்றவித்தேசராமனந்தாதிய
ராகின்றவெண்மரொழுகோடிமந்திர
ராகின்றவீசரனேகருமாமே. (௬)

ஆமாறிற்சிவனாருள்பெற்றுளோர்
போமலந்தன்னாற்புகழ்விந்துநாதம்விட்
டோமயமாக்கியொடுங்கலினின்மலந்
தோமறுசுத்தாவவத்தைத்தொழிலே. (௭)

ஓரினுமூவகைநால்வகையும்முள
தேரிலிவைகேவலமாயைசேரிச்சை
சாரியலாயவைதானேதணப்பவை
வாரிவைத்தீசன்மலமறுத்தானே. (௮)

மெய்யானபோதாந்தமாறாறுவிட்டகன்
றெய்யாமைநீங்கவேயெய்தவன்றானாகி
மெய்யாஞ்சராசரமாய்வெளிதன்னுட்புக்
கெய்தாமலெய்துஞ்சுத்தாவத்தையென்பவே. (௯)

அறுதிபசுவியாத்தியாகுமிவனை
யறுதியில்வந்தமலமைந்தாலாட்டி
யறுதியிற்கேவலமச்சகலத்திட்
டறுதிபிறப்பறச்சுத்தத்துளாகுமே (௰)

அந்தாஞ்சுத்தாவத்தைகேவலத்தாறு
தந்தோர்தஞ்சுத்தகேவலத்தற்றதற்பரத்
தின்பாற்றுரியத்திடையேயுறிவுறத்
தன்பாற்றனையறிந்துவந்தானே. (௰௧)

ஐயைந்தொடுங்குமான்மாவிலான்மாவு
மெய்கண்டுசுத்தவவத்தையில்விடாகுந்
துய்பவவ்வித்தைதமுதனமூன்றந்தொல்சத்தி
யையசிவஞ்சித்தியாந்தோற்றமவ்வாறே. (௰௨)

ஐயைந்துமானவிலாறேடடங்கிடு
மெய்கண்டமென்மூன்றுமேவுமெய்யோகத்தில்
கைகண்டசத்திசிவபாகத்தேகாண
வெய்யும்படியடங்கும்நாலேழெய்தியே. (௰௩)

ஆணவத்தாரொல்றறியாதகேவலர்
பேணியமாயைபிரளயாகலராகுங்
காணுமுருவினர்காணுமைகாண்பவே
பூணுஞ்சகலமும்பாசமும்புக்கோரே. (௰௪)

ஆணவமாகும்விஞ்ஞானகலருக்குப்
பேணியமாயைபிரளயாகலராகு
மாணவமாயையுங்கன்மமூன்றுமே
காணுஞ்சகலர்க்குக்காட்டுமலங்களே. (௰௫)

கேவலந்தன்னிற்கிளர்ந்தவிஞ்ஞாகலர்
கேவலந்தன்னிற்கிளர்விந்துசத்தியா
லாவையிற்கேவலத்தச்சகலத்தையு
மேவியமந்திரமாமாயைமெய்ம்மையே. (௰௬)

மாயையின்மன்னும்பிரளயாகலர்வந்து
மாயையுந்தோன்றுவகைநிற்கவாணவ
மாயசகலத்துக்காமியமாமாயை
யேயமன்னூற்றெட்டுருத்திரரென்பவே. (௰௭)

மும்மலங்கூடிமுயங்கிமயங்குவோ
ரம்மெய்ச்சகலத்தர்தேவர்சுரர்நரர்
மெய்ம்மையில்வேதாவிரிமிகுகீடாந்தத்
தம்முறையோனிபுக்கார்க்குஞ்சகலரே. (௰அ)

சுத்தவவத்தையிற்றோய்ந்தவர்மும்மலச்
சத்தசத்தோடத்தனித்தனிபாசமு
மத்தவிருள்சிவஞானகதிராலே
தொத்தறவிட்டிடச்சுத்தராவார்களே. (௰௯)

தற்கேவலமுத்திதானேதனிமையாம்
பிற்பாற்சகலங்கலாதிப்பிறிவதாஞ்
சொற்பாற்புரிசுத்தகேவலஞ்சாக்கிரத்
தற்பாற்புரிவருதற்சுத்தயாமே. (௨௰)

அறிவின்றிமுத்தோனராகாதிசேரான்
குறியொன்றிலாநித்தன்கூடான்கலாதி
செறியுஞ்செயலிலான்றினங்கத்தவல்லோன்
கிறியன்மலவியாபிகேவலந்தானே. (௨௧)

விந்துவுமாயையுமேவுங்கிரியையுஞ்
சந்தஞானபரையுந்தனுச்சத்தி
விந்துவின்மெய்ஞ்ஞானமேவும்பிரளயர்
வந்தசகலசுத்தான்மாக்கள்வையத்தே. (௨௨)

கேவலமாதியின்பேதங்கிளக்குறிற்
கேவலமூன்றுங்கிளருஞ்சகலத்து
மாவையின்மூன்றுமதிசுத்தமூடவே
வோவலில்லாவொன்பானுற்றுணர்வோர்கட்கே(௨௩

கேவலத்திற்கேவலமதிதாதீதங்
கேவலத்திற்சகலங்கள்வயிந்தவங்
கேவலத்திற்சுத்தங்கேடில்விஞ்ஞாகலர்த்
தாவையினுதனருள்மூர்த்திதானே. (உச)

சகலத்திற்கேவலஞ்சாக்கிராதீதஞ்
சகலசகலமேசாக்கிரசாக்கிரஞ்
சகலத்திற்சுத்தமேதற்பராவத்தை
சகலத்திலிம்மூன்றுதல்மையுமாமே. (உ௫)

சுத்தத்திற்சுத்தமேதொல்சிவமாகுதல்
சுத்தத்திற்கேவலந்தொல்லுபசாந்தமாஞ்
சுத்தசகலந்துரியவிலாசமாஞ்
சுத்தத்திலிம்மூன்றுஞ்சொல்லுமாமே. (உசு)

சாக்கிரசாக்கிரந்தன்னிற்கனவொடுஞ்
சாக்கிரந்தன்னிற்சுழுத்திதுரியமே
சாக்கிராதிதந்தனிற்சுகானந்தமே
யாக்குமறையாதியைம்மலபாசமே. (உஎ)

சாக்கிராதிதத்திற்றனதுமாணவஞ்
சாக்கிராதீதம்பராவத்தைதங்காது
யாக்குப்ரோபாதியாமுபசாந்தத்தை
நோக்குமலங்குணநோக்குதலாகுமே. (உஅ)

பெத்தமுமுத்தியும்பேறுந்துரியமுஞ்
சுத்தவதீதமுந்தோன்றுமற்றுனு
மத்தனருளென்றருளாலறிந்தபின்
சித்தமுமில்லைசெயலில்லைதானே. (உகு)

எய்தியபெத்தமுமுத்தமும்மென்பன
வெய்துமரனருளேவிளையாட்டோ
டெய்திடுயிர்சுத்தத்திடுநெறியென்னவே
யெய்துமுயிரிறைபாலறிவாமே. (௩௰)

ஐம்மலத்தாருமதித்தசகலத்த
ரைம்மலத்தாருமருவினைப்பாசத்தா
ரைம்மலத்தார்சுவர்க்கந்நெறியாள்பவ
ரைம்மலத்தாரரனார்க்கறிவோரே. (௩௧)

கருவில்நிதங்கலப்பிக்குமாயை
யரியதுரியமதினுண்ணுமாசையு
முரியசுழுனைமுதலெட்டுஞ்சூக்கத்
தரியகருத்தூலமந்நனவாகுமே. (௩௨)

ஆணவமாகுமதீதமேன்மாயையும்
பூணுந்துரியஞ்சுழுத்திப்பொய்க்காமியம்
பேணுங்கனவுமாமாயைதிரோதாயி
காணுநனவின்மலக்கலப்பாகுமே. (௩௩)

அரன்முதலாகவறிவோனதீதத்த
னரன்முதலாமாயைதங்கிச்சுழுனை
கருமமுணர்ந்துமாமாயைக்கைக்கொண்டோ
ரருளுமறைவார்சகலத்துற்றோரே. (௩௪)

உருவுற்றுப்போகமேபோக்கியந்துற்று
மருவுற்றுப்பூதமனாதியான்மன்னி
வருமச்செயல்பற்றிச்சத்தாதிவைகிக்
கருவுற்றிடுஞ்சீவன்காணுஞ்சகலத்தே. (௩௫)

இருவினையொத்திடவின்னருட்சத்தி
மருவிடஞானத்திலாதனமன்னிக்
குருவினைக்கொண்டருட்சத்திமுன்கூட்டிப்
பெருமலநீங்கிப்பிறவாமைசேர்த்தமே. (௩௬)

ஆறாறுமாறதினையந்தவத்தையோ
டீறுமதிதத்துரியத்திவனெய்தப்
பேறனவைவரும்போம்பிரகாசத்து
நீறார்பரஞ்சிவமாதேயமாகுமே (௩௭)

தன்னையறியாதுடலைமுன்றானென்றான்
றன்னைமுன்கண்டான்றுரியந்தனைக்கண்டா
னுன்னுந்துரியமுமீசனோடொன்றாக்காற்
பின்னையும்வந்துபிறந்திடுந்தானே. (௩௮)

சாக்கிரந்தன்னிலதீதந்தலைப்படி
லாக்கியவந்தவயிந்தவமானந்த
நோக்கும்பிறப்பறுநோன்முத்திசித்தியாம்
வாக்குமனமுமருவல்செய்யாவே. (௩௯)

அப்புமனலுமகலத்துளேவரு
மப்புமனலுமகலத்துளேவரா
வப்புமனலுமகலத்துளேதெனி
லப்புமனலுங்கலந்தவவ்வாறே. (௪0)

அறுநான்குசுத்தமதிசுத்தாசுத்த
முறுமேழுமாயையுடனைந்தேசுத்தம்
பெறுமாறிவைமூன்றுங்கண்டத்தாற்பேதித்
துறுமாயைமாமாயையான்மாவினோடே. (௪௧)

மாயைகைத்தாயாகமாமாயையீன்றிட
வாயபரசிவன்றந்தையாய்நிற்கவே
யேயுமுயிர்க்கேவலசகலத்தெய்தி
யாய்தருசுத்தமுந்தாய்வந்தடையுமே. () ஆசான்.

---

பராவத்தை.

அஞ்சுங்கடந்தவநாதிபரந்தெய்வ
நெஞ்சமதாயநிமலன்பிறப்பிலி
விஞ்சுமுடனுயிர்வேறுபடுத்திட
வஞ்சத்திருந்தவகையறிந்தேனே. (௧)

சத்திபராபரஞ்சாந்திதனிலான
சத்திபரானந்தந்தன்னிற்சுடர்விந்து
சத்தியமாயைதனுச்சத்தியைந்துடன்
சத்திபெறுமுயிர்தானங்கத்தாறுமே. (௨.)

ஆருறக்கப்பாலறிவாரறிபவ
ராருறக்கப்பாலருளார்பெறுபவ
ராருறக்கப்பாலறிவாமவர்கட்கே
யாருறக்கப்பாலரனினிதாமே. (௩)

அஞ்சொடுநான்குங்கடந்தகமேபுக்குப்
பஞ்சணிகாலத்துப்பள்ளிதுயில்கின்ற
விஞ்சையர்வேந்தனுமெல்லியலாளொடு
நஞ்சறநாடிநடஞ்செய்யுமாறே. (௪)

உரியதனுத்துரியத்திலிவனு
மரியதுரியநனவாதிமூன்றிற்

பரியபர துரியத்திற்பரனுந்
திரியவருந்துரியத்திற்சிவமே. (௫)

பரமாமதீதமேபற்றறப்பற்றப்
பரமாமதீதம்பயிலப்பயிலப்
பரமாமதீதம்பயிலாத்தபோதனர்
பரமாகார்பாசமும்பற்றொன்றாறே. (௬)

ஆயும்பொய்மாயையகம்புறமாய்நிற்கும்
வாயுமனமுங்கடந்தமயக்கறிந்
தூயவறிவுசிவானந்தமாகிப்போய்
வேயும்பொருளாய்விளைந்ததுதானே. (௭)

துரியப்பரியிலிருந்தவச்சீவனைப்
பெரியவியாக்கிரத்துள்ளேபுகவிட்டு
நரிகளையோடத்துரத்தியநாதர்க்
குரியவினைகணின்றோலமிட்டன்றே. (௮)

நின்றவிச்சாக்கிரநீடுரியத்தினின்
மன்றனுமங்கேமணஞ்செய்யநின்றிடும்
மன்றன்மணஞ்செய்யமாயைமறைந்திடு
மன்றேயிவனுமவன்வடிவாமே. (௯)

விரிந்திடிற்சாக்கிரமேவும்விளக்கா
யிருந்தவிடத்திடையீடானமாயை
பொருந்துந்துரியப்புரியிற்றனுருத்
தெரிந்ததுரியத்துத்தீதகலாதே. (௰)

உன்னையறியாதுடலைமுன்னானென்றே
னுன்னையறிந்துதுரியத்துறநின்றேன்

தன்னையறிந்தும்பிறவிதணவாதா
லன்னவியாத்தனமலமென்றறுதியே. (௱௧)

கருவரம்பாகியகாயந்துரிய
மிருவருங்கண்டர்பிறப்பிறப்புற்றார்
குருபரம்பெற்றவர்கூடியபின்னை
யிருவருமின்றியொன்றாகிநின்றாரே. (௱௨)

அணுவின்றுரியத்திலானநனவு
மணுவவைசவின்கண்ணானகனவு
மணுவவைசவிற்பராதீதஞ்சுழுத்தி
பணியிற்பரதுரியம்பரமாமே. (௱௩)

பரதுரியத்துநனவும்பரந்து
விரிசகமுண்டகனவுமெய்ச்சாந்தி
யுருவறுகின்றசுழுனையுமோவத்
தெரியுஞ்சிவதுரியத்தனுமாமே. (௱௪)

பரமாநனவின்பின்பாற்சகமுண்டந்
திரமார்கனவுஞ்சிறந்தசுழுத்தி
பரமாமுபசாந்தமுற்றற்றறவே
தரனுஞ்சிவதுரியத்தனுமாமே. (௱௫)

சீவன்றுரியமுதலாகச்சீரான
வாவசிவன்றுரியாந்தமவத்தைபத்
தோவும்பராநந்தியுண்மைக்குள்வைகியே
மேவியதாலேலழ்விடுத்துநின்றானே. (௱௬)

பரஞ்சிவன்மேலாம்பரமம்பரத்திற்
பரம்பரன்மேலாம்பரநனவாக

விரிந்தகருவிடர்வீட்டுஞ்சுழுனை
புரந்தகுமாநந்தியாமுன்னமைதானே. (௰௭).

சார்வாம்பரசிவஞ்சத்திபரநாத
மேலாயவிந்துசதாசிவமிக்கோங்கிப்
பாலாய்பிரமனரியமராபதி
தேவாமுருத்திரனீசனுங்காணிலே. (௰௮).

கலப்பறியார்கடல்சூழுலகேழு
முலப்பறியாருடலோமுயிர்தன்னை
யலப்பறிந்திங்கரசாளகிலாதார்
குலிப்பதுகோலமடலதுவாமே. (௰௯)

பின்னையறியும்பெருந்தவத்துண்மைசெய்
தன்னையறியிற்பராபரனெம்மிறை
முன்னையறிவுமுடிகின்றகாலமு
மென்னையறிபனுற்றிற்புற்றவாறே. (௨௰).

பொன்னைமறைத்ததுபொன்னணிபூடணம்
பொன்னின்மறைந்ததுபொன்னணிபூடணந்
தன்னைமறைத்ததுதன்கரணங்களாந்
தன்னின்மறைந்ததுதன்கரணங்களே. (௨௧)

மரத்தைமறைத்ததுமாமதயானை
மரத்தின்மறைந்ததுமாமதயானை
பரத்தைமறைத்ததுபார்முதற்பூதம்
பரத்தின்மறைந்ததுபார்முதற்பூதமே, (௨௨)

திருநகன்றநமவிட்டதிவாசி
வெருணாதானையகாரமாய்மிக்கோங்கி

பிறார்பவரயினிருளற்றதற்பரன்
பேறார்சிவாயவடங்கும்பின்முத்தியே. (உ௩)

துரியத்திலோரைந்துஞ்சொல்லகராதி
விரியப்பவாயின்மிகுநாதமந்தம்
புரியப்பவாயின்பராவத்தாபோதந்
திரியப்பரமந்துரியந்தெரியவே. (உ௪)

ஐந்துஞ்சகலத்தருளாற்புரிவுற்றுப்
பந்தமுஞ்சுத்தவவத்தைப்பதைப்பினி
னந்திபராவத்தைநாடச்சுடர்முன
மந்தியிருள்போலுமைம்மலமாறுமே (உ௫)

ஐயைந்துமட்டப்பகுதியுமாயையும்
பொய்கண்டமாமாயைதானும்புருடன்கண்
டெய்யும்படியாயெவற்றுமாயன்றாகி
யுய்யும்பராவத்தையுள்ளுறல்சுத்தமே. (உ௬)

நின்றானருளும்பரமுமுன்னேயமு
மொன்றாய்மருவுமுருவுமுபாதியுஞ்
சென்றுவினைவிடுத்தாங்கிற்செல்லாமையு
நன்றானஞானத்தினாதப்பிரானே. (உ௭) ஆ ௱எ௪

---

## முக்குணநிர்க்குணம்.

சாத்திகமெய்துரனவெனச்சாற்றுங்கால்
வாய்த்தவிராசதமன்றுங்கனவென்ப
வோய்த்திடுந்தாமதமுற்றசுழுத்தியா
மாய்த்திடுநிர்க்குணமாசிற்றுரியமே. (௧) ஆ ௱எ௫

## அண்டாதிபேதம்.

பெறுபகிரண்டம்பேதித்தவண்ட
மெறிகடலேழின்மணலளவாகப்
பொறியொளிபொன்னணியென்னவிளங்கிச்
செறியுமண்டாசனத்தேவர்பிரானே. (க)

ஆனந்ததத்துவமண்டாசனத்தின்மேன்
மேனியைந்தாகவியாத்தமுப்பத்தாறுத்
தானந்தமில்லாததத்துவமானவை
யீனமிலாவண்டத்தெண்மடங்காமே; (உ) ஆ. ௱௪௪.



## பதினோராந்தானமுமவத்தையெனக்காணல்.

அஞ்சிலமுதமோரேழின்கணனந்த
முஞ்சிலோங்காரமோரொன்பான்பதினொன்றில்
வஞ்சகமேநின்றுவைத்திடிற்காயமாங்
கிஞ்சுகச்செவ்வாய்க்கிளிமொழிகேளே. (க)

புருடனுடனேபொருந்தியசித்த
மருவமொடாறுமதீதத்துரியம்
விரியுஞ்சுழுத்தியின்மிக்குள்ளவெட்டு
மரியபதினொன்றுமாமவ்வவத்தையே (உ)

காட்டும்பதினொன்றுங்கைகலந்தானுட
னூட்டியமுத்திடினற்றியல்லாவில்லை
யாட்டஞ்செய்யாதவதுவிதியேநினை
யீட்டுமதுநிடமெண்ணுமாமே. (௩) ஆ. ௱௪௭.



### கலவுசெலவு.

கேவலந்தன்னிற்கலவச்சகலத்தின்
மேவுஞ்செலவுவிடவருநீக்கத்துப்
பாவுந்தனைக்காண்டன் மூன்றாம்படர்வற்று
தீதறுசாக்கிராதீதத்திற்சுத்தமே. (௧)

வெல்லுமளவில்விடுமின்வெகுளியைச்
செல்லுமளவுஞ்செலுத்துமின்சிந்தையை
யல்லும்பகலுமருளுடன்றூங்கினாற்
கல்லும்பிளந்துகடுவெளியாமே. (௨) ஆ௱அ௨.

---

### நிர்மலாவத்தை.

ஊமைக்கிணற்றகத்துள்ளேயுறைவதோ
ராமையினுள்ளேயழுவைகளைந்துள
வாய்மையினுள்ளேவழுவாதொடுங்குமே
லாமையின்மேலுமோராயிரத்தாண்டே. (௧)

காலங்கிநீர்பூக்கலந்தவாகாய
மாலங்கியீசன்பிரமன்சதாசிவன்
மேலஞ்சுமோடிவிரவவல்லார்கட்குக்
காலனுமில்லைகருத்தில்லைதானே. (௨)

ஆன்மாவேமைந்தனாயினனென்பது
தான்மாமறையறைதன்மையறிகில
ரான்மாவேமைந்தனாருக்கியனென்ற
லான்மாவுமில்லைபாலையந்துமில்லையே (௩)

உதயமழுங்கலொடுங்கலிம்மூன்றின்
கதிசாக்கிரங்கனவாதிசுழுத்தி
பதிதருசேதனன்பற்றுந்துரியத்
ததிசுபனுயனைந்தானந்தியாகுமே. (௪)

எல்லாந்தன்னுட்புகயாவுளுந்தானாகி
நல்லாந்துரியம்புரிந்தக்கானல்லுயிர்
பொல்லாதவாறுறுட்போகாதுபோதமாய்ச்
செல்லாச்சிவகதிசென்றெய்துமன்றே. (௫)

காய்ந்தவிரும்புகனலையகன்றாலும்
வாய்ந்தகனலெனவாதனைநின்றப்போ
லேய்ந்தகரணமிறந்ததுரியத்துத்
தோய்ந்தகருமத்துரிசகலாதே. (௬)

ஆனமறையாதியாமுருநந்திவந்
தேனையருள்செய்தெரிசனவத்தையி
லானவகையைவிடுமடைத்தாய்விட
வானமலாதீதமப்பரந்தானே. (௭)

சுத்தவதீதஞ்சகலத்திற்றோய்வுறி
லத்தனருணீங்காவாங்கணிற்றானாகச்
சித்தச்சுகத்தைத்தீண்டாச்சமாதிசெய்
தத்தனோடொன்றற்கருண்முதலாமே. (௮)

வேறுசெய்தானிருபாதியின்மெய்த்தொகை
வேறுசெய்தானென்னையெங்கணும்விட்டுய்த்தான்
வேறுசெய்யாவருட்கேவலத்தேவிட்டு
வேறுசெய்யாவத்தன்மேவிநின்றானே. (௯)

காரங்கோலை கொள்ளிவட்டங்கடலித்
திரைநிறஞ்சேர்மத்தின்மலத்தினினின்ற
திரங்காண்சுவர்க்கநரகம்புவிசேர்ந்
திரங்காவுயிரருளாலிவைநீங்குமே. (௰)

தானேசிவமானதன்மைதலைப்பட
வானமலமுமப்பாசபேதமு
மானகுணமும்பரான்மாவுபாதியும்
பானுவின்முன்னர்மதிபோற்படராவே (௰௧)

நெருப்புண்டுநீருண்டுவாயுவுமுண்டங்
கருக்கனுஞ்சோமனுமங்கேயமருந்
திருத்தக்கயானுந்திசைமுகன்றானு
முருத்திரசோதியுமுள்ளத்துளாரோ. (௰௨)

ஆனைகளைந்துமடக்கியறிவென்னு
ஞானத்திரியைக்கொளுவியதனுள்புக்
கூனையிருளறநோக்குமொருவற்கு
வானகமேறவழியெளிதாமே. (௰௩)

ஆடியகாலிலசைக்கின்றவாயுவுந்
தாடித்தெழுந்ததமருகவோசையும்
பாடிபெடுகின்றவேதாகமங்களு
நாடியினுள்ளாகநான்கண்டவாறே. (௰௪)

முன்னையறிவினிற்செய்தமுறைதவம்
பின்னையறிவினைப்பெற்றாலறியலாந்
தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவதுபேயறிவாகுமே, (௰௫)

செயலற்றிருக்கச்சிவானந்தமாகுஞ்
செயலற்றிருப்பார்சிவயோகந்தேடார்
செயலற்றிருப்பார்செகத்தோடுங்கூடார்
செயலற்றிருப்பார்க்கேசெய்தியுண்டாகுமே. (௰௬)

தானவனாகுஞ்சமாதிகைகூடினா
லானமலமறுமப்பசுத்தன்மைபோ
மீனமில்காயமிருக்குமிருநிலத்
தூனங்களெட்டுமொழிந்தொன்றுவோர்கட்கே. (௰௭)

தொலையாவரனடிதோன்றுமஞ்சத்தி
தொலையாவிருளொளிதோற்றவணுவுந்
தொலையாத்தொழின்ஞானந்தொன்மையினண்ணித்
தொலையாதபெத்தமுத்திக்கிடைதோயுமே. (௰௮)

தோன்றியபெத்தமுமுத்தியுஞ்சூழ்சத்தி
மான்றுந்தெருண்டுமுயிர்பெறுமற்றவை
தான்றருஞானந்தன்சத்திக்குச்சாதனா
மூன்றலிவில்லாவுள்ளொளிக்கொளியாமே. (௰௯)

அறிகின்றிலாதானவையெழுமொன்று
மறிகின்றவென்னையறியாதிருந்தே
னறிகின்றாய்நீயென்றருள்செய்தானந்தி
யறிகின்றநானென்றறிந்துகொண்டேனே (௨௰)

தானவனாகியஞானத்தலைவனை
வானவராதியைமாமணிச்சோதியை
யீனமில்ஞானத்தினருட்சத்தியை
யூனமிலாடன்னையூனிடைக்கண்டதே. (௨௧)

ஒளியுமிருளும்பரையும்பரையுள்
ளியதெனலாகுமான்மாவையன்றி
யளியுமருளுந்தெருளுங்கடந்து
தெளியவரும்சிவானந்தமாகுமே. (௨௨)

ஆனந்தமாகுமரனருட்சத்தியிற்
றானந்தமாமுயிர்தானேசமாதிசெய்
யானந்தமாயுணர்வாயுள்ளுணர்வுறிற்
றூனந்தவாய்க்குமகாவாக்கியமாமே, (௨௩)

அறிவிக்கவேண்டாமறிவற்றயர்வோர்க்கு
மறிவிக்கவேண்டாமறிவிற்செறிவோர்க்கு
மறிவுற்றறியாமையெய்திநிற்போர்க்கே
யறிவிக்கத்தம்மறிவாரறிவோரே. (௨௪)

சத்தமசத்துஞ்சதசத்துந்தான்கூடிச்
சித்தமசித்துஞ்சிவசித்ததாய்நிற்குஞ்
சுத்தமசுத்தந்துடங்காத்துரியத்துச்
சுத்தராமூன்றுடன்சொல்லற்றவர்களே. (௨௫)

தானேயறியானறிவிலோன்றானல்லன்
றானேயறிவானறிவுசதசத்தென்
றானேயிரண்டுமரனருளாற்றிற்சத்
தானேயறிந்துசிவத்துடன்றங்குமே. (௨௬)

தத்துவஞானந்தலைப்பட்டவர்கட்கே
தத்துவஞானந்தலைப்படலாய்நிற்குந்
தத்துவஞானத்துத்தானவனாகவே
தத்துவஞானானந்தந்தான்றொடங்குமே. (௨௭)

தன்னையறிந்துசிவனுடன்றனாக
மன்னுமலங்குணமாளும்பிறப்பறும்
பின்னதுசன்முத்திசண்மார்க்கப்பேரொளி
நன்னத்ஞானத்துமுத்திரைநண்ணுமே. (௨௮)

ஞானந்தன்மேனிகிரியைநடுவங்கத்
தானுறுமிச்சையுயிராகத்தற்பரன்
மேனிகொண்டைங்கருமத்துவித்தாதலான்
மோனிகண்ஞானத்துமுத்திரைபெற்றார்களே. (௨௯)

உயிர்க்கறிவுண்மையுயிரிச்சைமான
முயிர்க்குக்கிரியையுயிர்மாயைசூக்க
முயிர்க்கிவையூட்டுமேவானூட்டுமவனே
யுயிர்ச்செயலன்றியவ்வுள்ளத்துளானே. (௩௰)

தொழிலிச்சைஞானங்கடொல்சிவசீவர்
கழிவற்றமாமாயைமாயையினாகும்
பழியற்றகாரணகாரியம்பாழ்விட்
டழிவற்றசாந்தாதீதன்சிவனாமே. (௩௧)

இல்லதுமுள்ளதுமியாவையுந்தானாகி
யில்லதுமுள்ளதுமாயன்றுடண்ணலைச்
சொல்லதுசொல்லிடிற்றூராதிதூரமென்
றெல்லையுணர்ந்தானுயிர்க்குயிராகுமே. (௩௨)

உயிரிச்சையூட்டியுழிதருஞ்சத்தி
யுயிரிச்சைவாட்டியொழித்திடுஞான
முயிரிச்சையூட்டியுடனாதலாலே
யுயிரிச்சைவாட்டியுயர்பதஞ்சேருமே. (௩௩)

சேருஞ்சிவமானாரைம்மலந்தீர்ந்தவ
ரோரொன்றிலாரைம்மலவிருளுற்றவர்
பாரின்கண்விண்ணரகம்புகும்பான்மையா
ராருங்கண்டோராரலவ்வயருளென்றே (௫௪)

எய்தினர்செய்யுமிருமாயாசத்தியி
னெய்தினர்செய்யுமிருஞானசத்தியி
னெய்தினர்செய்யுமிருஞாலசத்தியி
னெய்தினர்செய்யுமிறையருடானே. (௫௫)

திருந்தனர்விட்டார்திருவினரகந்
திருந்தனர்விட்டார்திருவார்சுவர்க்கந்
திருந்தனர்விட்டார்செறிமலக்கூட்டந்
திருந்தனர்விட்டார்சிவமாயவமே. (௫௬)

அவமுஞ்சிவமுமறியாரறியா
ரவமுஞ்சிவமுமறிவாரறிவா
ரவமுஞ்சிவமுமருளாலறிந்தா
லவமுஞ்சிவமுமவனருளாமே. (௫௭)

அருளானசத்தியனல்வெம்மைபோலப்
பொருளவனாகத்தான்போதம்புணரு
மிருளொளியாய்மீண்டுமும்மலமாகுந்
திருவருளாநந்திசெம்பொருளாமே. (௫௮)

ஆதித்தன்றோன்றவரும்பதுமாதிகள்
பேதித்தவவ்வினையாற்செயல்சேதிப்ப
வாதித்தன்றன்கதிராலவைசேட்டிப்பப்
பேதித்தப்பேதியாவாறருட்பேதமே. (௫௯)

பேதமபேதம்பிறழ்பேதாபேதமும்
போதும்புணர்போதம்போதமுநாதமு
நாதமுடனாதநாதாதிநாதமு
மாதனருளினருளிச்சையாமே. (௪௰)

மேவியபொய்க்கரியாட்டும்வினையென்னப்
பாவியபூதங்கொண்டாட்டிப்படைப்பாதி
பூவியல்கூட்டித்தற்போதப்புரிந்தரு
ளாவியைநாட்டுமரனருளாமே. (௪௧)

ஆறாறகன்றதனையறிந்தானவ
னீறாகியாவினுமியாவுந்தனிலெய்த
வேறாய்வெளிபுக்குவீடுற்றதப்மரு
டேறுத்தெளிவுற்றுத்தீண்டச்சிவமாமே. (௪௨)

தீண்டற்கரியதிருவடிநேயத்தை
மீண்டுற்றருளால்விதிவழியேசென்று
தூண்டிச்சிவஞானமாவினைத்தானேபித்
தாண்டிச்சிவனுடன்சாரலுமாமே. (௪௩)

சார்ந்தவர்சாரணர்சித்தர்சமாதியர்
சார்ந்தவர்மெய்ஞ்ஞானதத்துவசத்தியர்
சார்ந்தவர்நேயந்தலைப்பட்டவானந்தர்
சார்ந்தவர்சத்தவருட்டன்மையாரே. (௪௪)

தானென்றவனென்றிரண்டென்பர்தத்துவந்
தானென்றவனென்றிரண்டற்றதன்மையைத்
தானென்றிரண்டுன்னார்கேவலத்தானவர்
தானின்றித்தானாகத்தத்துவசுத்தமே. (௪௫)

தன்னினிற்றன்னையறியுந்தலைமகன்
றன்னினிற்றன்னையறியத்தலைப்படுந்
தன்னினிற்றன்னைச்சார்கிலனாகிற்
றன்னினிற்றன்னையுஞ்சார்தற்கரியவே. (௪௬)

அறிபகிலேயென்றரற்றுமதேநீயு
நெறிவழியேசென்றுநேர்பட்டபின்னை
யிருசுடராகியியற்றவல்லானு
மொருசுடராவந்தென்னுள்ளத்துள்ளானே. (௪௭)

மண்ணொன்றுதான்பலநற்கலனாயிடு
முன்னனின்றயோனிகட்கெல்லாமொருவனே
கண்ணொன்றுதான்பலகாணுந்தனைக்காணா
வண்ணலுமவ்வண்ணமாகிநின்றானே. (௪௮)

தும்புகின்றேனுலகேழையுமுன்னின்று
கூம்புகின்றார்துணைத்தின்னொடுங்கூறுவர்
தேம்புகின்றார்சிவஞ்சிந்தைசெய்யாதவர்
கூம்பலிலார்வந்துகொள்ளலுமாமே. (௪௯)

குறியறிவார்கள்குறிகாணமாட்டார்
குறியறியார்கடங்கூடல்பெரிது
குறியறியாவகைகூடுமின்கூடி
யறிவறியாவிருந்தன்னமுமாமே. (௫௰)

ஊனேயுயிரோவுறுகின்றதேதின்பம்
வானோர்தலைவியமயக்கத்துறநிற்கத்
தானேபெரிதறிவோமென்றுமானிடர்
தானேபிறப்போடிறப்பறியாரோ. (௫௧) ஆ உ௬௬.

## அறிவுதயம்.

தன்னையறியத்தனக்கொருகேடில்லை
தன்னையறியாமற்றானேகெடுகின்றான்
றன்னையறியுமறிவையறிந்தபின்
றன்னையேயர்ச்சிக்கத்தானிருந்தானே. (௧)

அங்கேயடற்பெருந்தேவரெல்லாந்தொழச்
சிங்காசனத்தேசிவனிருந்தானென்று
சங்கார்வீணையுஞ்சிலம்புஞ்சரோலெனப்
பொங்கார்குழலியும்போற்றியென்றாளே. (௨)

அறிவுவடிவென்றறியாதவென்னை
யறிவுவடிவென்றருள்செய்தானந்தி
யறிவுவடிவென்றருளாலறிந்தே
யறிவுவடிவென்றறிந்திருந்தேனே. (௩)

அறிவுக்கழிவில்லையாக்கமுமில்லை
யறிவுக்கறிவல்லதாதாரமில்லை
யறிவேயறிவையறிகின்றதென்றிட்
டறைகின்றனமறையீறுகடாமே. (௪)

ஆயுமலரினணிமலர்தன்மேலே
பாயவிதழ்கள்பதினாறுமங்குள
தூயவறிவுசிவானந்தமாகியே
போயவறிவாய்ப்புணர்ந்திருந்தானே. (௫)

மன்னிநின்றாரிடைவந்தருண்மாயத்தி
முன்னிநின்றானைமொழிந்தேன்முதல்வனும்

பொன்னின்வத்தானோர்புகழ்திருமேனியைப்
பின்னிநின்றேனிபெரிமையென்றானே. (௬)

அறிவறிவாகவறிந்தன்புசெய்மி
னறிவறிவாகவறிவுமிவ்வண்ண
மறிவறிவாகவணிமாதிசித்தி
யறிவறிவாகவறிந்தனனந்தியே. (௭)

அறிவறிவென்றங்காற்றுமுலக
மறிவறியாமையாருமறியா
ரறிவறியாமைகடந்தறிவானா
லறிவறியாமையழகியவாறே. (௮)

அறிவறியாமையைநீவிபவனே
பொறிவாயொழிந்தெங்குந்தானானபோது
வறிவாயவற்றினுட்டானாயறிவின்
செறிவாகிநின்றவன்சிவனுமாமே. (௯)

அறிவுடையார்நெஞ்சகலிடமாவ
தறிவுடையார்நெஞ்சருந்தவமாவ
தறிவுடையார்நெஞ்சொடாதிப்பிரானு
மறிவுடையார்நெஞ்சத்தங்குநின்றானே. (௰)

மாயனுமாகிமலரோனிறையுமாய்க்
காயநன்னாட்டுக்கருமுதலானவன்
சேயனணியன்றித்திக்குந்திங்கரும்
பாயமுதாகிநின்றண்ணிக்கின்றானே. (௰௧)

என்னையறிந்திலேனித்தனைகாலமு
மென்னையறிந்தபின்னேதுமறிந்திலே

னென்னையறிந்திட்டிருத்தலுங்கைவிடா
தென்னையிட்டென்னையுசாவுகின்றானே. (௰௨)

மாயவிளக்கதுநின்றுமறைந்திடுந்
தூயவிளக்கதுநின்றுசுடர்விடுங்
காயவிளக்கதுநின்றுகனன்றிடுஞ்
சேயவிளக்கினைத்தேடுகின்றேனே. (௰௩)

தேடுகின்றேன்றிசையெட்டோரிரண்டையு
நாடுகின்றேனலமேயுடையானடி
பாடுகின்றேன்பரமேதுணையாமென
கூடுகின்றேன்குறையாமனத்தாலே. (௰௪)

முன்னைமுதல்விளையாட்டத்துமுன்வந்தோர்
பின்னைப்பெருமலம்வந்தவர்பேர்த்திட்டுத்
தன்னைத்தெரிந்துதன்பண்டைத்தலைவன்றாள்,
மன்னிச்சிவமாகவாராப்பிறப்பே. (௰௫) கூ ௨௱௪௮.



ஆறந்தம்.

வேதத்தினந்தமுஞ்சித்தாந்தமு
நாதத்தினந்தமுநற்போதவந்தமு
மோதத்தகுமெட்டியோகாந்தவந்தமு
மாறிக்கலாந்தமுமாறந்தமாமே. (௧)

அந்தமோராறுமறிவாரதிசுத்த
ரந்தமோராறுமறிவாரமலத்த
ரந்தமோராறுமறியாரவர்தமக்
கந்தமோடாதியறியவொண்ணாதே. (௨)

தானானவேதாந்தந்தானெனுஞ்சித்தாந்த
மானாதுரியத்தணுவன்றனைக்கண்டு
தேனார்பராபரஞ்சேர்சிவபோகமா
யானுமலமற்றருஞ்சித்திபாதமே. (௩)

நித்தம்பரனோடுயிருற்றநின்மலஞ்
சத்தமுதலைந்தந்தத்துவத்தானீங்கிச்
சுத்தமசுத்தந்துடராவகையினந்
தத்தன்பரன்பாலடைதல்சித்தாந்தமே. (௪)
மேவும்பிரமனேவிண்டுவுருத்திரன்
மேவுமெய்யீசன்சதாசிவன்மிக்கப்பால்
மேவும்பரவிந்துநாதம்விடாவாறு
றோவும்பொழுதணுவொன்றுளதாகுமே. (௫)

உள்ளவுயிராறாறாகுமுபாதியைத்
தெள்ளிபகன்றநாதாந்தத்தைச்செற்றமே
லுள்ளவிருளிங்கவோருணர்வாகுமே
வெள்ளிறுநாந்தந்தெய்திடும்போதமே. (௬)
தேடியமதியமாதிசென்றகன்
றாடிஞ்சமாதியிலுற்றாப்படர்சிவன்
பாடறச்சிவன்பரமாகப்பற்றறக்
கூடுமுபசாந்தம்யோகாந்தக்கொள்கையே. (௭)

கொள்கையிலானகலாந்தங்குறிக்கொள்ளில்
விள்கையிலானநிவிர்த்தாதிமேதாதித்
துள்ளவாய்விந்துவுள்ளொளிக்கநாத்
தெள்ளியநாதந்தெளிதலுமாமே. (௮)

தெளியுமிவையாஞ்சித்தேனாங்கலைவே
ஒளியுளமைந்தாளினோரவல்லார்கட்
களியவாறிலியபத்திரந்தந்திரந்
தெளிவுபதேசஞானத்தொடர்ந்தாமே. (௯)

ஆகுமனாதிகலையாகமவேத
மாகுமத்தந்திரமர்நால்வழிநிற்ற
லாகுமனாதியுடலல்லாமந்திர
மாகுஞ்சிவபோதகமுபதேசமே. (௰)

தேசாரிவமாகுதன்ஞானத்தின்கலை
யாசாரநேயமறையுங்கலாந்தத்துப்
பேசாவுணாயுணர்வற்றபெருந்தன்கை
வாசாமகோசரமாநந்திதானே. (௰௧)

தானவனாகுஞ்சமாதிதலைப்படி
லானகலாந்தநாதாந்தயோகாந்தமு
மேனையபோதாந்தஞ்சித்தாந்தமானது
ஞானமெனஞேயஞாதுருவாகுமே. (௰௨)

ஆறந்தமுஞ்சென்றடங்குமந்நேயத்தே
யாறந்தஞேயமடங்கிடுஞாதுரு
கூறியஞானக்குறியுடன்வீடவே
தேறியமோனஞ்சிவானந்தவுண்மையே. (௰௫)

உண்மைக்கலைபாறொளைந்தானடங்கிடு
முண்மைக்கலாந்தமிரண்டைந்தோடேழந்த
முண்மைக்கலையொன்றிலீறுயநாதாந்தத்
துண்மைக்கலைசொல்லவாரந்தமாமே. (௰௬)

ஆவுடையானையரன்வந்துகொண்டபின்
றேவுடையானெங்கள்சீர்நந்திதாடந்து
வீவறவேதாந்தசித்தாந்தமெய்ம்மையைக்
கூவியருளியகோனைக்கருதுமே. (௰௫)

கருதுமவர்தங்கருத்தினுக்கொப்ப
வரனுரைசெய்தருளாகமந்தன்னில்
வருசமயப்புறமாயைமாமாயை
புருவியவேதாந்தசித்தாந்தவுண்மையே. (௰௬)

வேதாந்தஞ்சித்தாந்தம்வேறிலாமுத்திரை
போதாந்தஞானம்யோகாந்தப்பொதுஞேய
நாதாந்தமானந்தஞ்சீரோதயமாகு
மூதாந்தமுத்திரைம்மானத்துமூழ்கவே. (௰௭)

வேதாந்தந்தன்னிலுபாதிமேலேழ்விட
நாதாந்தபாசம்விடநல்லதொம்பத
மீதாந்தகாரனுபாதியேழ்மெய்ப்பரன்
போதாந்ததற்பதம்போமசியென்பவே. (௰௮)

அண்டங்களேழுங்கடந்தகன்றப்பாலு
முண்டென்றபேரொளிக்குள்ளாமுளவொளி
பண்டுறுநின்றபராசத்தியென்னவே
கொண்டவனன்றிநின்றானெங்கள்கோவே. (௰௯)

கோவுணர்த்துஞ்சத்தியாலேகுறிவைத்து
தேவுணர்த்துங்கருமஞ்செய்திசெய்யவே,
பாவனைத்தும்படைத்தர்ச்சனைபாரிப்ப
வோவனைத்துண்டொழியாதவொருவனே. (௨௰)

ஒருவனையுன் றருயிர்தன்னையுன் று
ரிருவினையுன் றரிருமாயையுன் று
ரொருவனுமேயுள் ளுணர்த்திநின் றூட்டி
யருவனுமாகியவாதாரத்தானே. (௨௧)

அரனன்பர்தானமதாகிச்சிவந் து
வருமவைசத்திகண்முன் னவருத்திட்
டிர னுறுசந்நிதிசேட் டிப்பவென் றுந்
திர னுறுதோயாச்சிவாநந்தியாகுமே. (௨௨)

வேதாந்தமெதாம்பதமேவும்பசுவென்ப
நாதாந்தபாசம்விடநின்றநன்பதி
போதாந்ததற்பதம்போயிரண்டயிக்கியஞ்
சாதாரணஞ்சிவசாயுச்சியமாமே. (௨௩)

சிவமானவேதாந்தசித்தாந்தமாகு
மவமவமாகுமவ்வவ்விரண்டுஞ்
சிவமாஞ்சதாசிவன்செய்தொன் றூனூ
னவமானவேதாந்தஞானசித்தாந்தமே. (௨௪)

சித்தாந்தத்தேசீவன் முத்திசித்தித்தலாற்
சித்தாந்தத்தேநிற்போர்முத்திசித்தித்தவர்
சித்தாந்தவேதாந்தஞ்செம்பொருளாதலாற்
சித்தாந்தவேதாந்தங்காட்டுஞ்சிவனையே. (௨௫)

சிவனைப்பரமனுட்சீவனுட்காட்டு
மவமற்றவேதாந்தசித்தாந்தமானு
னவமுற்றவத்தையின்ஞானஞ்சிவமாந்
தவமிக்குணர்ந்தவர்தத் துவத்தாரே. (௨௬)

தத்துவமாகுஞ்சகலவகளங்க
டத்துவமாம்விந்துநாதஞ்சதாசிவந்
தத்துவமாகுஞ்சிவன்றற்பரந்
தத்துவமாஞ்சிவசாயுச்சியமே. (௨௭)

வேதமோடாகமமெய்யாமிறைவனூ
லோதுஞ்சிறப்பும்பொதுவுமென்றுள்ளன
நாதனுரையவைநாடிலிரண்டந்தம்
பேதமதென்பர்பெரியோர்க்கபேதமே. (௨௮)

பரானந்தமென்றுஞ்சிவானந்தமெல்லாம்
பரானந்தமேன்மூன்றும்பாழுறுவானந்தம்
விராமுத்திரானந்தமென்னடனானந்தம்
பொராநின்றவுள்ளமேபூரிப்பியாமே. (௨௯)

ஆறுங்கலாந்தமிரண்டந்தநாதாந்த
மாறும்பொழுதிற்கலையந்தாமாதலி
லாகுமரனேபஞ்சாந்தகனுமென்ன
வாகுமறைபாகமமொழிந்தானன்றே. (௩௰)

அன்றுமென்றுனைதவகையந்தந்தன்னை
யொன்றுனவேதாந்தசித்தாந்தமுள்ளிட்டு
நின்றுவியோகாந்தநேர்படுநேர்பட்டான்
மன்றுடிபாதமருவலுமாமே. (௩௧)

அறுதிசிவனைம்மலமற்றப்பால
யறுதியடங்கித்தனைக்கண்டரனெய்த்
தறுதிமலங்கெடத்தத்துவாதீதம்
விறுதிபாலாதல்வேதாந்தவுண்மையே. (௩௨)

உயிரைப்பரனையுயர்சிவன்றன்னை
யயாவற்றறிவேதாந்தத்தசியதனாற்
செயலற்றறிவாகியுஞ்சென்றடங்கி
யயர்வற்றவேதாந்தசித்தாந்தமாமே. (௫௩)

மன்னியசோகமாமாமறையாளர்தஞ்
சென்னியதானேசிவோகமாமீதென்ன
வன்னதுசித்தாந்தமாமறையாய்பொரு
டுன்னியவாகமநூலெனத்தோன்றுமே. (௫௪)

மூதலாகும்வேதமுழுதாகமமாகப்
பதியானவீசன்பகர்ந்ததிரண்டு
முதிதானவேதமுறைமுறையாலமர்ந்
ததிகாதிவேதாந்தசித்தாந்தமாகவே. (௫௫) ஆ உ௱௮௫

---

## பதிபசுபாசவேறின்மை.

அறிவறிவென்றவறிவுமனாதி
யறிவுக்கறிவாம்பதியுமனாதி
யறிவினைக்கட்டியபாசமனாதி
யறிவுபதியிற்பிறப்பறுந்தானே. (௧)

பசுப்பலகோடிபிரமன்முதலாய்ப்
பசுக்களைக்கட்டியபாசமூன்றுண்டு
பசுத்தன்மைநீக்கியப்பாசமறுத்தாற்
பசுக்கடலைவனைப்பற்றிவிடாவே. (௨)

கிடக்கின்றவாறேகிளர்பயன்மூன்று
நடக்கின்றஞானத்தைநாடோறுநோக்கித்

நடக்கொன்றமின்றித்தொழுமின்றொழுதாற்
குடக்குன்றிலிட்டவிளக்கதுவாமே. (௩)

பாசஞ்செய்தானைப்படர்சடைநந்தியை
நேசஞ்செய்தாங்கேநினைப்பர்நினைத்தலுங்
கூசஞ்செய்துன்னிக்குறிக்கொள்வதவ்வண்ணம்
வாசஞ்செய்பாசத்துள்வைக்கின்றவாறே. (௪)

விட்டவிடமேறுவாறுபோல்வேறாகி
விட்டபசுபாசமெய்கண்டோன்மேவுறுன்
கட்டியகேவலங்காணுஞ்சகலத்தைச்
சுட்டுநனவிலதீத்ததுட்டோன்றுமே. (௫)

நாடும்பதியுடனற்பசுபாசமு
நீடுமாநித்தனிலையறிவாரில்லை
நீடியநித்தம்பசுபாசநீக்கமு
நாடியசைவர்க்குநந்தியளித்ததே. (௬)

ஆயபதிதானருட்சிவலிங்கமா
மாயபசுவுமடலேறெனநிற்கு
மாயபெலிபீடமாகுநற்பாசமா
மாயவரனிலையாய்ந்துகொள்வார்கட்கே. (௭)

பதிபசுபாசம்பயில்வியாநித்தம்
பதிபசுபாசம்பகர்வோர்க்காறுக்கிப்
பதிபசுபாசத்தைப்பற்றறநீக்கும்
பதிபசுபாசம்பயிலறிலாவே. (௮)

பதியும்பசுவொடுபாசமுமேலைக்
கதியும்பசுபாசநீக்கமுங்காட்டி

மதிதந்தவானந்தமாநந்திகாணுந்
துதிதந்துவைத்தனன்சுத்தசைவத்திலே. (௯)

அறிந்தணுமூன்றுமேயாங்கணுமாகு
மறிந்தணுமூன்றுமேயாங்கணுமாகி
யறிந்தவணுதிவியாத்தனுமாகி
யறிந்தபதிபடைப்பானங்கவற்றையே. (௰)

படைப்பாதியாவதுபரஞ்சிவஞ்சத்தி
யிடைப்பாலுயிர்கட்கடைத்திவைதாங்கல்
படைப்பாதிசூக்கத்தைத்தற்பரஞ்செய்யப்
படைப்பாதிதூயமலமப்பரத்திலே. (௰க)

ஆகியசூக்கத்தையவ்விந்துநாதமு
மாகியசத்திசிவபரமேலந்தா
லாகியசூக்கத்திலங்கருமஞ்செய்வோ
ஞகியதூயவீசானனுமாமே. (௰உ)

மேவும்பரசிவமேற்சத்திநாதமு
மேவும்பரவிந்துவைம்முகன்வேறீசன்
மேவுமுருத்திரன்மால்வேதாமேதினி
யாகும்படிபடைப்போனரனுமே. (௰௩)

படைப்புமளிப்பும்பயிலிளைப்பாற்றுந்
துடைப்புமறைப்புமுன்றோன்றவருளுஞ்
சடத்தைவிடுத்தவருளுஞ்சகலத்
தடைத்தவணுதியையைந்தெனலாமே. (௰௪)

ஆறாறுகுண்டலிதன்னினகத்திட்டு
வேறாகுமாயையின்முப்பான்மிகுத்திட்டங்

திருங்கருவியிவர்ருல்வருத்திட்டு
வெருப்பதிபசுபாசம்விடாகுமே. (யரு)

வீட்டும்பதிபசுபாசமுமீதற
வாட்டுமிருவினையாங்கவற்றுணர்ந்
தாட்டுநரகசுவர்க்கத்திற்றுணிட்டு
நாட்டுறநால்நங்குநற்பாசநன்றுமே. (யசு)

நண்ணியபாசத்திருனேனலாணவம்
பண்ணியமாயையிலூட்டடற்பரிந்தனன்
கண்ணியசேதனகண்வந்தபேரரு
ளண்ணலடிசேருபாயமதாகுமே. (யஎ)

ஆகுமுபாயமேயன்றிபழுக்கற்று
யோகமறச்சுத்தனுதற்குமூலமே
யாகுமருவையழுக்கெற்றியெற்றல்போ
லாகுவதெல்லாமருட்பாசமாகுமே. (யஅ)

பாசம்பயிலுயிர்தானேபாமுதன்
பாசம்பயிலுயிர்தானேபசுவென்ப
பாசம்பயிலப்பதிபரமாதலாற்
பாசம்பயிலப்பதிபதியாகுமே. (யகூ)

அத்தத்திலுத்தாங்கேட்டவருந்தவ
ரத்தத்திலுத்தரமாகுமருண்மேனி
யத்தத்திலேயணையப்பிடித்தலு
மத்தத்திற்றம்மைமடைத்ததியன்றோ. (உய), ஆ-காஙு



## அடித்தலையறியுந்திறங்கூறல்.

காலுந்தலையுமறியார்கலதிகள்
காலந்தச்சத்தியருளென்பர்காரணம்
பாலொன்றுஞானமேபண்பார்தலையுயிர்
காலந்தஞானத்தைக்காட்டவீடாகுமே. (௧)

தலையடியாவதறியார்காயத்திற்
றலையடியுச்சியிலுள்ளதுமூலந்
தலையடியானவறிவையறிந்தோர்
தலையடியாகவேதானிருந்தாரே. (௨)

நின்றானிலமுழுதண்டமுமேலுற
வன்றாளசுரரமரருமுய்ந்திடப்
பின்றானுலகம்படைத்தவன்பேர்நந்தி
தன்றாளிணையென்றலைமிசையானதே. (௩)

சிந்தையினுள்ளேயெந்தைதிருவடி
சிந்தையுமெந்தைதிருவடிக்கீழது
வெந்தையுமென்னையறியகிலானாகி
லெந்தையையானுமறியகிலேனே. (௪)

பன்னாதபாரொளிக்கப்புறத்தப்பா
லென்னாயகனாரிசைந்தங்கிருந்திட
முன்னாவொளியுமுளாசெய்யாமந்திரஞ்
சொன்னான்கழலிணைசூடிநின்றேனே. (௫)

பதியதுதோற்றும்பதமதுவைம்மின்
மதியதுசெய்துமலர்ப்பதமோது

நதிபொதியுஞ்சடைநாரியோர்பாகன்
கதிசெயுங்காலங்கள்கண்டுகொளீரோ. (௬)

தரித்துநின்றானடிதன்னிடநெஞ்சிற்
றரித்துநின்றானமராபதிநாதன்
கரித்துநின்றான்கருநாதவர்சிந்தை
பரித்துநின்றானப்பரிபாகத்தானே. (௭)

ஒன்றுண்டுதாமரையொண்மலர்மூன்றுள
நன்றதைதாளுமிரண்டுளகாயத்து
னன்றகக்காச்சிப்பதஞ்செயவல்லார்கட்
கின்றேசென்றீசனையெய்தலுமாமே. (௮)

கால்கொண்டுடன்சென்னியிற்கட்டறக்கட்டற
மால்கொண்டநெஞ்சின்மயக்கிற்றுயக்கறப்
பால்கொண்டவென்னைப்பரன்கொள்ளச்சாடினான்
மேல்கொண்டுடன்செம்மைவிளம்பவொண்ணாதே()

பெற்றபுதல்வர்போற்பேணியநாற்றமுங்
குற்றமுங்கண்டுகுணங்குறைசெய்யவோர்
பற்றையவீசனுயிரதுபான்மைக்குச்
செற்றமிலாச்செய்கைக்கெய்தினசெய்யுமே. (௰)

ஆ ௲௭௱௰௯.

## முக்குற்றம்.

மூன்றுளகுற்றமுமுழுதநலிவன
மான்றிருடுங்கிமயங்கிக்கிடந்தன

மூன்றினை நீங்கியேநீங்கினர் நீங்காதார்
மூன்றினுட்பட்டுமுடிநின்றவாறே. (க)

காமம்வெகுளிமயக்கமிவைகடிந்
தேமம்பிடித்திருந்தேனுக்கெரிமணி
யோமெனுமோசையினுள்ளேயுறைவதோர்
தாமமதனைத்தலைப்பட்டவாறே. (உ) ஆ காயஞ்

---

## முப்பதம்.

தோன்றியதொம்பதந்தற்பதஞ்சூழ்தர
வேன்றவசிபதமிம்மூன்றுடெய்தினோ
ருன்றபராபரமாகும்பிறப்பற
வேன்றனன்மாளச்சிவமாயிருக்குமே. (க)

போதந்தனையுன்னிப்பூதாதிபேதமு
மோதுங்கருவிதொண்ணூறுடனாறு
பேதமுறாதாந்தப்பெற்றியிற்கைவிட்டு
வேதஞ்சொல்தொம்பதமாகுதன்மெய்மையே. (உ)

தற்பதமென்றுந்துவம்பதந்தானென்று
நிற்பதசியத்துணேரிழையாள்பதஞ்
சொற்பதத்தாலுந்தொடரவொண்ணான்சிவன்
கற்பனையின்றிக்கலந்துநின்றானே. (ரு)

அணுவும்பரமுமசிபதத்தேய்ந்து
கணுவொன்றிலாதசிவமுங்கலந்தா
லிணையறுபாஸ்தேனமுதெனவின்பத்
துணையறுவாயுளாயத்திடத்தோன்றுமே, (௬)

தொம்பதந்தற்பதந்தோன்றுமசிபத
நம்பியசிவன்பாஞ்சிவனாய்நிற்கு
மம்பதமேலைச்சொரூபமாவாக்கியஞ்
செம்பொருளாண்டருள்சீர்நந்திதானே. (௫)

ஐம்பதநியாதவருமவர்சில
ரும்பனைநாடியுணாமுப்பதத்திடைச்
செம்பரமாகியவாசிசெலுத்திடத்
தம்பரயோகமாய்தானவனாகுமே, (௬)

நந்திபரிவுநழுவிலதிதமா
மிந்தியஞ்சத்தாதிவிடவியலாகு
நந்தியமூன்றிரண்டொன்றநலமைந்த
நந்தினாவாதிமூட்டுமனாதியே. (எ)

பரதுரியத்துநனவுபடியுண்ட
விரிவிற்கனவுமிதனுபசாந்தத்
துரியசுழுனையுமோவுஞ்சிவன்பா
லரியதுரியமசிபதமாமே (அ) ஆ காஉ௯.

முப்பரம்.

தோன்றியென்னுள்ளேசுழன்றெழுகின்றதோர்
மூன்றுபடிமண்டலத்துமுதல்வனை
யேன்றெட்டியின்புற்றிருந்தேயிளங்கொடி
நான்றுநலஞ்செய்நலத்தருமாறே. (க)

மன்றுநிறைந்ததுமாபரமாயது
நின்றுநிறைந்ததுநேர்தருநந்தியுங்

கலாநிறைந்திடுமூடாயெனவந்தபின்
குலாமதிநிறைந்தகுணவிளக்காகுமே. (௨)

திருமுதத்துவத்தப்புறத்தப்பரஞ்
சொரூபம்தசங்கூடிற்சிவபரம்
வருயிர்வெளிப்பட்டவேதப்பகவனார்
பேருகவானந்தப்பேறும்பெருகவே (௩)

பற்றறப்பற்றிற்பரம்பதியாவது
பற்றறப்பற்றிற்பரன்றிவேபரம்
பற்றறப்பற்றினிற்பற்றவல்லோர்கட்கே
பற்றறப்பற்றிற்பரம்பரமாமே. (௪)

பரம்பரமானபதிபாசம்பற்றுப்
பரம்பரமாகும்பரஞ்சிவமேவப்
பரமபரமானபரசிவானந்தம்
பரமபரமாகப்படைப்பதறிவே. (௫)

நனவிற்கலாதியாநாலொன்றகன்று
தனியுற்றகேவலந்தன்னிற்றானாகி
நினைவுற்றகன்றவதீதத்துணையந்
தனையுற்றிடத்தானேதற்பரமாமே. (௬)

தற்கண்டதூயமுந்தன்னில்விலாசமும்
பிற்காணுந்தூடணந்தானும்பிறழ்வுற்றுத்
தற்பரன்காலபரமுங்கலந்தற்ற
தற்பராதீதமுநாடகராதியே. (௭) ஆ ௩௫௩௰.

## பரலட்சணம்.

அதீதத்துளாகியகன்றவனந்தி
யதீதத்துளாகியறிவிலோனான்மா
மதிபெற்றிருள்விட்டமலனாயொன்றும்
பதியிற்பதியும்பரவுயிர்தானே. (௧)

ஆதியுமந்தமுமில்லாவரும்பர
ஞ்சோதிப்பரஞ்சுடர்தோன்றத்தோன்றாமையி
னீதியதாய்நிற்குநீடியவப்பரம்
போதமுணர்ந்தவர்புண்ணியத்தோர்களே. (௨)

துரியங்கடந்துதுரியாதீதத்தே
யரியவியோகங்கொண்டம்பலத்தாடும்
பெரியபிரானைப்பிரணவக்கூபத்தே
துரியவல்லார்க்குத்துரிசில்லைதானே. (௩)

செம்மைமுன்னிற்பச்சுவேதந்திரிவபோ
லம்மெய்ப்பரத்தோடணுவனுள்ளாயிடப்
பொய்ம்மைச்சகமுண்டபோதவெறும்பாழிற்
செம்மைச்சிவமேருசேர்கொடியாகுமே. (௪)

வைச்சகலாதிவருதத்துவங்கெட
வெச்சவிருமாயைவேறாகவேறுத்
துச்சபராசிவமாமுண்மையொன்றவே
யச்சமறுத்தென்னையாண்டனனந்தியே, (௫)

என்னையறியவிசைவித்தவென்னந்தி
யென்னையறிந்தறியாதவிடத்துய்த்துப்

பின்னையொளியிற்சொரு கிப்புறப்பட்டுத்
தன்னையளித்தான்றற்பரமாகவே (௬)

பரந்துஞ்சுருங்கியும்பார்புனல்வாயு
நிரந்தவளியொடுஞாயிறுதிங்க
ளரந்தவரனெறியாயதுவாகித்
தரந்தவிசும்பொன்றுதாங்கிநின்றனே (எ)

சத்திநிலையினிற்றுனசத்தியுந்
தற்பரையாய்நிற்குந்தானும்பரற்குட
லுய்த்தகுமிச்சையின்ஞானாதிபேதமாய்
நித்தநடத்துநடிக்குமாநேயத்தே. (அ)

மேலொடுகீழ்பக்கமெய்வாய்கண்ணுசிகள்
பாலியவிந்துபரையுட்பரையாகக்
கோலியநான்கவைஞானங்குணர்விந்து
சீலமிலாவனுச்செய்தியதாமே. (௯)

வேறுமதன்றன்மைபோலுமிக்காயத்தி
லாறுமுபாதியனைத்தாகுந்தத்துவம்
பேறும்பரவொளிதூண்டும்பிரகாசமா
யூறுயுயிர்த்துண்டுறங்கிடுமாயையே. (௰)

தற்பரமன்னுந்தனிமுதற்பேரொளி
சிற்பரந்தானேசெகமுண்ணும்போதமுந்
தொற்பதந்தீர்பாழிற்சுந்தரச்சோதிபுக்
கப்புறமற்றதிங்கொப்பில்லைதானே. (௰௧)

பண்டைமறைகள்பரவானுடலெல்லாந்
துண்டமதியோன்றுரியாதீதந்தலைக்

நாதாந்தவந்தையிசைமுத்துரியத்து
வேதாந்தமாகநெறிவழிமேயசென்று
பாரந்தமானபராபரத்தயிக்கியத்
தோரந்தமாயிருபாதியைச்சேர்த்திட்டே. (௬)

தொட்டேயிருமின்றுரியநிலத்தினை
யெட்டாதெனினின்றெட்டுமிறைவனைப்
பட்டாங்கறிந்திடிற்பன்னுவதுடீகள்
தட்டாதொழிவதோர்தத்துவந்தானே. (௭)

அறிவாயசத்தெனுமாறுறநன்று
செறிவாயமாயைசிதைத்தருளாலே
பிறியாதபேரருளாயிடும்பெ...
நெறியானவன்பர்நிலையந்தா... (௮)

நனவினனவாதிநாலாந்துரியத்
தனதுயிர்தொம்பதமாமாறுபோல
வினையறுசீவனனவாதியாசத்
தனையபரதுரியத்தற்பதமே. (௯)

தொம்பதந்தற்பதஞ்சொன்முத்துரியம்போ
லம்பியமூன்றுந்துரியத்துநற்றும
மம்புவியுன்னுவதிருக்கமப்பாலைச்
செம்பொருளாண்டருள்சீர்நந்திதானே. () ௮௱௬௨.



முப்முத்தி.

சீவன்றன்முத்தியதீதம்பரமுத்தி
யோயுபசாந்தஞ்சிவமுத்தியானந்த

மூவயின்முச்சொருபமுத்திமுப்பாலதா
மேயாவுறுதாரத்திலுள்ளுநாதாந்தமே. (௧)

ஆவதறியாருயிர்பிறப்பாலுறு
மாவதறியுமுயிரருட்பாலுறு
மேவியேதோன்றில்லையகப்புறத்தென்றகன்
சிவனுடனொன்றுதன்முத்தியே. (௨)

சிவமா.
தவமானம்மலமுக்குணஞ்செற்றுத்
தவமாகியமுந்திநத்துவத்தயிக்கியத்
சிவமாமமலன்சோகமெல்போர்க்குச்
சேர்ந்ததுதானே. (௩)

சித்தியுமுத்தியுந்திண்சிவமாகிய
சுத்தியுமுத்திதொலைக்குஞ்சுகானந்த
சத்தியுமேலைச்சமாதியுமாயிடும்
பெத்தமறுத்தபெரும்பெருமானே. (௪) ஆக திருகூ

முச்சொரூபம்.

ஏறியவாறேமலமைந்திடையடைத்
தாறியஞானச்சிவோகமடைந்திட்டு
வேறுமெனமுச்சொருபத்துவிட்டுறந்
தேறிற்பண்டைப்பரனுண்மைசெய்யுமே. (௧)

மூன்றுளமாளிகைமூவரிருப்பிட
மூன்றினின்முப்பத்தாறுமுதிப்புள
மூன்றினிலுள்ளேமுளைத்தெழுஞ்சோதியைக்
காண்டலுங்காயக்கணக்கற்றவாறே. (௨)

உலகம்புடைபெயர்ந்தாழியும்போன
திலவுசுடரொளிமூன்றுமொன்றாய
பலவும்பரிசொடுபான்மையுள்ளீச
னளவும்பெருமையுமாரறிவாரே. (௫)

பெருவாய்முதலெண்ணும்பேதமேபேதித்
தருவாயுருவாயருவுருவாகிக்
குருவாய்வருஞ்சத்திகோனுயிர்ப்பன்மை
யுருவாயுடனிருந்தொன்றாயன்றாமே. (௬)

மணியொளிசோபையிலக்கணம்வாய்த்து
மணியெனலாய்நின்றவாறதுபோலத்
தணிமுச்சொருபாதிசத்தியாதிசாரப்
பணிவித்தபேர்நந்திபாதம்பற்றாயே. (௭)

கல்லொளிமாநிறஞ்சோபைக்கதிர்தட்ட
நல்லமணியொன்றிடையொண்முப்பதஞ்
சொல்லறுமுப்பாழிற்சொல்லறுபேருணர்த்
தல்லறுமுத்திராந்தத்தனுபூதியே. (௮)

உடந்தசெந்தாமரையுள்ளுறுசோதி
நடந்தசெந்தாமரைநாதந்தகைந்தா
லடைந்தபயோதரியட்டியடைத்தவ்
விடந்தருவாசலைமேல்திறவீரே. (௯) ஆக ௫௮௫.

---

முக்கரணம்.

இடனொருமூன்றிலியைந்தவொருவன்
கடனுறுமவ்வுருவேறெனக்காணுந்

திடமதுபோலச்சிவபரசிவ
ருடனுறைபேதமுமொன்றெனலாமே. (௭

ஒளியையொளிசெய்துமேவாமெய்ந்நெறியூட்டி
வளியைவளிசெய்துவாய்த்திடவாங்கி
வெளியைவெளிசெய்துமேலெழவைத்துத்
தெளியத்தெளியுஞ்சிவபதந்தானே. (௮

முக்கரணங்களின்மூர்ச்சைதீர்த்தாவதக்
கைக்காரணமென்னத்தந்தனன்காணந்தி
மிக்கமன்றின்மணிமேவிறதனித்தேக
வொக்குமதன்மனியோதுட்சமாதியே. () ஆ

---

முச்சூனியம், தொந்தத்தசி.

தற்பதந்தொம்பதந்தானுமசிபதந்
தொற்பதமூன்றுந்துரியத்துத்தோற்றவே
நிற்பதுயிர்பரனிகழ்சிவமிம்மூன்றின்
சொற்பதமாகுந்தொந்தத்தசியே. (க

தொந்தத்தசிமூன்றிற்றொல்காமியமாதி
தொந்தத்தசிமூன்றிற்றொல்தாமதமாதி
வந்தமலங்குணமாளச்சிவந்தோன்றி
யிந்துவின்முன்னிருளேகுதலொக்குமே. (உ

தொந்தத்தசியையவ்வாசியிற்றேற்றியே
யுந்தமுறைபிணைந்தாகமேதித்திட்டு
வந்தமிலாதவவத்தையவ்வாக்கியத்
தந்தமுறையிற்செயமுன்வைத்தோதிடே. (௩

வைத்துச்சிவத்தைமதிசொருபானந்தத்
துய்த்துப்பிரணவமாமுபதேசத்தை
மெய்த்தவிதயத்துவிட்டிடுமெய்யுணர்ந்
தத்தற்கடிமையடைந்துநின்றானே. (௪)

தொம்பதமாயையுட்டோன்றிடுந்தற்பத
மம்பரைதன்னிலுதிக்குமசியத
நம்புறுசாந்தியிலைன்றுமவ்வாக்கிய
மும்பருரைதொந்தத்தசிவாசியாமே. (௫)

ஆகியவச்சோமன்றேய்வருதன்னிடத்
தாகியயவ்விட்டாகாயமுபாதான
மேகியதொந்தத்தசியென்பமெய்யறி
வாகியசீவன்பரசிவனாமே. (௬)

தாமதகாமியமாகித்தகுகுண
மாமலமூன்றுமகாரவுகாரத்தோ
டாமறும்மயவ்வுமவ்வாயுடன்மூன்றிற்
றாமாந்துரியமுந்தொந்தத்தசியவே. (௭) ஆ௲௱௭௪.

---

முப்பாழ்.

காரியமேழ்கண்டறுமாயப்பாழ்விடக்
காரணமேழ்கண்டறும்போதப்பாழ்விடக்
காரியகாரணவாதனைகண்டறுஞ்
சீருபசாந்தமுப்பாழ்விடத்தீருமே. (௧)

மாயப்பாழ்சீவன்வியோமப்பாழ்மன்பரன்
சேயமுப்பாழெனச்சிவசத்தியிற்சிவ

ருயவியாப்தமெனுமுப்பாழாமந்தத்
தாயசொரூபத்தன்சொன்முடிவாகுமே. (உ)

எதிரறநாளுமெருதுவந்தேறும்
பதியெனுநந்திபதமதுகூடக்
கதியெனப்பாழைக்கடந்தந்தக்கற்பனை
யுதறியபாழிலொடுங்குகின்றேனே. (௩)

துரியமடங்கியசொல்லறும்பாழை
யரியபரம்பரமென்பர்களாத
ரரியபரம்பரமென்றேதுதிக்கு
மருநிலமென்பதையாரறிவாரோ. (௪)

ஊருருநீங்கநமவாதியகன்றிட்டு
வேருகியபரையாவென்றுமெய்ப்பர
ளிருனவாசியிற்கூட்டுமதுவன்றோ
தேருச்சிவாயநமவெனத்தேறிலே. (௫)

உள்ளமுருவென்றுமுருவமுளமென்று
முள்ளப்பரிசறிந்தோருமவர்கட்கு
டள்ளமுமில்லைபுறமில்லைபாழில்லை
யுள்ளமுமில்லையுருவில்லைதானே. (௬) ஆ௩எ௬.

---

காரியகாரணவுபாதி.

செற்றிடுஞ்சீவவுபாதித்திறனேழும்
பற்றும்பரோபாதியேழும்பகருணா
பற்றிடுங்காரியகாரணத்தோட்டற
ச்சிடவச்சிவமோகுமருவனே. (க)

ஆறுறுகாரியோயாதியகல்திட்டு
வேறாய்நனவுமிருத்தகனநனு
வாறாகன்றசுழுத்தியதிலெய்தாப்
பேறாநிலத்துயிர்தொம்பதம்பேசிலே. (௨)

அகாரமுயிரேயுகாரம்பரமே
மகாரஞ்சிவமாய்வருமுப்பதத்தச்
சிகாரஞ்சிவமேவகாரம்பரமே
யகாரமுயிரொன்றநற்றயனுமாமே. (௩)

உயிர்க்குயிராகியொழிவற்றழிவற்
றயிர்ப்பறுகாரணோபாதிவிதிமோகத்
துயிர்ப்புறமீசனுபமிதத்தாலல்றி
வியர்ப்புறுமாணவம்விடல்செய்யாவே. (௪)

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தானே. (௫) ௨௨௭௫

உபசாந்தம்.

முத்திக்குவித்துமுதல்வன்றன் ஞானமே
பத்திக்குவித்துப்பணிந்துற்றுப்பற்றலே
சித்திக்குவித்துச்சிவபரந்தானுதல்
சத்திக்குவித்துத்தனதுபசாந்தமே. (௧)

காரியமேழுங்கரந்திடுமாயையுட்
காரணமேழுங்கரக்குங்கடுவெளி

காரியகாரணவாதனைப்பற்றறப்
பாரண்வும்முபசாந்தப்பரிசிதே. (௨)

அன்ன துரியமேயாத்துமசுத்தியுண்
முன்னியசாக்கிராதீதத் துறுபுரி
மன்னுபரங்காட்சியாவதுடனுற்றுத்
தன்னில்வியாத்திதனினுபசாந்தமே. (௩)

ஆறுமலமந்தாணவத்ததையுண்ணிங்குதற்
பேறானதல்லையறிதற்பின்றீர்சுத்தி
கூறுதசாக்கிராதீதங்குருபரன்
பேறுவியாத்தப்பிறழுபசாந்தமே. (௪)

வாய்ந்தவுபசாந்தவாதனையுள்ளப்போ
யேய்ந்தசிவமாதலின்சிவானந்தத்துத்
தோய்ந்தறல்மோனச்சுகானுபவத்தோடே
யாய்ந்ததிற்றீர்க்கையோனதீனாந்தமே. (௫)

பனாயிற்பரவபாத்துட்னேகமாய்த்
தினாயினில்றுகிப தெண்புனல்போலவுற்
றனாபுணர்ந்தாராமுமொச்சவுணர்ந்துளோன்
கனாகண்டானுனாயற்றகணக்கிலே. (௬) ஆ. ௬௧௰.

---

புறங்கூறாமை.

பிறையுட்கிடந்தமுயலையெறிவா
னறைமணிவாட்கொண்டவர்தமைப்போலக்
கறைமணிகண்டனைக்காண்குறமாட்டார்
நிறையறிவோமென்பர்நெஞ்சிலர்தாமே. (௧)

கருந்தாட்கருடன்விசும்பூடிறப்பக்
கருந்தாட்கயத்திற்கரும்பாம்புநீங்கப்
பெருந்தன்மைமேசுநீயொழிநெஞ்சே
யருந்தாவலேகடலாறுசெல்றுலே. (உ)

கருதலர்மாளக்கருவாயினின்ற
பொருதலைச்செய்வதுபுல்லறிவாண்மை
மருவலர்செய்கின்றமாதவனொத்தாற்
றருவலர்கேட்டதனியும்பராமே. (௩)

பிணங்கவும்வேண்டாம்பெருநிலமுற்று
மிணங்கியெம்மீசனையீசனென்றுன்னிற்
கணம்பதினெட்டுங்கழலடிகாண
வணங்கெழுநாடியங்கன்புறலாமே. (௪)

என்னினுமென்னுயிராயவிறைவனைப்
பொன்னினுமாமணியாயபுனிதனை
மின்னியவெவ்வுயிராயவிகிர்தனை
யுன்னினுமுன்னுமுறுவகையாலே. (௫)

நின்றுமிருந்துங்கிடந்துநிமலனை
யொன்றும்பொருள்களுணாப்பவராகிலும்
வென்றைப்புலனும்விரைத்துபிணக்கறுத்
தொன்றுயுணருமொருவனுமாமே. (௬)

நுண்ணறிவாயுலகாயுலகேழுக்கு
மெண்ணறிவாய்நிறையெந்தைபிரான்றன்னைப்
பண்ணறிவாளனைப்பாவித்தமாந்தரா
விண்ணறிவாளர்விரும்புகின்றாரே. (எ)

வில்லைவாராவுமறிவறியாய்றல்லைக்
கல்லறவுள்ளேகருதிடித்தாலயி
லெல்லாருறவாசரூப்போதமியற்றிநீ
டல்லவிடித்தன்மைபராபரனுமே. (அ)

ஒன்றுபுலகுடனேழும்பரந்தவன்
பின்றுனருஸ்செய்தபேரருளாளவன்
கன்றுமலத்தார்தங்கல்விபுணல்லவன்
பொன்றுதபோதுபுனைபுகழானே. (௯)

போற்றியென்றேனெந்தைபொன்னுணசேவடி
யேற்றியேசென்றுமெறிமலிதானகக்
காற்றின்விளக்கதுகோபமயக்குறு
மாற்றலுங்கெட்டதுமனேறுசய்யடேனே. (௰)

நேடிக்கொண்டென்றுள்ளேநேர்தருநந்தியை
நாடிப்புக்காருமுணர்ந்தறிவாரில்லை
கூடிப்புக்கேறலுற்றேனவன்கோலங்கண்
மூடிக்கண்டேனுவகேழுங்கண்டேனே. (௧௧)

ஆனபுகழுமமைந்ததோர்ஞானமுந்
தேனுமிருக்குஞ்சிறுவரையொன்றுகண்
டேனெமொய்திசிறியுணர்வுசெய்வார்கட்கு
வானகஞ்செய்யுமறவனுமாமே. (௧௨)

மாமதியாமதியாய்நின்றமாதவர்
தாமதியாருஞ்சுடர்பரமானந்தந்
தாமதியாகச்சமுணச்சாந்திபுக்
காவலமற்றாரமைவுபெற்றாரே. (௧௩)

பதமுத்திமூன்றும்பழுதென்றுகைவிட்
டிதமுற்றபாசவிருளைத்துரந்து
மதயற்றெனதியான்மாற்றிவிட்டாங்கே
திதமுற்றவர்கள்சிவசித்தர்தாமே. (௰௪)

சித்தர்சிவத்தைக்கண்டவர்சீருடன்
சுத்தர்சுத்தத்துடன்சேர்ந்துந்தோயாதவர்
முத்தரம்முத்திக்குமூலத்தர்மூலத்துச்
சத்தர்சதாசிவத்தன்மையர்தாமே. (௰௫) ஆ சாஙி.

---

அஷ்டதளகமலமுக்குணவவத்தை.

உதிக்கின்றவிந்திரனங்கியமனுந்
துதிக்குநிருதிவருணனல்வாயு
மதிக்குங்குபேரனீசனுடன்றிசையீசு
னிதித்தெண்டிசையுநிறைந்துநின்றானே. (௧)

ஒருங்கியபூவுமோரெட்டிதழாகு
மருங்கியமாயாபுரியதனுள்ளே
சுருங்கியதண்டின்சுழுனையினூடே
யொருங்கியசோதியையோர்ந்தெழுமுய்ந்தே. (௨)

மொட்டலர்தாமரைமூன்றுளமூன்றினும்
விட்டலர்கின்றனன்சோதிவிரிசுட
ரொட்டலருள்ளேயிரண்டலருள்ளூறிற்
பட்டலர்கின்றதோர்பூண்டங்களுமே. (௩)

ஆறேயருவியசங்குளமொன்றுண்டு
நூறேசிவகதிநண்ணிதவண்ணமுந்

கூறேகுவிமுலைக்கொம்பனையாளொடும்
வேறேயிருக்கும்விழுப்பொருடானே. (௪)

திசையெட்டுந்தேரோட்டுந்தேவதையெட்டும்
வசையெட்டுமாய்நின்றவாதிப்பிரானை
வசையெட்டுநாலுமற்றுங்கேநிறைந்து
முசையெட்டுமுன்னின்றுநிற்கின்றவாறே. (௫)

எழுஞ்சகளமியம்புங்கடந்தெட்டில்
வாழும்பரமென்றுகடந்தொன்பதி
லூழிபராபரமோங்கியபத்தினிற்
றாழ்வதுவானதலித்தலைமைதானே. (௬)

பல்லூழிபண்பல்பகலோவிறையவ
னல்லூழியைந்தினுள்ளேநின்றவூழிகள்
செல்லூழியண்டத்துச்சென்றவவ்வூழிய
ளெவ்வூழியுச்சியுளொன்றிற்பகவனே, (௭)

புரியுமுலகினிற்பூண்டவெட்டானை
திரியுங்கலிமுருடுதேவர்குழாமு
மெரியுமழையுமியக்கும்வெளியும்
பரியுமாகாசத்திற்பற்றதுதானே. (௮)

ஊறுமருவியுயர்வரையுச்சிமே
லாறின்றிப்பாயுமருங்குளமொன்றுண்டு
சேறின்றிப்பூத்தசெழுங்கொடித்தாமரைப்
பூவின்றிச்சூடான்புரிசடையோனே. (௯)

ஒன்றுமிரண்டுமொருங்கியகாலத்து
நின்றுமிருந்ததிலம்பலபேசினும்

வென்றுமிருந் துவிகிர்தனைநாடுவார்
சென்றுமிருந் துந்திருவுடையோரே. (௰) ஆ-௪௱௰௫.

---

## நவாவத்தை, நவாபிமானி.

தொற்பதவிசுவன் றைசதன் பிராஞ்ஞன்
னற்பதவிராட்டன் பொன்கெற்பனவ்யாகிர்தன்
மிற்பதஞ்சொலிதையன் பிரசாபத்தியன்
பொற்புவிசாந்தன் பொருதபிமானியே. (௧)

நவமாமவத்தைநனவாதிபத்திற்
பவமாமலங்குணம்பற்றற்றுப்பற்றாந்
தவமானசத்தியஞானப்பொதுவிற்
றவமார்துரியஞ்சொரூபமதாமே. (௨)

சிவமானசித்தையிற்சீவன்சிதைய
பவமானமும்மலம்பாறிப்பறிய
நவமானவர்த்தத்தினற்சிவபோதந்
தவமாமவையாகித்தானல்லவாகுமே. (௩)

முன்சொன்னவொன்பானின்மூன்றுறுதத்துவந்
தன்சொல்லிலெண்ணத்தகாவொன்பான்வேறுள
பின்சொல்லலாகுமிவ்வீரொன்பான்பேர்த்திட்டுத்
தன்செய்தவாண்டவன்றான்சிறந்தானே. (௪)

உகந்தனவொன்பதுமைந்துமுலகம்
பகர்ந்தபிரானென்னும்பண்பினைநாடி
யகத்தெம்பிரானென்பனல்லும்பகலு
மிகந்தனவல்வினையோடறுத்தானே. (௫)

நலம்பலகாலந்தொகுத்தனநீளங்
குலம்பலவண்ணங்குறிப்பொய்யகூடும்
பலம்பலபன்னிருகாலநினையு
நிலப்பலவாறினனீர்மையன்றனே (௬)

ஆதிபராபரமாகும்பராபரை
சோதிபராமுயிர்சொல்லுநற்றத்துவ
மோதுங்கலைமாயையோரிரண்டோர்முத்தி
நீதியாய்பேதமொன்பானுடனாதியே. (௭)

தேறுதசிந்தைதெளியத்தெளிவித்து
வேறுநரகசுவர்க்கமுமேதினி
யாறுப்பிறப்புமுயிர்க்கருளால்வைத்தான்
வேறுத்தெளியார்வினையுயிர்பெற்றதே. (அ)

ஒன்பானவத்தையுள்ளொன்பானபிமானி
தன்பாற்பயிலுநவதத்துவமாதி
யொன்பானினிற்பதோர்முத்துரியத்துறச்
செம்பாற்சிவமாதல்சித்தாந்தசித்தியே; () ஆ ௪௱௨௬

---

சுத்தாசுத்தம்.

நாசிநுனியினின்றெண்விரலிடை
யீசனிருப்பிடமியாருமறிகிலர்
பேசியிருக்கும்பெருமறையம்மறை
கூசியிருக்குங்குணமதுவாமே, (௧)

கருமங்களொன்றாகருதுங்கருமத்
துரிமையுங்கன்மமுமுன்னும்பிரவிக்

கருவினையாவதுகண்டகன்றன்பிற்
புரிவனகன்மக்கயத்துட்புகுமே. (௨)

மாயைமறைக்கமறைந்தமறைப்பொருண்
மாயைமறையவெளிப்படுமெப்பொருண்
மாயைமறையமறையவல்லார்கட்குக்
காயமுமில்லைகருத்தில்லைதானே, (௩)

மோழையடைந்துமுழைதிறந்துள்புக்குக்
கோழையடைகின்றதண்ணைற்குறிப்பினி
லாழவடைத்தங்கனலிற்புறஞ்செய்து
தாழவடைப்பதுதன்வலியாமே, (௪)

காயக்குழப்பனைக்காயநன்னாடனைக்
காயத்தினுள்ளேகமழ்கின்றநந்தியைத்
தேயத்துளேயென்றுந்தேடித்திரிபவர்
காயத்துணின்றகருத்தறியாரே, (௫)

ஆசூசமாசூசமென்பாரறிவிலா
ராசூசமாமிடமாருமறிகிலா
ராசூசமாமிடமாருமறிந்தபின்
னாசூசமானிடமாசூசமாமே. (௬)

ஆசூசமில்லையருநியமத்தருக்
காசூசமில்லையரனையர்ச்சிப்பவர்க்
காசூசமில்லையாமங்கிவளர்ப்போருக்
காசூசமில்லையருமறைஞானிக்கே. (௭)

வழிபட்டுநின்றுவணங்குமவர்க்குச்
சுழிபட்டுநின்றதோர்தூய்மைதுடங்குங்

குழிபட்டுநின்றவர் கூடார்குறிகள்
கழிபட்டவர்க்கன்றிக்காணவொண்ணாதே. (அ)

தூய்மணிதூயனாூயவொளிவிடுந்
தூய்மணிதூய்னைாரறிவாரில்லை
தூய்மணிதூயனைாரறிவார்கட்குத்
தூய்மணிதூய்னைூயவுமாமே. (கூ)

தூயதுவாளாவைத்ததுதூநெறி
தூயதுவாளாநாதன்றிருநாமந்
தூயதுவாளர்வட்டமாசித்தியுந்
தூயதுவாளாத்தூயடிச்சொல்லே. (ய)

பொருளதுவாய்நின்றபுண்ணியனெந்தை
யருளதுபோற்றுமடியவரன்றிச்
மருளதுவாய்நின்றதன்பசுழியின்
மருளதுவாச்சிந்தைமயங்குகின்றாரே. (யக)

வினையாமசத்துவிளைவதுணரார்
வினைஞானந்தன்னில்விடவுந்தேரார்
வினைவிடவீடென்னும்வேதமுமோதார்
வினையாளர்மிக்கவிளைவறியாரோ, (யஉ) ஆ சஙகூ.

மோக்ஷநிந்தை,
பரகதியுண்டெனவில்லையென்போர்க
ளரகதிசெல்வதுஞாலமறிய
மிரகதிசெய்திடுவார்களுடதோறுந்
தரகதிபுன்னைத்துடன்குவதாமே, (ச)

கூடகில்லார்குருவைத்தகுறிகண்டு
நாடகில்லார்நயம்பேசித்திரிவார்கள்
பாடகில்லாரவன்செய்தபரிசறிந்
தாடவல்லாரவர்பேறிதுவாமே. (௨)

புறப்பட்டுப்போகும்புகுதுமென்னெஞ்சிற்
றிறப்பட்டசிந்தையைத்தெய்வமென்றெண்ணி
யறப்பட்டமற்றப்பதியென்றழைக்கி
லிறப்பற்றினேனிங்கிதென்னென்கின்றானே. (௩)

திடரிடைநில்லாதநீர்போலவாங்கே
யுடலிடைநில்லாவுறுபொருள்காட்டிக்
கடலிடைநில்லாக்கலஞ்சேருமாபோ
லடலெரிவண்ணனுமங்குநின்றானே. (௪)

தாமறைநூல்போற்றடுப்பார்பரத்தொடும்
போம்வழிவேண்டிற்புறமேயுழிதாவர்
காண்வழிகாட்டக்கண்காணுக்கலதிக
டெநெறிசெல்வான்றிரிகின்றவாறே. (௫)

மூடுதலின்றிமுடியுமனிதர்கள்
கூடுவர்நந்தியவனைக்குறித்துடன்
காடுமலையுங்கழனிகடந்தோறு
மூடுமுருவினையுன்னகிலீரோ. (௬)

ஆவதுதெற்கும்வடக்குமமரர்கள்
போவர்குடக்குங்குணக்குங்குறிவழி
நாவினின்மந்திரமொன்றுநடுவங்கி
வேவதுசெய்துவிளங்கிடுநீரோ. (௭)

[௨௯]

மபக்குறநோக்கினுமாதவஞ்செய்வார்
தமக்குறப்பேசினதாரணைகொள்ளார்
சினக்குறப்பேசினதீவினையாளர்
தமக்குறவல்வினைதாங்கிநின்றாரே. (அ) ஆ. ௪௪௪.

---

## இலக்கணாத்திரயம்.

விட்டவிலக்கணைதான்போம்வியமத்துத்
தொட்டுவிடாததுபசார்ந்தத்தேதொக்கும்
விட்டுவிடாததுமேவுஞ்சத்தாதியிற்
சுட்டுமிலக்கணாதீதஞ்சொரூபமே. (க)

வில்லின்விசைநாணின்கோத்திலக்கெய்தபின்
கொல்லுங்களிறைந்துங்கோலொடுசாய்ந்தனா
வில்லுளிருந்தெறிகூறுமொருவர்க்குக்
கல்கலனென்னக்கதிரொதிராமே. (உ) ஆ. ௪௪௫.

---

## தத்துவமசிவாக்கியம்.

சீவதுரியத்துத்தொம்பதஞ்சீவனார்
தாவுபரதுரியத்தினிற்றற்பத
மேவுசிவதுரியத்தசிமெய்ப்பத
மோவிவிடுந்தத்துவமசியுண்மையே. (க)

ஆறாறகன்றவணாத்தொம்பதஞ்சுத்த
மீறானதற்பதமெய்துபசாந்தத்துப்
பேறாகியசிவனிக்கிப்பிரசாதத்து
வீறானதொந்தத்தசிதத்வமசியே (உ)

ஆகியவச்சோயந்தேவதத்தன்னிடத்
தாகியவிட்டுவிடாதவிலக்கணைத்
தாருபசாந்தமேதொந்தத்தசியென்ப
வாகியசீவன்பரன்சிவனுமே. (௩)

துவந்தத்தசியேதொந்தத்தசியு
மவைமன்னுமந்நுவயத்தேகமான
தவமுறுதத்துவமசிவேதாந்த
சிவமாகுமதுஞ்சித்தாந்தவேதமே. (௪)

தூரியமடங்கியசொல்லறும்பாழை
யரியபரமென்பராகாரிதன்றெனு
ருரியபரம்பரமாமொன்றுதிக்கு
மருநிலமென்பதையாரறிவாரோ. (௫)

தொம்பதந்தற்பதஞ்சொல்லுமசிபத
நம்பியமுத்துரியத்துமேனடவே
யும்பதமுப்பதமாகுமுயிர்பரன்
செம்பொருளானசிவமெனலாமே. (௬)

வைத்ததுரியமதிற்சொருபானந்தத்
துய்த்தபிரணவமாமுபதேசத்தை
மெய்த்தவிதயத்துவிட்டிடுமெய்யுணர்
வைத்தபடியேயடைந்துநின்றுனே. (௭)

நனவாதியைந்தையுநாதாதியில்வைத்துப்
பினமாமலத்தைப்பின்வைத்துப்பின்சுத்தத்
தனதாஞ்சிவகதிசத்தாதிசாந்தி
மனவாசகங்கெட்டமன்னனைநாடே. (௮)

பூரணியாதுபுறம்பொன்றிலாமையிற்
பேரணியாதுபேச்சொன்றிலாமையி
யோரணையாதுவொன்றுமிலாமையிற்
காரணமின்றியேகாட்டுந்தகைமைத்தே.() ஆ. ௪௫௫.

---

மகாவாக்கியம்.

நீயதுவானாயெனநின்றபேருரை
யாயதுநானானேனென்னச்சமைந்தறச்
சேயசிவமாக்குஞ்சீர்நந்திபேரரு
ளாயதுவாயனந்தானந்தியாகுமே. (௧)

உயிர்பரமாகவுயர்பரசிவ
னரியசிவமாகவச்சிவவேதத்
திரியிலுஞ்சீராம்பராபரனென்ன
வுரியவுரையற்றவோமயமாமே. (௨)

வாய்நாசியேபுருமத்தகமுச்சியி
லாய்நாசியுச்சிமுதலவையாய்நிற்குந்
தாய்நாடியாதிவாக்காதிசகலாதி
சேய்நாடொளியெனச்சிவகதியைந்துமே. (௩)

அறிவறியாமையிரண்டுமகற்றிச்
செறிவறிவாயெங்குநின்றசிவனைப்
பிறிவறியாதபிரானென்றுபேணுங்
குறியறியாதவர்கொள்ளறியாரே. (௪)

அறிவாரறிவனவப்புமனலு
மறிவாரறிவனவப்புங்கலப்பு

மறிவானிருந்தங்கறிவிக்கிலல்லா
லறிவானறிந்தவறிவறிபோமே. (ரு)

அதீத்துள்ளாகியகன்றவனந்தி
யதீதத்துள்ளாகியறிவிலோனுன்மா
மதிபெற்றிருள்விட்டமன்னுயிரொன்றும்
பதியிற்பதியும்பரவுயிர்தானே. (சு)

அடிதொழமுன்னின்றமரர்களத்தன்
முடிதொழவீசனுமுன்னின்றருளிப்
படிதொழநீபண்டுபாவித்ததெல்லாங்
கடிதொழக்காணென்னுங்கண்ணுதலானே. (எ)

நின்மலமேனிநிமலன்பிறப்பிலி
யென்னுளம்வந்திவனென்னடியானென்று
பொன்வளர்மேனிபுகழ்கின்றவானவன்
நின்மலமாகென்றுநீக்கவல்லானே. (அ)

துறந்துபுக்கொள்ளொளிசோதியைக்கண்டு
பறந்ததென்னுள்ளம்பணிந்துகிடந்தே
மறந்தறியாவென்னைவானவர்கோனு
மிறந்துபிறவாமலீங்குவைத்தானே. (கூ)

மெய்வாய்கண்மூக்குச்செவியென்னு மெய்த்தோற்
தவ்வாயவந்தக்கரணமகிலமு [றத்
மெவ்வாயுயிருமிறையாட்டவாடலாற்
கைவாயிலாநிறைவெங்குமெய்கண்டதே·()ஆ சகூ

## விசுவக்கிராசம்.

அழிகின்றசாயாபுருடனைப்போலக்
கழிகின்றநீரிற்குமிழியைக்காணி
லெழுகின்றதீயிற்கற்பூரத்தையொக்கப்
பொழிகின்றவிவ்வுடற்போமப்பரத்தே. (௧)

உடலுமுயிருமொழிவறவொன்றிற்
படருஞ்சிவசத்திதாயேபாமா
முடலைவிட்டிந்தவுயிரெங்குமாகிக்
கடையுந்தலையுங்கரக்குஞ்சிவத்தே. (௨)

செவிமெய்வாய்கண்மூக்குச்சேரிந்திரியம்
அவின்றியமனமாதிகளைந்துங்
குவியொன்றிலாமல்விரிந்துகுவிந்து
தவிர்வொன்றிலாதசராசரந்தானே. (௩)

பரனெங்குமாகிப்பரந்துற்றுநிற்குந்
திரனெங்குமாகிச்செறிவெங்குமெய்து
முரனெங்குமாயுலகுண்டுமிழ்க்கும்
வரமிங்ஙன்கண்டியான்வாழ்ந்துற்றவாறே. (௪)

அளந்துதுரியத்தறிவினைவாங்கி
உளங்கொள்பரஞ்சகமுண்டதொழித்துக்
கிளர்ந்தபரஞ்சிவஞ்சேரக்கிடைத்தால்
விளங்கியவெட்டவெளியனுமாமே. (௫)

இரும்பிடைநீரெனவென்னையுள்வாங்கிப்
பரம்பரமானபரமதுவிட்டே

புரம்பெறமுப்பாழொளியைவிழுங்கி
யிருந்தவென்னந்தியிதயத்துளானே. (௬)

கரியுண்விளவின்கனிபோலுயிரு
முரியபரமுமுன்னோதுஞ்சிவமு
மரியதுரியமேலகிலமுமெல்லாந்
திரியவிழுங்குஞ்சிவபெருமானே. (௭)

அந்தமுமாதியுமாகும்பராபரன்
றந்தம்பரம்பரன்றன்னிற்பரமுட
னந்தமையுண்டுமெய்ஞ்ஞானநேயாந்தத்தே
நந்தியிருந்தனனாமறியோமே. (அ) ஆ. ௪௱

## வாய்மை.

அற்றதுரைக்கிலருளுபதேசங்கள்
குற்றமறுத்தபொன்போலுங்கனலிடை
யற்றறவைத்திறைமாற்றறமாற்றிடில்
செற்றுமறுத்தசெழுஞ்சுடராகுமே. (௧)

எல்லாமறியுமறிவுதனைவிட்டு
வெல்லாமறிந்துமிலாபமங்கில்லை
யெல்லாமறிந்தவறிவினைநானென்னி
லெல்லாமறிந்தவிறையெனலாமே. (௨)

தலைநின்றதாழ்வரைமீதுதவஞ்செய்து
முலைநின்றமாதவமூர்த்தியையானும்
புலைநின்றபொல்லாப்பிறவிகடந்து
கலைநின்றகள்வனைக்கண்டுகொண்டேனே. (௩)

தானேயுலகிற்றலைவனென்த்தகுந்
தானேயுலகுக்கோர்தத்துவமாய்நிற்கும்
வானேமழைபொழிமாமறைகூர்ந்திடு
மூனேயுருகியவுள்ளமொன்றாமே. (ரு)

அருள்பெற்றகாரணமென்கொலமரி
லிருளற்றசிந்தையிறைவனைநாடி
மருளுற்றசிந்தையைமாற்றியருமைப்
பொருளுற்றசேவடிபோற்றுவர்தாமே. (கு)

மெய்கலந்தாரொடுமெய்கலந்தான்றன்னைப்
பொய்கலந்தார்முன்புகுதாவொருவனை
யுய்கலந்தூழித்தலைவனுமாய்நிற்கு
மெய்கலந்தின்பம்விளைந்திடுமெய்யர்க்கே. (௬)

மெய்கலந்தாரொடுமெய்கலந்தான்மிசைப்
பொய்கலந்தாருட்புகுதாப்புனிதனை
யைகலந்தாவியெழும்பொழுதண்ணலைக்
கைகலந்தார்க்கேகருத்துறலாமே. (எ)

எய்தியகாலத்திருபொழுதுஞ்சிவன்
மெய்செயின்மேலைவிதியதுவாய்நிற்கும்
பொய்யும்புலனும்புகலொன்றுநீத்திடி
லையனுமவ்வழிபாகிநின்றானே. (அ)

எய்துவதெய்தாதொழிவதிதுவரு
ளுய்யவருள்செய்தானுத்தமன்சீர்நந்தி
பொய்செய்புலனெறியொன்பதுந்தாட்கொளின்
மெய்யெய்புரவியைமேற்கொள்ளலாமே. (கூ)

கைகலந்தானைக்கருத்தினுணர்தியை
மெய்கலந்தான்றன்னைவேதமுதல்வனைப்
பொய்கலந்தார்முன்புகுதாப்புனிதனைப்
பொய்யொழிந்தார்க்கேபுகலிடமாமே, (௰)

மெய்த்தாளகம்படிமேவியநந்தியைக்
கைத்தாள்கொண்டாருந்திறந்தறிவாரில்லைப்
பொய்த்தாளிடும்பையைப்பொய்யறநீவிட்டங்
கத்தாடிறக்கிலரும்பேறதாகுமே, (௰க)

உய்யும்வகையாலுணர்விலேத்துமின்
மெய்யனரனெறிமேலுண்டுதிண்ணெனப்
பொய்யொன்றுமின்றிப்புறம்பொலிவார்நடு
வையனுமங்கேயமர்ந்துநின்றானே, (௰உ)

வம்புபழுத்தமலர்ப்பழமொன்றுண்டு
தம்பாற்பறவைபுகுந்துணத்தாவொட்ட
தம்புகொண்டெய்திட்டகலத்துரந்திடிற்
செம்பொற்சிவகதிசென்றெய்தலாமே. (௰௩)

மயக்கியவைம்புலப்பாசமறுத்துத்
துயக்கறுத்தானைத்தொடர்மின்றொடர்ந்தாற்
றியக்கஞ்செய்யாதேசிவனெம்பெருமா
னுயப்போவெனமனமொன்றுவித்தானே. (௰௪)

மனமதுதானேநினையவல்லார்க்கு
வினமெனக்கூறுமிருங்காயமேவற்
றனிவினைதன்பாற்றக்கனசெய்யிற்
புனிதன்செயலாகும்போதப்புவிக்கே. (.) ஆ. ௬௱௮அ.

## ஞானிசெயல்.

முன்னைவினைவரின்முன்னுண்டேநீங்குவர்
பின்னைவினைக்கணார்பேர்ந்தறப்பார்ப்பர்க
டன்னையறிந்திடுந்தத்துவஞானிக
ணன்மையிலைம்புலனாடலினாலே, (௧)

தன்னையறிந்திடுந்தத்துவஞானிகண்
முன்னைவினையின்முடிச்சையவிழ்ப்பர்கள்
பின்னைவினையைப்பிடித்துப்பிசைவர்கள்
சென்னியில்வைத்தசிவனருளாலே. (௨)

மனவாக்குக்காயத்தால்வல்வினைமூளு
மனவாக்குநேர்நிற்கில்வல்வினைமன்னு
மனவாக்குக்கெட்டவர்வாதனைதன்னாற்
றனைமாற்றியாற்றத்தகுஞானிதானே, (௩) ஆகூ-௨௱௬௩.

---

## அவாவறுத்தல்.

வாசியுமூசியும்பேசிவகையினாற்
பேசியிருந்துபிதற்றிப்பயனில்லை
யாசையுமன்புமறுமினறுத்தபி
னீசனிருந்தவிடமெளிதாமே (௧)

மாடத்துளானலன்மண்டபத்தானலன்
கூடத்துளானலன்கோயிலுள்ளானலன்
வேடத்துளானலன்வேட்கைவிட்டார்நெஞ்சின்
மூடத்துளேநின்றுமுத்திதந்தானே. (௨)

ஆசையறுமின்களாசையறுமின்க
ளீசனோடாயினுமாசையறுமின்க
ளாசைபடப்படவாய்வருந்துன்பங்க
ளாசைவிடவிடவானந்தமாமே. (௩)

அடுவனபூதங்களைந்துமுடனே
படுவழிசெய்கின்றபற்றறவீசி
விடுவதுவேட்கையைமெய்ந்நின்றஞானந்
தொடுவதுதம்மைத்துடர்தலுமாமே. (௪)

உவாக்கடலொக்கின்றவூழியும்போன
துவாக்கடலுட்பட்டுத்துஞ்சினர்யாரோ
ரவாக்கடலுட்பட்டழுந்தினர்மன்னோ
தவாக்கடலீசன்றரித்துநின்றானே. (௫)

நின்றவினையும்பிணியுநெடுஞ்செய
றுன்றுமுழிலற்றுச்சுத்தமதாகலும்
பின்றைங்கருமமும்பேர்த்தருணேர்பெற்றுத்
துன்றவழுத்தலுஞானிநடுய்மையே. (௬)

உண்மையுணர்ந்துறவொன்சித்திமுத்தியாம்
பெண்மயற்கெட்டறப்பேறட்டசித்தியாந்
திண்மையின்ஞானிசிவகாயங்கைவிட்டால்
வண்மையருட்டானடைந்தன்பிலாறுமே. (௭)

அவனிவனீசனென்றன்புறநாடிச்
சிவனிவனீசனென்றுண்மையையோரார்
பவனிவன்பல்வகையாமிப்பிறவி
புவனிவன்போவதுபொய்குண்டபோதே. (௮)

கொதிக்கின்றவாறுங்குளிர்கின்றவாறும்
பதிக்கின்றவாறிந்தப்பாரகமுற்றும்
விதிக்கின்றவைவரைவேண்டாதுலக
நொதிக்கின்றகாயத்துநூலொன்றுமாமே. (௯)

உய்ந்தனமென்றிருநற்பொருள்காண்கிலீர்
கந்தமலரிற்கலக்கின்றநந்தியைச்
சிந்தையில்வைத்துத்தெளிவுறச்சேர்த்திட்டான்
முந்தைப்பிறவிக்குமூலவித்தாமே. (௰) ௨௲ ௱௩

---

பத்தியுடைமை.

முத்திசெய்ஞானமுங்கேள்வியுமாய்நிற்கு
மத்தனைமாயாவமரர்பிரான்றனைச்
சுத்தனைத்தூய்நெறியாய்நின்றசோதியைப்
பத்தர்பரசும்பசுபதிதானென்றே. (௧)

அடியாரடியாரடியார்க்கடிமைக்
கடியனாய்நல்கிட்டடிமையும்பூண்டே
னடியாரருளாலவனடிகூட
வடிபாலிவனென்றடிமைகொண்டானே. (௨)

நீரிற்குளிருநெருப்பினிற்சுட்டிடு
மாரிக்கடனந்தியாமாரறிபவர்
பாரிற்பயனுறப்பார்க்கிலுநேரிய
ரூரிலுமாபதியாகின்றானே. (௩)

ஒத்தல்சேழுமறியாவொருவனென்
சத்தனிருந்திடமாரறிவார்சொல்லப்

பத்தர்தம்பத்தியிற்பாற்படிலல்லது
முத்தினையார்சொல்லமுந்துகின்றாரே (௪)

ஆன்கன்றுதேடியழைக்குமதுபோ
ஞான்கன்றாய்நாடியழைத்தேனென்றனை
வான்கன்றுக்கப்பாலாய்நின்றமறைப்பொரு
ளூன்கன்றூனாடிவந்துள்புகுந்தானே. (௫)

பெத்தத்துந்தன்பணியில்லைபிறத்தலான்
முத்தத்துந்தன்பணியில்லைமுறைமையா
லத்தற்கிரண்டுமருளாலளித்தலாற்
பத்திப்பட்டோர்க்குப்பணியொன்றுமில்லையே. (௬)

பறவையிற்கற்பமும்பாம்புமெய்யாகக்
குறவன்சிலம்பக்குளிர்வரையேறி
நறவாமலர்கொண்டுநந்தியையல்லா
லிறைவனென்றென்மனமேத்தகிலாவே. (௭)

உறுதுணைநந்தியையும்பர்பிரானைப்
பெறுதுணைசெய்துபிறப்பறுத்துய்மின்
செறிதுணைசெய்துசிவனடிசிந்தித்
துறுதுணையாயங்கியாகிநின்றானே. (௮)

வானவர்தம்மைவலிசெய்திருக்கின்ற
தானவர்முப்புரஞ்செற்றதலைவனைக்
கானவனென்றுங்கருவரையானென்று
மூனதனுண்ணினைந்தொன்றுபட்டாரே. (௯)

நிலைபெறுகேடென்றுமுன்னேபடைத்த
தலைவனைநாடித்தயங்குமென்னுள்ள

மலையுளும்வானகத்துள்ளும்புறத்து
மூலையுளுமுள்ளத்துமேழ்கிறின்றேனே() ஆகு குரய௧;

## முத்தியுடைமை.

முத்தியிலத்தல்முழுத்தவருட்பெற்றுத்
தத்துவசுத்திதலைப்பட்டுத்தன்பணி
மெய்த்தவஞ்செய்கைவினைவிட்டமெய்யுண்மைப்
பத்தியிலுற்றோர்பரானந்தபோதரோ. (௧)

வளங்கனிதேடியவன்றுட்பறவை
யுளங்கனிதேடியுழிதரும்போது
களங்கனியங்கியிற்கைவிளக்கேற்றி
நலங்கொண்டநால்வருநாடுகின்றாரோ, (௨) ஆகு குரய௨.

## சோதனை.

பெம்மான்பெருநந்திபேச்சற்றபேரின்பத்
தம்மானடிதந்தருட்கடலாடினே
மெம்மாயமும்விடுத்தெம்மைக்கரந்திட்டுச்
சும்மாதிருந்திடஞ்சோதனையாகுமே. (௧)

அறிவுடையானருமாமறையுள்ளே
செறிவுடையான்மிகுதேவர்க்குந்தேவன்
பொறியுடையான்புலனைந்துங்கடந்த
குறியுடையானொடுங்கூடுவனானே. (௨)

அறிவறிவென்றங்கரற்றுமுலகு
மறிவறியாமையையாருமறியா
ரறிவறியாமைகடந்தறிவானா
லறிவறியாமையழகியவாறே. (௩)

குறியாக்குறியினிற்கூடாதகூட்டத்
தறியாவறிவிலவிழ்ந்தேகசித்தமாய்
நெறியாம்பராநந்திநீடருளொன்றுஞ்
செறியாச்செறிவேசிவமெனலாமே. (௪)

காலினிலூறுங்கரும்பினிற்கட்டியும்
பாலினுண்ணெய்யும்பழத்துளிரதமும்
பூவினுணாற்றமும்போலுளனெம்மிறை
காவலனெங்குங்கலந்துநின்றானே. (௫)

விருப்பொடுகூடிவிகிர்தனைநாடிப்
பொருப்பகஞ்சேர்தருபொற்கொடிபோல
விருப்பர்மனத்திடையெங்கள்பிரானார்
நெருப்புருவாகிநிகழ்ந்துநிறைந்தே. (௬)

நந்திபெருமானடுவுள்வியோமத்து
வந்தெனகப்படிகோயிற்கொண்டான்கொள்ள
வெந்தைவந்தானென்றெழுந்தேனெழுதலுஞ்
சிந்தையினுள்ளேசிவனிருந்தானே (௭)

தன்மைவல்லோனைத்தவத்துணலத்தினை
நன்மைவல்லோனைநடுவுறைநந்தியைப்
புன்மைபொய்யாதேபுனிதனைநாடுமின்
பன்மையிலும்மைப்பரிசுசெய்வானே. (௮)

தொடர்ந்துநின்றானெனைச்சோதிக்கும்போது
துடர்ந்துநின்றானல்லநாதனுமங்கே
படர்ந்துநின்றாதிப்பராபரனெந்தை
கடந்துநின்றவ்வழிகாட்டுகின்றானே. (௯)

அவ்வழிகாட்டுமமரர்க்கரும்பொரு
ளிவ்வழிதந்தைதாயாய்கேளியானெனக்குஞ்
செவ்வழிசேர்சிவலோகத்திருந்திடு
மிவ்வழிநந்தியியல்பதுதானே. (ய)

எறிவதுஞானத்துறைவாளுருவி
யறிவதனோடேயவ்வாண்டலகையானைச்
செறிவதுதேவர்க்குந்தேவர்பிரானைப்
பறிவதுபல்கணப்பற்றுவிடாரே, (க)

ஆதிப்பிரான்றந்தவாளங்கைகொண்டபின்
(?)வதித்துவென்னைவிலக்கவல்லாரில்லை
சோதிப்பனங்கேசுவடுபடாவண்ண
மாதிக்கட்டெய்வமவனிவனாமே, (யஉ)

அந்தக்கருவையருவைவினைசெய்தற்
பந்தம்பணியச்சம்பல்பிறப்பும்வாட்டிச்
சிந்தைதிருத்தலுஞ்சேர்ந்தாரச்சோதனை
சந்திக்கத்தற்பரமாகுஞ்சதுரர்க்கே, (யரு)

உரையற்றதொன்றையுரைத்தானெனக்குக்
கரையற்றெழுந்தகலைவேட்டறுத்துத்
திரைபொத்தவென்னுடனிங்காதிருத்திப்
புரையற்றவென்னுட்புகுந்தற்பரனே, (யச)

ஆ அதிகாரம்-சச-இ-திருமந்திரம்-ருாஉயஎ,
எட்டாந்தந்திரமுற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுள்பட-அதிகாரம்-உாயஉஇ
கூடியதிருமந்திரம்- உதகூ|ா.|சஉ

## ஒன்பதாந்தந்திரம்.

## குருமடதெரிசனம்.

பலியுமவியும்பரந்துபுகையு
மொலியுமெம்மீசன்றனக்கென்றேயுள்கிக்
குவியுங்குருமடங்கண்டவர்தாமே போய்த்
தளிருமலரடிச்சார்ந்துநின்றாரே. (க)

இவனில்லமல்லதவனுக்கங்கில்லை
யவனுக்கும்வேறில்லமுண்டாவறியி
னவனுக்கிவனில்லமென்றென்றறிந்து
மவனைப்புறம்பென்றரற்றுகின்றாரே. (உ)

நாடும்பெருந்துறைநான்கண்டுகொண்டபின்
கூடுஞ்சிவனதுகொய்மலர்ச்சேவடி
தேடவரியன்சிறப்பிலியெம்மிறை
யோடுமுலகுயிராகிநின்றானே. (௩)

இயம்புவனாசனத்தோடுமலையு
மியம்புவன்சித்தக்குகையுமிடமு
மியம்புவனாதாரத்தோடுவனமு
மியம்புவனீராறிருநிலத்தோர்க்கே. (௪)

முகம்பீடமாமடமுன்னியதேய
மகம்பரவர்க்கமேயாசிலசெய்சாட்சி
யகம்பரமாதனமெண்ணெண்கிரிகை
சிதம்பரந்தற்குலமையாதாரந்தானே. (ரு)

அகமுகமாம்பீடமாதாரமாகுஞ்
சகமுகமாஞ்சத்தியாதனமாகுஞ்

செசமுகமாந்தெய்வமேசிவமாகு
மசமுகமாய்ந்தவறிவுடையோர்க்கே. (௬)

மாயையிரண்டுமறைக்கமறைவுறுங்
காயமோரைத்துங்கழியத்தாளுகியே
தூயபாஞ்சுடர்தோல்றச்சொரூபத்து
வாய்பவர்ஞானநிமோனத்தராமே. (௭)

ஞானகுருதெரிசனம்.

ஆறாறுமுப்பதுமங்கேயடங்கிடிற்
கூறக்குருபரன்கும்பிடுதந்திடும்
வேறேசிவபதமேலாயளித்திடும்
பேறுகவானந்தம்பேணும்பெருகவே. (௧)

துரியங்கண்மூன்றுங்கடந்தொளிர்சோதி
யரியபரசிவமியாவையுமாகி
விரிவுகுவிவறவிட்டநிலத்தே
பெரியகுருபதம்பேசவொண்ணுதே. (௨)

ஆயனநந்தியடிக்கென்றலைபெற்றேன்
வாயனநந்தியைவாழ்த்தவென்வாய்பெற்றேன்
காயனநந்தியைக்காணவென்கண்பெற்றேன்
சேயனநந்திக்கென்சிந்தைபெற்றேனே. (௩)

கருடனுருவங்கருதுமளவிற்
பருவிடந்தீர்ந்துபயங்கெடுமாபோல்
குருவினுருவங்குறித்தவப்போதே
திரிமலந்தீர்ந்துசிவனவனாமே. (௪)

ருண்ணவிருப்பிடமாருமறிகில
ரண்ணவிருப்பிடமாய்ந்துகொள்வார்களுக்
கண்ணலழிவின்றியுள்ளேயமர்ந்திடு
மண்ணலைக்காணிலவனிவனாமே. (௫)

தோன்றவறிதலுந்தோன்றித்தோன்றாமையு
மான்றவறிவுமறிநனவாதிகண்
மூன்றவைநீங்குந்துரியங்கண்மூன்றற
வூன்றியநந்தியுயர்மோனத்தானே. (௬)

சந்திரபூமிக்குடன்புருவத்திடைக்
கந்தமலரிலிரண்டிதழ்க்கன்னியும்
பந்தமிலாதபளிங்கினுருவினள்
பந்தமறுத்தபரங்குருபற்றே. (௭)

மனம்புகுந்தானுலகேழுமகிழ
நிலம்புகுந்தானெடுவானிலந்தாங்கிச்
சினம்புகுந்தான்றிசையெட்டுநடுங்க
வனம்புகுந்தானூர்வடக்கென்பதானே. (௮)

தானானவண்ணமுங்கோசமுஞ்சார்தருந்
தானாம்பறவைவனமெனத்தக்கன
தானானசோடசமார்க்கந்தானின்றிடத்
றானந்தசாங்கமும்வேறுள்ளதானே. (௯)

மருவிப்பரிவறியாவெங்கண்மாநந்தி
யுருவநினைக்கநின்றுள்ளேயுருக்குங்
கருவிற்கரந்துள்ளங்காணவல்லார்க்கு
பருவினைகண்சோருமடிவாரசத்தே. (௰)

தலைப்படலாமெங்கடந்துவன்றன்னைப்
பலப்படுபாசமறுத்தறுத்திட்டு
நிலைப்பெறநாடிநினைப்பறவுள்கிற்
றலைப்படலாகுந்தருமமுந்தானே. (௰௧)

நினைக்கிலினைக்குநினைப்பவர்தம்மைச்
சினைக்குள்விளைமலர்ச்சோதியினனைத்
தினைப்பிளந்தன்னசிறுமையரேனுங்
கனைத்தமனத்தடைந்தாருயர்ந்தாரே. (௰௨)

தலைப்படுங்காலத்துத்தத்துவன்றனை
விலக்குறின்மேலைவிதியென்றுங்கொள்க
வலைத்துலகாய்நின்றவாதிப்பிரானை
நினைப்புறுவார்பத்திநேடிக்கொள்வாரே. (௰௩)

நகழ்வொழிந்தாரவர்நாதனையுள்கி
நிகழ்வொழிந்தாரெம்பிரானொடுங்கூடித்
திகழ்வொழிந்தார்திங்கள்சிந்தையினுள்ளே
புகழ்வழிகாட்டிப்புகுந்துநின்றானே. (௰௪)

வத்தமரகதமாணிக்கரேகைபோற்
சத்திமாமொழிச்சற்குருசன்மார்க்க
மித்தவி[illegible]கையிலாடத்தின்மூலத்தே
சுந்தரச்சோதியுட்சோதியுமாமே. (௰௫)

உண்ணும்வாயுமுடலுமுயிருமாய்க்
கண்ணுமாயோகக்கடவுளிருப்பது
மண்ணுநீரனல்காலொடுவானுமாய்
விண்ணுமின்றிவெளியானமேனியே. (௰௬)

பரசுபதியென்றுபார்முழுதெல்லாம்
பரசிவனாணைநடக்கும்பதியாற்
பெரியபதிசெய்துபின்னுமடியார்க்
குரியபதியும்பாராக்கிநின்றானே. (௰௭)

அம்பரநாதனகப்பிடநீள்பொழில்
தம்பரமல்லதுதாமறியோமென்ப
ரும்பருள்வானவர்தானவர்கண்டில
ரெம்பெருமானருள்பெற்றிருந்தாரே. (௰௮)

கோவணங்கும்படிகோவணமாகிப்பி
னாவணங்கும்படிநந்தியருள்செய்தான்
றேவணங்கோமினிச்சத்தந்தெளிந்தனம்
போய்வணங்கும்பொருளாயிருந்தோமே. () ஆ உசு

---

## பிரணவசமாதி.

தூலப்பிரணவஞ்சொருபானந்தப்பேருரை
பாலித்தசூக்குமமேலைச்சொருபப்பெண்
ணாலித்தமுத்திரையாங்சதிற்சூக்கும
மேலைப்பிரணவம்வேதாந்தவீதியே. (௧)

ஓமெனுமோங்காரத்துள்ளேயொருமொழி
யோமெனுமோங்காரத்துள்ளேயுருவரு
வோமெனுமோங்காரத்துள்ளேபலபேத
மோமெனுமோங்காரமொண்முத்திசித்தியே. (௨)

ஓங்காரத்துள்ளேயுதித்தவைம்பூதங்க
ளோங்காரத்துள்ளேயுதித்தசராசர

மோங்காரா தித்துயிர் மூன்றுமுற்றன
வோங்காரஞ்சிவபரசிவரூபமே. (௩)

வருக்கஞ்சுகமாம்பிரமமுமாகு
மருக்கஞ்சராசரமாகுமுலகிற்
றருக்கியவாதாரமெல்லாந்தன்மேனி
சுருக்கமில் ஞானந்தொகுத்துணர்ந்தோர்களே. (௪)

மலையுமமேருபவமருள்வனவாவன
நிலையிற்றெரிசனந்திபநெமியாந்
தலமுங்குலமுந்தவஞ்சித்தமாகு
நலமுஞ்சன்மார்க்கத்துபதேசந்தானே. (௫)

சோடசமார்க்கமுஞ்சொல்லுஞ்சன்மார்க்கிகட்
காடியவிராதினந்தமுமீரோழிந்
கூடியவந்தமுங்கோதண்டமுங்கடந்
தேறியேஞானநேயாந்தத்திருக்கவே. (௬) ஆகூ௨.

---

ஒளி.

ஒளியையறியிலுருவுமொளியு
மொளியுருவறியிலுருவா
மொளியினுருவமறியிலொளியே
யொளியுருவுடனிருந்தானே. (௧)

புகலொளிதாரும்புவனங்களெட்டு
மகலொளிதாயிருளாசறவீசும்
பகலொளிசெய்தமத்தாமரையினே
யிகலொளிசெய்தெம்பிரானிருந்தானே. (௨)

விளங்கொளியங்கிவிரிகதிர்சோமன்
றளங்கொளிபெற்றதுசோதியருள
வளங்கொளிபெற்றதேபேரொளிவேறு
களங்கொளிசெய்துகலந்துநின்றானே. (௩)

இளங்கொளியீசன்பிறப்பொன்றுமில்லி
துளங்கொளிஞாயிறுந்திங்களுங்கான
வளங்கொளியங்கியுமற்றைக்கணெற்றி
விளங்கொளிசெய்கின்றமெய்காயமாமே. (௪)

மேலொளிகீழதின்மேவியமாருதம்
பாலொளியங்கிபரந்தொளியாகாச
நீரொளிசெய்துநெடுவிசும்பொன்றிலு
மேலொளியைந்துமொருங்கொளியாமே. (௫)

மின்னியதூவொளிமேதக்கசெவ்வொளி
பன்னியஞானப்பரந்தபரத்தொளி
துன்னியவாறொளிதூய்மொழிநாடோறு
முன்னியவாறொளியொத்ததுதானே. (௬)

விளங்கொளிமின்னொளியாகிக்கரந்து
துளங்கொளியீசனைச்சொல்லுமெப்போது
முளங்கொளியூனிடைநின்றுயிர்க்கின்ற
வளங்கொளியெங்குமருவிநின்றானே. (௭)

விளங்கொளியவ்வொளியவ்விருண்மன்னுந்
துளங்கொளியான்றொழுவார்க்குமொளியா
னளங்கொளியாரமுதாகநஞ்சாரும்
களங்கொளியீசன்கருத்ததுதானே. (௮)

இலங்கியதெவ்வொளிடப்வொளியீசன்
றலங்கொளிபோல்வதுதாங்கருட்சத்தி
விளங்கொளிமூன்றேவிரிசுடர்தோன்றி
புளங்கொளியுள்ளேயொருங்குகின்றனே. (கூ)

உளங்கொளிபாவதெல்லுயின்றசிவன்
வளங்கொளியாநில்றமாமணிச்சோதி
விளங்கொளியாய்மின்னிவிண்ணிலொடுங்கி
வளங்கொளியாயத்துளாகிநின்றனே. (ம)

விளங்கொளியாய்நின்றவிகிர்தனிருந்த
துளங்கொளிபாசத்துட்டுங்கிருள்சேராக்
களங்கிருணட்டமேகண்ணுதலாட
விளங்கொளியுன்மனத்தொன்றிநின்றனே. (மக)

போதகருங்குழற்போனவர்தாதிடை
யாதிபரத்தையமரர்பிரானென்றுஞ்
சோதியுமண்டத்தப்பாலுற்றதுவொளி
நீதியினல்லிருணீக்கியவாறே. (மஉ)

உண்டில்லையென்னுமுலகத்தியல்வது
பண்டில்லையென்னும்பரங்கதியுண்டுகொல்
கண்டில்லைமானிடர்கண்டகருத்தறில்
விண்டில்லையுள்ளேவிளக்கொளியாமே. (மங)

சுடருறவோங்கியவொள்ளொளியாங்கே
படருறுகாட்சிப்பகலவனீச்
சுடருறுமாயையினுயிருள்வீசி
யிடவுறுஞானத்துறவியனுமே. (மச)

ஒளிபவளத்திருமேனிவெண்ணீற்ற
னளிபவளச்செம்பொன்னுதிப்பிரானுங்
களிபவளத்திலனல்காரிருணீங்கி
யொளிபவளத்தென்னேனுடைசனின்றனே. (௰௫)

ஈசனின்றனிமையோர்கணின்றார்நின்ற
தேசமொன்றின்றித்திகைத்திழைக்கின்றனர்
பாசமொன்றாகப்பழவினைப்பற்றற
வாசமொன்றாமலர்போன்றதுதானே. (௰௬)

தானேயிருக்குமவற்றிற்றலைவனுந்
தானேயிருக்குமவனென நண்ணிடும்
வானாயிருக்குமிம்மாயிருஞாலத்துப்
பானாயிருக்கப்பரவலுமாமே. (௰௭) ஆ. ௪௬.

---

தூலபஞ்சாக்கரம்.

ஐம்பதெழுத்தேயனைத்துவேதங்களு
மைம்பதெழுத்தேயனைத்தாகமங்களு
மைம்பதெழுத்தினடைவையறிந்தபி
னைம்பதெழுத்தேயஞ்செழுத்தாமே. (௧)

அகாரமுதலாகவைம்பத்தொன்றாகி
யுகாரமுதலாகவோங்கியுதித்து
மகாரவிறுதியாய்மாய்ந்துமாய்ந்தேறி
நகாரமுதலாகுநந்திதன்னாமமே. (௨)

அகாராதியீரொன்கலந்தபரையுள்
ளுகாராதிதன்சத்தியுள்ளொளியீசன்

சிகராதிதாஞ்சிவவேதவேகோண
நகராதிதான்மூலமந்திரநண்ணுமே. (௩)

வாயொடுகண்டமிதயமருவுந்தி
யாயவிலிங்கமவற்றின்மேலேயவ்வாய்
தூயதோர்துண்டமிருமத்தகஞ்சொல்ல
லாயதிருமைந்தோடாமெழுத்தஞ்சமே. (௪)

இரணங்களேழுங்கிளர்ந்தெரிபொங்கி
கரணங்கள்விட்டுயிர்தானெழும்போது
மரணங்கைவைத்துயிர்மாற்றிடும்போது
மரணங்கைகூட்டுவதஞ்செழுத்தாமே. (௫)

ஞாயிறுதிங்களவின்றெழுகாலத்தி
லாயுறுமந்திரமாருமறிகிலர்
சேயுறுகண்ணிதிருவெழுத்தஞ்சையும்
வாயுறவோதிவழுத்தலுமாமே. (௬)

தெள்ளமுதூறச்சிவாயநமவென்று
வுள்ளமுதூறவொருக்காலுரைத்திடும்
வெள்ளமுதூறல்விரும்பியுண்ணாதவர்
துள்ளியநீர்போற்சுழல்கின்றவாறே. (௭)

குருவழிபாயகுணங்களினின்று
கருவழியாயகணக்கையறுக்க
வருவழிமானமறுக்கவல்லார்கட்
கருள்வழிகாட்டுவதஞ்செழுத்தாமே. (௮)

வெறிக்கவினைத்துயர்வந்திடும்போது
செறிக்கின்றநந்திதிருவெழுத்தோதுங்

குறிப்பதுவுன்னிற்குரைகழல்கூட்டுங்
குறிப்பறிவான்றவங்கோனுருவாமே.　　　　　　　　(௯)

நெஞ்சுநினைந்துதம்வாயாற்பிரானென்று
துஞ்சும்பொழுதுன்றுணைத்தாள்சரணென்று
மஞ்சுதவழும்வடவரைமீதுறை
யஞ்சிலிறைவனருள்பெறலாமே.　　　　　　　　(௰)

பிரான்வைத்தவைந்தின்பெருமையுணரா
திராமாற்றஞ்செய்வார்கொலேழைமனிதர்
பராமுற்றுங்கீழொடுபல்வகையாலு
மராமுற்றஞ்சூழ்ந்தவகலிடந்தானே.(௰௧) ஆ. ௬௰.

---

சூக்குமபஞ்சாக்கரம்.

எளியவாதுசெய்வாரெங்களீசனை
யொளியையுன்னியுருகுமனத்தராய்
தெளியவோதிச்சிவாயநமவெனுங்
குளிகையிட்டபொன்னாக்குவன்கூட்டையே.　　　　(௧)

சிவன்சத்திசீவன்செறுமலமாயை
யவஞ்சேர்த்தபாசமலமைந்தகலச்
சிவன்சத்திதன்னுடன்சீவனார்சேர
வவஞ்சேர்த்தபாசமணுககிலாவே.　　　　　　　(௨)

சிவனருளாயசிவன்றிருநாமஞ்
சிவனருளான்மாதிரோதமலமாயை
சிவன்முதலாகச்சிறந்துநிரோதம்
பவமதகன்றுபரசிவனாமே　　　　　　　　　(௩)

வோதியநம்மலமெல்லாமொழித்திட்டவ்
வாதிதனைவிட்டிறையருட்சத்தியாற்
றீதிற்சிவஞானயோகமேசித்திக்கு
மோதுஞ்சிவாயமலமற்றவுண்மையே. (௪)

நமாதிநனாதிதிரோதாயியாகித்
தமாதியதாய்நிற்கத்தானந்தத்துற்றுச்
சமாதித்துரியந்தமதாசமாவே
நமாதிசமாதிசிவவாதலென்னவே. (௫)

அருடருமாயமுமத்தனுந்தம்மி
லொருவினையின்றவனுள்ளுறுமாயை
திரிமலநீங்கிச்சிவாயவென்றோது
மருவினைதீர்ப்பதுமவ்வெழுத்தாமே. (௬)

சிவசிவவென்றேதெளிகிலருமர்
சிவசிவவாயுவுந்தேர்ந்துள்ளடங்கச்
சிவசிவவாயதெளிவினுள்ளார்கள்
சிவசிவவாகுந்திருவருளாமே. (௭)

சிவசிவவென்கிலர்தீவினையாளர்
சிவசிவவென்றிடத்தீவினைமாளுஞ்
சிவசிவவென்றிடத்தேவருமாவர்
சிவசிவவென்னச்சிவகதிதானே. (௮)

நமவென்னுநாமத்தைநாவிலொடுக்கிச்
சிவவென்னுநாமத்தைச்சிந்தையுள்ளேற்றிப்
பவமதுதீரும்பரிசுமதற்று
லவமதிதீருமறும்பிறப்பன்றே. (௯) ஆ-௯௬

## அதிசூக்குமபஞ்சாக்கரம்.

சிவாயநமவெனச்சித்தமொருக்கி
யவாயமறவேயடிமையதாக்கிச்
சிவாயசிவசிவவென்றென்றேசிந்தை
யவாயங்கெடநிற்கவானந்தமாமே. (க)

செஞ்சுடர்மண்டலத்தூடுசென்றப்புற
மஞ்சணவும் முறைமையேறிவழிக்கொண்டு
துஞ்சுமவன் சொன்னகாலத்திறைவனை
நெஞ்செனநீங்காநிலைபெறலாகுமே. (உ)

அங்கமுமாகமவேதமதோதினு
மெங்கள்பிரானெழுத்தொன்றிலிருப்பது
சங்கைகெட்டவ்வெழுத்தொன்றையுஞ்சாதித்தா
லங்கனாசேர்ந்தவருங்கலமாமே. (ங)

யழுத்தனவைந்தும்பழமறையுள்ளே
விழித்தங்குறங்குமவினையறிவாரில்லை
யெழுத்தறிவோமென்றுரைப்பர்களேத
மொழுத்தையழுத்துமெழுத்தறியாரே. (ச) ஆ-எசு.

---

## திருக்கூத்துத்தெரிசனம்

எங்குந்திருமேனியெங்குஞ்சிவசத்தி
யெங்குஞ்சிதம்பரமெங்குந்திருநட்ட
மெங்குஞ்சிவமாயிருத்தலாலெங்கெங்குந்
தங்குஞ்சிவனருட்டன்விளையாட்டதே. (க)

சிற்பரஞ்சோதிசிவானந்தக்கூத்தனைச்
சொற்பதமாமந்தச்சுந்தரக்கூத்தனைப்
பொற்பதிக்கூத்தனைப்பொற்றில்லைக்கூத்தனை
யற்புதக்கூத்தனையாரறிவாரே. (௨)

---

### சிவானந்தக்கூத்து.

தானந்தமில்லாச்சதானந்தசத்திமேற்
றேனுந்துமானந்தமாநடங்கண்டீர்
ஞானங்கடந்துநடஞ்செய்யுநம்பிக்கங்
கானந்தக்கூத்தாடவாடரங்கானதே. (௩)

ஆனந்தமாடரங்கானந்தம்பாடல்க
ளானந்தம்பல்லியமானந்தவாச்சிய
மானந்தமாகவகிலசராசர
மானந்தமானந்தக்கூத்துகந்தானுக்கே. (௪)

ஒளியாம்பரமுமுளதாம்பரமு
மளியார்சிவகாமியாகுஞ்சமயக்
களியார்பரமுங்கருத்துறையந்தத்
தெளிவாஞ்சிவானந்தநட்டத்தின்சித்தியே. (௫)

ஆனநடமைந்தகளசகளத்த
னானநடமாடியைங்கருமத்தாக
வானதொழிலருளாலைந்தொழிற்செய்தே
தேன்மொழிபாகன்றிருநடமாடுமே. (௬)

பூதாண்டபேதாண்டபோகாண்டயோகாண்ட
மூதாண்டமுத்தாண்டமோகாண்டதேகாண்ட

நாகாண்டமைங்கருமந்தாண்டதற்பரத்
தேகாந்தமாம்பிரமாண்டத்தவென்பவே. (௭)

வேதங்களாடமிகுவாகமமாடக்
கீதங்களாடகிளரண்டமேழாடப்
பூதங்களாடப்புவனமுழுதாடு
நாதங்கொண்டாடினான்ஞானானந்தக்கூத்தே. (௮)

பூதங்களைந்திற்பொறியிற்புலனைந்தில்
வேதங்களைந்தின்மிகுமாகமந்தன்னி
லோதுங்கலைகாலமூழியுடனண்டப்
போதங்களைந்திற்புணர்ந்தாடுஞ்சித்தனே. (௯)

தேவர்சுரர்நரர்சித்தர்வித்தியாதரர்
மூவர்களாதியின்முப்பத்துமூவர்கள்
தாபதர்சத்தர்சமயஞ்சராசரம்
யாவையுமாடிடுமெம்மிறையாடவே. (௰)



சுந்தரக்கூத்து.

அண்டங்களேழினுக்கப்புறத்தப்பா
லுண்டென்றசத்திசதாசிவத்துச்சிமேற்
கண்டங்கரியான்கருணைதிருவுருக்
கொண்டங்குமைகாணக்கூத்துகந்தானே. (௧௧)

கொடுகொட்டிபாண்டங்கோடுசங்கார
நடமெட்டோடைந்தாறுநாடியுளாடுந்
திடமுற்றெழுந்தேவதாருவுந்தில்லை
வடமுற்றமாவனமன்னவன்றானே. (௧௨)

பரமாண்டத்துடேபராசத்திபாதம்
பரமாண்டத்தூடேபடரொளியீசன்
பரமாண்டத்தூடேபடர்தருநாதம்
பரமாண்டத்தூடேபரனடமாடுமே, (யிரு)

அங்குசமென்னவெழுமார்க்கம்போதத்திற்
றங்கியதொந்தியெனுந்தாளவொத்தினிற்
சங்கரன்மூலநாடிக்குட்டரித்தாடற்
பொங்கியகாலம்புகும்போகலில்லையே, (சய)

ஆனத்தியாடிப்பின்னவக்கூத்தாடிக்
கானத்தியாடிக்கருமத்திற்றரித்தாடி
மூனச்சுழுனையுளாடிமுடிவில்லா
ஞானத்துளாடிமுடித்தானென்றாதனே, (யிரு)

சத்திகளைந்துஞ்சிவபேதந்தானைந்து
முத்திகளெட்டுமுதலாம்பதமெட்டுஞ்
சித்திகளெட்டுஞ்சிவபதந்தானெட்டுஞ்
சத்திகளெட்டுசன்றானடமாடுமே, (யசு)

மேகங்களேழும்விரிகடற்றீவேழுந்
தேகங்களேழுஞ்சிவபாற்கரனேழுந்
தாகங்களேழுஞ்சாத்திகளேழு
மாகியந்தரந்தியடிக்கேடங்குமே, (யஎ)

---

பொற்பதிக்கூத்து.

தெற்குவடக்குக்கிழக்குமேற்குச்சிபி
லற்புதமானதோராஞ்சுமுகத்திலு

மொப்பில்பேரின்பத்துபயவுபயத்துட்
டற்பரனின்றுதனிநடஞ்செய்யுமே. (௰௮)

அடியாரரனடியானந்தங்கண்டோ
ரடியாரானவரத்தருளுற்றோ
ரடியார்பவரோயடியவராமா
லடியார்பொன்னம்பலத்தாடல்கண்டோரே. (௰௯)

அடங்காதவென்னையடக்கியடிவைத்
திடங்காண்பரானந்தத்தேயென்னையிட்டு
நடந்தான்செயுநந்திநன்ஞானக்கூத்தன்
படர்ந்தான்செய்துள்ளுட்படிந்திருந்தானே. (௨௰)

உம்பரிற்கூத்தனையுத்தமக்கூத்தனைச்
செம்பொற்றிருமன்றுட்சேவகக்கூத்தனைச்
சம்பந்தக்கூத்தனைத்தற்பரக்கூத்தனை
யின்புறநாடியென்னன்பில்வைத்தேனே. (௨௧)

மாணிக்கக்கூத்தனைவண்டில்லைக்கூத்தனைப்
பூணுற்றமன்றுட்புரிசடைக்கூத்தனைச்
சேணுற்றசோதிச்சிவானந்தக்கூத்தனை
யாணிப்பொற்கூத்தனையாருரைப்பாரே. (௨௨)

விம்மும்வெருவும்விழுமெழுமெய்சோருந்
தம்மையுந்தாமறியார்கள்சதிர்கெடுஞ்
செம்மைசிறந்ததிருவம்பலக்கூத்து
ளம்மலர்ப்பொற்பாதத்தன்புவைப்பார்கட்கே. (௨௩)

தேட்டறுஞ்சிந்தைதிசைப்பறும்பிண்டத்துள்
வாட்டறுக்கால்புந்தியாகிவருப்புல

ஞேட்டறுமாசையறுமுளத்தானந்த
நாட்டமுறுக்குறநாடகங்காணவே. (உச)

காளியோடாடிக்கனகாசலத்தாடிக்
கூளியோடாடிக்குவலயத்தேயாடி
நீடியநீர்தீகால்நீள்வானிடையாடி
நாளுறவம்பலத்தேயாடுநாதனே. (உரு)

மேருநடுநாடிமிக்கிடைபிங்கலை
கூருமிவ்வானிலிலங்கைக்குறியுறுஞ்
சாருந்திலைவனத்தண்மாமலயத்தூ
டேறுஞ்சுழுனையிவைசிவபூமியே. (உகா)

பூதலமேருப்புறத்தானதெக்கண
மோதுமிடைபிங்கலையொண்சுழுனையாம்
பாதிமதியோன்பயிற்றிருவம்பல
மேதமில்பூதாண்டத்தெல்லையினீறே. (உஎ)

---

பொற்றில்லைக்கூத்து.

அண்டங்களேழுமம்பொற்பதியாகப்
பண்டையாகாசங்களைந்தும்பதியாகத்
தெண்டினிற்சத்திதிருவம்பலமாகக்
கொண்டுபரஞ்சோதிகூத்துகந்தானே. (உஅ)

ஞானந்தமோகையாய்க்கூர்ந்தகுணமாய்
சிரானந்தப்பூரித்துத்தெள்ளிசைசேர்ந்து
பரானந்தபோகனைப்பூவையுத்தானு
நிரானந்தமாகிநிருத்தஞ்செய்தானே. (உகூ)

ஆதிபரனாடவங்கைக்கனலாட
வோதுஞ்சடைபாடவுன்மத்தமுற்றாடப்,
பாதிமதியாடப்பாரண்டமீதாட
நாதமோடாடினானாதாந்தநட்டமே. (௩௰)

கும்பிடவம்பலத்தாடியகோனாட
மம்பரனும்மகிலாண்டநட்டமாஞ்
செம்பொருளாகுஞ்சிவலோகஞ்சேர்ந்தற்ற
வும்பரமோனஞானந்தத்திலுண்மையே. (௩௧)

மேதினிமூவேழ்மிகுமண்டமோரேழு
சாதகமாகுஞ்சமயங்களாற்றெட்டு
நாதமொடந்தநடானந்தநாற்பதப்
பாதியோடாடிப்பரனிருபாதமே. (௩௨)

இடைபிங்கலையிமவானேடிலங்கை
நடுநின்றமேருநடுவாஞ்சுழுனை
கடவுந்தில்லைவனங்கைகண்டமூலம்
படர்வொன்றியென்னும்பரமாம்பரமே. (௩௩)

ஈருனகன்னிகுமரியேகாவிரி
வேருநவதீர்த்தமிக்குள்ளவெற்பேழுள்
பேருனவேதாகமமேபிறத்தலான்
மாறுததென்றிசைவையகஞ்சுத்தமே. (௩௪)

நாதத்தினிலாடிநாற்பதத்தேயாடி
வேதத்திலாடித்தழலந்தமீதாடிப்
போதத்திலாடிப்புவனமுழுதாடித்
தீதற்றதேவாதிதேவர்பிரானே. (௩௫

தேவரோடாடித்திருவம்பலத்தாடி
மூவரோடாடிமுனிசனத்தோடாடிப்
பாவினுளாடிப்பராசத்தியிலாடிக்
கோவினுளாடிடுங்கூத்தப்பிரானே. (௯௬)

ஆறுமுகத்திலதிபதிநானென்றுங்
கூறுசமயக்குருபரனென்றுந்
தேறினர்தெற்குத்திருவம்பலத்துளே
வேறின்றியண்ணல்விளங்கிநின்றானே. (௯௭)

அம்பலமாடரங்காகவதன்மீதே
எம்பரனுந்திருநாளினிசொளி
உம்பரமானந்தநாதத்துரோலையுட்
டம்பதமாய்நின்றுதான்வந்தருளுமே. (௯௮)

ஆடியகாலுமதிற்சிலம்போசையும்
பாடியபாட்டும்பலவானநட்டமுங்
கூடியகோலங்குருபரன்கொண்டாடத்
தேடியுளேகண்டுதீர்ந்தற்றவாறே. (௯௯)

இருதயந்தன்னிலெழுந்தபிராணன்
கரசரணாதிகலக்கும்படியே
வரதனமன்றினின்மாணிக்கக்கூத்தன்
குரவனுமெங்கணுங்கூத்துகந்தானே. (௱)

---

### அற்புதக்கூத்து.

குருவுருவன்றிக்குனிக்குமுருவ
அருவுருவாவதுமந்தவருவே

திரிபுரையாகித் திகழ்தருவாளு
முருவருவாகுமுமையவடானே. (௪௪)

திருவழியாவது சிற்றம்பலத்தே
குருவடிவுள்ளாக்குனிக்குமுருவை
யுருவருவாவது முற்றுணர்ந்தோர்க்கு
வருள்வழியாவது மவ்வழிதானே. (௪௨)

நீருஞ்சிரசிடைபன்னிரண்டங்குல
மோடுமுயிரொழுந்தோங்கியுதித்திட
நாடுமின்னுதாந்தநம்பெருமானுகந்
தாடுமிடந்திருவம்பலந்தானே. (௪௩)

வளிமேகமின்வில் லுவானகவோசை
தெளியவிசும்பிற்றிகழ்தருவாறுபோல்
களியொளியாறுங்கலந்துடன்வேறு
வொளியுருவாகியொளித்துநின்றானே. (௪௪)

தீமுதலைந்துந்திசையெட்டுங்கீழ்மேலு
மாயுமறிவினுக்கப்புறமானந்த
மாயைமாமாயைகடந்துநின்றார்காண
நாயகனின்றுநடஞ்செய்யும்வாறே. (௪௫)

கூத்தல்கலந்திடுங்கோல்வளையாளொடுங்
கூத்தல்கலந்திடுங்கோதிலாவானந்தங்
கூத்தல்கலந்திடுங்கோதிலாஞானத்துக்
கூத்தனுங்கூத்தியுங்கூத்ததின்மேலே. (௪௬)

இடங்கொண்டசத்தியுமெந்தைபிரானு
மிடங்கொண்டுநின்றமையானுமறிந்தேன்

படங்கொடுநின்றவிப்பல்லுயிர்க்கெல்லா
மடங்கலுந்தாமாய்நின்றாடுகின்றாரோ. (சஎ)

சத்திவடிவுசகலவானந்தமு
மொத்தவானந்தமுமையவள்மேனியாஞ்
சத்திவடிவுசகளத்தெழுந்திரண்
டொத்தவானந்தமொருநடமாமே. (சஅ)

நெற்றிக்குநேரோபுருவத்திடைவெளி
யுற்றுற்றுப்பார்க்கவொளிவிடுமந்திரம்
பற்றுக்குப்பற்றாய்ப்பரமனிருந்திடஞ்
சிற்றம்பலமென்றுசேர்ந்துகொண்டேனே. (சக)

அண்டங்கடந்துவமாகிச்சதாசிவந்
தண்டினிற்சாந்தவிசாப்பவியாதனந்
தெண்டினிலேழுஞ்சிவாசனமாகவே
கொண்டுபரஞ்சோதிகூத்துகந்தானே. (ருo)

மன்றுநிறைந்தவிளக்கொளிமாமலர்
நன்றுதானிதழ்நாலொடுநூறவை
சென்றதுதானொருபத்திருநூறுள
நின்றதுதானெடுமண்டலமாமே. (ருக)

அண்டமெழுகோடிபிண்டமெழுகோடி
தெண்டிரைசூழ்ந்ததிசைகளெழுகோடி
யெண்டிசைசூழ்ந்தவிலிங்கமெழுகோடி
யண்டஞ்செயுமாலயந்தானே. (ருஉ)

ஆகாசமாமுடலங்காருமுயலக
மேகாசமாந்திசையெட்டுந்திருக்கைகண்

மோகாயமுக்கண்கள்மூன்றொளிதானாகி
மாகாயன்மன்றுள்நடஞ்செய்கின்றானே. (௫௩)

அம்பலமாவதகிலசராசர
மம்பலமாவதுவாதிப்பிரானடி
யம்பலமாவதுவப்புத்தீமண்டல
மம்பலமாவதுவஞ்செழுத்தாமே. (௫௪)

கூடியதிண்முழவங்குழலோமென்று
வாடியமானிடராதிப்பிரானென்ன
நாடியநற்கணமாரம்பல்பூதங்கள்
பாடியவாறொருபாண்டரங்காமே. (௫௫)

அண்டத்திற்றேவர்களப்பாலைத்தேவர்க
ளெண்டிசைசூழ்புவிக்குள்ளுள்ளதேவர்கள்
புண்டரிகப்பதப்பொன்னம்பலக்கூத்து
கண்டுசேவித்துக்கதிபெறுவார்களே. (௫௬)

புளிக்கண்டவர்க்குப்புனலூறுமாபோற்
களிக்குந்திருக்கூத்துக்கண்டவர்க்கெல்லா
மளிக்குமருட்கண்ணீர்சோர்நெஞ்சுருக்கு
மொளிக்குளானந்தத்தமுதூறுமுள்ளத்தே. (௫௭)

திண்டாடிவிழ்கைசிவானந்தமாவது
வுண்டார்க்குணர்வுண்டாமுன்மத்தஞ்சித்திக்குங்
கொண்டாடுமன்றுட்குளிக்குந்திருக்கூத்து
கண்டார்வருங்குணங்கெட்டார்க்குமொக்குமே. (௫௮)

அங்கிதமருகமக்குமாலைபாச
மங்குசஞ்சூலங்கபாலமுடன்ஞானநீ

தங்குமபயந்தருநீலமும்முடன்
மங்கையோர்பாகமாய்மாநடமாடுமே. (௬௯)

ஆடல்பதினொருறுப்புமடைவாகக்
கூடியபாதஞ்சிலம்புகைக்கொள்துடி
நீடியநாதம்பராற்பரநேயத்தே
யாடியநந்திபுறமகத்தானே. (௭௰)

ஒன்பதுமாடவொருபதினொருட
வன்புறமார்க்கங்களாறுமுடனுட
வின்புறுமேழினுமேழைம்பத்தாறுட
னன்பதுமாடினானந்தக்கூத்தே (௭௧)

ஏழினிலேழாயிரத்திரெழுத்தேழதா
யேழினிலொன்றாயிழிந்தமைந்தொன்றுமி
யேழினிற்சன்மார்க்கமெங்கள்பரஞ்சோதி
யேழிசைநாடகத்தேயிசைந்தானே. (௭௨)

மூன்றினிலஞ்சாகிமுந்நூற்றறுபதாய்
மூன்றினிலாறாய்முதற்பன்னிர்மூலமாய்
மூன்றினிக்கமுடிவாகிமுந்தியே
மூன்றினுமாடினன்மோகாந்தக்கூத்தே. (௭௩)

தாமுடிவானவர்தம்முடிமேலுறை
மாமணியீசன்மலரடித்தாளிணை
வாமணியன்புடையார்மனத்துள்ளெழு
மாமணிஞாலங்கடந்துநின்றானே. (௭௪)

புரிந்தவனாடிற்புவனங்களோடுந்
தெரிந்தவனும்மைவெங்கள்சிந்தை

பிரிந்தவனுடிற்பல்பூதங்களாடு
மெரிந்தவனுடல்கண்டின்புற்றவாறே. (௬௫)

ஆதிநடஞ்செய்தானென்பர்களாதர்க
ளாதிநடஞ்செய்கையாருமறிகில
ராதிநடமாடலாருமறிந்தபி
ளுதிநடமாடலாமருட்சத்தியே. (௬௬)

ஒன்பதோடொன்பதாமுற்றவிருப்பத்
தன்புறுகோணமசிபதத்தாடிடத்
துன்புறுசத்தியுட்டோன்றிநின்றுடமே
யன்புறவெந்தைநின்றாடலுற்றானே. (௬௭)

தத்துவமாடச்சதாசிவந்தானுடச்
சித்தமுமாடச்சிவசத்திதானுட
வைத்தசராசரமாடமறையாட
வத்தனுமாடினானந்தக்கூத்தே. (௬௮)

இருவருங்காணவெழிலம்பலத்தே
யுருவோடருவோடுருபரரூபமாய்த்
திருவருட்சத்திக்குள்சித்தனானந்த
னருளுருவாகநின்றாடலுற்றானே. (௬௯)

சிவமாடச்சத்தியுமாடச்சகத்தி
லவமாடவாடாதவம்பரமாட
நவமானதத்துவநாதர்தமாடச்
சிவமாடும்வேதாந்தச்சித்தாந்தத்துள்ளே. (௭௰)

நாதத்தினந்தமுநற்போதவந்தமும்
வேதத்தினந்தமுமெய்ச்சிவானந்தமுந்

நாதற்றநல்லசதாசிவானந்தத்து
நாதப்பிரமஞ்சிவநடமாகுமே. (௭௧)

சிவமாதியவர்திண்டாட்டமுந்தீரத்
தவமார்பசுபாசமாங்கேதனித்துத்
தவமாம்பரனென்றுந்தானாகவாடுந்
தவமாஞ்சிவானந்தத்தோர்ஞானக்கூத்தே. (௭௨)

கூடிநின்றொருகாலத்துத்தேவர்கள்
வீடநின்றான்விகிர்தாவென்னுநாமத்தைத்
தேடநின்றாய்திகழுஞ்சுடர்மூன்றொளி
யாடநின்றானென்னையாட்கொண்டவாறே. (௭௩)

நாதத்துவங்கடந்தாதிமறைநம்பி
பூதத்துவத்தேபொலிந்தின்பமெய்தினர்
நேதத்துவமுமவற்றொடுநேதியும்
பேதப்படாவண்ணம்பின்னிநின்றானே. (௭௪)

ஆனந்தமானந்தமென்பரறிவில
ரானந்தமாநடமாருமறிகில
ரானந்தமாநடமாருமறிந்தபின்
னானந்தமற்றிடமானந்தமாமே. (௭௫)

திருந்துநற்சீயென்றுதறியகையு
மருந்தவர்வாவென்றணைத்தமலர்க்கையும்
பொருந்திலமைப்பிலியவ்வென்றபொற்கையுந்
திருந்தத்தீயாந்திருநிலமவ்வே. (௭௬)

மருவுந்துடியுடன்மன்னியவீச்சு
மருவியவப்புமன்றுடன்கையுங்

கருவின் மிறித்தகமலப்பதமு
முருவில்சிவாயநமவெனவோதே. (எஎ)

அரன்றுடிதோற்றமமைத்தறிதியா
மரனங்கிதன்னிலறையிற்சங்கார
மரனுற்றணைப்பிலமருந்திரோதாயி
யரனடியென்றுமனுக்கிரகமென்னே. (எஅ)

தீத்திரட்சோதிதிகழொளியுள்ளொளி
கூத்தனைக்கண்டவக்கோமளக்கண்ணினள்
மூர்த்திகண்மூவர்முதல்வனிடைசெல்லப்
பார்த்தனள்வேதங்கள்பாடினள்தானே. (எகூ)

நந்தியையெந்தையைஞானத்தலைவனை
மந்திரமொன்றுண்மருவியதுகடந்
தந்தரவானத்தினப்புறத்தப்பா
சுந்தரக்கூத்தனையென்சொல்லும்வாறே. (அ0)

சீயகுருநந்திதிருவம்பலத்திலே
யாயுறுமேனியையாருமறிகிலர்
தீயுறுசெம்மைவெளுப்பொடுமத்தன்மை
யாயுறுமேனியணைபுகலாமே. (அக)

தானனசத்தியுந்தற்பரையாய்நிற்குந்
தானும்பரற்குமுயிர்க்குந்தருமிச்சை
ஞானக்கிரியைபேதநடத்துநடந்திரு
ளானலானடிநேயத்ததாமே. (அஉ) ஆ ௱௫

## ஆகாசப்பேறு.

உள்ளத்துளோமெனவீசனொருவனை
யுள்ளத்துளேயங்கியாயவொருவனை
யுள்ளத்துளேநிதியாயவொருவனை
யுள்ளத்துளேயுடலாகாயமாமே. (௧)

பெருநிலமாயண்டமாயண்டத்தப்பாற்
றருநிலமாய்நின்றகொள்கையனீசன்
பெருநிலமாய்நின்றுதாங்கியதாளோ
னொருநிலையாய்நின்றவாதிப்பிரானே. (௨)

அண்டவொளியுமகண்டவொளியுடன்
பிண்டவொளியாற்பிதற்றும்பெருமையை
யுண்டவெளிக்குள்ளொளிக்குளொளித்தது
கொண்டகுறிகைக்குலத்ததுதானே. (௩)

பயனுறுகன்னியர்போகத்தினுள்ளே
பயனுறுமாதிப்பரஞ்சுடர்ச்சோதி
யயனொடுமாலறியாவகைநின்றிட்
டியர்நெறியாயொளியொன்றதுவாமே (௪)

அறிவுக்கறிவாமகண்டவொளியும்
மறியாவலத்தினிற்பேரொளிமூன்று
மறியாதடங்கிடிலத்தனடிக்குப்
பிறியாதிருக்கிற்பெருங்காலமாமே. (௫)

ஆகாசவண்ணமமரர்தலைக்கொழுந்
தாகாசமாகணமிட்டங்கிருந்தவ

ளுகாசவண்ணமமர்ந்துநின்றப்புற
மாகாசமாயங்கிவண்ணனுமாமே. (௬)

உயிர்க்கின்றவாறுமுலகமுமொக்க
வுயிர்க்கின்றவுள்ளொளிச்சேர்கின்றபோது
குயிற்கொண்டபேதைகுலாவியுலாவி
வெயிற்கொண்டென்னுள்ளம்வெளியதுவாமே. (௭)

நணுகிலகல்கிலனுதனுலகத்
தணுகிலகன்றபெரும்பதிநந்தி
நணுகியமின்னொளிசோதிவெளியைப்
பணியினமுதம்பருகலுமாமே. (௮)

புறத்துளாகாசம்புவனமுலக
மகத்துளாகாசமெம்மாதியறிவு
சிவத்துளாகாசஞ்செழுஞ்சுடர்ச்சோதி
சகத்துளாகாசந்தானஞ்சமாதியே. (௯) ஆ. ௱கூச.

## ஞானோதயம்.

மனசந்தியிற்கண்டமன்னனவாகுஞ்
சனவுறவானந்தங்காண்டலதன்ன
வினவுறவானந்தமீதொழிவென்ப
வினமுற்றானந்தியானந்தமிரண்டே. (௧)

கரியட்டகையன்கபாலங்கையேந்தி
யெரியுமிளம்பிறைசூடுமெம்மானை
யரியன்பெரியனென்றாட்பட்டதல்லாற்
கரியன்கொல்சேயன்கொல்காண்கின்றிலனே. (௨)

மிக்காரமுதுண்ணநஞ்சுண்டமேலவன்
றக்காருளாத்தநவநெறியேசென்று
புக்காலருளும்பொன்னுளாஞானத்தை
நக்கார்சழல்வழிநாடுமினீரே. (௩)

விளக்கைப்பிளந்துவிளக்கினையேற்றி
விளக்கினுக்குள்ளேவிளக்கினைத்தூண்டி
விளக்கில்விளக்கைவிளக்கவல்லார்க்கு
விளக்குடையான்கழல்மேவலுமாமே. (௪)

தத்துவமெங்குண்டுதத்துவனங்குண்டு
தத்துவமெங்கில்லைதத்துவனங்கில்லை
தத்துவஞானத்தின்றன்மையறிந்தபின்
றத்துவனங்கேதலைப்படுந்தானே. (௫)

விசும்பொன்றுதாங்கியமெய்ஞ்ஞானத்துள்ளே
யசும்பினின்றூறியதாரமுதாகும்
பசும்பொன்றிகழும்படர்சடைமீதே
குசும்பமலர்க்கந்தங்கூடிநின்றானே. (௬)

முத்தில்வயிரத்தின்முன்னீர்ப்பவளத்தின்
கொத்தும்பசும்பொன்னின்றூவொளிமாணிக்க
மொத்துயரண்டத்துள்ளமர்சோதியை
யெத்தன்மைவேறென்றுகூறுசெய்வீரே. (௭)

நானென்றுந்தானென்றுநாடினேனாடலு
நானென்றுந்தானென்றிரண்டில்லையென்பது
நானென்றஞானமுதல்வனேநல்கினா
னானென்றுநானுநினைப்பொழிந்தேனே. (௮)

ஞானத்தினல்னெறிநாதாந்தநன்னெறி
ஞானத்தினன்னெறிநானென்றறிவோர்தன்
ஞானத்தினல்வியோகநன்னிலையேநித்தன்
ஞானத்தினன்மோனநாதாந்தவேதமே. (கூ)

உய்யவல்லார்கட்குயிர்சிவஞானமே
யுய்யவல்லார்கட்குயிர்சிவத்தெய்வமே
யுய்யவல்லார்கட்கொடுக்கம்பிரணவ
முய்யவல்லாரறிவுள்ளறிவாமே. (ய)

காணவல்லார்க்கவன்கண்ணின்மணியொக்குங்
காணவல்லார்க்குக்கடலினமுதொக்கும்
பேணவல்லார்க்குப்பிழைப்பிலன்பேர்நந்தி
யாணவல்லார்க்கேயவன்றுணையாமே. (யக)

ஓமெனுமோரெழுத்துண்ணின்றவோசைபோல்
மேலின்றதேவர்விரும்பும்விழுப்பொருள்
சேய்நின்றசெஞ்சுடரெம்பெருமானடி
யார்நின்றதேவரகம்படியாமே. (யஉ) ஆ ௨௭௬.

---

சத்தியஞானனந்தம்.

எப்பாழும்பாழுமியாவுமாயன்றாகி
முப்பாழுங்கீழுளமுப்பாழுமுன்னியே
யிப்பாழுமின்னவாமென்பதிலாவின்பத்
தற்பரஞானந்தந்தானதுவாகுமே. (க)

தொம்பதந்தற்பதஞ்சொன்னதுரியம்போ
னம்பியமூன்றுந்துரியத்துநன்றும

மம்புவியுஞ்ஞுவதிருக்கமப்பாலைச்
செம்பொருளாண்டருள்சீர்நந்திதானே. (௨)

மன்னுஞ்சத்தியாதிமணியொளிமாசோலை
பன்னந்தோடொப்பமிடலொன்றுமாறது
மின்னியவுற்பலமொண்சீர்திறமணம்
பன்னியசோலைபகாருமானதே. (௩)
சத்திசிவன்பரஞானமுஞ்சாற்றுங்கா
லுய்த்தவனந்தஞ்சிவமுயரானந்தம்
வைத்தசொரூபத்தசத்திவருகுரு
வுய்த்தவுடலிவையுற்பலம்போலுமே. (௪)

உருவுற்பலநிறமொண்மணஞ்சோலை
தாதிப்பபோலுயிர்தற்பரந்தன்னின்
மருவச்சிவமென்றமாமுப்பதத்தின்
சொருபத்தன்சத்தியாதிதோன்றநின்றனை] (௫)
நினையுமளவினெகிழவணங்கிப்]
புனையிலவனைப்பொதியலுமாகு
மெனையுமெங்கோனந்திதன்னருட்கூட்டி
நினையுமளவினினைப்பித்தனனே. (௬)

பாலொடுதேனும்பழத்துளிரதமும்
வாலியபேரமுதாகுமதுரமும்
போலுந்துரியம்பொடிபடவுள்புகச்
சீலமிலாக்கொன்றுநற்தகைகிற்மே. (௭)

அமரத்தவம்படைத்தவிடங்கடத்து
நமரத்துநிற்றனிமையனீசன்

பவளத்துமுத்தும்பணிமொழிமாதர்
துவளற்றமேசாதிதுடர்ந்துநின்றனே. (அ)

மத்திமமாறுமாற்றிமலநீக்கிச்
சுத்தமதாகுந்துரியத்துரிசற்றுப்
பெத்தமறச்சிவமாகிப்பிறழ்வுற்றுச்
சத்தியஞானந்தஞ்சார்ந்தனல் ஞானியே. (கூ)

சிவமாயவமானமும்மலந்தீரப்
பவமானமுப்பாழைப்பற்றறப்பற்றத்
தவமானசத்தியஞானானந்தத்தே
துவமார்துரியஞ்சொரூபமதாமே. (ய) ஆ-ா அ௯

சொரூபவுதயம்.

பரமகுரவன்பரமெங்குமாகித்
திரமுறவெங்கணுஞ்சேர்ந்தொழிவற்று
நிரவுசொரூபத்துணீடுஞ்சொரூப
மரியதுரியத்தணைந்துநின்றனே. (க)

குலைக்கின்றநீரிற்குவலயநீரு
மலைக்கின்றகாற்றுமனலோடாகாச
நிலத்திடைவானிடைநீண்டகன்றனை
வளைத்துவலஞ்செயுமாறறியேனே. (உ)

அங்குநின்றனயன்மால்முதற்றேவர்க
ளெங்குநின்றருமிறைவனென்றேத்துவர்
தங்கிநின்றன்றனிநாயகனெம்மிறை
யாங்கிநின்றன்புவனபதிதானே. (௩)

சமையச்சவுந்தலைட்டியாமற்
சமையற்றகாமாந்திகாரணமெட்டுந்
திமிரச்செயதுந்தெளிவுடனின்றோ
ரமரர்க்கதிபதியாகிநிற்போரே. (௪)

மூவகைத்தெய்வத்தொருவன்முதலுரு
வாயதிவருமதுபோலனுப்பரன்
சேயசிவமுத்துரியத்துச்சீர்பெற
வேயுநெறியென்றிறைநூலியம்புமே. (௫)

உருவன்றியேநின்றுருவம்புணர்க்குங்
கருவன்றியேநின்றுதான்கருவாகு
மருவன்றியேநின்றமாயப்பிரானைக்
குருவன்றியாவர்க்குங்கூடவொண்ணாதே. (௬)

உருவநினைப்பவர்க்குள்ளுறுஞ்சோதி
யுருவநினைப்பவரூழியுங்காண்ப
ருருவநினைப்பவரும்பருமாவ
ருருவநினைப்பவருலகத்தில்யாரே. (௭)

பரஞ்சோதியாகும்பதியினைப்பற்றுப்
பரஞ்சோதியென்னுட்படிந்ததற்பின்னைப்
பரஞ்சோதியுண்ணான்படியப்படியப்
பரஞ்சோதிதன்னைப்பறையக்கண்டேனே. (௮)

சொரூபமுருவங்குணந்தொல்விழுங்கி
யரியவுற்பலமாமாறுபோல
மருவியசத்தியாதிநான்குமதித்த
சொரூபக்குரவன்சுகோதயத்தானே. (௯)

உலையற்றவானந்தமோனசொருபத்தன்
கலையற்றசத்தியாதிகாணிலகார
மருவுற்றுகாரமகாரமதாக
வுலையற்றதாரத்திலுள்ளொளியாமே. (௰)

தலைநின்றதாழ்வரைமீதுதவஞ்செய்
மூலைநின்றமாதறிமூர்த்தியையானும்
புலைநின்றபொல்லாப்பிறவிகடந்து
கலைநின்றகள்வனிற்கண்டுகொண்டேனே. (௰௧)

ஆமாறறிந்தேனகத்தினரும்பொருள்
போமாறறிந்தேன்புகுமாறுமீதென்றே
யேமாப்பதில்லையினியோரிடரில்லை
நாமாமுதல்வனுநரனெனலாமே. (௰௨) ௨௲௱௯௪

---

## உளம்.

செற்றிலென்சிவிலெல்செஞ்சாந்தணியிலென்
மத்தகத்தேயுளிதாட்டிமறிக்கிலேன்
வித்தகனந்திவிதிவழியல்லது
தத்துவஞானிகடன்மைகுன்றாமோ. (௧)

தான்முன்னஞ்செய்தவிதிவழிதானல்லால்
வான்முன்னஞ்செய்தங்குவைத்ததோர்மாட்டில்லை
கோன்முன்னஞ்சென்னிகுறிவழியேசென்று
நான்முன்னஞ்செய்தநேநன்னிலமானதே. (௨)

ஆறிட்டநுண்மணலாறெசுமவாதே
கூறிட்டுக்கொண்டுசுமந்தறிவாரில்லை

நீறிட்டமேனிதிமிர்சடைநந்தியைப்
பேறிட்டென்னுள்ளம்பிரியகிலாவே. (ங)

வானிற்பிடிக்கிலென்மாகடற்பொங்கிலென்
கானிற்புலிசெந்தீக்கலந்துடன்வேகிலென்
றானொன்றிமாருதஞ்சண்டமடிக்கிலென்
னானின்றுநாதனைநாடுவனானே. (ச)

ஆனைதுரக்கிலென்னம்பூடறுக்கிலென்
கானத்தழுவைகலந்துவளைக்கிலென்
னேனைப்பதியினிலெம்பெருமான்வைத்த
ஞானத்துழவினைநானுழுவேனே. (ரு)

கூடுகெடின்மற்றோர்கூடுசெய்வானுளன்
றுடுகெடினுநமர்கெடுவாரில்லை
வீடுகெடின்மற்றோர்வீடுபுக்காலொக்கும்
பாடதுநந்திபரிசறிவார்க்கே. (சு) ஆ உாசு.

---

## சிவதெரிசனம்.

சிந்தையதென்னச்சிவனென்னவேறில்லை
சிந்தையினுள்ளேசிவனும்வெளிப்படுஞ்
சிந்தைதெளியத்தெளியவல்லார்கட்குச்
சிந்தையினுள்ளேசிவனிருந்தானே. (க)

வாக்குமனமுமறைந்தமறைப்பொரு
ணோக்குமின்னோக்கப்படும்பொருணுண்ணிது
போக்கொன்றுமில்லைவரவில்லைகேடில்லை
யாக்குமந்தனையாய்ந்துகொள்வார்க்கே. (உ)

பரனாய்ப்பராபரனாகியபார்சென்
றரனாய்வழக்கறவொண்சுடர்தானாய்த்
தரனாய்த்தனாதெனவாறறிவொண்ணா
வரனாயுலகிலருள்புரிந்தானே. (௯) ஆக உ௱எ.

## சிவரூபதெரிசனம்.

ஓதுமயிர்க்காலொறுமமுதூறிய
பேதமபேதம்பிறழாதவானந்த
மாதிச்சொரூபங்கண்மூன்றகன்றப்பாலை
வேதகமோதுஞ்சொரூபிதன்மேன்மையே. (க)

உணர்வுமவனேயுயிருமவனே
புணருமவனேபுலவியவனே
யிணருமவன்றன்னையெண்ணலுமாகான்
றுணரின்மலர்க்கந்தந்துன்னிநின்றானே. (உ)

துன்னிநின்றானைத்துன்னிமுன்னாவிரு
முன்னியவர்தங்குறையைமுடித்திடு
மன்னியசேவ்விமறையவன்மாதவன்
சென்னியுணின்றதோர்தேற்றத்தனாமே. (௩)

மின்னுற்றசிந்தைவிழித்தேன்விழித்தலுந்
தன்னுற்றசோதிதலைவனிணையிலி
பொன்னுற்றமேனிப்புரிசடைநந்தியு
மென்னுற்றறிவனாமென்விழித்தானே. (௪)

சத்தியஞானத்தனிப்பொருளானந்தஞ்
சித்தந்திரிவில்லாச்சிவானந்தப்பேரொளி

சுத்தப்பிரமதுரியந்துரியத்து
ளுய்த்ததுரியத்துறுபேரொளியே. (௫)

பரனல்லநீடும்பராபரனல்ல
வரனல்லமீதுணரொண்சுடரல்ல
தரனல்லதானவையாயல்லவாகு
மரனல்லவானந்தத்தப்புறத்தானே. (௬)

முத்தியுஞ்சித்தியுமுற்றியஞானத்தோன்
பத்தியுணின்றுபரந்தன்னுணின்றுமா
சுத்தியுணின்றோர்க்குத்தத்துவங்கூடலாற்
சுத்தியகன்றோர்சுகானந்தபோதரே. (௭)

துரியவதீதஞ்சொல்லறும்பாழா
மரியதுரியமதீதம்புரியில்
விரியுங்குவியும்விள்ளாமிளிருந்தன்
னுருவுந்திரியுமுரைப்பதெவ்வாறே. (௮) ஆக உரு௪௦௮.



முத்திபேதம், கருமதிருவாணம்.

ஓதியமுத்தியடைவேயுயிர்பர,
ம்பதமிலச்சிவமெய்தந்துரியமோ-
டாதிசொரூபச்சொரூபத்ததாகவே
பேதமிலாதிருவாணம்பிறந்ததே. (௧)

பற்றற்றவர்பற்றிநின்றபரம்பொருள்
கற்றற்றவர்கற்றுக்கருதியகண்ணுதல்
சுற்றற்றவர்சுற்றிநின்றவென்சோதியைப்
பெற்றற்றவர்கள்பிறப்பெழிந்தாரே.(௨) ஆக உரு௪௦௯.

## சூனியசம்பாஷணை.

காயம்பலகைகவறைந்துகண்மூன்று
யாயம்பொருவதோரைம்பத்தோரக்கள
மேயபெருமானிருந்துபொருகின்ற
மாயக்கவற்றின்மறைப்பறியேனே. (௧)

தூறுபடர்ந்துகிடந்ததுதாநெறி
மாறிக்கிடக்கும்வகையறிவாரில்லை
மாறிக்கிடக்கும்வகையறிவாளர்க்கு
ஊறிக்கிடந்ததென்னுள்ளன்புதானே. (௨)

ஆறுதெருவிலகப்பட்டசந்தியிற்
சாறுபடுவனநான்குபனையுள
வேறற்கரியதோரோணியிட்டப்பனை
யேறலுற்றேன்கடலேழுங்கண்டேனே. (௩)

வழுதலைவித்திடப்பாகல்முளைத்தது
புழுதியைத்தோண்டினேன்பூசணிபூத்தது
தொழுதுகொண்டோடினார்தோட்டக்குடிகள்
முழுதும்பழுத்ததுவாழைக்கனியே. (௪)

ஐயென்னும்வித்தினிலானைவிளைப்பதோர்
செய்யுண்டுசெய்யின்றெளிவறிவாரில்லை
மையணிகண்டன்மனம்பெறினந்நிலம்
பொய்யொன்றுமின்றிப்புகவெளிதாமே. (௫)

பள்ளச்செய்யொன்றுண்டுபாழ்ச்செய்யிரண்டுள
கள்ளச்செய்யங்கேகலந்துகிடந்தது

வுள்ளச்செய்யங்கேயுழவுசெய்வார்கட்கு
வெள்ளச்செய்யாகிவிளைந்ததுதானே. (௬)

மூவணையேருழுமூவருழக்காணி
நாமணிகோலித்தறியுறப்பாய்ந்திடு
நாவணைகோலிநடுவிற்செறுவுழார்
காலணைகோலிக்களருழுவாரே. (௭)

எற்றமிரண்டுளவேழுதுரவு
மூத்தானிறைக்கவிளையான்படுத்தநீர்
பாத்தியிற்பாயாதுபாழ்ப்பாய்ந்துபோயிடிற்
கூத்திவளர்த்ததோர்கோழிப்புள்ளாமே. (௮)

பட்டிப்பசுக்களிருபத்துநாலுள
குட்டிப்பசுக்களோரேழுளஐந்துள
பட்டிப்பசுக்கள்குடப்பாற்சொரியினும்
பட்டிப்பசுவேபனவற்குவாய்த்ததே. (௯)

ஈற்றுப்பசுக்களிருபத்துநாலுள
ஊற்றுப்பசுக்களொருகுடம்பால்போதும்
காற்றுப்பசுக்கள்கரந்துண்ணுங்காலத்து
மாற்றுப்பசுக்கள்வரவறியோமே. (௰)

தட்டானகத்திற்றலையானமச்சின்மேல்
மொட்டாயெழுந்ததுசெம்பால்மலர்ந்தது
வட்டப்படவேண்டிவாய்மைமடித்திட்டுத்
தட்டானதனைத்தகைத்துகொண்டானே. (௰௧)

அரிக்கின்றநாற்றங்காலல்லற்சேழனி
திரிக்கின்றவொட்டஞ்சிக்கெனக்கட்டி

வரிக்கின்றநல்லனறவையைப்பூட்டில்
விரிக்கின்றவெள்ளரிவித்துவித்தாமே. (௰௨)

இடர்க்கொண்டுதூவிபெருவிட்டுவித்திக்
கிடர்க்கொண்டுபூட்டிக்களறிமுளையை
மிடர்க்கொண்டுசோறட்டுமெள்ளவிழுங்கா
ரடர்க்கொண்டுசெந்நெலறுக்கின்றவாறே. (௰௩)

விளைந்துகிடந்ததுமேலைக்குவித்தது
விளைந்துகிடந்ததுமேலைக்குக்காதம்
விளைந்துவிளைந்துவிளைந்துகொள்வார்க்கு
விளைந்துகிடந்ததுமேவுமுக்காதமே. (௰௪)

களருழுவார்கள்கருத்தையறியோங்
களருழுவார்கள்கருதலுமில்லை
களருழுவார்கள்களரின்முளைத்த
வள்ளிளவஞ்சியின்வாய்த்தலுமாமே. (௰௫)

கூட்பிடுகொள்ளாக்குறுநரிக்கொட்டகத்
தாட்பிடுபாசத்தையங்கியுள்வைத்திட்டு
நாட்படநின்றுநலம்புகுந்தாயிழை
யேற்படவில்லத்தினிதிருந்தானே. (௰௬)

மலைமேன்மழைபெய்யமான்கன்றுதுள்ளக்
குலைமேலிருந்தகொழுங்கனிவீழ
வுலைமேலிருந்தவுறுப்பெனக்கொல்லன்
முலைமேலமிர்தம்பொழியவைத்தானே. (௰௭)

பாரிப்பானகத்திலேபாற்பசுவைந்துண்டு
மேய்ப்பாருமின்றிவெறித்துத்திரிவன

மேய்ப்பாருமுண்டாய்வெறியுமடங்கினாற்
பார்ப்பான்பசுவைந்தும்பாலாச்சொரியுமே. (௰௮)

ஆமாக்களைந்துமரியேறுமுப்பதுந்
தேமாவிரண்டொடுநிற்பிலியொன்பதுந்
தாமாக்குரங்கொளிற்றம்மனத்துள்ளன
மூவாக்கடாவிடின்மூட்டுகின்றனே. (௰௯)

எழுதாதபொத்தகத்தேட்டின்பொருளைத்
தெருளாதகன்னிதெளிந்திருந்தோத
மலாதமாட்டின்மணத்தின்மதலைப்
பிறவாதவன்றுமணமுண்டவாறே. (௨௰)

போகின்றபொய்யும்புகுகின்றபொய்வித்துங்
கூகின்றநாவலின்கூழைத்தருங்கனி
யாகின்றபைங்கூழவையுண்ணுமைவரும்
வேகின்றகூரைவிருத்திபெற்றாரே. (௨௧)

மூங்கிலெழுந்ததோர்வேப்புண்டுவேம்பினிற்
சார்ந்துகிடந்தபனையிலோர்பாம்புண்டு
பாம்பைத்துரந்திட்டுவேம்பைத்தின்பாரின்றி
வேம்புகிடந்துவெடிக்கின்றவாறே. (௨௨)

பத்தப்பரும்புலியானைபதினஞ்சு
வித்தகனாவர்வினோதகரோஞ்ச
ரத்தகுமூவராறுவர்மருத்துவ
ரத்தலையைவாமர்ந்துநின்றாரே. (௨௩)

இரண்டுடாவுண்டுவில்லூரினுள்ளே
யிரண்டுடாவுக்குமொன்றேதழும்பு

னிரண்டுகடாவுமிருத்திப்பிடிக்கி
லிரண்டுகடாவுமொருகடாவாமே, (டிசு)

ஒத்தமனக்கொல்லையுள்ளேசமன்கட்டிப்
பத்திவலையிற்பருத்திநிறுத்தலாள்
முத்தக்கயிறுகமூவர்களூரினுள்
ணித்தம்பொருதநிரம்பநின்றாரே. (உ0)

கூகையும்பாம்புங்கிளியொடுபூனையு
நாகையும்பூழுநடுவிலுறைவன
தாகையைக்கூகைநனாகநிறுத்தலுங்
கூகையைக்கண்டெலிகூப்பிடுமாறே. (உகூ)

குலைக்கின்றநன்னகையாங்கொங்குழக்கி
விலைக்கின்றவெள்ளெலிமூன்றுகுணந்தா
னுலைக்குப்புறமெனிமேலாடுமிருக்கும்
புலைக்குப்பிறந்தவைபோகின்றவாறே. (உஎ)

காடுபுக்காரினிகாணார்கடுவெளி
கூடுபுக்கானதுவைந்துகுதிரையு
மூடுபுக்கானதுவாறுளவொட்டகு
மூடுபுதாவிடின்மூவணையாமே. (உஅ)

கூறையுஞ்சோறுங்குழாயகத்தெண்ணெயுங்
காறையுநாணும்வளையலுங்கண்டவர்
பாறையிலுற்றபறக்கின்றசீலைபோ
லாறைக்குழியிலழுந்துகின்றாரே. (உகூ)

துருத்தியுள்ளக்கனைதோன்றுமலைமேல்
விருத்திகண்காணிக்கப்போவார்முப்போதும்

வருத்தியுண்ணின்றமலையைத்தவிர்ப்பா
ரொருத்தியுள்ளாளவளூரறியோமே. (௬௰)

பருந்துங்கிளியும்படுபறைகொட்டத்
திருந்தியமாதர்திருமணப்பட்டார்
பெருந்தவப்பூதம்பெறலுருவாகு
மிருந்தியபேறினியின்புறுவாரே, (௬௧)

கூடும்பறவையிலாகொத்திமற்றத
னூடுபுக்குண்டியறுக்குறிலென்னெக்குஞ்
குடெறிநெய்யுண்டுமைகொன்றிடுகின்ற
பாடறிவார்க்குப்பயனெளிதாமே, (௬௨)

இலையில்லைபூவுண்டினவண்டிங்கில்லை
தலையில்லைவேருண்டுதாளில்லைபூவின்
குலையில்லைகொய்யுமலருண்டுகொய்யுந்
தலையில்லைதாழ்ந்தமயிர்புலராதே, (௬௩)

அக்கணநின்றதோராலமரங்கண்டு
நக்கனைவாழ்த்திநடுவேபயன்கொள்வர்
மிக்கவரஞ்சுதுயரமுங்கண்டுபோய்த்
தக்கவர்தாழ்ந்துகிடக்கின்றவாறே, (௬௪)

கூப்பிடுமாந்திலேவன்காடிருகாதங்
காப்பிடுகள்ளர்கலந்துநின்றுருளர்
காப்பிடுகள்ளனைவெள்ளர்தொடர்ந்திட்டுக்
கூப்பிடுமீண்டதோர்கூரைகொண்டாரே. (௬௫)

கொட்டும்புமாம்பலும்பூத்தகுளத்திடை
வெட்டியும்வேம்புமினியதோர்வாழையுங்

கட்டியுந்தேனுங்கலந்துணமாட்டாதா
ரொட்டிப்பழத்துக்கிளைக்கின்றவாறே. (௫௬)

பெடை வண்டுமாண்வண்டும்மிடிகையுண்ணக்
குடைகொண்டபாசத்துக்கோலமுண்டானுங்
கடைவண்டுதானுண்ணுங்கண்கலந்திட்ட
பெடைவண்டுதான்பெற்றதின்பமுமாமே, (௫௭)

கொல்லையின்மேயும்பசுக்களைச்செய்தவ
னெல்லைகடப்பித்திறையடிகூட்டியே
வல்லசெய்தாற்றன்மதித்தபினல்லது
கொல்லைசெய்நெஞ்சங்குறியறியாதே. (௫௮)

தட்டத்துநீரிமேலதாமரைபூத்தது
குட்டத்துநீரிற்குவளையெழுந்தது
விட்டத்தினுள்ளேவிளங்கவல்லார்கட்குக்
குட்டத்திலிட்டதோர்கொம்மட்டியாமே. (௫௯)

ஆறுபறவைகளைந்தகத்துள்ளன
நூறுபறவைநுனிக்கொம்பின்மேலன
வேறும்பெருப்பதியேழுங்கடந்தபின்
மாறுதலின்றிமனைபுகலாமே, (௬௰)

கொட்டனஞ்செய்துகுளிக்கின்றகூவலுள்
வட்டனப்பூமிமருவிவந்தூறிடுங்
கட்டனஞ்செய்துகயிற்றாற்றொழுமியு
ளொட்டனஞ்செய்தொளியாவர்க்குமாமே (௬௧)

ஏழுவளைகடலெட்டுக்குலவரை
யாழும்விசும்பினிலங்கிமழைவளி.

தாழுமிருநிலத்தன்மையதாகண்டு
வாழநினைக்கிலதாலயமாமே. (௪௨)

ஆலிங்கனஞ்செய்தகஞ்சுடச்சூலத்துச்
சாலிங்கமைத்துத்தலைமைதவிர்த்தனர்
கோலிங்கமைத்தபின்கூபப்பறவைகண்
மாலிங்கன்வைத்ததுமுன்பின்வழியே. (௪௩)

கொட்டிக்குந்தாலியிரண்டேயிரண்டிக்குங்
கொட்டிக்குந்தாலிக்கும்பாளைவலிதென்பர்
கொட்டிக்குந்தாலிக்கும்பாளைக்குமூன்றுக்கு
மிட்டம்வலிதென்பரீசனருளே. (௪௪)

கபலொன்றுகண்டவர்கண்டேயிருப்பர்
முயலொன்றுகண்டவர்மூவருமுய்வர்
பறையொன்றுசெல்பிடிப்பாரொருவன்
மறையொன்றுகண்டதுருவம்பொன்றுமே. (௪௫)

சோரையெழுந்துகிடந்தகுளத்தினி
லாரைபடர்ந்துதடர்ந்துகிடந்தது
நாரைபடுகின்றப்போலல்லநாதனூர்
பாரைகிடக்கப்படிக்கின்றவாறே. (௪௬)

கொல்லைமுக்காதமுங்காடைக்காதமு
மெல்லைமயங்கிக்கிடந்தவிருநெறி
யெல்லைமடங்காதியங்கவல்லார்கட்கு
வொல்லைகடந்துசென்றார்புகலாமே. (௪௭)

உழவொன்றவித்துவொருங்கினகாலத்
தெழுமழைபெய்யாதிருநிலச்செவ்வி

தழுவிவினைச்சென்றுதாம்பயவாது
வழுவாதுபோவர்வளர்சடையோனே. (சஅ)

பதுங்கிலும்பாய்புலிபன்னிருகாத
மொதுங்கியதண்கடலோதமுலவ
மதுங்கியவார்கனியாரமுதூறப்
பொதுங்கியவைவளாப்போய்விளைத்தானே. (சகூ)

தோணியொன்றேறித்துடர்ந்துகடல்புக்கு
வாணிபஞ்செய்துவழங்கிவளர்மக
னீலிக்கிறையுமேநெஞ்சினிலைதளர்ந்
தாலிப்பழம்போலளிக்கின்றவப்பே. (ருo)

முக்காதமாற்றிலேமூன்றுாவாழைகள்
செக்குப்பழுத்ததிரிமலங்காய்த்தன
பக்கனூர்மிக்கார்படங்கினூர்கன்னியர்
நக்குமலருண்டுநடுவுநின்றாரே. (ருக)

அடியுமுடியுமமைத்தநோராத்தி
முடியுநுனியின்கண்மூத்தலைமூங்கில்
கொடியும்படையுங்கோட்சரனையைந்து
மடியும்வலம்புரிவாய்ந்ததவ்வாறே. (ருஉ)

குன்றியும்பாம்பும்பசுமுசுவானரந்
தென்றிக்கிடந்தசிறுநரிக்கூட்டத்துக்
குன்றமைகூடித்தராசினிறுத்தமின்
பன்றிநிரையைக்குலைறக்கின்றவாறே. (ருா)

மொட்டித்தெழுந்ததோர்மொட்டுண்டு மொட்டினை
கட்டுவிட்டோடிமலர்தலுங்காணலரம் [க்

பற்றறவிட்டம்மனையாழ்படநோக்கிறற்
கட்டுவிட்டார்க்கவிழ்க்காணவொண்ணாதே. (௫௪)

நீரவிர்ப்பாயுநிலத்தினிற்பச்சையாம்
யாவருமென்றுமறியவல்லாரில்லை
கூருமழைபொழியாதுபொழிபுனல்
தேரிவிந்நீர்மைதிடாரினில்லாதே. (௫௫)

கூகைகுருந்தமதேறிக்குணம்பயில்
மோகமுலகுக்குணர்கின்றகாலத்து
நாகமுமொன்றுதடுவுணாசெய்திடும்
பாகனுமாய்நின்றபண்பனுமாமே. (௫௬)

வாழையுஞ்சூரையும்வந்திடங்கொண்டது
வாழைக்குச்சூரைவலிதுவலிதென்பர்
வாழையுஞ்சூரையைவன்றுண்டஞ்செய்திட்டு
வாழையிடங்கொண்டுவாழ்கின்றவாறே. (௫௭)

நிலத்தைப்பிளந்துநெடுங்கடலோட்டிப்
புனத்துக்குரவன்புணர்ந்தகொழுமீன்
விலக்குமில்யாவர்க்கும்வேண்டிற்குறையா
திருத்தமுமின்றியடுவதுமாமே. (௫௮)

தளிர்க்குமொருபிள்ளைதட்டானகத்தில்
விளிப்பதோர்சங்குண்டுவேந்தனைநாடிக்
களிக்குந்துசவர்க்குங்காவிதியார்க்கு
மவிக்கும்பதத்தொன்றுய்ந்துகொள்வார்க்கே (௫௯)

குடைவிட்டுப்போந்ததுகோயிலெருமை
படைகண்டுமீண்டதுபாதிவழியி

னுடையவன்மந்திரியுள்ளனுமூரா
ரடையாநெடுங்கடையைந்தொடுநான்கே (௬௰)

போகின்றவெட்டும்புகுகின்றபத்தெட்டு
மாகிப்படைத்தனவொன்பதுவாய்தனு
நாகமுமெட்டொடுநாலுபுரவியும்
பாகன்விடாவிடிற்பன்றியுமாமே. (௬௧)

பாசிபடர்ந்துகிடந்தகுளத்திடைக்
கூசியிருக்குங்குருகிரைதேர்ந்துண்ணாத்
தூசிமறவன்றுணைவழிமெய்த்திடப்
பாசங்கிடந்துபதைக்கின்றவாறே. (௬௨)

கும்பமலைமேலெழுந்ததோர்கொம்புண்டு
கொம்புக்குமப்பாலடிப்பதோர்காற்றுண்டு
வம்பாய்மலர்ந்ததோர்பூவுண்டப்பூவுக்கு
வண்டாய்க்கிடந்துமணங்கொள்வனீசனே. (௬௩)

வீணையுந்தண்டும்விரவியிசைமுரல்
தாணுவுமேவித்தகுதலைப்பெய்தது
வாணிபஞ்சிக்கென்றதுவடையாமுன்னங்
காணியுமங்கேகலக்கின்றவாறே. (௬௪)

கொங்குபுக்காரொடுவாணிபஞ்செய்தது
லங்குபுக்காலன்றியாய்ந்தறிவாரில்லை.
திங்கள்புக்காலிருளாவதறிந்திலர்
தங்குபுக்கார்சிலர்தாபதர்தாமே. (௬௫)

போதும்புலர்ந்ததுபொன்னிறங்கொண்டது
தாதவிழ்புன்னைதயங்குமிருகரை

யேதமிலீசனியங்குநெறியிது
மாதிருந்ததோர்மண்டலந்தானே. (௬௬)

கோமுற்றமருங்குடிகளுந்தம்மிலே
காமுற்றகத்தியிவர்கடைதொறு
மீவற்றவெல்லைவிடாதுவழிகாட்டி
யாமுற்றதட்டிஞாலந்துன்னலாமே. (௬௭)

தோட்டத்தில்மாம்பழந்தொண்டிவிழுந்தக்கா
லாட்டின்புறத்தினரிபழைத்தென்செயு
மூட்டிக்கொடுத்துமுதல்வனைமுன்னிட்டுக்
காட்டிக்கொடுத்தவர்கைவிட்டவாறே. (௬௮)

புலர்ந்ததாமென்றுபுட்கள்சிலம்பப்
புலர்ந்ததுபோதென்றுபூங்கொடிபுல்லி
புலம்பினவளோடும்போகநுகரும்
புலம்பனுக்கென்றும்புலர்ந்திலபோதே. (௬௯)

தோணியொன்றுண்டுதுறையில்விடுவன
வாணிமிதித்துநின்றைவர்கோலூன்றலும்
வாணிபஞ்செய்வார்வழியிடையாற்றிடை
டாணிகலங்கிலதுவிதுவாமே. (௭௰) ஆக. ௨௮௭.

மோனசமாதி.

நின்றிருந்தார்கிடந்தாரெனவில்லை
சென்றார்தஞ்சித்தமோனசமாதியா
மன்றேயுமங்கேமறைப்பொருளொன்றுண்டு
சென்றுங்கணைந்தவர்சேர்கின்றவாறே. (௧)

காட்டுக்குறியுங்கடந்தவர்காரண
மேட்டின்புறத்திலெழுதிவைத்தென்பயன்,
கூட்டுங்குருநந்திகூட்டிடினல்லாது
வாட்டின்கழுத்திலதர்கிடந்தற்றே. (௨)

உணர்வுடையார்கட்குலகமுந்தோன்று
முணர்வுடையார்கட்குறுதுயரில்லை
யுணர்வுடையார்களுணர்ந்தவக்கால
முணர்வுடையார்களுணர்ந்துகண்டாரே. (௩)

மறப்பதுவாய்நின்றமாயநன்னாடன்
பிறப்பினைநீங்கியபேரருளாளன்
சிறப்புடையான்றிருமங்கையுந்தானு
முறக்கமில்போகத்துறங்கிடுந்தானே. (௪)

துரியங்கண்மூன்றுங்கடந்தொளிர்சோதி
யரியதுரியமதின்மீதுமூன்றாய்
விரிவுகுவிவுவிழுங்கியுமிழ்ந்தே
யுரையிலனுபூதிகத்தினுள்ளானே. (௫)

உருவிலியூனிலியூனமொன்றில்லி
திருவிலிதிதீலிதேவர்க்குந்தேவன்
பொருவிலிபூதப்படையுடையாளி
மருவிலிவந்தென்மனம்புகுந்தானே. (௬)

கண்டறிவாரில்லைகாயத்தினந்தியை
யெண்டிசையோருமிறைவனென்றேத்துவ
ரண்டங்கடந்தவளவிலாவானந்தத்
தொண்டர்முகந்ததுறையறியோமே. (௭)

தற்பரமல்லசதாசிவன்றானல்ல
நிட்களமல்லசகளநிலையல்ல
யற்புதமாகியனுபோகக்காமம்போற்
கற்பனையின்றிக்கலந்துநின்றானே. (௮)

மூகத்திற்கண்கொண்டுகாண்கின்றமூடர்கா
ளகத்திற்கண்கொண்டுகாண்பதேயானந்த
மகட்குத்தாய்தன்மணாளனோடாடிய
சுகத்தைச்சொல்லென்றாற்சொல்லுமாறெங்ஙனே (௯)

அப்பினிலுப்பெனவத்தனைநீட்டுஞ்
செப்புபராற்பரஞ்சேர்பரமும்விட்டுக்
கப்புறசொற்பதமாளக்கலந்தமை
யெப்படியப்படியென்னுமவ்வாறே. (௰)

கண்டார்க்கழகிதாங்காஞ்சிரத்தின்பழந்
தின்றார்க்கறியலாமப்பழத்தின்சுவை
பெண்டானிரம்பிமடவியளானாற்
கொண்டானறிவன்குணம்பலதானே. (௰௧)

நந்தியிருந்தானடுவுட்டெருவிலே
சந்திசமாதிகடானேயொழிந்தது
வுந்தியினுள்ளேயுதித்தெழுஞ்சோதியைப்
புந்தியினாலேபுணர்ந்துகொண்டேனே. (௰௨)

விதறுபடாவண்ணம்வேறிருந்தாய்ந்து
பதறுபடாதேபழமறைபார்த்துக்
கதறியபாழைக்கடந்தந்தக்கற்பனை
புதறியபாழிலொடுங்குகின்றேனே. (௰௩)

வாடாமலர்ப்புனைசேவடிவானவர்
கூடாரானெறிநாடோறுமின்புறச்
சேடார்கமலச்செழுஞ்சுடருட்சென்று
நாடாரமுதுறநாடாரமுதே. (யச)

அதுக்கென்றிருவரமர்ந்தசொற்கேட்டும்
பொதுக்கெனக்காமம்புலப்படுமாபோ
லதுக்கென்றுவேறேசமைந்தாரைக்காண
மதுக்கொன்றைத்தாரான்வளர்ந்தருமன்றே. (யரு)

தானுமழிந்துதனமுமழிந்துநீ
டேனுமழிந்துவுயிருமழிந்துடன்
வானுமழிந்துமனமுமழிந்துபி
ன்னுமழிந்தனமைநானறியேனே. (யசா)

இருளும்வெளியுமிரண்டையுமாற்றிப்
பொருளிற்பொருளாய்பொருந்தவுள்ளாகி
யருளாலழிந்திம்மத்தனடிக்கே
யுருளாதகன்மனமுற்றுநின்றேனே. (யஎ)

ஒன்றிநின்றுள்ளேயுணர்ந்தேன்பராபர
மொன்றிநின்றுள்ளேயுணர்ந்தேன்சிவகதி
யொன்றிநின்றுள்ளேயுணர்ந்தேனுணர்வினை
யொன்றிநின்றேபலவூழிகண்டேனே. (யஅ) ஆ௲ருகாரு.

---

வரையுரைமாட்சி.

தான்வரைவற்றபினாரைவரைவது
தானவனானபின்னாரைநினைவது

காமனைவென்றகண்ணாளையுகப்பது
தூமொழிவாசகஞ்சொல்லுமினீரே. (௧)

உரையற்றதொன்றைவுரைசெய்யுமூமர்காள்
கரையற்றதொன்றைக்கரைகாணலாகுமோ
திரையற்றநீர்போற்சிந்தைதெளிவார்க்குப்
புரையற்றிருந்தான்புரிசடையோனே. (௨)

மனமாயைமாயையிம்மாயைமயக்க
மனமாயைதான்மாயுமற்றொன்றுமில்லை
பினைமாய்வதில்லைபிதற்றவும்வேண்டாந்
தனையாய்ந்திருப்பதுதந்துவந்தானே. (௩) ஆ ௫௱௮.

---

அணைந்தோர்தன்மை.

மலமில்லைமாசில்லைமானாபிமானக்
குலமில்லைகொள்ளுங்குணங்களுமில்லை
நலமில்லைநந்தியைஞானத்தினாலே
பலமன்னியன்பிற்பதித்துவைப்போர்க்கே. (௧)

ஒழிந்தேன்பிறவியுறவென்னும்பாசங்
கழிந்தேன்கடவுளுநானுமொன்றானே
னழிந்தாங்கினிவருமார்க்கமுவேண்டேன்
செழுஞ்சார்புடையசிவனைக்கண்டேனே. (௨)

ஆலைக்கரும்புமமுதமக்காரமுஞ்
சோலைத்தண்ணீருமுடைத்தெங்கணாட்டிடைப்
பீலிக்கண்ணன்னவடிவுசெய்வாளொரு
கோலப்பெண்ணாட்குக்குறையொன்றுமில்லையே (௩)

ஆராலு மென்னையமட்ட வொண்ணாதினிச்
சீரார்பிரான்வந்தென்சிந்தைபுகுந்தனன்
சீராடியங்கேதிரிவதல்லாதினி
யார்பாடுஞ்சாராவறிவறிந்தேனே. (௪)

பிரிந்தேன்பிரமன்பிணித்தவோர்பாசந்
தெரிந்தேன்சிவகதிசெல்லுநிலையை
பரிந்தேன்வினையையயில்மனைவாளால்
முரிந்தேன்புரத்தினைமூர்த்துகின்றேனே. (௫)

ஒன்றுகண்டீருலகுக்கொருதெய்வமு
மொன்றுகண்டீருலகுக்குயிராவது
நன்றுகண்டீரினிநமசிவாயப்பழந்
தின்றுகண்டேற்கிதுதித்திருந்தவாறே. (௬)

சந்திரன்யாம்பொடுஞ்சூடுஞ்சடாதரன்
வந்தெனையாண்டமணிவிளக்கானவ
னந்தமுமாதியுமில்லாவரும்பொருள்
சிந்தையின்மேவித்தியக்கறுத்தானே. (௭)

பண்டெங்களீசனெடுமால்பிரமனைக்
கண்டங்கிருக்குங்கருத்தறிவாரில்லை
விண்டங்கேதோன்றிவேறுமனமாயிடிற்
றுண்டங்கிருந்ததோர்தூறதுவாமே. (௮)

அன்னையுமத்தனுமன்புற்றதல்லது
வன்னையுமத்தனுமாரறிவாரென்னை
யன்னையுமத்தனுமியானுமுடனிருந்
தன்னையுமத்தனையான்புரந்தேனே. (௯)

கொண்டசுழியுங்குலவரையுச்சியு
மண்டருமண்டத்தலைவருமாதியு
மெண்டிசையோரும்வந்தென்னகத்தலத்துளே
யுண்டெனநாமினியுய்ந்தொழிந்தேனே. (௰)

தானேதிசையொடுதேவருமாய்நிற்குந்
தானேவடவரையாதியுமாய்நிற்குந்
தானேயுடலுயிர்தத்துவமாய்நிற்குந்
தானேயுலகிற்றலைவனுமாமே. (௰௧)

நமன்வரின்ஞானவாள்கொண்டேயெறிவன்
சிவன்வரினானுடன்போவதுதிண்ணம்
பவம்வரும்வல்வினைப்பண்டேயறுத்தேன்
றவம்வருஞ்சிந்தைக்குத்தானெதிராமே. (௰௨)

சித்தஞ்சிவமாய்மலமூன்றுஞ்செற்றவர்
சுத்தச்சிவமாவர்தோயார்மலபந்தங்
கத்தஞ்சிலுறுங்கலகமுங்கைகாணார்
சத்தப்பரவிந்துதானுமென்றெண்ணியே. (௰௩)

நினைப்புமறப்புமிலாதவர்நெஞ்சம்
வினைப்பற்றறுக்கும்விமலனிருக்கும்
வினைப்பற்றறுக்கும்விமலனைத்தேடி
நினைக்கப்பெறிலவனிலயனுமே. (௰௪)

சிவபெருமானென்றுநானழைத்தேத்தத்
தவபெருமானென்றுதான்வந்துநின்று
னவபெருமானென்னையாளுடைநாதன்
பவபெருமானைப்பணிந்துநின்றேனே. (௰௫)

பணிந்துநின்றேன்பரமாதிபதியைத்
துணிந்துநின்றேனினிமற்றொன்றும்வேண்டே
னணிந்துநின்றேனுடலாதிப்பிரானைத்
தணிந்துநின்றேன்சிவன்றன்மைகண்டேனே. (௰௬)

என்னெஞ்சமீசனிணையடிதாஞ்சேர்ந்து
முன்னஞ்செய்தேத்தமுழுதும்பிறப்பறுந்
தன்னெஞ்சமில்லாத்தலைவன்றலைவிதி
பின்னஞ்செய்தென்னைப்பிணக்கறுத்தானே. (௰௭)

பிணக்கறுத்தான்பிணிமூப்பறுத்தென்னுங்
கணக்கறுத்தாண்டனல்கானந்தியென்னைப்
பிணக்கறுத்தென்னுடன்முன்வந்ததுன்பம்
வணக்கலுற்றேன்சிவம்வந்ததுதானே. (௰௮)

சிவன்வந்துதேவர்குழாமுடன்கூடப்
பவம்வந்திடநின்றபாசமறுத்திட்
டவனெந்தையாண்டருளாதிப்பெருமா
னவன்வந்தென்னுள்ளேயசப்பட்டவாறே. (௰௯)

கரும்புந்தேனுங்கலந்ததோர்காயத்தி
லரும்புங்கந்தமுமாகியவானந்தம்
விரும்பியேயுள்ளம்வெளியுறக்கண்டபின்
கரும்புங்கைத்ததுதேனும்புளித்ததே. (௨௰)

உள்ளசரிதாதியொட்டியெமீட்டென்பால்
வள்ளலருத்தியேவைத்தவளம்பாடிச்
செய்வனவெல்லாஞ்சிவமாகக்காண்டலாற்
கைவளமின்றிக்கருக்கடந்தேனே. (௨௧)

மீண்டார்கமலத் துளங்கிமிகச்சென்று
தூண்டாவிளக்கின்றகளிநெய்சோர்தலும்
பூண்டாளொருத்திபுவனசூடாமணி
மாண்டாரொருவன்கைவந்ததானே. (௨௨)

ஆறேயருவியகங்குளமொன்றுண்டு
நாறேசிவகதிநண்ணிதுவண்ணமுங்
கூறேகுவிமுலைக்கொம்பனையாளொடும்
வேறேயிருக்கும்விருப்பொருடானே. (௨௩)

அன்புருகியழுவனரற்றுவ
னென்புமுருகவிராப்பகலேத்துவ
னென்பொன்மணியையிறைவனையீசனைத்
தின்பக்கடிப்பன்றிருத்துவன்றானே. (௨௪)

மனம்விரிந்துருவிந்ததுமாதவ
மனம்விரிந்துருவிந்தது வாய்வு
மனம்விரிந்துருவிந்ததுமன்னுயிர்
மனம்விரிந்துளாமாண்டதுமுத்தியே,() ஆ௲௫௱௫.

---

தோத்திரம்.

மாயனைநாடிமனநெடுந்தேரோடிப்,
போயினநாடறிபாதேபுலம்புவர்;
தேயமுநாடுந்திரிந்தெங்கள்செல்வனைக்
காயமின்கூட்டிடைக்கண்டுகொண்டேனே. (௧)

மன்னுமலைபோன்மதவாரணத்தின்மேல்
கின்னிசைபாடவிருந்தவராரொனின்,

முன்னியல்காலமுதல்வனார்நாமத்தைப்
புன்னினமொன்றேபாடறிவீரோ. (உ)

முத்தினின்முத்தைமுகிழிளஞாயிற்றை
யெத்தனைவானோருமேத்துமிறைவனை
யத்தனைகானதாற்றுகின்றேனையோர்
பித்தனிவனென்றுபேசுகின்றாரோ. (ரு)

புகுந்துநின்றானெங்கள்புண்ணியமூர்த்தி
புகுந்துநின்றானெங்கள்போதறிவாளன்
புகுந்துநின்றானடியார்தங்கணெஞ்சம்
புகுந்துநின்றானையேபோற்றுகின்றேனே. (௪)

பூதக்கண்ணாடியிற்புகுந்திலன்போதுளன்
வேதக்கண்ணாடியில்வேறேவெளிப்படு
நீதிக்கண்ணாடிநினைவார்மனத்துளன்
கீதக்கண்ணாடியிற்கேட்டுநின்றேனே. (ரு)

நாமமோராயிரமோதுமினாதனை
யேமமோராயிரத்துள்ளேயிசைவீர்க
ளோமமோராயிரமோதவல்லார்கட்குக்
காமமோராயிரங்கண்டொழிந்தார்களே. (சு)

போற்றுகின்றேன்புகழ்ந்தும்புகழ்ஞானத்தைத்
தேற்றுகின்றேன்சிந்தைநாயகன்சேவடி
சாற்றுகின்றேனறையோசிவலோகத்தைப்
போற்றுகின்றேனெம்பிரானென்றுநானே. (எ)

நானாவிதஞ்செய்துநாடுமினந்தியை
யூனார்கயலத்தினூடுசென்றப்புறம்

வானேருலகம்வழிபடமீண்டபின்
தேனாரவுண்டுதெவிட்டலுமாமே. (௮)

வந்தநின்றானடியார்கட்கரும்பொரு
ளிந்திரனாதியிமையவர்வேண்டினுஞ்
சுந்தரமாதர்குழனியொன்றல்லது
வந்தரவானத்தினப்புறமாமே. (௯)

மண்ணிற்கலங்கியநீர்போன்மனிதர்க
ளெண்ணிற்கலங்கியிறைவனிவனென
றுண்ணிற்குளத்தின்முகந்தொருபால்வைத்துத்
தெண்ணிற்படுத்தசிவனவனாமே. (௰)

மெய்த்தவத்தானைவிரும்புமொருவர்க்குக்
கைத்தலஞ்சேர்தருநெல்லிக்கனியொக்குஞ்
சுத்தனைத்தூய்நெறியாய்நின்றதேவர்க
ளத்தனைநாடியமைந்தொழிந்தேனே. (௰௧)

அமைந்தொழிந்தேனளவில்புகழ்ஞானஞ்
சமைந்தொழிந்தேன்றடுமாற்றமொன்றில்லை
புகைந்தெழும்பூதலம்புண்ணியனண்ணி
வகைத்துகொடுக்கின்றவள்ளலுமாமே. (௰௨)

வள்ளற்றலைவனைவானநன்றாடனை
வெள்ளப்புனற்சடைவேதமுதல்வனைக்
கள்ளப்பெருமக்கள்காண்பர்கொலோவென்று
முள்ளத்தினுள்ளேயொளித்திருந்தானுமே. (௰௩)

ஆருமலர்ப்பதந்தந்தகடவுளை
நாளும்வழிபட்டுநன்மையுணின்றவர்

சோரும்வினையுமறுக்குங்குரிசிலின்
வாருமனத்தொடும்வைத்தொழிந்தேனே. (யச)

விரும்பிலவனடிவீரசுவர்க்கம்
பொருந்திலவனடிபுண்ணியலோகந்
திருந்திலவனடிதீர்த்தமுமாகும்
வருந்தியவனடிவாழ்த்தவல்லார்க்கே. (யரு)

வான்கமழுடறுத்தானிவ்வுலகினிற்
றூனகமில்லாத்தனியாகும்போதகன்
கானகவாழைக்கனிநுகர்ந்துள்ளுறும்
பானகச்சோதியைப்பற்றிநின்றேனே. (யசா)

விதியதுமேலையமரருறையும்
பதியதுபாய்புனற்சங்கையுமுண்டு
துதியதுதொல்வினைப்பற்றறுவிக்கும்
பதியதுவவ்விட்டநந்தமுமாமே. (யஎ)

மேலதுவானவர்கீழதுமாதவர்
தானிடர்மானிடர்கீழதுமாதனந்
கானதுகூவிளமாலைகமழ்சடை
யானதுசெய்யுமெம்மாருயிர்தானே. (யஅ)

சூழுங்கருங்கடனஞ்சுண்டகண்டனை
யேழுமிரண்டிலுமீசன்பிறப்பிலி
யாழுஞ்சுனையுமடவியுமங்குளன்
வாழுமெழுத்தைந்துமன்னனுமாமே. (யகூ)

உலகமதொத்துமண்ணொத்துயர்காற்றை
யலர்கதிரங்கியொத்தாதிப்பிரானு

நிலவியமாமுகினீரொத்துமீண்டச்
செலவொத்தமர்நிலைகத்தேவர்பிரானே. (உ௰)

பரிசறிந்தங்குளனங்கியருக்கன்
பரிசறிந்தங்குளன்மாருதத்தீசன்
பரிசறிந்தங்குளன்மாமதிஞானப்
பரிசறிந்தன்னிலம்பாரிக்குமாறே. (உக)

அந்தங்கடந்துமதுவதுவாய்நிற்கும்
பந்தவுலகினிற்கீழோர்பெரும்பொருள்
தந்தவுலகெங்குந்தானேபராபரன்
வந்துபடைக்கின்றமாண்பதுவாமே (உஉ)

முத்தண்டவீரண்டமேமுடியாகினு
மத்தனுருவமுலகேழெனப்படு
மத்தனின்பாதாளமளவுள்ளசேவடி
மத்தரதனைமகிழ்ந்துணராரே. (உங)

ஆதிப்பிரானம்பிரானவ்வகலிடச்
சோதிப்பிரான்சுடர்மூன்றொளியாய்நிற்கு
மாதிப்பிரானண்டத்தப்புறங்கீழவ
னோதிப்பிரானவனாகிநின்றானே. (உச)

அண்டங்கடந்துயர்ந்தோங்கும்பெருமையன்
பிண்டங்கடந்தபிறவிச்சிறுமையன்
றெண்டர்நடந்தகனைகழல்காண்டொறுந்
தொண்டர்கள்தூய்நெறிதூங்கிநின்றாரே. (உரு)

உணர்வுசெய்நோக்கம்பெருங்கடல்சூழ
நிலமுழுதெல்லாநிறைந்தனனீசன்

பலமுழுதெல்லாம்படைத்தனன்முன்னே
புலமுழுபொன்னிறமாகிநின்றானே. (உசு)

பராபரனாகிப்பல்லூழிகடோறும்
டராபரனாயிவ்வகலிடந்தாங்கித்
தராபரனாய்நின்றதன்மையுணரார்
திராபரனாகிநிறைந்துநின்றானே. (உஎ)

போற்றும்பெருந்தெய்வந்தானேபிறரில்லை
யூற்றமும்மோகையுமோகையொடுக்கமும்
வேற்றுடலானென்றதுபெருந்தெய்வமாங்
காற்றதுவீசன்கலந்துநின்றானே. (உஅ)

திசையனைத்துஞ்சிவனேயவனாகி
மிசையனைத்துஞ்செல்லவேண்டாமனிதரே
புகையனைத்தும்புறமங்கியிற்கூடி
முகையனைத்துமெங்களாதிப்பிரானே. (உகூ)

அகன்றானகலிடமேழுமொன்றாகி
யிவன்றானெனநின்றெளியனுமல்லன்
சிவன்றான்பலபலசீவனுமாகி
நவின்றானுலகுறுநம்பனுமாமே. (௩0)

சலையொருமூன்றுங்கடந்தப்பாலின்ற
தலைவனைநாடுமின்றத்துவநாதன்
விலையில்லைவிண்ணவரோடுமுனைப்ப
னலையில்லையுள்ளுறுமுள்ளவன்றானே. (௩க)

படிகால்பிரமன்செய்பாசமறுத்து
நெடியான்குறுமைசெய்நேசமறுத்துச்

செடியார்தவத்தினிற்செய்தொழினீக்கி
யடியேனையுய்யவைத்தன்புகொண்டானே. (௫௨)

ஈசனென்றெட்டுந்திசையுமியங்கின
வோசையினின்றெழுசத்தமுலப்பிலி
தேசமொன்றாங்கேசெழுங்கண்டமொன்பதும்
வாசமலர்போன்மருவிநின்றானே. (௫௩)

இல்லனுமல்லனவனல்லனெம்மிறை
கல்லதுநெஞ்சம்பிளந்திடுங்காட்சியன்
ஒல்லையன்றாயன்றுவக்கிலன்றாய்மணி
சொல்லருஞ்சோதிசுடர்ந்துநின்றானே. (௫௪)

உள்ளத்தொடுங்கும்புறத்துளநானெனுங்
கள்ளத்தலைவன்சமழ்ச்சடைநந்தியும்
வெள்ளப்பெருமைவழக்குஞ்செய்வானுந
லள்ளற்கடலையறுத்துநின்றானே. (௫௫)

மாறெதிர்வானவர்தானவர்நாடொறுங்
கூறுதல்செய்துகுரைகழனாடுவர்
உளறவருள்ளத்தகத்தும்புறத்துளும்
வேறுசெய்தாங்கேவிளக்கொளியாமே. (௫௬)

விண்ணிலும்வந்தவெளியிலன்மேனியன்
கண்ணிலும்வந்தபுலனல்லன்காட்சியன்
பண்ணிலில்வந்தபயனல்லன்பான்மைய
னெண்ணிலானந்தமுமெங்கள்பிரானே. (௫௭)

உத்தமனெங்குமுகக்கும்பெருங்கட
லொத்திலச்சோதியனிலக்கருமைய

னெத்தனைகாலமுமெண்ணுவரீசனைச்
சித்தரமரர்கடேர்ந்தறியாரே. (௫௮)

நிறம்பலவெவ்வண்ணமவ்வண்ணமீசன்
நறம்பலவெவ்வண்ணமவ்வண்ணமின்ப
மறம்பலவெங்வண்ணமவ்வண்ணம்பாவம்
புறம்பலகாணினும்போற்றகிலாரே (௫௯)

இங்குநின்றானங்குநின்றனனெங்குளன்
பொங்கிநின்றான்புவனாபதிபுண்ணியன்
கங்குனின்றான்கதிர்மாமதிஞாயிறு
வெங்குநின்றான்மழைபோலிறைதானே. (௬௰)

உணர்வதுவாயுமேயுத்தமமாயு
முணர்வதுநுண்ணறிவெம்பெருமானைப்
புணர்வதுவாயும்புல்லியதாயு
முணர்வுடலண்டமுமாகிநின்றானே. (௬௧)

தன்வலியாயுலகேழுந்தரித்தவன்
றன்வலியாலேயணுவிலுந்தானெய்யன்
றன்வலியான்மலையெட்டினுந்தான்சாரான்
றன்வலியாலேதடங்கடலாமே. (௬௨)

ஏனோர்பெருமையனாகிலுமெம்மிறை
யூனேசிறுமையுள்ளுள்கலந்தங்குளன்
வானோரறியுமளவல்லன்மாதேவன்
றானேயறியுந்தவத்தினளவே. (௬௩)

பிண்டாலம்வித்திலெழுந்தபெருமுளைக்
குண்டாலங்காயத்துக்குதிரைபழுத்தது

வுண்டலருண்டாருணர்விலாமூடர்கள்
பிண்டத்துட்பட்டுபிணங்குகின்றார்களே.( ) ௨௲௱௭௭.

---

சர்வவியாபி.

வயுஞ்சிவபோகமீதன்றியோரொளி
யாயுமறிவையுமாயாவுபாதியா
லேயபரியபுரியுந்தனதெய்துஞ்
சாயுந்தனதுவியாபகந்தானே. (௧)

நானறிந்தப்பொருணடவிடமில்லை
வானறிந்தங்கேவழியுறவிம்மிடு
மூனறிந்துள்ளேயுயிர்க்கின்றவொண்சுடர்
நானறிந்தெங்குந்தலைப்படலாமே. (௨)

கடலிடைவாழ்கின்றசௌவையுலகத்
துடலிடைவாழ்வுகொண்டுள்ளொளிநாடி
யுடலிடைவைகின்றவுள்ளுறுதேவனைக்
கடலின்மலிதிரைக்காணலுமாமே. (௩)

பெருஞ்சுடர்மூன்றினுமுள்ளொளியாகித்
தெரிந்துடலாய்நிற்குந்தேவர்பிரானு
மிருஞ்சுடர்விட்டிட்டிகலிடமெல்லாம்
பரிந்துடன்போகின்றபல்கோனையாமே. (௪)

உறுதியினுள்வந்தவுள்வினைப்பட்டு
விறுதியின்வீழ்ந்தாரிரணமதாகுஞ்
சிறுதியினுள்ளொளிதிப்பியமூர்த்தி
பெறுதியின்மேலோர்பெருஞ்சுடராமே. (௫)

பற்றினுள்ளேபரமாய்பரஞ்சுடர்
முற்றினுமுற்றிமுளைக்கின்றமுற்றொளி
நெற்றியினுள்ளேநினைவாய்நிலைதரு
மற்றவனாய்நின்றமாதவன்றானே. (௬)

தேவனுமாகுந்திசைதிசைபத்தனு
மேவனுமாம்விரிநீருலகேழையு
மாவனுமாமமர்ந்தெங்குமுலகினு
நாவனுமாகிநவிற்றுகின்றானே. (எ)

நோக்குங்கருடனொடியேழுலகையுங்
காக்குமவனித்தலைவனுமங்குள
நீக்கும்வினையென்னிமலன்பிறப்பிலி
போக்கும்வரவும்புணரவல்லானே. (அ)

செழுஞ்சடையன்செம்பொனேயொக்குமேனி
யொழிந்தனவாயுவொருங்குடன்கூடுங்
கழிந்திலனெங்கும்பிறப்பிலனீச
னொழிந்திலனேழுலகொத்துநின்றானே. (௯)

உணர்வுமவனேயுயிருமவனே
புணர்வுமவனேபுலனுமவனே
யிணருமவன்றன்னையெண்ணனுமாகான்
றுணரின்மலர்க்கந்தந்துன்னிநின்றானே. (௰)

புலமையினற்றமிழ்புண்ணியனெந்தை
நலமையின்ஞானவழக்குமாகும்
விலமையில்வைத்துளவேதியர்கூறும்
பலமையிலெங்கும்பரந்துநின்றானே. (௰௧)

விண்ணவனாயுலகேழுக்குமேலுளன்
மண்ணவனாய்வலஞ்சூழ்கடலேழுக்குந்
தண்ணவனாயதுதன்மையினிற்பதோர்
கண்ணவனாக்கிகலந்துநின்றானே. (௰௨)

நின்றனன்மாலொடுநான்முகன்றானாகி
நின்றனன்றானிலங்கீழொடுமேலென
நின்றனன்றானெடுமால்வரையேழ்கட
லின்றனன்றானேவளங்கனியாயே. (௰௩)

புவனாபதிமிகுபுண்ணியனெந்தை
யவனையுலகிலடர்பெரும்பாக
னவனேயரும்பலசிவனுமாகு
மவனேயிறையெனமாலுற்றவாறே. (௰௪)

உண்ணின்றொளிருமுலவாப்பிராணனும்
விண்ணின்றியங்கும்விரிகதிராச்செல்லு
மண்ணின்றியங்கியும்வாயுவுமாய்நிற்குங்
கண்ணின்றிலங்குங்கருத்தவன்றானே. (௰௫)

எண்ணுமெழுத்தமினஞ்செயலவ்வழி
பண்ணுந்திறனும்படைத்தபரமனைக்
கண்ணின்கவருங்கருத்திலதுவிது
வுண்ணின்றுருக்கியோராயமுமாமே. (௰௬)

இருக்கின்றதென்டிசையண்டம்பாதாளி
முருக்கொடுதென்னடுவோங்கலிவ்வண்ணக்
கருக்கொண்டுவெங்குங்கலந்திவன்றானே
திருக்கொண்டறைவைத்தசெழுஞ்சடையானே. (௰௭)

பலவுடன்சென்றவப்பார்முழுதீசன்
செலவறிவாரில்லைசேயனணிய
னலவியன்சங்கரனாதியெம்மாதி
பலவிலதாய்நிற்கும்பான்மைவல்லானே. (மஅ)

அதுவறிவானவனாதிப்புராண
னெதுவறியாவகைநின்றனனீசன்
பொதுவதுவானபுவனங்களெட்டு
மிதுவறிவானந்தியெங்கள்பிரானே. (மக)

நீருநிலனும்விசும்பங்கிமாருத
தூறுமுடம்புறுசோதியுமாயுளன்
பேரும்பராபரன்பிஞ்ஞகனெம்மிறை
யூருஞ்சகலனுலப்பிலிதானே. (உம)

மூலனுரைசெய்தமூவாயிரந்தமிழ்
மூலனுரைசெய்தமுன்னூறுமந்திரம்
மூலனுரைசெய்தமுப்பதுபதேசம்
மூலனுரைசெய்தமூன்றுமொன்றுமே. (உக)

வாழ்கவேவாழ்கவென்நந்திதிருவடி
வாழ்கவேவாழ்கமலமறுத்தாள்பதம்
வாழ்கவேவாழ்கமெய்ஞ்ஞானத்தான்றாள்
வாழ்கவேவாழ்கமயமிலான்பாதமே. (உஉ)

ஆ அதிகாரம்-உசஇ-திருமந்திரம்-ருகக.

ஒன்பதாந்தந்திரமுற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுட்பட-அதிகாரம்
உருசஇ-கூடியதிருமந்திரம்-ருதஅரு.

திருமந்திர முற்றும்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உச | ௫ | சிவயோகமு | சிவபோகமு |
| ௬௧ | ௰௮ | பாயிமுள்பட | பாயிரமுள்பட |
| எச | உ௫ | பன்னனின்றுனே | யன்னனின்று [னே |
| அ௧ | ௰அ | அழிகின்ற | அறிகின்ற |
| அ௬ | ௬ | யான | பான |
| ௯௧ | ௰௫ | திர்த்தம் | தீர்த்தம் |
| ௯உ | ௫ | வாரமார் | வாரமார் |
| ௸ | எ | கெடுத்து | கொடுத்து |
| ௱௧ | ௰௯ | தம்மா, | தமமா |
| ௱உ௯ | ௸ | தேனுந் | தேசனுந் |
| ௱௫௫ | ௧ | மூன்று | மூன்று |
| ௱௬எ | அ | மவனிவள் | மவனிவன் |
| ௸ | ௰௯ | தம்மிக்கிடில் | தமமிக்கிடில் |
| ௱௬அ | ௰௬ | கைக | கையை |
| ௱சரு | உச | பாதந்தி | பராதந்தி |
| ௱௭௬ | ௫ | வன்ன | வனன் |
| ௱அ௧ | உ௧ | தேழ | தெழ |
| ௱அ௯ | ௰௧ | மேனய | டேனய |
| ௱௯௰ | அ | புரரதரர் | புராதரர் |
| உசரு | உ௫ | கண்டக்காம் | கண்டங்காம் |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| *உ௬எ | உ௧ | ௰௬ | ௰௯ |
| ஷை | உ௯ | ௬௯ | ௬உ |
| உ௫௧ | ஷை | சத்த | சுத்த |
| உ௫௬ | ௰௪ | முன்றும் | மூன்றும் |
| உ௪௰ | ௰௬ | சுமாதி | சமாதி |
| உஎ௮ | உ | லோரீ | லோர |
| உ௬௬ | எ | சிறப்பாயிர | சிறப்புப்பாயிர |
| ஷை | உ௰ | நானன்று | நானென்று |
| ௯௱௮ | ௮ | மரதேயம் | மாதேயம் |
| ௯௱௰௮ | ௰௧ | பரச | பாச |
| ௯௯௮ | எ | ோமுறு | டேமுறு |
| ௯௬௮ | ௬ | டாதித்தன் | டாதித்தின் |
| ௯௰௪ | உ | பயின் | பண் |
| ஷை | ஷை | பனு | பயினு |
| ௯எ௬ | உஉ | லருள | லருள் |
| ௯௮௮ | உ | யைமுந் | யையமுந் |
| ௬௪௫ | உ௯ | அகமுக | முகமுக |
| ௬௮௰ | ௬ | ஆனத்தி | ஆளத்தி |
| ஷை | ௰ | கானத்தி | காளத்தி |
| ஷை | ௰௧ | மூனச்சு | மூளச்சு |

* இதுமுதல் (௮) அந்தந்திரவரைக்கும் (௧) [illegible] தை அதிகாரிந்தலை நீக்கவும்.




உ

# விளம்பரம்.

---

இப்புத்தகம் வேண்டியவர்கள்சிந்தாத்திரிப்பேட்டையில்-ஐயாமுதலியார் தெருவில் .- ம-ன-ன-ஸ்ரீ, கொன்றைமாநரம்-முருகப்பமுதலியாரவர்கள் கிரகத்தில் ஷையார் பேரரும் அருணாசலமுதலியாரவர்கள் குமாரருமாகிய சண்முகசுந்தரமுதலியாரிடத்திலும் - ரூளை- அவதானம்- பாப்பையர் தெருவில்- ௫௧ - வது - நம்பர் வீட்டில்-பா - முனியப்பமுதலியாரிடத்திலும்விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.